ஓம்

தொல்காப்பிய முனிவரால் இயற்றப்பட்ட

# தொல்காப்பியம்

## சொல்லதிகார மூலமும்

உரைவிளக்கக்
குறிப்புக்களுடன்

1938

யாம் எழுதிய வாக்கியங்களிலே எமது தேக அசௌக்கியங் காரணமாகச் சில பிழைகள் நேர்ந்தன. அவற்றைப் பிழைதிருத் தத்திற் காண்பித்துள்ளேன். அத்திருத்தங்களை நோக்கித் திருத் திப் படித்துக் கொள்ளுமாறும், இன்னும் வரும் பிழைகளைத் திருத்திப் படித்துக்கொள்ளுமாறும் அறிஞர்களை வேண்டிக்கொள் ளுகின்றேம்.

"குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்."

இக்கருமத்தைக் குறையின்றி முற்றுமாறு அருள்செய்த எங் குருபரனுகை விளங்கும் விநாயகப்பெருமான் திருவடியை மனத்துள் நிறுவி வாழ்த்தி வணங்குதும்.

இங்ஙனம்,
சி. கணேசையர்.



உ

# சிறப்புப் பாயிரம்

["உயிரிளங்குமரன்" நாடக நூலாசிரியர் நவாலியூர், திரு. க. சோமசுந்தரப்புலவர் அவர்கள் இயற்றியது]

## நேரிசையாசிரியப்பா

தேன்முகம் பிலிற்றுஞ் செய்யபங் கயத்து
நான்முக னறியா நளிர்மதிச் செஞ்சடை
வானக மகளிர் மங்கலங் காத்த
போனகம் பொதிந்த புதுமணிக் களத்துத்
திரிபுர மெரித்த வருடவழ் சிறுநகை
பெருமால் கொண்டு நெடுநில மகழ்ந்துந்
திருமால் காணாத் திருந்திய சேவடித்
திலக வாணுதற் சேயிழை பகிர்ந்த
வுலகுபொதி யுருவத் துயர்ந்தோ னொருகால்
கடுக்கை மாற்றிக் கடிப்பகை சூடி
யானே றகற்றி மீனே றுயர்த்திச்

சடைமுடி மறைத்து மணிமுடி தாங்கி
யிடப்பாற் பிரிந்த மடக்கொடி யுடனே
யறப்பாற் றனியர சாண்டது மன்றி
யிருவினை துடைக்கு மெண்ணான் கிரட்டி
திருவிளை யாடல் செய்தருள் சிறப்பிற்
றிங்கட் டிருக்குலத் தென்னவன் சீர்பொலி
மங்கலப் பாண்டி வளநா டதனிடைத்
தொன்னாள் நிறுவிய துறைமலி சங்கத்
தந்நாள் வீற்றிருந் தாய்ந்திடு முதல்வன்
விந்தமுங் கடலு மேதக வொடுங்கச்
சுந்தரச் செங்கை துளக்கிய வாய்மைச்
சந்தனப் பொதியத் தவமுனி தனாது



சாயா வாணை தலைத்தலை தாங்கிய
தேயா நல்லிசைச் சீடர்பன் னிருவருட்
பல்காப் பியக்கலை பழகிய முதன்மைத்
தொல்காப் பியரருள் தொன்மைநன் னூற்கு
முற்படு ஞான முதுமொழி மெய்ந்நூல்
கற்பவை யெவையவை கற்றுணர்ந் தடங்கி
வளம்பூ ரித்த விளம்பூ ரணருங்
கச்சங் கடந்த கலைமலி காட்சி
நச்சினார்க் கினியரு நானில மருங்கி
னெழுத்துக் களித்த விழுப்பொரு ளவற்றுட்
பின்னவ ரெழுதிய பேருரை கற்புழி

மன்னிய குறிச்சி மானென மாணவர்
நின்றிடர் கூரு நிலைமையை நோக்கிக்
கன்றினுக் கிரங்குந் தாயினிற் கசிந்து
நன்றவர் புலங்கொள நன்கன நாடி
யுரைக்குரை காட்டி நெறிப்பட விளக்கி
முன்னா ருதவிய முறைபோ லிந்நா
ளானாச் செந்தமி ழாரிய நூற்கடல்
சேனா வரையர் செய்தசொல் லுரைக்குப்
பொய்யாப் புலமைப் பூரணர் நச்சரும்
ஐயமில் காட்சித் தெய்வச் சிலையரும்
பல்லோர் பழிச்சுங் கல்லாட னாரு
மருளிய நல்லுரைப் பொருளொடு பொருந்த
முன்னூ னவின்ற முறையினா ராய்ந்தே
யிடர்ப்பா டகற்றிப் புலப்படு நீர்மையின்
மன்னிய தமிழக வடதென் மருங்கிற்
பன்னூ னுனித்துப் பயனறி புலவரு
மிந்நாட் பிணங்கு மிலக்கண நுண்பொரு
ளொருதலை துணிய விரிவுற விளக்குழித்
தன்கோ ணிறுத்திப் பிறன்கோண் மறுத்துக்
'கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோ'ற்
சங்கச் செய்யுள் மேற்கோள் காட்டி

அன்பா லறிஞர்க ளனைவரு மியாண்டும்
பொன்போற் போற்றும் புத்துரை யாத்தனை



யெழுதா வெழுத்தி லெழிலுற வேற்றுவித்
தழியாப் பெருநிதி யாருயிர்க் கீந்தனன்;
மணிநீ ரிலங்கை யணியிழை தனது முழுமதி
முகமென் விழுமியோ ருரைக்குஞ் சீரியாழ்ப்
பாணத்துச் செந்தமிழ் மொழியு மாரிய மொழியு
மழகுடன் வாழ வன்னக் கதலியு மாவும்
பலாவுஞ் செங்நெற் கழனியுஞ் சேர்ந்துதலை
மயங்கிய புன்னைமா நகரம் பொலியவங்
குரித்தோன் ஆசிக லறுத்த வருந்தவக் காட்சிக்
காசிப முனிவன் கால்வழி வந்தோன்
முந்நூல் மார்பன் முதுமறை யந்தணன்
சின்னையக் குரிசில் செய்தவப் புதல்வன் சைவமுந்
தெய்வத் தமிழுநன் கோங்க மெய்வளர் நல்லை
மேவிய கலைக்கடல் **நாவலர் பெருமான்** பாலுணர்
மருமான் **பொன்னம்பல**மெனும் புலவர்
சிகாமணி தன்னன் பகத்துத் தழைத்தமா
ணாக்கன் தண்டாப் புலமை வண்டமி ழாசான
சுன்னைக் **குமார சுவாமி**தன் பாலு மன்னிகின்

ருய்ந்து வளர்ந்த மாமணி அரச கேசரி யாக்கிய
செந்தமிழ் இரகு வம்சித் தின்னுரை
கண்டோன் கோதிலா ஞானக் குசேலர்தங்
காதையு மோதிய புலவ ருயர்வர லாறு
முரைநடை காட்டிப் புரைதப வகுத்தோன் ஆடகக்
குடுமி மாடம துரையி
னன்காஞ் சங்கத் தோங்கிய
புலவன்
திங்க டோறு மங்கண் வெளிவரு நந்தாச் சீர்த்திச்
செந்தமிழ்த் தாளிற் கூறிய சிறுபொழு தாறெண
நிறுவியு மாறனு ருபுரு பேற்குமென் றுரைத்து
மாகு பெயரு மன்மொழித் தொகையும்



பாகுபா டறிகுபு பாரித்து விளக்கியு
["வித்தக"ப் பத்திராசிரியர்
நல்லுரை பலவரை சொல்லுரை யாளன்
வறியாழ் நகரி லிங்கா ளிலங்கிடு
தென்கோவை, பண்டிதர் ச. கந்தையபிள்ளையவர்கள் இயற்றியது]

மாரிய திராவிட வலைக்களத் தறிஞன்

மேவுமைம் மூன்று வற்சரம் விரிந்த
காவியக் கழகக் கலைத்தலை யாசான்

## ஆசிரியப்பா

பூநீர் தீவளி வானெனப் புகலும்
அவநெறி யகற்றுஞ் சிவநெறி யொழுக்கமு
மரனடிப் பற்று மடியவர்க் கன்பும்
ஐந்திணை மயக்கா னமைந்ததிவ் வுலகே!
ஓங்காரி யான வுமையவ ளன்றே
புலனெறி யடக்கமும் பொருந்திய புண்ணியன்
பூவல யத்துப் பொருளறி புலவர்
நாவினும் பாவினு நாடொறு நவிலுங்

ஆங்காரி யாகி ஐவரைப் பெற்றனள்!
“அந்தணர் மறை”யெனு மரியதத் துவமாய்
வியாப்பிய மாகி மேவுமா ரியமாம்
கற்புறு கணேசைய னென்னு
மகாரத்து நின்று விசர்க்கமென மரீஇ
மற்புத நாமத் தருந்தவத் தோனே.

மாவென விரிந்து மலர்ந்தவிப் பவஞ்சம்
சொற்பொருள் வடிவாய்த் துலங்கிடு மன்றே!
வியாப்பிய **ஆரியங்** கௌணமாய் மேவிட
வியாபக மாகி மிளிருமற் றிதுவே **தமிழ்**எனச்
சாற்றினர் தத்துவப் பெரியார் இயற்கைநன்
னெறியா வியம்புகுரு நெறியால் நிறைமுறை
தழீஇ நின்றுழி யிதுவே **அமிழ்த** மாகி
யமைதரு மன்றே! **தமிழ்அமிழ் தே**யெனச்
சாற்றுபொரு ளிதுவே! ஒலிகட் கெல்லா
மொருபிறப் பிடமாய் நாத பீடமெனும் வேத
வந்தமாய் அன்னதை யணவு மாரிடர் தம்மால்
அறிந்திடு மறையாய்ச் செறிந்துள தடமாம்
"**அந்தணர் மறை**"யை யநுபவத் துணர்ந்து
வேத வந்தமாய் விளங்குமெய் யீறும் சித்தி
னந்தமெனத் திகழுபி ரீறும் சமரச மாகத்
தமிழை யமிழ்தாக்கி வேதாந்த சித்தாந்த
சமரச மிளிர்தர அமிழ்த வடிவென வருமறை
முழங்கும் முன்னிலைப் பிரமந் தன்னிலை யாக
நித்தியம் பெறீஇய தத்துவப் பெரியாராம்

அகத்தியர் அனைய வருந்தவச் சித்தரே!
வியாப்பியம் பிரதம கலையென மேவ
உபய கலையா யொலிவரி வடிவாய்
வியாபக மாகி விளங்குதமிழ் கண்டு
எழுத்துச் சொற்பொரு ளியலுற வுணர்ந்தோர்!
ஆதலி னன்றோ மேதகு புலவனும்
ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியனும்
எழுத்தி னிலக்கணம் வழுத்தப வுணர்த்துதல்
தனக்கிய லாதெனத் தன்மதிப் பொலிவால்
"அந்தணர் மறைத்தே" யென் றமைந்தனன் மன்னோ!
"மொழிப்பொருட் காரணம் விழிப்பத்தோன் றா" வென
உரைத்தது மீங்கிதற் குறுசான் றாமே!
எல்லாச் சொல்லும் பொருளுண்டத் தெனினும்
வாய்மையே போலி யாகிமன் னிடலால்
வாய்மையின் பெயரே போலியும் பெறலால்
மாயையி னீர்மையு மதுவா தலினால்
மாவெனப் பூத்த ஐயெனு மாயையின்
மாழாந்து நாளும் வருந்துப மாளும்
சீவர்கள் வாய்மையின் றிறன் றெரிகிலரே!
எழுத்திய லதனிற் பழுத்தநல் லறிவால்
மெய்யுயி ரொருமை கைவரத் தெரிந்தே
ஏனைய வோத்தினும் யாமினி துணர

இந்துமத வுண்மை யியல்பெற வுணர்த்திய
புலவன் மாண்பு புகலவும் படுமோ!
இன்னன ‘வேத’ வுண்மைகள் மலிந்தவித்
தொல்காப் பியமெனுந் தொல்லிய னூலுக்
குலகியற் கொப்பக் குலவுநல் லுரைகள்
கண்டனர் பலரே! பண்டைய விந்நூற்
சொல்லதி காரக் கொல்லும் வகையால்
**சேனா வரையனார்** செய்திடு முறையே
திட்ப நுட்பந் திகழுநன் னடையான
இயன்றதெனப் போற்றுவ ரியற்றமிழ் வாணர்!
அன்னபே ருரையி லமைந்தநுண் பொருளை



மயக்கமற விளக்கி மற்றையோ ருரைகளும்
ஒப்பு நோக்கி விகற்பமு முணர்த்தி
ஒருதலை துணிந்துந் தன்மத நிறுவியும்
குறிப்புரை யறிஞர் குறிக்கொள வரைந்தே
மாணவர் குழாமு மருவுமா சிரியரும்
யாவரு மெளிதி னுணர்தர விரிவான்
உதவிய புலவ னவன்யா ரெனினே!
புனிதனை இலங்கும் புகலிடந் தெரிக்கும்
**இலங்கைப்** பெரிய வீழமண் டலத்தின்
சிரமெனத் திகழ்ந்து பரவுசெந் தமிழின்

யாண ராருதயாழ்ப் பாணமாங் தேத்துப்
புன்னையம் பதியினன் ; மன்னிய காசிப
கோத்திரத் துதித்த குலநல முடையோன் ;
இத்தலம் புகழும் வித்துவன் மணிகளாம்
நல்லூர் **ஆறுமுக நாவலன்** மருகன்
**பொன்னம் பலவனும் புலவன்** பாங்கரும்
என்போல் வார்பலர்க் கியற்றமிழ் தெரித்த
சுன்னைக் **குமார சுவாமிப் புலவனும்**
தோன்றறன் பாங்கருந் தொன்மைசா லிலக்கண
இலக்கிய நூல்பல வினிதுகற் றுணர்ந்தோன் ;
தொல்காப் பியமுந் தொல்காப் பியங்களும்
மாணவர் பலர்க்கு வரன்முறை பயிற்றிய
பிடுசா லநுபவப் பெற்றிகை வந்தோன் ;
இலக்கண வுணர்ச்சியி னித்தமி ழகத்தே
இணையிலா துயர்ந்த விபற்றமிழ்க் குரிசில் ;
தமிழொடு சமக்கிருத சாகரங் கடந்த
புரசை மால்களிற் **றரசகே சரி**யெனும்
அரசிளங் குமர னமைத்தகாப் பியமாம்
இரகுவம் மிசத்துக் குரைகண்ட விபுதன் ;
மதுரைச் சங்க மருவுசங் கிடையாம்
“ **செந்தமிழ்** ” இதழிலுந் திருநந்தி யாணையால்
புதுவையிற் றோன்றிப் புராதன சைவ
முத்திநிலை காட்டும் “ **வித்தக** ” விதழிலும்

தமிழறி வோங்கத் தன்மதிப் பொலிவால்
[கோப்பாய் அரசினர் ஆசிரிய கல்லூரித்
தலைமைத் தமிழாசிரியர்
கட்டுரை வரைந்த கல்வி யாளன்;
என்பா னண்பு பண்புறக் கொண்டோன்;
விழுப்பமார் குணனு மொழுக்கமு மமைந்து
மட்டுவில் பண்டிதர், திரு. வே. மஹாலிங்கசிவம் அவர்கள்
இயற்றியது]

முத்தி வாயிலென வேதநூன் முழங்கும்
விக்கிந விநாயக விழுப்பே றளிக்கும்

## பதினான்குசீராசிரியவிருத்தம்

கணேச னடிமலர் கனவினு மறவாக்
**கணேசையப்** பெயர்கொளுங் கவிஞ ரேறே
இன்னகுறிப் புரையோ டிந்நூ லுரையினை
எழிலுற வச்சிட் டியாவர்க்கு முதவும்

"ஈழ கேசரி" பிதழுக் கதிபனும்
105 **பொன்னைய** நாமன் புகழுமருங் குரைத்தே!

மணிவளர் மிடற்றுக் கடவுள்பெரான் னடியை
மறக்கலாக் காசிப முனிவன்
வழிவரு புனிதச் சின்னைய சுகுணன்
வளர்தவத் தருள்புரி மறையோன்
அணிவளர் தமிழ்நூற் பரப்பெலாங் குசைநுண்
மதியினு ளைய்ந்தமிழ் தெனவே
அருந்தமிழ்ப் புலவோர் விருந்தென நுகர
வளவிலாப் பொருளுரை வரைந்தோன் நணிவளர்
புலமை யீழநாட் டறிஞர் நமக்கொரு நாயக
மெனவே நயந்தினி தேத்தும் பருணித
**கணேச** ஞானசூ ரியனிலக் கணநூற் றுணிவளர்
தருதொல் காப்பிய வுரையிற் றுறுமுநுண்
பொருளிரு ளகன்று துலங்குற விளக்கிச்
செம்மைசெய் தனன்**பொன் னையனுந்**
தோன்றல்வேண் டிடவே.

# தொல்காப்பியத்தின் தொன்மை

தொல்காப்பியமெனப் பெயரிய இவ்விலக்கண நூல் தமிழிலே மிகப் பழமை பொருந்தியதொரு நூலாகும். இது முதற்சங்கத்திறுதியிலே செய்யப்பட்டு இடைச் சங்கத்திற்கும் கடைச் சங்கத்திற்கும் இலக்கணமாகவமைந்தது என்பர். முதற் சங்க கால நூல்களாய்க் கடல்கொள்ளாது எஞ்சிக் கிடந்தவற்றுள் இஃதொன்றுமே இப்பொழுதும் வழங்குவது. இந்நூலை இயற்றினர் அகத்தியரின் முதன் மாணாக்கராகிய தொல்காப்பியனாராவர். தொல்காப்பியனர் அகத்தியரின் முதன்மாணாக்கரென்பது,

"பூமலி நாவன் மாமலைச் சென்னி
ஈண்டிய விமையோர் வேண்டலிற் போந்து
குடங்கையின் விந்த நெடுங்கிரி மிகைதீர்ந்
தலைகட லடக்கி மலயத் திருந்த
இருந்தவன் றன்பா லியற்றமி ழுணர்ந்த
புலவர்பன் னிருவருட் டலைவ னாகிய
தொல் காப்பியன்".

என அகப்பொருள் விளக்க நூலார் கூறுமாற்றானும், அகத்தியர் தென்றிசைக்கு வரும்போதே தொல்காப்பியரை (திரணதூமாக்கினியாரை)ச் சமதக்கினிமுனிபாற் பெற்றுவந்தாரென்று தொல்காப்பியப் பாயிரத்துள் நச்சினார்க்கினியர் கூறுதலானும் அறியப்படும். இராமபிரானாலே சீதையைத் தேடும்படி அனுப்பப்பட்ட அனுமன் முதலிய குரக்குவீரர் தென்றிசை நோக்கிச் செல்லுங்கால் பாண்டிநாட்டில் இடைச்சங்கமிருந்த கபாடபுரத்தையுங் கண்டு போனாரென்று வான்மீக ராமாயணங் கூறுதலானும், இடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் அகத்தியனாருந் தொல்காப்பியனாரும் முதலாயினோர் என்று நூல்கள் கூறுதலினானும், இராமர் காலத்துக்கு முன்னுமிருந்த பரசுராமர் சமதக்கினியின் புதல்வரென்று நூல்கள் கூறுதலானும், தொல்காப்பியரும் சமதக்கினி புதல்வரென்று தொல்காப்பியப் பாயிரங் கூறுதலினானும் தொல்காப்பியர் இராமர் காலத்திற்கு முந்தியேயிருந்தவர் என்பது துணியாகும். சோழவந்தான் அரசஞ் சண்முகனார் தமது சண்முக விருத்தியுள் "இந்நூலை அதங்கோட்டாசிரியற்குக் காட்டிய காலம் வரையறையானித்துணைத்தென வறியப்படாவிடினும் பாண்டியநாட்டைக் கடல்கொள்ளுமுன்னர்த் தென் மதுரையில் அரங்கேற்றப்பட்டமையானும் அந்நாட்டைக் கடல்

கொண்ட பின்னர்க் கபாடபுரத்துச் சங்கமிருந்த காலத்தே இராம னிலங்கை சென்றமையானும் அவன் காலத்துக்கு முன் என்பது தேற்றமாகலின்" என்று கூறிப்போதல் காண்க. இதனால், தமிழர்களுடைய கணிதப்படி தொல்காப்பியஞ் செய்யப்பட்டுப் பல ஆயிரமாண்டுகள் சென்றன என்று சொல்லலாம். தொல்காப்பியரைப் பற்றிய உண்மைச் சரிதங்கள் கிடையாமையினாலே அவர் காலத்தை வரையறுக்க முடியவில்லை. இக்காலத்தில் சரித்திர ஆராய்ச்சியாளர் தமிழர்களுடைய கணிதங்களை ஒப்புக்கொள்கின்றிலர்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தைத் தாமே முதலில் அச் சிட்ட ராவ்பகதூர், சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் தாமெழுதிய தொல்காப்பியப் பொருளதிகார முகவுரையுள் தொல்காப்பியம் செய்யப்பட்ட காலம்

பன்னீராயிரமாண்டுகள்வரை ஆகும் என்று எழுதியுள்ளார்கள். மானிப்பாய் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள் தமது அபிதானகோச மென்னு நாலுள் " இதுவே தலைச்சங்க மாக நெடுங்காலம் நிலைபெற்று வரும்போது அதற்கிடமாயிருந்த தென்மதுரை கடல் கொள்ளப்பட்டழிந்தது. இதுமாத்திரமன்று, குமரியாற்றின் றெற்கே நாற்பத்தொன்பது நாடுகள் கடலாற் கொள்ளப்பட்டன. இப்பெரும் பிரளயம் வந்த காலத்தை ஆராயு மிடத்து அது துவாபர கலியுக சந்தியாதல் வேண்டும். யுக சந்தியாவது யுக முடிவுக்கு ஐயாயிர மாறாயிரம் வருஷ முண்டென்னு மளவிலுள்ள காலம். ஒவ்வோர் யுக சந்தியிலும் பிரளயமொன் றுண்டாகுமென்பது புராண சம்மதம். ஆகவே, தென்மதுரை அழிந்தகாலம் இற்றைக்குப் பன்னீராயிரம் வருஷங்களுக்கு முன்ன ராதல் வேண்டும். இற்றைக்கு 11481 வருஷங்களுக்கு முன் னர் ஒரு பிரளயம் வந்துபோயதென்றும், அப் பிரளயத்தால் இப் பூமுகத்திலே சமுத்திர தீரஞ் சார்ந்த நாடுகளெல்லாம் சிதைந்

தும் திரிந்தும் பூர்வ ரூபம் பேதித்துத்
தற்காலத்துள்ள ரூபம் பெற்றனவென்றும்,
"போசிடோனிஸ்" முதலிய தீவுகள் சமுத் திர
வாய்ப்பட்டழிந்ததும் அப் பிரளயத்தாலேயாம்
என்றும் "அத்திலாந்தி" சரித்திர மெழுதிய
'எல்லியட்' என்னும் பண்டிதர் கூறியதும்
இதற்கோராதாரமாம்" என்று கூறினர்.

இவர்கள் கூறுவதும்

உண்மையன்றெனை மறுத்து இப்பொழு துள்ள
ஆராய்ச்சியாளர் சிலர் தொல்காப்பியர் காலம்
ஏறக்குறைய

மூவாயிரம் ஆண்டுவரையாகும் என்பாரும் நாலாயிரம் ஆண்டு வரை ஆகும் என்பாரும் இன்னும் பலபடக் கூறுவாருமாயினர். அவர்கள் அங்ஙனம் வரையறுத்தற்குக் காரணம், ஆரியருள் அகத்தியரே முதலில் தென்னாடு வந்தாரென்றும், அவர் வருதற்கு முன் ஒரு பூகம்பம் நடந்ததினால் கடல் வற்றியும் விந்தமலை கீழடங்கியும் விட்டமையினால் பூமி இப்போதிருக்கு நிலைக்கு வந்ததென்றும், அக்காலத்தேதான் அகத்தியர்
தென்னாடு வந்தா ரென்றும், கடல் வற்றியதையும்
விந்தமலை கீழடங்கியதையுமே,

அகத்தியர் கடலைக் குடித்தாரென்றும், விந்தமலையை அடக்கித் தென்னாடு வந்தாரென்றும் புராணகாரர் கூறியதென்றும் கருதினமையே. ஆரியரும் தமிழரும் ஆகாயவிரதத்திற் சென்றார்கள்

என்று புராணங் கூறியதை நம்பாத ஐரோப்பியர் இப்போது பல

ஆகாய விமானங்களில் செல்லுகின்றார்களல்லவா? ஆகையால் புராணங் கூறும் ஏனைய சரிதங்களின் உண்மைகளையும் அவர்கள் நம்புங் காலத்தை நாம் எதிர்பார்த்திருப்போமாக.

இனிச் சிலர் 'ஐந்திர முணர்ந்த தொல்காப்பியன்' எனத்

தொல்காப்பியப் பாயிரங் கூறலின், வியாகரண காலத்தை அடுத்தே

தொல்காப்பியஞ்

செய்திருக்கவேண்டுமென்பர். வியாகரண கால

மென்று அவர் கருதுங் காலம் பாணினி வியாகரணமும் அத

னுரைகளுமெழுந்து பிரசித்திபெற்ற காலத்தையே குறிக்குமன்றி

ஐந்திர வியாகரண காலத்தைக் குறியாது. ஐந்திர வியாகரணத்தை

இராமன் காலத்திருந்த அனுமன் சூரியனிடம் கேட்டறிந்தா

னென்று இராமாயணங் கூறுதலின் ஐந்திர வியாகரணம் மிகப்

பழைமையுற்றது என்பது அறியப்படும்,



" வேதமொரு நாலுடன் விளக்கிய சடங்கமும் விரிந்தகலையும்
ஓதமிலை வீதிமிசை யேழுபரி பூணருண னூரவிரைதேர்
மீதுசெலும் வெங்கதிர வன்றனொ டயிந்திரவி யாகரணமும்
ஓதியொரு நாளினி லுணர்ந்தனலிம் மாருதி யுயர்ந்தபுகழோய்.'

என்பது இராமாயணம். அத்தகைய ஐந்திர வியாகரணத்தையே இராமனுக்கு முன்னிருந்த தொல்காப்பியரு முணர்ந்தாராதலின், அது கொண்டு தொல்காப்பியர் வியாகரண காலத்தவராதலின் அவர் காலமும் அக்காலமேயென்று உரைத்தல் கூடாது. * பாணினி காலம் கி. மு. 900 ஆண்டுகளுக்குமுன் என்று சி. வி. வைத்தியர் (எம். ஏ; எல். எல். பி.) என்பார் தமது வேதகால சமஸ்கிருத இலக்கிய வரலாறு என்னும் நூலில் கூறியிருக்கின்றார். "ஐந்திர முணர்ந்த தொல்காப்பியன்" என்பதே பாணினி காலத்துக்கு மிக முந்தியிருந்தார் தொல்காப்பியர் என்பதை உணர்த்தும். ஆதலினாலும் தொல்காப்பியர் வியாகரண காலத்தவரல்ல ரென்பது துணியப்படும் என்க. கடைச்சங்கம் இருந்தே நாலாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகின்றன என்று கூறுவாருமுண்டு. இவற்றையெல்லாம் நாம் ஆராய்ந்து துணிதல் முடியாதெனினும் தொல்காப்பியம் கடைச்சங்க காலத்துக்கு மிக முற்பட்ட பழையதொரு நூலாகும்

என்பதை மாத்திரம் துணிந்து கூறலாம். என்னையெனின்? தொல்காப்பியர் நூல்செய்த காலத்து வேதங்கள் இருக்கு முதலி யனவல்ல, அவை வியாசராற் பிற்காலத்துப் பகுக்கப்பட்டன என்று தொல்காப்பியப் பாயிரத்துள் நச்சினார்க்கினியர் கூறுவதி னானும், தொல்காப்பியத்திற் சொல்லப்பட்ட சில சொற்களும் பொருள்களும் கடைச்சங்க நூல்களுக்கு முன்னேயே வழக்கில் வீழ்ந்தன என்று தொல்காப்பிய உரையாசிரியர்கள் கூறுதலி னானும் என்க. தொல்காப்பியத்திற் சொல்லப்பட்ட சில சொற் களும் பொருள்களும் வீழ்ந்தமையை இங்கே எடுத்துக்காட்டுதும்:—

எழுத்ததிகாரம் தொகைமரபில் வரும்,

"சுட்டுமுத லாகிய விகார விறுதியும்
எகர வினாவி னிகர விறுதியும்
சுட்டுச்சினை நீடிய வைஎ னிறுதியும்."

---

* இதனை ஆங்கிலத்தினின்றும் பெயர்த்து உதவினார் வண்ணார் பண்ணை, 'கலாநிலையம்', ஸ்ரீமான். K. நவரத்தினம்பிள்ளையவர்கள்.



என்னுஞ் சூத்திரத்து சுட்டுமுத லிகர
விறுதிக்குக் காட்டிய
அதோளி இதோளி உதோளி என்னு
முதாரணங்களுள் இதோளி
(ஈதோளி) ஒழிந்தன கடைச்சங்க
நூல்களுட் காணப்படாமை
யானும் சுட்டுச்சினை நீடியவைஎ

னிறுதிக்குரிய உதாரணங்களும்
“அழனே புழனே” என்னுஞ் சூத்திர
உதாரணங்களும் இறந்தன
என்று “கடிசொல்லில்லைக் காலத்துப்படினே”
என்னுஞ் சூத்தி
ரத்து இளம்பூரணரும் மற்றைய
உரையாசிரியர்களும் உரைத்
தமையானும், பொருளதிகாரத்து களவியலில் வரும்
116-ம், 117-ம்
சூத்திரங்களுள்ளும்
சிலதுறைப்பொருள்களுக்கும், கற்பியலில்
146-ம், 165-ம், 179-ம் சூத்திரங்களுள்ளும் சில துறைப் பொருள்
களுக்கும், உவம இயல்
31-ம் சூத்திரத்துக்கும் உதாரணமில்லை
என்று நச்சினார்க்கினியர் முதலியோர்
உரைத்தலினாலும் உணரப்
படும். இன்னும் செய்யுளியலுள்,
“வஞ்சி மருங்கினு மிறுதி நில்லா”
என்னுஞ் சூத்திர உரையுள் தேமா புளிமா
என்னு நேரீற்று இயற்
சீர் இரண்டும் வஞ்சிப்பாவினும்
அடியீற்றனில்லா என்னு முரையா
சிரியருரையே சூத்திரப்போக்கிற் கேற்ற

உரையாகவும், பேராசிரி
யரும் நச்சினார்க்கினியரும் இறுதி
என்பதற்கு இறுதல் என்று
பொருளுரைத்து, முதற்கண்
தூங்கலோசைப்பட்டு நில்லா என்று
கருத்துக்கொண்டு, 'கொற்றக் கொடி
உயரிய' 'களிறுங் கத
வெறிந் தனவே' என உதாரணங் காட்டி,
இவை தூங்கலோசைப்
பட்டு நில்லாமை கண்டுகொள்க என்றும்,
இறுதியிலே "மண்
டிணிந்த நிலனும், நிலனேந்திய விசும்பும்,
விசும்புதைவரு வளி
யும், வளித்தலைஇய தீயும், தீமுரணிய நீரும்
" என அவ்விரு
சீரும் பெரும்பான்மை வருதலின்
இறுதியில் நில்லா என்று
பொருள் கூறல் பொருந்தா என்றும் கூறுவர்.
ஆயின், கடைச்
சங்க நூல்களுள் இறுதியில் வருதல்பற்றி
இறுதி நில்லா என்ப
தற்கு அவ்வாறு பொருள் கூறலினும்

உதாரணமில்லை என்றலே
பொருத்தமாம். கடைச்சங்க நாலுள்
இறுதியில் வருதலைக்
காலத்துட்பட்டதெனலாம். ஆதலினும்,
செய்யுளியல் 80-ம்
சூத்திர உரையுள் பேராசிரியர்,
" ஒருகாலத்து வழங்கப்பட்ட
சொல் ஒருகாலத்து வாராதாகலும்
பொருள் வேறுபடுதலு
முடைய. அதொளி இதொளி உதொளி
எனவுங் குயின் எனவும்
நின்ற இவை ஒருகாலத்துளவாகி
இக்காலத்திலவாயின. இவை

## XXV

முற்காலத்துளவென்பதே கொண்டு
வீழ்ந்தகாலத்துஞ் செய்யுள்
செய்யப்படா. அவை ஆசிரியர் நூல்செய்த
காலத்துளவாயினும்
கடைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமைபிற்

பாட்டினுந் தொகை
யினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள் செய்திலர் ; அவற்
றுக்கு இது மரபிலக்கணமாகலி னென்பது " என்றும், நச்சினார்க்
கினியரும் அச்சூத்திர உரையுள் " அதோளி, இதோளி, உதோளி,
குயின் என்றாற்போல்வன இடைச் சங்கத்திற் காகாவாயின.
' அட்டானானே குட்டுவன் ' (பதிற்றுப்பத்து ரு, சஎ.) ' உச்சிக்
கூப்பிய கையினர் ' (திருமுருகாற்றுப்படை) என்றாற்போல்வன
கடைச்சங்கத்திற்காயின சொற்கள் இக்காலத்திற் காகாவாயின."
என்றும் உரைத்துளார்கள். ஆதலினானும் உணரப்படும். [பேரா
சிரியர் கடைச்சங்கத்திற்காகாவாயின என்று கூறலின் நச்சினார்க்
கினியரும் அவ்வாறே கூறியிருப்பர் என்பது எமது கருத்து.
" கடைச்சங்கத்திற்காயின இக்காலத்திற் காகாவாயின " என்று கூறலானும்

'கடைச்சங்கத்திற் காகாவாயின ' என்றே கூறியிருக்க வேண்டுமென்பது பெறப்படும்.]

இன்னும் மரபியலில், மூங்கா முதலியன :—

'பறழெனப்படினு முறழாண்டில்லை'

என்னுஞ் சூத்திரத் தின் கண்ணும்
'அவை இக்காலத்து வீழ்ந்தன என்று' பேராசிரியர் கூறலானும் உணரப்படும். இங்ஙனம் ஒருகாலத்து வழங்கிய சொற்கள் ஒருகாலத்து வீழ்தற்கு எத்துணைக்காலஞ் செல்லும் என்பதை நாம் உற்றுணருவோமாயின் அதன் றொன்மையும் நம்மாலுணரப்பெறும் என்க.



iv

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௩ | ௨௯ | கூறுகின்றார் ; | கூறுகின்றார், |
| ௫ | ௧௯ | நிறுத்தினார் | உணர்த்தியவெடுத்துக் கொண்டார் |
| ௭ | ௧௮ | சொன்மேனேற்றி | சொன்மேலேற்றி |
| ௮ | ௧௦ | தகுதி, யோக்கியதை | யோக்கியதை, சந்நிதி |
| ௮ | ௩௨ | நிலையில் | நிலையல் |
| ௯ | ௩௯ | உளவாக | உளதாக |
| ௧௦ | ௧௭ | காரணமாதல் | காரணமாகக்கோடல் |
| ௧௨ | ௩௯ | மகடூஉவறி | மகடூஉவறிசொல் |
| ௧௩ | ௧௯ | (தனித்தனி) | தனித்தனி |
| ௧௯ | ௩௪ | பேடுவந்தான் | பேடுவந்தாள் |
| ௧௭ | ௩௦ | ஆண்மைதிரித்த | ஆண்மைதிரிந்த |
| ௧௮ | ௧௭ | திரிதல் | திரிந்த |
| ௨௧ | ௧ | வினைக்குறிப்புப்பற்றி | வினைக்குறிப்பும்பற்றி |
| ௨௧ | ௨௨ | முடித்தற்கேற்பதோர் | முடிதற்கேற்பதோர் |
| ௨௧ | ௨௯ ௨௭ | உரித்தாகின்றது | உரித்தாகின்றன |
| ௨௨ | ௨௭ | சினையும் | சினையவும் |
| ௨௨ | ௨௯ | சினையவும் சுனையவும் | சினையும் சுனையும் |
| ௨௪ | ௨௫ | வகரவீறும் | வ ஈறும் |
| ௨௯ | ௧௯ | பாலுணர்த்தல் | பாலுணர்தல் |
| ௩௧ | ௨௪ | ஒன்றன்செப்பு ஒன்றற் காவதென்றது | — |
| ௩௨ | ௮ | செவ்வநிறை | செவ்வனிறை |
| ௩௨ | ௧௩ | வழாஅலேம்பல் | வழாஅலோம்பல் |
| ௩௫ | ௨௯ | (எச்சவியல் ௬௯-ம் சூத்திரத்தில்) | எச்சவியல் ௬௯ம் சூத்திரத்தில் |
| ௩௯ | ௨௮ | அக்குணுமுடையது | அக்குணமுடையது |
| ௩௭ | ௧௩ | நின்றதன்று. | நின்றதன்று |
| ௩௮ | ௨௯ | எக | என்க |
| ௪௨ | ௧௨ | தொக்குட்வழி | தொகுக்கும் வழி |

| | | | |
|---|---|---|---|
| சங | எ | திணைவயியென்றது | திணைவயினென்றது |
| சங | கூ | கள்வர். | கள்வர் |
| சங | க0 | வண்டலயர்ந்தார். | வண்டலயர்ந்தார் |
| சங | ங0 | நிகழ்த்தி | நிகழ்த்திப் |
| சச | கஉ | உயர்திணைப்பாலய | உயர்திணைப்பாலைய |
| சரு | க | திணையத்திற்கும் | திணையையத்திற்கும் |
| சரு | கங | பிற | பிற, |
| சரு | உஎ | வழுவமைதியாயிற்று. | வழுவமைதியாயிற்று |
| சகூ | ஙக | என்றது | என்றதற்கு |
| சஎ | உஅ | எதிர்மறையாகலின். | எதிர்மறையாகலின்; |
| சஎ | ங0 | மறுதலைவினைகளை | மறுதலைவினைகளுட் சிலவற்றை |
| ரு0 | கஉ | உயர்த்துஞ் சொல் | உயர்த்துச்சொல் |
| ருக | உஉ | நச்சினார் | நச்சினார்க்கினியர் |
| ருஉ | ஙங | உன்குணம் | உள்குணம் |
| ருரு | கஅ | வாராது ] | வாராதுஎன ] |
| கூஉ | உஎ | கேயில் | கோயில் |
| கூச | ஙஉ | தெரித்து | எடுத்து |
| கூஅ | கூ | பின்னையதற்கு | முன்னையதற்கு |
| எ0 | கக | சுட்டுவரு | சுட்டிவரு |
| எ0 | உஅ | உருபேற்றுசுட்டுப் | உருபேற்ற |
| எ0 | உகூ | குவ்வுயிருக்கு | குவ்வுருபிற்கு |
| எக | க0 | கிளத்தி | கிழத்தி |
| எக | உஉ | முதலாகிப | முதலாகிய |
| எக | உரு | பட்டனவென்று | பட்டதென்று |
| எகூ | ககூ | அவ்வழக்கு நோக்கி இவ்வாறு கூறினரெனினு மமையும். | அவ்வழக்கு ஈண்டு நோக்கத்தக்கது. |
| எகூ | ஙரு | கருத்தும் | கருத்துமாகிய |
| அச | ங | மரனு மூளவேனும் | மரனுமுளவேனும் |
| கூ0 | கச | தெரிந்து | தெரித்து |
| கூங | உஎ | செறிதல் - அறிதல் | செறுதல் - அறுதல் |

| | | | |
|---|---|---|---|
| ௧௦௧ | ௨௮ | கோடற்கு | கோடல் |
| ௧௦௪ | ௨௬ | ஒழிந்த | ஒழித்த |



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௧௦௬ | ௨௬ | விசேடணம். | விசேடணம், |
| ௧௦௭ | ௫ | பிறிதொன்றனோடு | பிறிதொன்றனோடு தொகாது |
| ௧௦௭ | ௧௦ | இச்சூத்திரத்தும்....... | ' இச்சூத்திரத்தும்........ |
| | ௧௨ | ஏற்புடைத்தன்று | ஏற்புடைத்தன்று ' |
| ௧௦௭ | ௧௬ | அப்பயனிலையாகிய | அப்பயனிலையுள் |
| ௧௦௭ | ௨௧ | இது | இஃது, |
| ௧௦௮ | ௫ | வேற்றுமை செய்தல் | வேற்றுமை செய்தல் " |
| ௧௧௨ | ௧௯ | பெயரிகிைய | பெயரிகிைய |
| ௧௧௪ | ௧௨ | ஒழித்தற்காகவே | ஒழித்தற்காகச் |
| ௧௧௪ | ௧௭ | இச்சூத்திரத்தில் ...... கொண்டனர், | " இச்சூத்திரத்தில் ....... ......கொண்டனர் " |
| ௧௧௫ | ௧௮ | வினைத்தொகை | ( வினைத்தொகை ) |
| ௧௧௭ | ௯ | திரிபினு | திரியினு |
| ௧௧௯ | ௨௫ | அன்மொழித்தொகையை | அன்மொழித்தொகை யை. |
| ௧௨௧ | ௨௭ | உரியதாகலின் | உரியவாகலின் |
| ௧௨௫ | ௧௯ | அறிவானமைத்த | அறிவானமைந்த |
| ௧௨௬ | ௧௮ | இன்னேது | இன்னுேது |
| ௧௨௭ | ௨௦ | செய்தற்கு | செயப்பட்டதற்கு |
| ௧௩௭ | ௩௨ | ஏற்பதானும், | ஏற்பதானும். |
| ௧௪௮ | ௨௩ ௨௪ | ( வேற்றுமை ...பகுதி ) | வேற்றுமை .. பகுதி |
| ௧௪௮ | ௨௪ | விலக்கணவதிகாரம் | விலக்கணமதிகாரம் |
| ௧௫௫ | ௨௮ | ( கிளவி - ௨௯ ) | கிளவி - ௨௯. |

| | | | |
|---|---|---|---|
| ௧௫௯ | ௨௫ | கடவுளுககு | கடவுளருக்கு |
| ௧௬௦ | ௨௦ | வேண்டியதில்லே. | வேண்டியதில்லே |
| ௧௬௦ | ௨௮ | கிளந்து | விதந்து |
| ௧௬௧ | ௨௨ | தொகுத்தல் | தொகுதல் |
| ,, | ௨௬ | துணிபப்படும் | துணியப்படும் |
| ௧௬௨ | ௧௯ | பிறிது பிறிதேற்றல்.... | ‘பிறிது பிறிதேற்றல்.... |
| | ௨௯ | ....அமையாதென்க. | ....அமையாதென்க’ |
| ௧௬௪ | ௧௦ | நாண | ஞண |
| ௧௬௫ | ௨௬ | புள்ளியிற்கலி | புள்ளியற்கலி |



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|

| | | | |
|---|---|---|---|
| ௧௬௬ | ௧௩ | பிலத்த | பிறத்த |
| ௧௮௨ | ௨௪<br>௨௫ | ஏயொடுசிவணும் | ‘ ஏயொடு சிவணும் ’ |
| ௧௮௩ | ௨௩<br>௨௫ | தொழிலீஇ | தொழீஇ |
| ௧௮௬ | ௩ | விளிவயினுமெனல் | விளிவயினுமெனல் |
| ௧௯௬ | ௨௭ | செய்தனெச்சம் | செய்தெனெச்சம் |
| ௨௦௩ | ௨௪ | முறையே | — |
| ௨௧௬ | ௩௧ | பெறுவதன்று | பெறுவனவன்று |
| ௨௨௩ | ௨௮ | வருமென்றதனல் | ‘ ஆக்கமில்லை ’ யென்றதனல் |
| ௨௨௪ | ௧௩ | கென்னிழை | கென் |
| ௨௨௪ | ௧௪ | நெகிழப் | னிழை நெகிழ் |
| ௨௩௫ | ௨௧ | நிற்றலான் | நிற்றல் |
| ௨௩௬ | ௨௧<br>௨௨ | பெறுதற்கே | பெறுதலே |
| ௨௩௬ | ௩௧ | தன்மையை | தன்மை |
| ௨௩௯ | ௨௨ | கூறப்பட்டது | கூறப்பட்டன |
| ௨௩௯ | ௨௫ | க, ட, த, றக்கள் | நச்சினார்க்கினியர், கடதறக்கள் |
| ௨௪௦ | ௨௮ | ஆண்டு | ஆண்டுக் |
| ௨௪௧ | ௯ | ( குறள் - அச ) | ( குறு - அச ) |
| ௨௪௧ | ௩௧ | ஏற்புடைத்தாம் | ஏற்புடையவாம் |
| ௨௪௪ | ௭ | ரெவரே | ரெமரே |
| ௨௪௭ | ௨௦ | மாகாரம் | ஆகாரம் |
| ௨௪௮ | ௨௦ | அதுச்செல் | அதுச்சொல் |
| ௨௪௯ | ௨௦ | எனப்பட்டது | எனப்பட்டன. |
| ௨௫௦ | ௩௨ | சாத்தனை | உடையானை (சாத்தனை) |
| ௨௫௧ | ௨௮ | உடமை | உடைமை |
| ௨௫௨ | ௧ | வாய்பாடேற்றி | வாய்பாடேபற்றி |
| ௨௫௨ | ௧௮ | அண்மை | அன்மை |

| | | | |
|---|---|---|---|
| ௨௬௯ | ௨௫ | முதனிலைக | முதனிலை |
| ௨௨௨ | ௧௯ | துவாமை | துவ்வாமை |
| ௭௭௭ | ௨௯ | முடியாதென்றபடி | முடியாவென்றபடி |



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௨௮௭ | ௨௫ | சிறந்தது | சிறந்தது; |
| ௨௯௬ | ௩௫ | ஒருவகை | என்பதொருவகை |
| ௩௦௪ | ௧௮ | னல்லவென்பது | னல்லனென்பது |
| ௩௧௩ | ௨௬ | மாதவர் | மாதவர்த் |
| ௩௧௮ | ௨௦ | சொல் | சொல். |
| ௩௨௮ | ௧௩ | எடுத்தோத | எடுத்தோதா |
| ௩௩௨ | ௨ | சென்கேழ் | செங்கேழ் |
| ௩௩௪ | ௫ | விதிர்பு | விதிர்ப்பு |
| ௩௩௪ | ௧௫ | வார்கை | வார்க |
| ௩௩௬ | ௧௫ | காரிகை | காரி |
| ௩௪௨ | ௨௪ | நாகல்லார் | நாமகல்லார் |
| ௩௪௭ | ௧௫ | மார்பணணஙகிய | மார்பணங்கிய |
| ௩௪௮ | ௨௪ | முணர்த்த | முணர்த |
| ௩௭௩ | ௨௬ | றகரம் | றகர அகரம் |
| ௩௭௫ | ௨௨ | முதனிலை | தனிநிலை |
| ௩௯௨ | ௩௨ | கச்சினன் கழலினன் | கச்சு, கழல் |
| ௪௨௪ | ௨௧ | ளன்றோ | ளன்றே |

| | | | |
|---|---|---|---|
| ௫௬ | ௩௯ | மண்கலம் | மட்கலம் |
| ௫௭ | ௪ | ௨௨௯ | ௧௨௯ |
| ௫௯ | ௧௧ | சுண்ணம் - பொற்பொடி | சுண்ணம் - பொற்பொடி, சுண்ணும்புமாம். |

## விசேடக் குறிப்பு.

இவ்வுரையை அச்சிட்டபின், சென்னை ஓரியண்டல் லைப்ராரியில் உள்ள கல்லாடனாருரைக் கையெழுத்துப் பிரதியில் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்ற சூத்திரவுரையை இப்போது அங்கு வசிக்கும் எம்முடைய மாணவரொருவரால் எழுதுவித்துப் பார்த்தபோது, அவ்வுரையுள்,—



'மற்றசைநிலையிடைச் சொற்கள் பொருளுணர்த்தாவாலெனின், அவையு மொருவாற்றாற் சிறுபான்மை பொருளுணர்த்து மெனவுணர்க. அல்லதூஉம் இது பெரும்பான்மை' எனக் காணப்படுகின்றது. பெரும்பான்மை என்றலால், அவை பொரு

ஞணர்த்தா என்பதும் கல்லாடனார் கருத்தென்பது பெறப்படி னும், இச்சொல்லதிகார முதற்சூத்திரத்துக்கு இவருரைத்த உரை புள் வரும், 'எழுத்தல்லோசையும்.......... ஆராயப்படுகின்றது.' என்ற வாக்கியத்துள் வரும் 'பின்னின்றவிரண்டும் இவ்வதிகாரத் தாராயப்படுகின்றது' என்பது 'பின்னின்ற விரண்டனுள் முன் னையதே இவ்வதிகாரத் தாராயப்படுகின்றது.' என்றிருப்பின் மிகப் பொருத்தமாகுமென்பது எமது கருத்து.

இன்னும், எச்சவியல் சகசு-ம் சூத்திர உரையுள் 'போல என்பது குறிப்பு வினையெச்சமாய் நிற்றலானும்' என்பதில், 'குறிப்பு' என்பது, 'அவைபற்றி (வினையும் வினைக்குறிப்பும் பற்றி).......... விரித்தற்கேற்புடைமை அறிக' என வருதலை நோக்கும்போது, இல்லாமலிருப்பது பொருத்தமாகும் என்பதும் எமது கருத்து.

சி. க.



உ

திருச்சிற்றம்பலம்

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

## சேனாவரையம்

---

தன்றோ ணைன்கி னென்றுகைம் மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினு
மொளிபெரிது சிறந்தன் றளியவென்
னெஞ்சே. ஆதியிற் றமிழ்நூ லகத்தியர்க்
குணர்த்திய

மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே.
தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ்
குறித்தே. சந்தனப் பொதியத் தடவரைச்
செந்தமிழ்ப் பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற்
பொருட்டே.

## க. கிளவியாக்கம்

க. உயர்திணை யென்மனார் மக்கட்
சுட்டே
யஃறிணை யென்மனா ரவரல பிறவே
யாயிரு திணையி னிசைக்குமன சொல்லே.

நிறுத்தமுறையானே சொல்லுணர்த்திய வெடுத்துக்கொண்டார்; அதனால் இவ்வதிகாரஞ் சொல்லதிகார மென்னும் பெயர்த்தாயிற்று.

சொல்லாவது எழுத்தொடு ஒருபுடையா ஒற்றுமையுடைத் தாய்ப் பொருள் குறித்து வருவது. உரையாசிரியரும் எழுத் தாதற் றன்மையொடு புணர்ந்தென்பார் 'எழுத்தொடு புணர்ந்து' என்றாராகலின், ஒருபுடையொற்றுமையே கூறினர். தன்மை யொடு புணர்ந்தென்னுக்கால், ஓரெழுத் தொருமொழிக்கு எழுத் தொடு புணர்தலின்மையிற் சொல்லாதலெப்தாதென்க. பொருள் குறித்து வாராமையின் அசைநிலை சொல்லாகாவெனின் ;—'ஆவயி னாறு முன்னிலை யசைச்சொல்' (சொல்-உஎச.) என்றும், 'வியங்கோளசைச்சொல்' (சொல்-உஎரு.) என்று மோதுதலான், அவையும் இடமுதலாகிய் பொருள் குறித்து வந்தனவென்க. 'யாகா பிற பிறக்கு' (சொல்-உஎகூ.) என்னுந் தொடக்கத்தன வோவெனின், அவையும் மூன்றிடத்திற்கு முரியவாய்க் கட்டுரைச் சுவைபட வருதலிற் பொருள் குறித்தனவேயாம். இக்கருத்தே பற்றியன்றே ஆசிரியர் 'எல்லாச்

சொல்லும் பொருள்குறித் தனவே'
(சொல்-௧௫௫.) என்றோதுவாராயிற் றென்க.

சொற்றான் இரண்டுவகைப்படும்,

தனிமொழியுந் தொடர் மொழியுமென.
அவற்றுள், தனிமொழியாவது சமய வாற்ற
லாற் பொருள் விளக்குவது தொடர்மொழியாவது
அவாய்நிலை யானும் தகுதியானும்
அண்மைநிலையானும் இயைந்து பொருள்
விளக்குந் தனிமொழியீட்டம்.
பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும்,
இடைச்சொல்லும், உரிச்சொல்லுமெனத்
தனிமொழி நான்கு வகைப்படும். மர மென்பது
பெயர்ச்சொல். உண்டானென்பது வினைச்சொல்.
மற் றென்பது இடைச்சொல். நனியென்பது
உரிச்சொல்.

இருமொழித் தொடரும்
பன்மொழித்தொடருமெனத் தொடர்மொழி
இரண்டுவகைப்படும். சாத்தன் வந்தானென்பது

இருமொழித்தொடர். அறம்வேண்டி யரசனுலகம் புரந்தானென் பது பன்மொழித் தொடர்.

அதிகாரமென்னுஞ் சொற்குப் பொருள் பலவுளவேனும் ஈண்டதிகாரமென்றது ஒரு பொருணுதலிவரும் பலவோத்தினது தொகுதியை என்க. வடநூலாரும் ஓரிடத்து நின்ற சொற் பல



சூத்திரங்களோடு சென்றியைதலேயும் ஒன்றன் இலக்கணம்பற்றி வரும் பல சூத்திரத் தொகுதியையும் அதிகாரமென்ப. சொல்லதிகாரம் சொல்லையுணர்த்திய வதிகாரமென விரியும். அச்சொல்லை யாங்கன முணர்த்தினுரோவெனின், தம்மையே யெடுத்தோதியும் இலக்கணங் கூறியு முணர்த்தினுனென்பது.

வழுக்களைந்து சொற்களை ஆக்கிக்கொண்டமையான், இவ்வோத்துக் கிளவியாக்கமாயிற்று. ஆக்கம்—அமைத்துக்கோடல்; நொய்யு நுறுங்குங் களைந்து அரிசியமைத்தாரை அரிசியாக்கினுரென்பவாகலின். சொற்கள் பொருள்கண்மேலாமா றுணர்த்தினமையால் கிளவியாக்கமாயிற் றெனினு மமையும். பொதுவகையாற் கிளவி யென்றமையால், தனிமொழியுந் தொடர்மொழியுங் கொள்ளப்படும். கிளவி, சொல், மொழி என்னுந் தொடக்கத்தன

லெல்லாம் ஒரு பொருட்கிளவி.

**இதன் பொருள் :** மக்களென்று கருதப்படும் பொருளை ஆசிரியர் உயர்திணையென்று சொல்லுவர்; மக்களென்று கருதப் படாத பிறபொருளை அஃறிணையென்று சொல்லுவர்; அவ்விரு திணைமேலுஞ் சொற்கணிகழும் என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லு மெனச் சொல்லிரண்டென்றவாறும்.

மக்கட்சாதி சிறந்தமையான் 'உயர்திணை' யென்றார்.

என்மனாரென்பது செய்யுண்முடிபெய்திநின்றதோ ராசீற் றெதிர்கால முற்றுச்சொல். என்றிசினோர், கண்டிசினோர் என் பன முதலாயின அவ்வாறு வந்த இறந்தகால முற்றுச்சொல். என்ப மென்னு முற்றுச்சொல்லினது பகரங் குறைத்து மன்னும் ஆரு மென இரண்டிடைச்சொற்பெய்து விரித்தாரென்று உரையாசிரி யர் கூறினாலெனின் :— என்மனாரென்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது, நூலுள்ளுஞ் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசைநிறையென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார்; பின்னும் இசைநிறையென்றல் மேற்கோண்மலை வாதலானும், அவர்க்கது கருத்தன்றென்க. மாணாக்கர்க்குணர்வு

[ கிளவி

பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது

உய்த்துணர வைத்தல் அவர்க்கியல்பாகலாற்

செய்யுண் முடிபென்பது கூறாராயினர்.

என்மனாராசிரியரெனவே, உயர்திணை அஃறிணை யென்பன தொல்லாசிரியர் குறியாம். ஆசிரியரென்னும் பெயர் வெளிப் படாது நின்றது.

மக்களாகிய சுட்டு யாதன்கணிகழும் அது மக்கட்சுட்டெனப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஈண்டு

மக்களென்றது மக்களென்னுமுணர்வை. எனவே, மக்களே யாயினும் மக்களென்று சுட்டாது பொருளென்று சுட்டியவழி உயர்திணை யெனப்படாவென்பதாம்..

இனி அவரலவென்னது

பிறவென்றேவிடின் யாதல்லாத பிறவென்று

அவாய்நிற்குமாகலின், 'அவரல' வென்றார். மக்கட்

சுட்டே யென்று மேனின்றமையின்

மக்களல்லாத பிறவென் றுணரலாமெனின்

;— ஆற்றன் முதலாயினவற்றாற் கொள்வது

சொல்லில்வழியெண மறுக்க. இனி அவரல வென்றே யொழியின் அவற்றது பகுதியெல்லாம் எஞ்சாமற் றழுவாமையின், எஞ்சா மற் றழுவுதற்கு 'அவரல் பிற' வென்றார்.

செய்யுளாகலான் ஆயிரு

திணையெனச் சுட்டு நீண்டது. வரை யறையின்மையின் ஈண்டு யகரவுடம்படுமெய்யாயிற்று.

சொன்னிகழ்ச்சிக்குப் பொருளிடமாகலின், ஆயிருதிணையின் 'கண்ணென ஏழாவது விரிக்க. இன்சாரியை வேற்றுமையுருபு பற்றியும் பற்றாதும் நிற்குமென்று உரையாசிரியர் இரண்டாவது விரித்தாரெனின் :—'சாரியை யுள்வழிச் சாரியை கெடுதலுஞ்— சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையலும்' (எழு-கரு௭.) என் றிரண்டாவதற்குத் திரிபோதினமையானும், 'செலவினும் வரவி னுந்

தரவினுங் கொடையினும்' (சொல்-உஅ.)
என்புழியும் பிறுண்டுமெல்லாம் ஏழாவது
விரித்தற்கேற்பப் பொருளுரைத் தமையானும்,
அவ்வுரை போலியுரை யென்க. ஆயிருதிணையினு
மென்னும் உம்மை விகாரவகையாற் றொக்கு
நின்றது.

இசைக்குமென்பது செய்புமென்னு முற்றுச்சொல்.



மன்னென்னு மிடைச்சொல் மனவென
வீறுதிரிந்து நின் றது. மன்னென்று
பாடமோதுவாரு முளர்.

ஏகாரம் ஈற்றசை.

சொல் வரையறுத்தலே இச்சூத்திரத்திற்குக் கருத்தாயின்,
ஆடூஉவறிசொல் மகடூஉவறிசொல் என்றாற்போல உயர்திணைச்
சொல் அஃறிணைச்சொல் எனவமையும், உயர்திணை மக்கள் அஃ
றிணை பிறவெனல் வேண்டாவெனின் ;—உயர்திணை அஃறிணை

யென்பன தொல்லாசிரியர் கூறியாகலான் ஆடூஉ மகடூஉப் போல வழக்கொடு படுத்துப் பொருளுணரலாகாமையின், உயர்திணை மக்கள் அஃறிணை பிறவெனல் வேண்டுமென்பது. இவ்வாறு ஒருபொருணுதலிற்றாக உரையாக்கால்,சூத்திரமொன்றுமாறில்லை யென்க. (க)

## உரைவிளக்கக் குறிப்பு :—

நிறுத்தமுறையென்றது பாயிரத்துள் நிறுத்த முறையை. பாயிரத்துள் நிறுத்தினர் பனம்பாரனாரன்றேவெனின், அஃதொக்குமன் ; ஆயினும், தொல்காப்பியர் நூல்செய்த முறையைத்தானே அநுவதித்துப் பனம்பாரனர் பாயிரத்துள் நிறுத்து வைத்தாராகலின், அதுபற்றிப் பாயிரத்துள் நிறுத்தமுறையைத் தொல்காப்பியனார் நிறுத்ததாகவைத்து நிறுத்தமுறையானே யென்று சேனாவரையர் கூறினர். அன்றிப் பாயிரத்துள் பனம்பாரனார் நிறுத்தமுறையை நோக்கித் தொல்காப்பியனார் நிறுத்தினரென்று கூறினரென்பது கருத்தன்று.

இக்கருத்துப்பற்றியே நச்சினார்க்கினியரும் "மேற்பாயிரத்துள் 'எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி' என நிறுத்தமுறையானே, எழுத்துணர்த்திச் சொல்லுணர்த்துகின்றாராதலிற் சொல்லதிகாரமென்னும் பெயர்த்து" என்று கூறினர். இவ்வாறே கல்லாடனாரும் கூறுவர்.

ஆசிரியர் நூல்செய்த முறையைத்தானே பாயிரம் அநுவதித்துக் கூறியவியல்புபற்றிப்; பேராசிரியரும் "மேற்பாயிரத்துள் 'வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின் எழுத்துஞ் சொல்லும் பொருளும்' ஆராய்வலென்று புகுந்தமையால்" [தொல்-செய்-க-ம் சூத்தி-உரை] என்று அப்பாயிரத்தைத் தொல்காப்பியனார் கூறியதாக வைத்துக் கூறுதல் காண்க. இனித் தம்மனத்துள் நிறுத்த முறை என்பாருமுளர்.

சொல் எழுத்தொடு ஒருபுடை யொற்றுமையுடைத்தென்றது, எழுத்தாதற்றன்மையொடு கூடியிருத்தலை. எழுத்தாதற் றன்மையாவது: எழுத்துக்கள் தனித்தும் தொடர்ந்தும் பொருளுணர்த்திச் சொல்லாயபோதும் தம்மையுணர்த்துமிடத்து எழுத்தாதலாகியவியல்பு. அவ்



வியல்போடு சொற்கூடியிருத்தலையே ஒருபுடை ஒற்றுமையென்றார்.

ஒருபுடை—ஏகதேசம் (சிறுபான்மை).

தம்மையுணர்த்தின் எழுத்தா மாற்றை, "தன்னையுணர்த்தி னெழுத்தாம் பிறபொருளைச் சுட்டுதற் கண்ணேயாஞ் சொல்" என்பதனுமறிக.

'எழுத்து, சுண்ணத்தின்கண் அரிசன முதலியபோலாது மாலையின் கண் மலர்போல் அவற்றின் நிற்றலின்' [எழு—எ௨] என்றும், "எழுத்தாகிய பதம் அரிசன முதலியவற்றாற் சமைந்த சுண்ணம் போலாது மலராற் சமைந்த மாலைபோனிற்றலின்" [பதம்—க] என்றும் நன்னூலுரையுள் சங்கரநமச்சிவாயப்புலவர் கூறுதலானும் ஒருபுடை யொற்றுமை யின்னதென்பது

அறியப்படும்.

ஓரெழுத்தொருமொழிக்கு எழுத்தொடுபுணர்தலின்மையின் என்றது, தானே மொழியாதலன்றி இரண்டு முதலிய எழுத்துக்களோடு கூடி மொழியாய் நில்லாமையின் என்றபடி. எனவே தனியெழுத்தே பொருளுணர்த்தி ஓரெழுத்தொருமொழியாய் நிற்குமென்றவாறு.

எழுத்தொடுபுணர்ந்து என்பதற்கு எழுத்தொடு கூடி என்று பொருள்கூறின் அவ்விலக்கணம் தனியெழுத்துமொழிக்கட்செல்லாது. ஆதலின், அதன்கண்ணுஞ் செல்லுமாறு எழுத்தாதற்றன்மையொடு கூடி என்று பொருள் கூறுக. அங்ஙனங் கூறின் எழுத்தாதற்றன்மை தனிமொழிக்குமுண்மையின் அதனையுந் தழுவிக்கொள்ளுமென்பது சேனாவரையர் கருத்து. உதாரணமாக, மான் என்னுஞ் சொல் மா, ன் என்னும் இரண்டெழுத்தோடுகூடி மான் என்னும் பொருளையுணர்த்தலின் எழுத்தொடுபுணர்ந்து என்பது அதற்கெய்தும், ஓரெழுத்தொரு மொழியாகிய மா என்னுஞ்சொல்

எழுத்தேமொழியாய் நிற்றலின்

(மான் என்னுஞ் சொற்போல முதலுஞ் சினையுமாகவின்மையின்)
அதற்கவ்விலக்கணம் எய்தாதென்றபடி. எழுத்தாதற்றன்மை என்ப
தற்கு எழுத்துத்தன்மை என்பாருமுளர்.

அது கருத்தாயிற் சேனா
வரையரே அங்ஙனங் கூறியிருப்பர்.

கூறியிராமையினது பொருந்தா
தென்பது.

கல்லாடனார் ஓசை,

எழுத்தல்லோசையும், (கடலொலி சங்கொலி
போல்வன) எழுத்தொடுபுணராது

பொருளையறிவுறுக்குமோசையும்,
(முற்கு, வீளை, இலதை போல்வன)

எழுத்தொடுபுணர்ந்து பொருளை
யறிவுறுக்குமோசையும்,

எழுத்தொடுபுணர்ந்து பொருளையறிவுறுத்
தாது வருமோசையும் (இறிஞி, மிறிஞி

என்றாற்போல்வன) என
நான்குவகைப்படுமென்றும்,

அந்நான்கினுள்ளும் பின்னின்றவிரண்
டுமே இவ்வதிகாரத்தா

னாராயப்படுகின்றனவென்றுங் கூறுவர். இங்
கே எழுத்தொடுபுணர்ந்து பொருளை

அறிவுறுத்தாதுவருமோசை என்று
கல்லாடனார் கூறியது எல்லாச்சொல்லும்

பொருள் குறிக்குமென்ற ஆசி
ரியர் கருத்துக்கு மாறாயினும், இசைநிறையும்

அசைநிலையு முதலாயின யாக்கம்]



பற்றி வருமொழிகள் வேறுபொருளுணர்த்தாது, இசைநிறைத்த
லும் அசைத்து நிற்றலும் முதலாயின பற்றியே வருதலின்
அவ்வாறு கூறினர்போலும். இசைநிறை அசைநிலை முதலியன
வற்றையே பொருளுணர்த்தா ஓசை என்று கல்லாடனர் கருதி
யிருக்கவேண்டுமென்பது "எல்லாச் சொல்லும் பொருள் குறித்
தனவே" என்னுஞ் சூத்திரத்துக்கு தெய்வச்சிலையார் உரைத்த
உரையானு மூகிக்கக்கிடக்கின்றது. உரையாசிரியர்
'சொல் என்பது எழுத்தொடு புணர்ந்து
பொருளறிவிக்குமோசை' என்ற கருத்தை நோக்கியே
கல்லாடனர் இவ்வாறு விரித்துரைத்தனர். இசை
நிறை அசைநிலை முதலாயினவும், பொருளுணர்த்துவன என்பதே
ஏனைய உரையாசிரியர்கள் யாவர்க்குங் கருத்தாகும்.

இனி, நச்சினார்க்கினியர். "சேனாவரையர் சொல்
பொருள் குறித்து

வருமென்றுராலெனின், ஒருவன் பொருட்டன்மை யுணர்த்துதற்குச் சொல்கருவியாய் நிற்றலன்றித் தனக்கோருணர்வின்மையிற் றொரு பொருளைக் கருதிநிற்றலின்றென மறுக்க" என்று சேனாவரை யரை மறுத்தனர். சேனாவரையர் சொல் கருவியாய்நில்லாதென்று கூறுமையின் அவர் கருத்துப் பொருந்தாது. சொல்லுவானது கருதுதற் றொழிலைச் சொன்மேனேற்றிச் சொல்பொருள் குறித்து வருவதென்றார். 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' எனத் தொல்காப்பியரு மங்ஙனங் கூறுவர்.

நச்சினார்க்கினியரும் இச்சூத்திர உரையின்கண், 'திணையினை இசைக்கும்' என்னும் பொருளை விளக்குமிடத்துப் "பொருளை யுணர்த்துவான் ஒரு சாத்தனேயெனினும், அவற்கது கருவியாக வல்லது உணர்த்தலாகாமையின் அக்கருவிமேற் றொழிலேற்றிச் சொல் உணர்த்துமென்று கருவிக்கருத்தாவாகக் கூறினார். இவ்வாசிரியர் எவ்விடத்துஞ் சொல்லைக் கருவிக்கருத்தாவாகக் கூறுமாறு மேலே காண்க. அஃது, 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்றாற்போல்வன" என்றதூஉம் ஈண்டு நோக்கத்தக்கது.

சமயவாற்றல்—சங்கேதவாற்றல். அஃதாவது இச்சொல் இப் பொருளுணர்த்துக என்னும் இறைவனுடைய சங்கேதத்தா லுண்டாய சத்தி. சங்கேதம்—நியமம், உடன்பாடு.

"சமௌ சமய சங்கேதௌ." என்று வடமொழியிலுள்ள அமரமென்னு நூலுட் கூறப்படுதலாற் சமயம் என்னுஞ் சொல் சங்கேதம் என்னும் பொருளுணர்த்தல் அறியப்படும். சமயம் சங்கேதமென்று இலக்கணவிளக்க நூலாருங் கூறுவர். சங்கேதமே ஆற்றல் என்பாருமுளர்.

அவாய்நிலையாவது: ஒரு சொல் தன்னொடு சேர்ந்து பொருள் முடித்தற்குரிய மற்றொரு சொல்லை அவாவிநிற்றல். ஆ நடக்கின்றது

அ

## தொல்காப்பியம்

[கிளவி

என்புழி, ஆ என்பது நடக்கின்றது என்பதை அவாவிநின்று தன் பொருளை முடித்துநிற்றல் காண்க.

தகுதியாவது: பொருள் விளக்கற்கேற்ற சொற்கள் சேர்ந்துநிற்றல். நீரானனை என்புழி, நனைத்தற்கு நீர் ஏற்றதாதலும், நெருப்பானனை என்புழி நெருப்பு நனைத்தற்கு ஏற்றதல்லாமையும் உணர்க.

அண்மைநிலையாவது: தொடராய்நிற்கும் மொழிகளை இடையீடின்றிச் சொல்லுதல், அஃதாவது காலதாமதமின்றிச் சொல்லுதல். அங்ஙனம் சொல்லுதலாற்றான் அத்தொடரின் பொருள் விளங்கும் என்க. அவாய்நிலை, தகுதி, அண்மை என்பவற்றை வடநூலார் முறையே

ஆகாங்கை, தகுதி, யோக்கியதை என்பர்.

தம்மையெடுத்தோதலாவது: சொற் (களாகிய பொருள்) களை 'ஆடூஉவறிசொல்' என்றாற்போலப் பெயர்மாத்திரையானே எடுத்துக் கூறல். இதனை உத்தேசமென்பர் தருக்கநூலார். உத்தேசமாவது, பொருள்களைப் பெயர்மாத்திரையானே எடுத்துக்கூறல்.

இலக்கணங் கூறலாவது: 'னஃகானொற்றே ஆடூஉவறிசொல்' என்றாற்போல அவற்றிற்கிலக்கணங் கூறல்.

நொய்—தவிடு. நுறுங்கு—குறுணி.

உயர்திணை—உயர்வாகியசாதி.

நூல் என்றது இலக்கணநூலை.

'என்மனார்' என்பதில் மன் எதிர்காலங்காட்டிவந்த இடைச்சொல். ஆர் பலர்பால் விகுதி. இதனை 'என்ப' என்பதன் திரிபென்றுகொண்டனர் உரையாசிரியர். களவியலுரைகாரரும் அவ்வாறே கூறுப.

இடர்ப்படல்—செய்யுள்யாத்தற்கிடர்ப்படல்.

'இசைநிறையென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறையென்றல் மேற்கோண்மலைவு' என்னும் பகுதிபற்றியகருத்து இளம்பூரண ருரையுட் காணப்படவில்லை. அங்ஙனமே உரையாசிரியர் கருத்தென்று வைத்துச் சேனாவரையர் மறுத்த இடங்கள் பல அச்சிட்ட இளம்பூரணருரையுட் காணப்படவில்லை. அஃதாராயத்தக்கது.

வெளிப்படாது நின்றதென்றது, மறைந்துநின்றதென்றபடி. எழுவாய் மறைந்துநிற்குமென்றதை,

"எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்வியல் நிலையல் செவ்வி தென்ப"

என்பதனுரையுட் காண்க.

ஈண்டு மக்களென்றது மக்களென்னும் உணர்வை. என்றது,
மக்கட் சுட்டென்று ஆசிரியர் கூறினமையின் மக்களென்னுஞ் சொல், மக்கட்பொருளைக் குறியாது மக்களென்னு முணர்ச்சியைக் குறித்து நின்றதென்றபடி. இங்ஙனம் கூறியதனால் யாதன்கணிகழு



ற்பெமென்பதற்கு விபரீதமாகவன்றி, இயல்பாக மக்களென்னுங் கருத்து எப்பொருட்கண் நிகழுமோ என்பதே சேனவரையர் கருத்தாதல் பெறப்படும். அதுவே கருத்தாதல், பின்னர் ருஎ-ம் சூத்திர வுரையுள் " உயிரே உடம்பே எனப் பொதுவகையாற் கூறினுரேனும் மக்களுயிருமுடம்புமே கொள்ளப்படும். என்னை ? உயர்திணைமுடிபு கொள்ளாவென விலக்கப்படுவன அவையேயாகலினென்பது. 'அஃறிணை யென்மனு ரவரல பிறவே' என்புழி அஃறிணையாயடங்கி உயர்திணை முடிபெய்தாமையின் அவையும் விலக்கற்பாட்டிற்கேலா வெனின்,—அற்றன்று; மக்கட்சுட்டுடைமையான் அவை உயர்திணையே யாமென்பது. யாதோ மக்கட்சுட்டுடையவா றெனின், 'அறஞ் செய்து துறக்கம் புக்கான்' எனவும், 'உயிர்நீத் தொருமகன் கிடந்தான்' எனவும், உயிருமுடம்பும் அவரின்வேறன்றி அவராக உணரப்பட்டு உயர்திணைக்கேற்ற முடிபு கொண்டு நிற்றலின் மக்கட்சுட்டுடைய வென்பது. ஓராவை எம்மன்னை வந்தாளென்றும், ஓரெருத்தை எந்தை வந்தானென்றும் உயர்திணைவாய்பாட்டாற் கூறியவாறுபோல உயிருமுடம்பும் அவ்வாறு கூறப்பட்டனவென்று

கொள்ளாமோ வெனிற், கொள்ளாம். அவற்ருன் வரும்பயனேக்கிக் காதலால் எம் மன்னே எந்தை என்ருன் ஆண்டு, ஈண்டுக் காதன்முதலாயின வின்மையின் மக்கட்சுட்டுடைய வென்பது'' என்று கூறுதலானுமுணர்க. அற்றேல், உயர்திணைமக்கள் எனவமையும்; சுட்டென்றன் மிகையாம் பிறவெனின்,— காதன் முதலியபற்றி, ஓராவை எம்மன்னே வந்தாள் என்பதுபோல அஃறிணைப்பொருள் குறித்து உயர்திணை வாய்பாட்டான் வருவனவற்றை நீக்குதற்கும், உலகம் பசித்தது என்பதுபோல உயர்திணைப்பொருள் குறித்து அஃறிணை வாய்பாட்டான் வருவனவற்றைத் தழுவுதற்கும் அவ்வாறு கூறினாராகலின் மிகையாகாதென்க.

மக்களென்னுங் கருத்து இயல்பாக எப்பொருட்கண் நிகழுமோ அது மக்கட்சுட்டென்பதே ஆசிரியர்க்குங் கருத்தாதல் 'அவரென்று' உயர்திணைப்பாலாற் சுட்டி மக்களேயே குறித்தமையானறியப்படும்.

ஒரு மரத்தைக் கண்டபோது இயல்பாக மரமென்னும் உணர்ச்சியே உண்டாதலானும், ஒரு மகனேக் கண்டபோது இயல்பாக மகனென்னும் உணர்ச்சியே உண்டாதலானும் 'இயல்பாக நிகழும்' என்பதே பொருத்தமாதல் காண்க. மாறிநிகழின் அது மயக்கவுணர்ச்சியாகிப் பின் தெளிவுபெறும் என்க.

ஆற்றல் முதலாயினவற்றுற் கொள்வரு சொல்லில்வழியென மறுக்க என்றது, சொல்லில்லாதவிடத்தேயே ஆற்றலாற் கொள்ளப் படும்; சூத்திரத்துள் அவரென்னுஞ் சொல் உளவாக நாம் ஆற்ற லாற் கொள்ளவேண்டியதில்லை யென மறுக்க என்றபடி. இங்ஙனமே 'உய்த்துணர்ந்திடர்ப்படுவது எடுத்தோத்தில்வழியென' மறுக்க என்று சேனாவரையர் பின்னும் 2

[கிளவி - சா] கூறுதல் காண்க.



அவற்றதுபகுதி யென்றது அஃறிணையின் பகுதியை. அவற்றின் பகுதியாவன, உயிருள்ளனவும், அவற்றின் உயிருமுடம்பும், உயி ரில்லாதனவுமாம். அவரல எனின்; உயிருள்ளனவேயமையும், ஏனைய வற்றையுந் தழுவற்குப் பிற என்றார் என்றபடி.

வரையயறையின்மையின் என்றது,

" எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே — உடம்படு மெய்யி னுருவு கொளல் வரையார்." (எழு—புணரி—கூஅ) என்று பொதுப்படக் கூறியதன்றி இன்ன இன்ன வெழுத்திற்கு இன்ன இன்ன உடம்படு மெய்யென்று ஆசிரியர் வரையறை கூறாமையின் என்றபடி.

ஆயிருதிணையினிசைக்கும் என்பதற்குத் திணையின்கண் இசைக்குமென்று ஏழாவதுவிரித்தல் வேண்டுமென்பது சேனவரையர் கருத்து. இரண்டாவது விரித்தல் இளம்பூரணர் நச்சினார்க்கினியர் கல்லாடர் என்னும் மூவருரையிலும் காணப்படுகிறது.

இன்சாரியை வேற்றுமையுருபுபற்றியும் பற்றாதும் நிற்கும் என்றது, இன்சாரியை, தானிற்றற்கு வேற்றுமையுருபைக் காரணமாகக் கொண்டும் நிற்கும்; வேற்றுமையுருபைக் காரணமாகக் கொள்ளாதும் நிற்கும் என்றபடி. பற்றுதல் - காரணமாதல், குறித்தல். சாரியை உருபு விரிந்துநின்ற வழி வந்துநிற்றல், அதனை இயைவிக்க வந்துநிற்பதாகலின் உருபுகாரணமாகவும் நிற்கும் என்றும், உருபு தொக்குநின்றவழி வந்துநிற்றல், அதனை இயைவிக்க வந்து நிற்பதன்றாகலின் உருபு காரணமாகாதும் நிற்கும் என்றுங் கூறினார் என்க.

ஆசிரியர் இரண்டாவதற்குத் திரிபோதிய சூத்திரத்தின்கண், இரண்டாவதனுருபு சாரியை நின்றவிடத்துத் தானும் நிற்குமன்றிச் சாரியை நிற்பத் தான் தொக்குநில்லாது என்று கூறினமையானும், 'செலவினும் தரவினும்' என்பனபோல வரும் வேறு சூத்திரங்களின்கணெல்லாம் ஏழாவது விரித்தற்கேற்பப் பொருளுரைத்தமையானும், உரையாசிரியர் 'திணையின் இசைக்கும்' என்பதற்குத் திணையினையிசைக்குமென்று ஐயுருபுவிரித்துப் பொருள் கோடல் பொருந்தாது என்பது சேனவரையர் கருத்து.

ஆயிருதிணையினு மென்னுமும்மை விகாரவகையாற் றொக்கு நின்றதென்பது, இருதிணை இனைத்தெனவறியப்பட்ட பொருளாதலின் அது முற்றும்மைபெற்று வருதல்வேண்டும், வாராமையின் தொக்கும் வழித் தொகுத்தல் என்னும் விகாரவகையாற் றொக்குநின்றதென்றபடி.

ஒன்றை விதிக்குமிடத்து ஒருசூத்திரத்துள் ஒருபொருளே கூறல் வேண்டும். இரண்டுபொருள் கூறலாகாது. கூறின் அது ஒரு சூத்திரமாகாது இரண்டாகுமென்பார் ஒருபொருள் நுதலிற்றாக உரையாக்கால் சூத்திரமொன்றாமாறில்லை என்றார். இருபொருள் நுதலிற்றாகக் கூறினார் இளம்பூரணர். அவரைப் பின்பற்றி நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறுவர்.

௧௧ ௨. ஆடூஉ வறிசொன் மகடூஉ
வறிசொற்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு
சிவணி
யம்முப் பாற்சொ லுயர்திணை
யவ்வே.

**இதன் பொருள் :** ஆடூஉவறிசொல்லும் மகடூஉவறிசொல்லும் பல்லோரறியுஞ்சொல்லொடு பொருந்தி அம்மூன்று கூற்றுச் சொல்லும் உயர்திணைபனவாம் என்றவாறு.

ஆண்மகனை ஆடூஉவென்றலும் பெண்டாட்டியை மகடூஉ வென்றலும் பண்டையார் வழக்கு.

அறிவு முதலாயினவற்றான் ஆண்மகன் சிறந்தமையின் ஆடூஉவறிசொன் முற்கூறப்பட்டது. பன்மை இருபாலும் பற்றி வருதலிற் பல்லோரறிசொற் பிற்கூறப்பட்டது.

இரண்டாம் வேற்றுமை உயர்திணைக்கட் சிறுபான்மை
தொகப்பெறுதலிற் றொக்கு நின்றது. திரிந்த புணர்ச்சியன்மை
யின் விகாரவகையாற் றொக்கதென்பாருமுளர்.

---

(2) இரண்டாம் வேற்றுமை உயர்திணைக்கட் சிறுபான்மை
தொகப் பெறுதலின் தொக்கு நின்ற தென்றது, இரண்டாம் வேற்று
மைத் திரிபோதிய சூத்திரத்துள்வரும் ' உயர்திணை மருங்கி னொழியாது
வருதலும் ' (எழுத்.—தொகை—கரு) என்ற விதியின்கண் ஒழியாது
வருதலென்றமையாற் சிறுபான்மை ஒழிந்தும் வருமென்று கொண்டு
அதனைவிது தொக்குநின்றது என்றபடி. இளம்பூரணரும் நச்சினார்க்
கினியரும் எழுத்ததிகாரத்து அச்சூத்திர வுரையில் ' ஆடூஉவறிசொல் '
முதலியவற்றை உதாரணமாகக் காட்டுதல் காண்க.

திரிந்த புணர்ச்சியன்மையின் விகாரவகையாற் றொக்கதென்பாரு முளரென்றது, மகட் பெற்றான் என்பதுபோல ஆடூஉவறிசொல், திரிந்தபுணர்ச்சி (விகாரப்புணர்ச்சி) யன்மையின் அதன்கட்டொகுதல் கூடாதென்றபடி. ஆடூஉவையறிசொல் என்னும் இரண்டாம் வேற் றுமை விரி ஆடூஉவறிசொல்லெனத் தொகுமாயின் ஆடூஉவா லறியப் பட்டசொல் எனவும் அத்தொகை விரிதற்கிடமாகலின் அதன்கட் டொகாது விரிந்தே நிற்கவேண்டும் என்பதாம். அங்ஙனம் விரிந்தே நிற்கவேண்டியவிடத்துத் தொக்கமையால் விகாரவகையாற் றொக்க தென்பாரும் உளர் என்றார்.

சிவணியென்னும் வினையெச்சம் உயர்திணையவென்னும் வினைக்குறிப்புக் கொண்டது, ஆறும் வேற்றுமையேற்று நின்ற சொற் பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்குமாகலான். உயர் திணையவாமென்னும் முப்பாற்சொல்லின்வினை ஆடூஉவறிசொல் மகடூஉவறிசொல் என்னுமிரண்டன் வினையாகிய சிவணியென் னுஞ் செய்தெனெச்சத்திற்கு வினைமுதல்வினையாயினவா றென்னை யெனின் ;—உயர்திணையவாதல், ஆடூஉவறிசொல் மகடூஉவறிசொல் என்பனவற்றிற்கு மெய்துதலான், வினைமுதல்வினையா மென்க. 'முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின'(சொல் - உகூ0) என்புழி

---

ஆறும் வேற்றுமை யேற்றுநின்றசொற் பெயராயும் வினைக்குறிப் பாயும் நிற்குமாகலானென்றது, ஆறும் வேற்றுமை யேற்றுநின்ற. உயர்திணைய வென்னும் சொல் உயர்திணையினுடையன என்று பொரு டருங்காற் குறிப்புவினையாலணையும் பெயராயும், உயர்திணையி னுடையவாயிருந்தன என்று பொருடருங்கால் வினைக்குறிப்பாயும் நிற்குமென்றபடி.

உயர்திணைய சொற்கள் என்புழி ஆறும் வேற்றுமையேற்றுநின்ற சொல் குறிப்புவினையாலணையும் பெயராயும், சொற்கள் உயர்திணைய வென்புழி வினைக்குறிப்பு' முற்றாயும் நிற்குமென்க. நச்சினார்க்கினி யரும், உயர்திணைய என்று ஆறும் வேற்றுமையாய் நிற்குஞ்சொல் ஈண்டுப் பெயராகாது வினைக்குறிப்பாய் நின்றது என்று கூறுதல் காண்க.

ஆறும் வேற்றுமையேற்று நின்ற சொற்பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்குமென்ற வாக்கியத்துள், ஆறும் வேற்றுமையேற்று நின்ற சொல் பெயராய் நிற்குமென்று சேனவரையர் கூறியதைச், சிவஞானமுனிவர் சூத்திர விருத்தியுள், ஆறும் வேற்றுமை யேற்று நின்ற சொற்பெயராகுமாயின் அப்பெய ரீற்று நின்றன விகுதி முதலியனவாகுமன்றி வேற்றுமையுருபாகா என்னும் கருத்துப்படக் கூறி மறுத்துள்ளார். அதனை; யாம் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளிப்படுத்திய 'ஆறனுருபு பிறிதுருபேற்றல்' என்ற விஷயத்துள் மறுத்துக் கூறியுள்ளாம். ஆண்டுக் காண்க. அவ்விஷயம் இந்நூலில் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

இனி, சிவணியென்னும் செய்தென் வாய்பாட்டு வினையெச்சம் உயர்திணையவென்னும் வினைக்குறிப்போடு முடிந்ததைப்பற்றிச் சேனவரையர் ஆராய்கின்றார். அது வருமாறு :- செய்தெனெச்சம் தன்வினையோடன்றிப் பிறவினையான் முடியாது. அங்ஙனமாக, சிவணியென்னும் செய்தெனெச்சம், ஆடூஉவறிசொல் மகடூஉவறி என்பவற்றின் வினை

யாக்கம்] சொல்லதிகாரம்
கரு

வினைமுதல்வினை யென்னுந் துணையல்லது பிறிதொன்றற்குப் பொதுவாகாது வினைமுதற்கே வினையாதல் வேண்டுமென்னும் வரையறையின்மையின். அல்லாக்கால்,

'இவளுமிவனுஞ் சிற்றில் இழைத்துஞ்
சிறுபறையறைந்தும் விளையாடுப' என்பனபோல்

வன அமையாவா மென்க.

ஆடூஉவறிசொன் முதலாயினவற்றை புணர்த்தியல்லது அவற்றதிலக்கண முணர்த்தலாகாமையின், பாலுணர்த்துமெழுத்து வகுப்பவே அவைதாமும் பெறப்படும் இச்சூத்திரம் வேண்டா வென்பது கடாவன்மை யுணர்க.

---

யாகலின், அது முப்பாற் சொல்லின் வினையோடு எப்படி முடியு மெனின்? உயர்திணைய வென்னும் முற்று ஆடூஉவறிசொல் மகடூஉ வறிசொற்களுக்கும் தன்வினையோயாகலின் தன்வினையோடு முடிந்த தேயாம். ஏனெனின்? ஆசிரியர் வினைமுதல் வினையோடு முடியவேண்டு மென்று கூறியதேயன்றி, அவ்வினை வேறென்றற்குப் பொதுவா

யிருத்தல் கூடாதென்று கூறுமையினென்பது. இதுபோலவே 'இவ ளும் இவனுஞ் சிற்றிலிழைத்தும் சிறுபறையறைந்தும் விளையாடுப' என்னும் முடிபுங் கொள்ளப்படும். ஏனெனின்? இவன் சிறுபறை யறைந்தும், இவள் சிற்றிலிழைத்தும் என்புழி, அறைதல் இவனின் வினையாயும் இழைத்தல் இவளின் வினையாயும் (தனித்தனி) சிறப்பு வினைகளாய் நின்று இருவர்க்கும் பொதுவாகிய 'விளையாடுப' வென் பதனோடு தனித்தனி முடிதலின் என்க.

நச்சினார்க்கினியரும், 'இவ்வாறன்றிச் சிவணி உயர்திணையவாம் என்பார்க்கு, முப்பாற் சொற்கும் பயனிலையாய் நின்ற உயர்திணை யவாம் என்னும் வினைக்குறிப்பு, ஆடூஉவறிசொல் மகடூஉவறிசொல் என்னும் இரண்டன்வினையாகிய சிவணி என்னுஞ் செய்தெனெச்சத் திற்கு வினைமுதல் வினையாயிற்று, உயர்திணையவாகல் ஆடூஉவறி சொற்கும் மகடூவறிசொற்கும் எய்துதலின், என்று' சேனாவரையர்

கருத்தை விளக்கியிருத்தல் காண்க.

ஆடூஉவறிசொல் முதலாயினவற்றை உணர்த்தியல்லது அவற்ற திலக்கணம் உணர்த்தலாகாமையின் என்றது, பொருளை முன்உணர்த்தி அவற்றது இலக்கணத்தைப் பின் உணர்த்துவதே முறை என்றபடி. பாலுணர்த்துமெழுத்தென்றது, 'னஃகா னொற்றே யாடூஉ வறி சொல்' என்பது முதலிய இலக்கணச் சூத்திரங்களிற் கூறிய எழுத்துக்களை. அவைதாமும் என்றது, ஆடூஉவறிசொல் மகடூஉவறிசொல் பல்லோரறியுஞ்சொல் என்பவற்றை.

உயர்திணைச் சொல்லுணர்த்தி அதனது பாகுபாடு கூறு கின்றாராகலின், 'அம்முப்பாற்சொ லுயர்திணைய' என்றாராயினும் உயர்திணைச்சொல் மூன்று பாகுபாடுபடுமென்பது கருத்தாகக் கொள்க. இக்கருத்தானன்றே, ஆசிரியர் அம் முற்பாற்சொல்லும் என 'இனைத்தென வறிந்த பொருட்டொகுதிக்குக்'' (சொல்—௩௩) கொடுக்கும் உம்மை கொடாராயினும், உரையாசிரியரும் உயர் திணை யெனப்பட்ட பகுப்பை விரிப்புழி இத்துணையல்லது விரி படாதென்பது ஈண்டுக் கூறியது என்றுரைத்ததூஉமென்க. 'ஆயிரு பாற்சொ லஃறிணை யவ்வே' (சொல் - ௩.) என்பதற்கும் ஈதொக்கும். (௨)

௩. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்
றாயிரு பாற்சொ லஃறிணை யவ்வே.

**இதன்பொருள் :** ஒன்றனையறியுஞ் சொல்லும் பலவற்றை யறியுஞ் சொல்லுமென அவ்விரண்டுகூற்றுச் சொல்லும் அஃறிணை யனவாம் என்றவாறு. (௩)

---

முப்பாற்சொல்லும் உயர்திணைய என்ற முடிபினால், முப்பாற் சொல்லும் உயர்திணைச்சொல்லாகுமென்பது கருத்தாகுமன்றி, ஆசி ரியர் கொண்ட உயர்திணைச்சொன் மூன்று பாகுபாடு படுமென்னுங் கருத்ததனுட்டோன்றாது. ஏனெனின்? ஆசிரியர் கூறிய சொன்முடிவு முப்பாற்சொன்மேலதாய் நிற்றலின். ஆதலால் மூன்று பாகுபாடு படுமென்னுங் கருத்துத்தோன்ற, மாற்றிக்கொண்டு கொள்கவென்றார். மாற்றிக்கொண்டு கொள்க வென்றதற்குக் காரணம், மேற்சூத்திரத்து உயர்திணைச் சொல்லென்று கூறி, அதன் பாகுபாடு இதனாற் கூறு

கின்றமையே.

இக்கருத்து என்றது உயர்திணைச்சொல் மூன்று பாகுபாடு படு மென்னும்கருத்தை. ஆசிரியர் கொடாராயினும் என விரிக்க.உம்மை கொடாமையாவது, சூத்திரத்துள் முப்பாற் சொல்லுமென்று உம்மை கொடாது, முப்பாற்சொல் என்றமையை. இக்கருத்தானன்றே உரை யாசிரியரும் உரைத்ததாமென விரிக்க. எங்ஙனம் உரைத்ததெனின்? ஆசிரியர் முற்றும்மை கொடுத்தோதாராயினும், தாம் இத்துணையல்லது விரிபடாதென உரைத்ததூஉமென்க. "ஆசிரியர்....கொடாராயினும்" என்னும் வாக்கியம் சேனாவரையர் தங்கருத்தாகக் கூறியதாகும்.

(3) ஒன்று—ஒருபொருள். பல—பலபொருள். அது என்றதனால் ஒரு பொருளும் அவை என்றதனால் பலபொருளும் அறியப் படுதல் காண்க. கூறு—பகுதி.



ச. பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கி
னாண்மை திரிந்த பெயர்நிலைக்
கிளவியுந்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியு
மிவ்வென அறியுமந் தந்தமக் கிலவே
யுயர்திணை மருங்கிற் பால்பிரிந்
திசைக்கும்.

இதன் பொருள் : உயர்திணையிடத்துப் பெண்மைத்தன்மை குறித்த ஆண்மை திரிந்த பெயர்ச்சொல்லும், தெய்வத்தைக் குறித்த பெயர்ச்சொல்லும், இவையெனத் தம்பெருளை வேறறிய நிற்கும் ஈற்றெழுத்தினைத் தமக்குடையவல்ல, உயர்திணையிடத்து அதற்குரிய பாலாய் வேறுபட்டிசைக்கும் என்றவாறு.

பால் வேறுபட்டிசைத்தலாவது தாமுயர்திணைப்பெயராய் ஆடூஉவறிசொன் முதலாயினவற்றிற்குரிய ஈற்றெழுத்தே வினைக்கீருக இசைத்தல்.

தம்

**உதாரணம் :** பேடி வந்தாள், பேடர் வந்தார், பேடியர் வந்தார் எனவும்; தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார் எனவும் வரும்.

---

(4) ஆடூஉ வறிசொல் முதலாயினவற்றிற்குரிய எழுத்தே தம் வினைக்கீருக இசைத்தலாவது, ஆடூஉ வறிசொன் முதலியவற்றிற்குரிய னகர முதலிய வொற்றுக்களே தம் வினைக்கு ஈற்றெழுத்தாகப் பொருந்திப் பாலுணர்த்தத், தாமும் அவ்வப்பாலை உணர்த்தல். உதாரணமாக, பேடிவந்தாள் என்புழி மகடூஉ வறிசொல்லென்றுணர்த்துதற்குரிய ளகாரவொற்றே தனக்கு முடிக்குஞ் சொல்லாயமைந்த வந்தாளென்னும் வினைக்கு ஈற்றெழுத்தாகப் பொருந்திப் பெண்பாலையுணர்த்தப் பேடியாகிய தானும் அப்பெண்பாலையே

உணர்த்தல் காண்க. இவ்வாறே தேவன் வந்தான், தேவி வந்தாள்

தேவர் வந்தாரெனத் தெய்வம் என்பதும் வந்தான் முதலிய வினைகளைப் பெற்றுப் பாலும் இணையும் உணராநிற்றல் காண்க. வந்தான் முதலிய வினைகளைப் பெறுங்கால் தெய்வம் தன்னீறு திரிந்து நிற்குமென்க.

பேடர் என்ற உதாரணம் மயிலைநாதர் உரையைப் படித்தோர் சேர்த்திருக்கவேண்டும். அல்லது பேடிமார் என்ற உதாரணத்தையே



அலிப்பெயரின் நீக்குதற்குப் 'பெண்மை சுட்டிய' என்றும் மகடூஉப் பெயரின் நீக்குதற்கு 'ஆண்மை திரிந்த' என்றுங் கூறினர்.

பெண்மை சுட்டிய எனவே பெண்மை சுட்டாப் பேடென்

பதும் ஒழிக்கப்பட்டதாம்.

---

பிரதி எழுதுவோர் சில எழுத்தழிந்தமையிற் பேடர் என்றெழுதி யிருத்தல்வேண்டும். அன்றி, பேடர் வந்தார் என்பதையும் பெண்பாற் பன்மைக்கு உதாரணமாகச் சேனாவரையர் காட்டியிருப்பரேல், அதனை ஒழித்து, "பேடியர், பேடிமார், பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் பேடியென்னும் பெயர்நிலைக்கிளவியென்றதுபெண்மை சுட்டிய ஆண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவி யென்றார் ;" என்று கூறியிருக்கமாட்டார். ஆதலின் அஃது அவர்காட்டிய உதாரணமன்று.

உயர்திணை மருங்கின் ஆண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவியெனின் அலிப்பெயர்மேலுஞ் செல்லும் ; அப்பெயர்மேற் செல்லாது நீக்குதற்குப் 'பெண்மைசுட்டிய' என்றும், உயர்திணை மருங்கிற் பெண்மை சுட்டிய பெயர்நிலைக்கிளவியெனின் பெண்பாற் பெயர்மேலுஞ் செல்லும். அவற்றின்மேற் செல்லாமனீக்குதற்கு 'ஆண்மைதிரிந்த' என்றுங் கூறினார். இதனால் அதிவியாத்திக் குற்றம் நீக்கியவாறு.

அலிப்பெயரி னீக்குதற்குப் பெண்மை சுட்டிய என்று கூறியதனாலும், 'ஆண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவி ஆண்மையறிசொற்காகிடனின்றே' என்னும் ௪௨-ம் சூத்திர உரையுள் ஆண்மையறிசொற்காகிடன் என்ற விலக்கு, ஆண்மையறிசொல்லோடு புணர்தல் எய்தி நின்ற பேடிக்கல்லது ஏலாமையின் அலிமேற் செல்லாதென்க ; என்றதனாலும் ஆண்மைதிரிந்து பேடியும் அலியும் ஆகுமென்பது சேனாவரையர் கருத்தாதல் பெறப்படும்.

பெண்மை சுட்டாப் பேடு என்பதற்கு ஆண்மை சுட்டிய பேடு என்றுகொண்டு, பேடு என்பது பேடியைக் குறித்ததென்று சிலரும், அலியைக் குறித்ததென்று சிலரும் பொருள் கொள்வர். இளம் பூரணர் பேடியையாதல் அலியையாதல் பேடு என்னுஞ் சொல்லால் வழங்காமையிற் பேடு என்னுஞ் சொல்லைக் கருதியே சேனாவரையர் பெண்மைசுட்டாப் பேடு என்பதும் ஒழிக்கப்பட்டது என்று கூறி யிருத்தல் வேண்டுமென்பது எமது கருத்து. பேடு என்னுஞ்சொல் பேடு வந்தாள் என முடியாமையான் அவ்வாறு கூறினரெனலாம். அலியேயன்றிப் பேடு என்பதூஉம் பெண்மை சுட்டாமையின் ஒழிக்கப்பட்டது என்பது கருத்து. உம்மை இறந்தது தழீஇயது.

யாக்கம்]

சொல்லதிகாரம்

கள்

பெண்மை சுட்டிய என்னும் பெயரெச்சம்
பெயர்நிலைக் கிளவி என்னும் பெயர் கொண்டது.
இடைநிலை.

ஆண்மை திரிந்த என்பது

'தன்மைதிரிபெயர்' (சொல்-டுசு.)

என்றாற்போலச் சொல் லொடு பொருட்கொற்றுமை கருதி 'ஆண்மைதிரிந்த பெயர் நிலைக்கிளவி'

என்றார்.

உயர்திணை மருங்கிற் பால்பிரிந்திசைக்கும் எனவே தமக்கென வேறீறின்மை பெறப்படுதலின், 'இவ்வெனவறிபு மந்தந் தமக் கிலவே' எனல் வேண்டாவெனின்:—தமக்கென வேறீறுடைய வாய் ஆடூஉவறிசொன் முதலாயினவற்றிற்குரிய ஈற்றானும் இசைக்குங்கொல் என்னும் ஐய நீக்குதற்கு 'அந்தந்தமக்கிலவே' எனல் வேண்டுமென்பது.

பெண்மைதிரிதலு முண்டேனும் ஆண்மைதிரிதல் பெரும் பான்மையாகலான் 'ஆண்மை திரிந்த' என்றார்.

பேடியர் பேடிமார் பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் பேடியென்னும் பெயர்நிலைக்கிளவியென்றாது 'பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவி' என்றார்.

---

மயிலைநாதரும், இலக்கண விளக்க நூலாரும், பெண்மை திரிந்ததற்கு உதாரணமாகப் பேடன் வந்தான், பேடர் வந்தார், பேடன் மார் வந்தார் என உதாரணங் காட்டுவர். ஆயின் இவ்வுதாரணங்களை இளம்பூரணர் முதலியோர்

எடுத்தாளாமையின் அவ்வழக்குப் பொருந் நாதெனவும், பெண்மை திரிந்தது அலியெனவும் சிவஞான முனிவர் கூறுவா.

இடைநிலை — இடைப்பிறவரல்.

"தன்மைதிரிபெயர்" [சொல் - கிள - ருச - ம் சூ.] என்புழிப் பொருளுக்குரிய தன்மை திரிதலை ஒற்றுமைபற்றிச் சொன்மேலேற்றித். தன்மைதிரிபெயர் என்று கூறியதுபோல, ஈண்டும் ஆண்மை திரிதல் பொருளுக்கன்றிச் சொற்கின்றேனும் ஒற்றுமைபற்றி ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவி யென்றார் என்க.

பெண்மை திரிதலுமுண்டேனும் ஆண்மைதிரிதல் பெரும்பான்மை யாகலான் 'ஆண்மை திரிந்த' என்றார். எனவே, பெண்மை திரிதல் சிறுபான்மையாகலின் அதனை ஆசிரியர் எடுத்துக்கூறாராயினர் என்றபடி. கூறாராயினும் அதுவும் கொள்ளப்படுமென்பது சேனாவரையர் கருத்து.

3 கஅ தொல்காப்பியம்

[கிளவி

பாலுளடங்காத பேடியையும் திணையுளடங்காத தெய்வத் தையும் பாலுள்ளுந் திணையுள்ளுமடக்கியவாறு.

சுட்டியவென்பது செய்பியவென்னும்

வினையெச்சமென்

றும், ஆண்மை திரிதல் சொற்கின்மையிற் பெயர்நிலைக்கிளவி என்பது ஆகுபெயராய்ப் பொருண்மேனின்றதென்றும் உரையாசிரியர் கூறினாரெனின்:— ஆண்மை திரிதல் பெண்மைத் தன்மை யெய்துதற் பொருட்டன்றிப் பேடிக் கியல்பாகலிற்

பெண்மை சுட்ட வேண்டி ஆண்மை திரிந்த வென்றல் பொருந்

தாமையானும், பொருளே கூறலுற்றாராயின் ஆசிரியர் பேடியுந்

தெய்வமுமென்று தாங்கருதிய பொருள் இனிது விளங்கச் சுருங்

கிய வாய்பாட்டாற் சூத்திரிப்பராகலானும், அவர்க்கது கருத்

தன்மையான், உரையாசிரியர்க்கும் அது கருத்தன்றென்க. (௪)

---

பாலுளடங்காத பேடி என்றது ஆண்பால் பெண்பால்களுள் ஒன்றிலடங்காத பேடி என்றபடி. திணையுளடங்காத தெய்வம் என்றது உயர்திணை அஃறிணைகளுள் ஒன்றுளடங்காத தெய்வம் என்றபடி.

சுட்டிய வென்பதனைச் சுட்டும்படியென் வினையெச்சமாகக்

கொண்டு, திரிதலென்பதனோடு முடிப்பின் பேடித்தன்மை பேடிக் கியற்கையில் (பிறப்பில்) உள்ளதன்றென்று கருத்தாமாகலின் அது பொருளன்றென்க. ஆசிரியர்க்காராய்ச்சி தொல்லின்கண்ணதன்றிப் பொருளின் கண்ணதன்று. பொருளின்கண்ணதாயின் பேடியுந் தெய்வமுமென்று விளங்கச் சூத்திரிப்பார் என்பது சேனாவரையர் கருத்து.

## ஆண்மை திரிதலாவது இன்னதென்பதை,

"ஆண்மைதிரிந்த பெண்மைக்கோலத்துக்
காமனுடிய பேடியாடலும்" [சில-கட-ருக-எ] என்பதனுரைக்கண் அடியார்க்கு நல்லாரும், "ஆண்மைத்தன்மையிற் றிரிதலாவது, விகாரமும், வீரியமும், நுகரும்பெற்றியும் பத்தியும் பிறவுமின்றுதல். ஆண்மைதிரிந்த என்றதனால் தாடியும், பெண்மைக் கோலத்தென்டதனால் முலை முதலிய பெண்ணுறுப்புப் பலவும் உடையது ஆண்பேடெனக் கொள்க" என்று கூறுவர். ஆண்பேடு என்றது ஆண்மை திரிந்த பேடியை.

தெய்வச்சிலையார் "பேடியாவது பெண்பிறப்பிற்றோன்றிப் பெண்ணுறுப்பின்றித் தாடிதோற்றி ஆண்போலத் திரிவதெ"ன்று கூறுவர். இது பெண்மைதிரிந்த பேடியாகும். இவர் பேடியும் அலியும் ஒன்றென்பர். அது பொருந்ாது. பேடிவேறு அலிவேறு என்க.



ரு. னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்.

**இதன் பொருள் :** னஃகானாகிய வொற்று ஆடூஉவறிசொல்லாம் என்றவாறு.

**உதாரணம் :** உண்டனன், உண்டான், உண்ணாநின்றனன், உண்ணாநின்றான், உண்பன், உண்பான், கரியன், கரியான் என வரும்.

ஆடூஉவறிசொல்லாவது னகாரவீற்றுச் சொல்லாயினும், பாலுணர்த்துதற் சிறப்பு நோக்கி 'னஃகானொற்றே' யென்றார். 'அறமாவ தழுக்காறின்மை' என்றாற்போல, னஃகானொற் றாடூஉவறிசொல் என்றாராயினும், ஆடூஉவறிசொல்லாவது னஃகானொற்றென்பது கருத்தாகக் கொள்க. 'ளஃகானொற்று' முதலாயினவற்றிற்கும் இவையொக்கும். ஏகாரம் அசைநிலை.

உரையாசிரியர் [illegible] என்றாரெனின் :— பிரிநிலையாயின் ஆடூஉவறிசொற் கி[illegible] கூறுதலன்றிப் பிரித்து அதன் சிறப்புணர்த்துதலே கரு[illegible]மாகலின், அவ்வுரை போலியுரையென்க. (ரு)

சூ. ளஃகா னொற் ற மகடூஉ வறிசொல்.

**இதன் பொருள் :** ளஃகானாகிய வொற்று மகடூஉவறிசொல்லாம் என்றவாறு.

**உதாரணம் :** உண்டனள், உண்டாள், உண்ணாநின்றனள், உண்ணாநின்றாள், உண்பள், உண்பாள், கரியள், கரியாள் என வரும். (சூ)

---

(ரு) ஏகாரத்தைப் பிரிநிலையாகக்கொள்ளின், னகரவீற்றுச் சொல்லிலுள்ள ஏனை எழுத்துக்களினின்றும் னகரவொற்றை வேறுபிரித்து

அவ்வொற்றிற்கே ஆண்பாலுணர்த்து மியல்புளதாமென அதன்பா லுணர்த்தற் சிறப்பை யுணர்த்துமேயன்றி ஆடூஉவறிசொல்லாவது னஃகானீற்றுச் சொல்லென்று பொருள்தராது. ஆகலின் அது பொருந்தாதென்க. அதன் என்றது னகரவொற்றை.

இளம்பூரணருரையுள், உண்டான்என்புழி நான்கெழுத்து உளவே யாயினும் னகரத்தை ஆடூஉவறியுஞ்சொல்லென்றார் அதன்கட் டலைமைநோக்கி. ஏகாரம் பிரிநிலை "என்றுகூறப்பட்டிருத்தல்காண்க."

கரியன், கரியான் என்பன குறிப்புவினைமுற்றுச் சொற்கள்.



எ. ரஃகா னொற்றும் பகர விறுதியு
மாரைக் கிளவி யுளப்பட மூன்று
நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

இதன் பொருள் : ரஃகானாகிய வொற்றும் பகரமாகிய விறுதியும் மார் என்னு மிடைச்சொல்லும் இம் மூன்றும் பலரறிசொல்லாம் என்றவாறு. ஏ யென்பது ஈற்றசை.

**உதாரணம்:** உண்டனர், உண்டார், உண்ணுநின்றனர், உண்ணுநின்றார், உண்பர், உண்பார், கரியர், கரியார் எனவும்; கூறுப, வருப எனவும்; கொண்மார், சென்மார் எனவும் வரும்.

மார் எதிர்காலம் பற்றி வந்த ஆரேயாம் ரஃகாரொற்றென வடங்குமெனின் :—அற்றன்று, ஆரேயாயிற் கொண்மார் என்புழி மகரங் காலம்பற்றி வந்ததோரெழுத்தாகல் வேண்டும்; உண்பார் வருவார் எனக் காலம்பற்றி வருமெழுத்து முதனிலைக்கேற்ற வாற்றான் வேறுபட்டு வருமென்றே; அவ்வாறன்றி உண்மார் வருமார் எனவெல்லா முதனிலைமேலும் மகரத்தோடு கூடி வருத லானும், வினைகொண்டு முடிதற்கேற்பதோர் பொருள் வேறுபா டுடைமையானும் ஆரீறன்று வேறெனவே படுமென்பது.

மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதல் ஒப்புமை நோக்கி அர் ஆர் என்னு மிரண்டற்றையும் 'ரஃகான்' என அடக்கியோதினார். அன் ஆன் அள் ஆள் என்பனவற்றையும் இவ்வொப்புமைபற்றி 'னஃகான் ளஃகான்' என அடக்கி யோதினர்.

---

(எ) மகரத்தை இடைநிலையாக்கி மாரீற்றை ஆரீற்றுளடக்கிலை லென்னை? என்று சேனாவரையர் ஆக்கேபித்து, அதற்குச் சமா தானமாக ஆரீறு வினைமுதனிலைகளோடு வருங்கால் முதனிலைக் கேற்றவாறு காலங்காட்டும் பகர, வகரங்களைப் பெற்றுவரும். நட வென்னும் முதனிலையோடு ஆரீறு வருங்கால் பகரத்தோடு வருமன்றி வகரத்தோடு வரமாட்டாது. வா என்னும் முதனிலையோடு வருங்கால் வகரத்தோடன்றிப் பகரத்தோடு வரமாட்டாது. அதுபோலன்றி மகரத் தோடு கூடி எல்லாமுதனிலையோடும் வருதலின் ஆரீற்றின் வேறேயாம் என ஆசிரியர் வேறு கூறினர், ஆரீறு வினைகொண்டுமுடியாது. மாரீறு

ரகாரம் மூன்று காலமும் வினைக்குறிப்புப்பற்றிப் பெரு வழக்கிற்றாய் வருதலின் முன் வைத்தார். மார் பகரவிறுதியிற் சிறுவழக்கிற்றாகலிற் பின் வைத்தார்.

உண்கும், உண்டும், வருதும், சேறும் என்னுந் தொடக்கத்தனவும் பலரறி சொல்லாயினும், அவை 'எண்ணியன் மருங்கிற் றிரி' (சொல் - உ௦க) தலின் நேரத்தோன்றாவாகலான், 'இவற்றை நேரத்தோன்றும் பலரறிசொல்' என்றார்.

மூன்றும் பலரறிசொல் என்றாராயினும், பலரறி சொல்லாவது இம்மூன்றுமென்பது கருத்தாகக் கொள்க. (எ)

அ. ஒன்றறி கிளவி த ற ட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

**இதன் பொருள் :** ஒன்றறி சொல்லாவது த ற ட என்னு மொற்றை யூர்ந்த குற்றியலுகரத்தை யிறுதியாகவுடைய சொல்லாம் என்றவாறு.

**உதாரணம்:** வந்தது, வாராநின்றது, வருவது, கரிது எனவும்; கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று எனவும்; குண்டுகட்டு, கொடுந்தாட்டு, குறுந்தாட்டு எனவும் வரும்.

---

வினைகொண்டு முடியும், அதனானும் ஆரீற்றுளடங்காதென்று கூறினார் என்க. ஆரீறு வினைகொண்டுமுடியின் எச்சப்பொருளைத் தருமன்றி முற்றுப்பொருளைத் தாராது. மார்வினைகொண்டுமுடியினும் முற்றுப் பொருளைத் தருமென்பதுபற்றிச் சேனாவரையர் 'வினைகொண்டு முடித்தற்கேற்பதோர் பொருள் வேறுபாடுடைமையானு' மென்றார். தன்மைப் பன்மை வினைமுற்றுக்களும் பலரறி சொல்லாயினும் பலர்பாலைத் தனித்துணர்த்தாது 'யானுமென்னெஃகமுஞ்சாறும்' என்றாற்போல் இருதிணையும் விரவி எண்ணுமிடத்து உயர்திணையை யன்றி அஃறிணையையு முளப்படுத்துநிற்றலின் அஃறிணைக்கு முரித் தாகின்றது. அன்னவன்றி இவ்விகுதிகள் உயர்திணைக்கே உரியவா தலின் 'நேரத் தோன்றும் பலரறி சொல்' என்றார்.



கிடக்கை முறையாற் கூறாது 'த ற ட'
எனச் சிறப்பு முறை
யாற் கூறினார்.
குன்றியலுகரமென மெலிந்து நின்றது.
தகரவுகரம் மூன்று காலமும்

வினைக்குறிப்பும்பற்றி வருத
லும், றகரவுகரம் இறந்தகாலமும்
வினைக்குறிப்பும்பற்றி வருத
லும், டகரவுகரம் வினைக்குறிப்பேபற்றி
வருதலுமாகிய வேறுபா
டுடைமையால், குற்றியலுகரமென ஒன்றாகாது
மூன்றாயின. (அ)

கூ.

அ ஆ வ என வரூஉ மிறுதி
யப்பான் மூன்றே பலவறி சொல்லே.

**இதன் பொருள்:** பலவறிசொல்லாவன
அ ஆ வ என வரு
மிறுதியையுடைய அக்கூற்று மூன்று
சொல்லாம் என்றவாறு.

**உதாரணம்:** உண்டன,
உண்ணுநின்றன, உண்பன, கரி
யன எனவும்; உண்ணு, தின்னு, எனவும்;
உண்குவ, தின்குவ

எனவும் வரும்.

உண்ட, உண்ணாநின்ற, உண்ப, கோட்ட என்னுந் தொடக்

கத்தனவும் அகரவீற்றுப் பலவறிசொல். அவற்றுள் உண்ப

வென்பது பகரவீற்றுப் பலவறிசொல்லன்றே, அஃறிணைக்

---

(அ) கிடக்கைமுறை என்றது நெடுங்கணக்கினுள் ஓதப்பட்டுக் கிடக்கும் முறையை. கிடக்கைமுறைப்படி கூறின் ட, த, ற எனக் கூறவேண்டும்.

சிறப்புமுறை என்றது காலமுணர்த்தும் சிறப்புமுறையை. அதனைப் பின்வரும் 'தகரவுகரம்' என்னும் வாக்கியத்தானுணர்க.

குற்றியலுகரம்என்பது, குன்றியலுகரமென மெலிந்து நின்றது.

வேறுபாடின்றேல் ஒன்றாக ஓதலாமென்பது கருத்து.

(க) உண்பவென்பதைப் பகரவீறாகப் பிரித்தால் உயர்திணைப் பலர்பாலாகும். அகரவீறாகப் பிரித்தால் அஃறிணைப் பலவின்பாலாகும். அதுபற்றியே பகரவிறுதியாயினன்றே உயர்திணைக்காவது என்றார். 'சினையுஞ் சுனையவும் நாடினர் கொயல் வேண்டா நயந்து தாங்கொடுப்பபோல்' என்பதில் தாம் கொடுப்பபோல் என்பது சினையவும் சுனையவுமாகிய அவைதாமே கொடுப்பனபோல எனப் பொருள்

காயினவா

றென்னையெனின் :—பகரவிறுதியாயினன்றே

உயர்

திணைக்காவது. ஈண்டுக் காட்டப்பட்டது 'கானந் தகைப்ப செலவு' (கலி-கஉ.) 'சினையவுஞ் சுனையவு நாடினர் கொயல் வேண்டா நயந்து தாங்கொடுப்பபோல்' (கலி-அ௦.)

என நின்றன போல எதிர்காலத்து வரும்

பகரமூர்ந்து நின்ற அகர வீறுதலின்,

அஃறிணைச் சொல்லேயாமென்பது.

செய்யுளாகலின், தகைப்பன கொடுப்பன என்னுஞ்

சொற்கள் தகைப்ப கொடுப்ப என விகார

வகையான் அவ்வாறு நின்றனவாகலான்,

வழக்கு முடிவிற்கு அவை காட்டல்

நிரம்பாதெனின் :—தகைத்தன, தகையாநின் றன ;

தகைத்த, தகையாநின்ற எனவும் ; கொடுத்தன,

கொடா நின்றன ; கொடுத்த, கொடாநின்ற

எனவும் இறந்தகாலத்தும் நிகழ்காலத்தும்

அகரவீறு முதனிலைக் கேற்றவாற்றான் அவ்வக்

காலத்துக்குரிய எழுத்துப்பெற்று அன்பெற்றும் பெறுதும் முடியுமாறுபோல, எதிர்காலத்தும் முதனிலைக்கேற்றவாற்றான் அக்காலத்திற்குரிய எழுத்துப்பெற்று அன் பெற்றும் பெறுதும் முடியும். எதிர்காலத்துக்குரிய எழுத்தாவன பகரமும் வகரமு மாம். அவற்றுட் பகரம் பெற்று அன்பெற்றும் பெறுதும் முடி.வுழி, தகைப்பன, தகைப்ப, கொடுப்பன, கொடுப்ப என வும்; வகரம் பெற்று அவ்வாறு முடிவுழி, வருவன வருவ; செல்வன செல்வ எனவும் இவ்வாறு முடியுமாகலின், தகைப்ப கொடுப்ப என்பன விகாரமெனப்பட்டா இயல்பேயாமென்பது.

---

நந்து, தாம் என்பது சினையையும் சுனையையும் குறித்துநிற்க, அத் நாம் என்பதற்குக் கொடுப்ப என்பது முடிக்குஞ் சொல்லாய் நிற் றலின் முற்றன்றிப் பெயரன்மையறிக.
கொடுப்பவைகளைப்போல என உவமை கருதினுற்றான் கொடுப்ப என்பது பெயராகும். அங் ஙனம் உவமை கருதாது நிற்றலின் கொடுப்ப என்பது பெயரன்மை யறிக என்றார். பெயரன்மையறிக வென்பதில் பெயரென்றது வினையாலணையும் பெயரை. போல் என்பது ஈண்டு உவமப் பொருளில்வந்த

உருபன்று. தற்குறிப்பேற்றப்பொருளில் வந்ததோ
டைச்சொல்லாம். 'கொடுப்பனயாவை......அறிக
' என்னும் இவ்வாக்கியம் 'சினையவும் சுனையவும்'
என்னும் செய்யுளடியை விளக்கவந்ததாகும்.
உண்பவென்பது பகரவீறன்று; அகரவீறே யாம்.
ஏனெனின்? அகரவீறு அன்பெற்று கொடுப்பன,
தகைப்பன எனவும், அன்பெறாது கொடுப்ப தகைப்ப
எனவும் நின்றாற்போல இதுவும் அன்பெறாது
உண்பவென நின்றதாகலின் என்பது கருத்து.



[கிளவி

கொடுப்பன யாவை அவைபோல என உவமை
கருதாது அவை

தம்மையே சுட்டி நிற்றலிற் கொடுப்ப என்பது பெயரன்மையறிக. அன்பெறுது எதிர்காலத்து வரும் வகரவொற்றூர்ந்து நின்ற அகரமாய் வகரவீ றடங்குமெனின், வினைகொண்டு முடிதலொழித்து மாரீற்றிற்குரைத்ததுரைக்க. அவ்வாறுரைக்கவே, குகரம் பெற்றவழி அன்பெறற்கேலாமையின், உண்குவ தின்குவ என்னுந் தொடக்கத்தன வகரவீறேயாம். வருவ செல்வ எனக் குகரம் பெறுதவழி வகரவீறுதலும் அகரவீறுதலுமென இரு நிலைமையுமுடையவாம். என்னை? எல்லா வினைக்கண்ணுஞ் சேறன்மாலைத்தாகிய வகரவீறு ஆண்டு விலக்கப்படாமையானும், அந்நன்மைத்தாகிய அகரவீறும் ஆண்டுவந்து அன்பெறுதவழிக் காலவகரமூர்ந்து அவ்வாறு நிற்றலுடைமையானு மென்பது.

வருமென்னுமுகரம் விகாரவகையான் நீண்டு நின்றது.

ஈற்றுவகையான் மூன்றாகிய சொல்லென்பார் 'அப்பான் மூன்று' என்றார். (௯)

௧௦. இருதிணை மருங்கி னைம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்
தோற்றந் தாமே வினையொடு வருமே.

**இதன் பொருள் :** உயர்திணை அஃறிணையென்னும் இரண்டு திணைக்கண்ணுமுளவாகிய ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல வென்னும் ஐந்துபாலுமறிய அவ்வச்சொல்லி னிறுதிக்கணின் றொலிக்கும் பதினோரெழுத்தும் புலப்படுதற்கண் வினைச்சொற்

குறுப்பாய்ப் புலப்படும் என்றவாறு.

உண்குவ எனக் குகரமீ இடைவரின் வகரவீறுதலும் உகரம் வராவழி (அஃதாவது வருவவென்புழி) வகரவீறும், அகரவீறும் ஆதலும் உரியவெனக்கொள்க; ஏனெனின்? எல்லா வினைமுதனிலைகளோடும் வருமியல்புடைய வகரவீறும் வா என்னும் முதனிலையோடு வந்து 'வருவ' என நிற்குமாகலானும் அகரவீறும் வா என்னும் முதனிலையோடு வந்து அன்பெறுது 'வருவ' என நிற்குமாகலானும்.

சூத்திரத்துள் வரும் என்பது வரூஉம் என 'நீட்டும்வழி நீட்டல்' என்னும் செய்யுள் விகாரத்தால் நீண்டது என்றபடி. ஈறு—விகுதி.

யாக்கம்] சொல்லதிகாரம்

உரு

திணை இரண்டே பால் ஐந்தேயென வரையறுத்தற்கு 'இருதிணைமருங்கி னைம்பால்' என்றார்.

னகாரமும் ளகாரமும் ரகாரமும் மாரும் இறுதி நின் றுணர்த்துமென்பதற்கு 'ஈற்றினின்றிசைக்கும் பதினோரெழுத் தும்' என்பது ஞாபகமாயிற்று. அல்லனவற்றிற்கு அநுவாத மாத்திரமென்றார்.

தாமேயென்பது கட்டுரைச் சுவைபட நின்றது.

வினையெனப் பொதுப்படக் கூறினாராயினும், ஏற்புழிக் கோட லென்பதனாற் படர்க்கைவினையென்று கொள்ளப்படும்.

இவை பெயரொடு வருவழித் திரிபின்றிப் பால் விளக்கா மையின் வினையொடு வருமென்றார்.

௧௧. வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்

பெயரிற் றோன்றும் பாலறி கிளவியு
மயங்கல் கூடா தம்மர பினவே.

ஒருதிணைச்சொல் ஏனைத் திணைச்சொல்லொடு முடியுந் திணை வழூவும், ஒருபாற்சொல் அத்திணைக்கண் ஏனைப்பாற் சொல்லொடு முடியும் பால்வழூவும், பிறிதோர் காரணம்பற்றாது ஒரு பொருட் குரிய வழக்கு ஒரு பொருண்மேற்

சென்றதெனப்படும் மரபு வழுவும்,
வினயதற்கிறையாகாச் செப்புவழுவும்,
வினவப் படாத பொருளைப்பற்றி வரும்

வினவழுவும், ஓரிடச்சொல்

---

(கo) ஞாபகமென்றது :– ' ணஃகா னெற்றே யாடூஉ வறிசொல் ' என்பது முதலிய சூத்திரங்களின் ஈற்றினின்றிசைக்குமென்று சொல் ாதனவற்றை ஈற்றினின்றிசைக்குமென்று இதனல் ஞாபகப்படுத் ிய தென்றபடி.

அநுவாதம் : முன்சொல்லியவற்றை அநுவதித்தல். ணஃகானெற் ும், ரஃகானெற்றும் மாரைக்கிளவியும் ஞாபகம். ஏனைய அனுவா ம். இவ்வீறுகள் பெயரொடு வருவழித் திரிபின்றிப் பால்விளக்கா வென்பதை, ககூக-ம் சூத்திரம் நோக்கியுணர்க.

கட்டுரைச் சுவையென்றது செய்யுளாக யாக்கப்பட்ட வாக்கியச் சுவையை. செய்யுட்சுவையென்பர் பின்னும்.

4

ஓரிடச்சொல்லொடு முடியும் இடவழுவும், காலக்கிளவி தன்னோ டியையாக் காலமொடு புணருங் காலவழுவுமென வழு எழுவகைப் படும். வழுவற்கவென்றலும் வழுவமைத்தலுமென வழுக்காத்தல் இருவகைப்படும். குறித்த பொருளை அதற்குரிய சொல்லாற் சொல்லுகவென்றல் வழுவற்கவென்றலாம். குறித்த பொருட் குரிய சொல்லன்றாயினும் ஒருவாற்றான் அப்பொருள் விளக்கு தலின் அமைகவென்றல் வழுவமைத்தலாம். இச்சூத்திரமுதலாக இவ்வோத்து வழுக்காக்கின்றது.

இதன் பொருள் : கூறப்பட்ட பதினோரீற்றவாய் வினை பற்றிவரும் பாலறிசொல்லும், அவன் இவன் உவன் என்பன முத லாகப் பெயர்பற்றி வரும் பாலறிசொல்லும், தம்முட்டொடருங் கால், ஒருபாற்சொல் ஏனைப்பாற்சொல்லொடு மயங்கா, தம்பாற் சொல்லொடு தொடரும்

என்றவாறு.

எனவே, பிறபாற்சொல்லொடு தொடர்வன வழுவென்பதாம்.

ஈண்டுப் பெயரென்றது பொருளை.

திணையுணராக்கால் அதனுட்பகுதியாகிய பாலுணர்ந்தலாகாமையின், பாலறிகிளவியெனவே திணையறிதலும் பெறப்படும்; படவே, மயங்கல்கூடாவென்றது திணையும் பாலும் மயங்கற்க வென்றவாரும்.

இன்னும் மயங்கல்கூடாவென்றதனான், வினைப்பாலறிசொல்லும் பெயர்ப்பாலறிசொல்லும் பாலறிசொல்லுள் ஒருசாரனவும், இடமுங்காலமுமுணர்த்துமாகலின், அவ்வாறுணர்த்துவனவற்று

---

(கக) பெயரென்றது ஈண்டுப் பொருளையென்றது, பெயர் என்ற சொல் பெயர்களையுங் குறிக்கும்; பொருள்களையுங் குறிக்கும் ஈண்டு பெயர்களைக் குறியாது பொருள்களைக் குறித்துவந்த தென்றபடி. இங்ஙனமே 'பெயர்நிலைக்கிளவி' யென்னும் கூ-ம் சூத்திர உரையுள்ளும் பெயர் - பொருள் என்று கூறுதல் காண்க. பெயர் பொருள் என்பன ஒருபொருட்கிளவிகள் என்று சிவஞான முனிவர் சூத்திரவிருத்தியுட் கூறுவர்.

பாலறிசொல்லுள் ஒருசாரன வென்றது, தன்மை முன்னிலைகளை. தன்மை முன்னிலை மயக்கம் பின் கூறப்படுகின்றனவெனின், ஆண்டுப் பான்மயக்கம்பற்றிக் கூறினர். ஈண்டு இடமுங்காலமும் மயய்

உஎ

...றும் மயங்கற்கவென்றவாறும்; ஆகவே,
இடமுங் காலமும் மயங்காது வருதலுங்
கூறப்பட்டதாம்.

**உதாரணம்** : அவன் வந்தான், அவள் வந்தாள், அவர் வந்தார், அது வந்தது, அவை வந்தன எனவும்; நெருநல் வந்தான் எனவும் திணையும் பாலும் இடமுங் காலமும் வழுவாது முடிந்தவாறு. அவ்வாறன்றி, அவன் வந்தது, அவன் வந்தாள், யான் வந்தான், நாளை வந்தான் என மயங்கி வருவனவெல்லாம் வழுவாம்.

'சிறப்புடைப்பொருளைத் தானினிது கிளத்தல்'
என்பதனுன்

ஐம்பாலுணர்த்துதற் சிறப்புடைய படர்க்கைவினைபற்றியோதினரேனும், 'தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி' (சொல் - சஈ.) என்றும் 'முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி' (சொல் - சஈஉ) என்றும் பெயர் வழுவமைப்பாராகலின், தன்மை முன்னிலைப் பாலறிகிளவியும் மயங்கற்க வென்பது ஈண்டைக் கொள்ளப்படும்.

உதாரணம்: யான் வந்தேன், யாம் வந்தேம் எனவும்; நீ வந்தாய், நீயிர் வந்தீர் எனவும் வரும். யான் வந்தேம், நீயிர் வந்தாய் என்னுந் தொடக்கத்தன வழுவாம்.

மயங்கல்கூடாவென்றது மயங்குதலைப் பொருந்தா வென்றவாறு. மயங்கல்கூடா, தம்மரபினவே என்பனவற்றுள் ஒன்றனாற்றலான் ஏனையதன்பொருளும் உணரப்படுதலின் ஒன்றே அமையுமெனின்:—சொல்லில்வழிய துய்த்துணர்வதென்க.

தம்மரபினவேயென்பதனைப் பிரித்து வேறோர் தொடராக்கிச் சொற்கண்மரபு பிறழா தம்மரபினவேயென மரபு வழுக்காத்ததாக வுரைக்க. இது **யோகவிபாகம்** என்னு நூற் புணர்ப்பு. முன் இருபொருள்பட வுரைப்பனவெல்லாம் இந்நூற்புணர்ப்பாகக் கொள்க. யானை மேய்ப்பானைப் பாகனென்றலும், யாடு மேய்ப்

---

...தல்பற்றிக் கூறினர். ஐம்பாலுணர்த்தாது ஒருமைப்பால் பன்மைப்பால் என்றவளவின் மாத்திரம் பாலுணர்த்துதல்பற்றிப் 'பாலறி சொல்லுள் ஒருசாரன வென்றார்.

யோகவிபாகம்—கூட்டிப்பிரித்தல்.

நூற்புணர்ப்பு—தந்திரவுத்தி.

பானே இடையனென்றலும் மரபு. மேய்த்தலொப்புமையான் யானே மேய்ப்பானை இடையனென்றலும், யாடு மேய்ப்பானைப் பாகனென்றலும் மரபுவழூ.

செப்புவழா நிலையும், வினாவழா நிலையும், சிறப்பு வகையா னேதப்படும் இடவழா நிலையும், இவ்வாறேதப்படு மரபுவழா நிலையும் ஒழித்து, ஒழிந்தன இச்சூத்திரத்தாற் காத்தார்.

கஉ.

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி
யாண்மை யறிசொற் காகிட னின்றே.

**இதன் பொருள்:** 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' (சொல் - ச.) என்று மேற்கூறப்பட்ட ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி ஆடூஉவறிசொல்லோடு புணர்தற்குப் பொருந்தும் இடனுடைத்தன்று என்றவாறு.

ஆண்மையறிசொற்காகிடனின்றென்ற விலக்கு ஆண்மையறி சொல்லோடு புணர்தலெய்தி நின்ற பேடிக்கல்லதேலாமையின், அலிமேற்செல்லாதென்க.

இச்சூத்திரத்தைப் 'பெண்மை சுட்டிய' என்னுஞ் சூத்திரத்தின்பின் வையாது ஈண்டு வைத்தார், இது வழுவற்க வென்கின்றதாகலான். (கஉ)

கக. செப்பும் வினவும் வழாஅ லோம்பல்.

இதன் பொருள்: செப்பினையும் வினவினையும் வழுவாமற் போற்றுக என்றவாறு.

---

ஒழிந்தன என்றது, திணைவழாநிலை, பால்வழாநிலை, காலவழா நிலை, பொதுவாக ஓதப்படும் இடவழாநிலை, இவ்வாறோதப்படும்

மரபுவழாநிலை என்பவற்றை.

(கஉ.) ஆண்மையறி சொல்லோடு புணர்த்தலெய்தி நின்ற பேடிக்கல்லது என்பது, 'உயர்திணைமருங்கிற் பால்பிரிந்திசைக்கும்' [கிள-ச-ம்சு] என்றதனாற் பேடி என்னுஞ்சொல் ஆண்பாலோடு முடியுமென எய்திநின்ற விதியை ஞாபகப்படுத்தி நின்றது.



செப்பென்பது வினய பொருளையறிவுறுப்பது. அஃதிரண்டு வகைப்படும், செவ்வனிறையும் இறை பயப்பது மெனா. உயிரெத் தன்மைத்து என்று வினயவழி உணர்தற்றன்மைத்து என்றல்

செவ்வனிறையாம். உண்டியோ என்று வினவவழி வயிறு குத்திற்றென்றல், உண்ணேனென்பது பயந்தமையின், இறை பயப்பதாம்.

கருவூர்க்குச் செல்லாயோ சாத்தாவெனப் பருதால் பன்னிரு தொடியென்பது செப்புவழுவாம். சொல் எப்பொருளுணர்த்துமென்று வினவவழிச் சொல் ஒரு பொருளுமுணர்த்தாதென்பது மது, வினய பொருளை வினவாலுணர்ந்து வினய பொருளையன்றித் தான் குறித்த பொருளைச் செப்பாலுணர்த்துகின்ற னுகவினென்பது.

வினவின்றியுஞ் செப்பு நிகழ்தலின் வினய பொருளையெனல் வேண்டாவெனின், வினய பொருளையென்றது அறிவுறுப்பது செப்பெனின், அறியலுறவினையறிவுறுத்தலின் வினவுஞ்செப்பாயடங்குதலானும், செப்பென்பது உத்தரமென்பதனே டொருபொருட் கிளவியாகலானும், வினயபொருளை யறிவுறுத்தலே இலக்கணமாமென்பது. குமரியாடிப் போந்தேன் சோறு தம்மினென வினவின்றி நிகழ்ந்த சொல் யாண்டடங்குமெனின்:— அறியலுறுதலை யுணர்த்தாது ஒன்றனையறிவுறுத்து நிற்றலிற் செப்பின்பாற்படும்.

---

(கஈ) செவ்வனிறை—நேர்விடை.

இறைபயப்பது—விடைபயப்பது.

அறியலுறவு—அறியலுறுதல்.

அறிவுறுப்பது செப்பெனின், தான் நினைத்ததை மற்றொருவனுக்கறிவுறுத்தலின் வினவு மவ்விலக்கணத்துளடங்கிச் செப்பாகும். ஆதலின் வினயபொருளை அறிவுறுப்பதே செப்பெனல் வேண்டுமென்

பரு கருத்து.

உத்தரம்—விடை

'குமரியாடிப்போந்தேன்' என்ற வாக்கியம் 'சோறு தம்மின்' என்று கேட்கப்பட்டவன் வினவாதிருக்க நிகழ்த்தியதாகலின் அது யாண்டடங்குமெனின், கேட்கப்பட்டான்கண் அறியலுறுதலை உணர்த்தாது, ஒன்றனை அறிவுறுத்தி நிற்றலின் செப்பின்பாற்படும்.



வினவெதிர்வினுதல், ஏவல், மறுத்தல், உற்றதுரைத்தல், உறுவதுகூறல், உடம்படுதலெனச் செப்பறுவகைப்படுமென்று உரையாசிரியர் கூறினாரெனின்:— உயிரெத்தன்மைத்தென்ற வழி உணர்தற்றன்மைத்தென்றன் முதலாயின அவற்றுளடங்காமையானும், மறுத்தலும் உடம்படுதலும் வினவப்பட்டார்கண்ணன்றி ஏவப்பட்டார்கண்ணவாகலானும், அறுவகைப்படுமென்று பிறர்மதமேற்கொண்டு கூறினரென்பது.

வினாவாவது அறியலுறவு வெளிப்படுப்பது. அது மூவகைப்படும், அறியான்வினாவும், ஐயவினாவும் அறிபொருள்வினாவுமெனை. அறியான்வினா உயிரொத்தன்மைத்தென்பது. ஒருபுடையானு மறியப்படாத பொருள்வினாவப்படாமையிற் பொதுவகையானறியப்பட்டுச் சிறப்புவகையா னறியப்படாமை நோக்கி அறியான் வினாவாயிற்று. ஐயவினா குற்றியோ மகனோ தோன்றுகின்றவுரு வென்பது. அறிபொருள்வினா அறியப்பட்ட பொருளையே ஒருபயனோக்கி அவ்வாய்பாட்டினான்றான் வினவுவது. பயன் வேறறிதலும் அறிவுறுத்தலு முதலாயின. கறக்கின்ற வெருமை பாலோ சினையோவென்பது வினவழுவாம். ஒரு பொருள் காட்டி இது நெடிதோ குறிதோ வென்பதுமது.

---

அவற்றுளடங்காமை—அவ்வறுவகைச்செப்புளடங்காமை.

ஒருவன் நீ செய்யென்று ஒருவனை ஏவியவழிச் செய்கின்றேனென்றால் ஏவியதை உடன்படல். செய்யமாட்டேன் என்றால் ஏவியதை மறுத்தலாகும். நீ செய்கின்றாயா? என்றால் அது ஏவலன்று; அவன்கருத்தையறிய வினவியதாகும். அப்பொழுது அவன் செய்கின்றேனென்றாவது, செய்யமாட்டேனென்றாவது தன் கருத்தை அறிவுறித்தி நிற்பானாகலின், அது தன் கருத்தை யறிவுறுத்த தன்றி, உடன்பட்டதும் மறுத்ததுமன்றாகலின் வினவப்பட்டார்கண்ணன்றி ஏவப்பட்டார்கண்ணவாகலானும் என்றார். வேறறிதலென்றது, தானறிந்தபொருளன்றி வேறுமுண்டோவென வறிதல்.

இருபொருள்காட்டி எது நெடிது? எது குறிது? என்று வினவாது, ஒருபொருள் காட்டி நெடிது குறிது வினவுதலின் வழுவென்றார். ஏனையவென்றது ஐயவினாவும் அறியான் வினாவும் ஆகிய இரண்டனையும்.

உரையாசிரியர் அறிபொருள் வினவை அறிவொப்புக் காண்டலும், அவனறிவு தான் காண்டலும், மெய்யவற்குக் காட்டலும் என விரித்து, ஏனைய கூட்டி, ஐந்தென்றார்.

இருவகைச்செப்பினும், மூவகைவினவினும், செவ்வனிறையும், 'அறியான்வினவும், ஐயவினவும் வழாநிலையாகலின், வழாஅநிலாம்பலென்பதனாற் கொள்ளப்படும் ஏனைய வழுவமைப்புழிக் காணப்படும். வினவழீஇயினவிடத்து அமையாதென்று உரையாசிரியர் கூறினாலெனின்:— அற்றன்று: 'யாதென வரூஉம் வினாவின் கிளவி' (சொல் - ௩௨.) எனவும், 'வன்புறவரூஉம் வினாவுடை வினைச்சொல்' (சொல் - ௨௪௪.) எனவும் முன்னர் வழுவமைப்பராகலான், அது போலியுரை யென்க. (௧௩)

கச. வினவுஞ் செப்பே வினவெதிர் வரினே.

**இதன் பொருள் :** வினய பொருளை ஒருவாற்றான் அறி யுறுத்து வினவிற்கு மறுமொழியாய் வரின், வினவுஞ்செப்பாம் என்றவாறு.

சாத்தா உண்டியோவென்று வினயவழி உண்ணேனோவென ... றும். வின வாய்பாட்டான் வந்ததாயினும், உண்பலென்பது ...ருத்துப்பொருளாகலிற் செப்பெனப்படும். உண்டியோவென்று வினயவழி உண்பல் உண்ணே னென்றிருது தானொன்றை வின ...யான் போலக் கூறலின், வழுவமைதியாயிற்று. இது செப்பு வழுவமைதியேற் 'செப்பே வழீஇயினும்' என்புழி யடங்கு மெனின் :—ஒன்றன்செப்பு ஒன்றற்காவதன்றி வினச் செப்பாயின மையின், வேறு கூறினர்.

(கச)

(கச) ஒன்றன் செப்பு ஒன்றற்காவதென்றது, உண்டியோ என்று வினவியவழி, வயிறு குத்திற்றென்று விடைகூறின் அவ்விடை வயிறு குத்திற்றோ என்னும் வினவிற்கு விடையாவதன்றி உண்டியோ என்றற்கு விடையாகாது. ஆதலின் ஒன்றன் செப்பு என்றார். அதுவே உண்ணேன் என்பது பயந்து உண்டியோ என்பதற்கு விடையாகலின் ஒன்றற்காவதென்றார்.



கரு. செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
யப்பொருள் புணர்ந்த கிளவி யான.

**இதன் பொருள்:** செவ்வனிறையாகாது செப்பு வழுவி வரினுங் கடியப்படாது, ஒருவாற்றான் வினய பொருட்கு இயைபுபட்ட கிளவியாதற்கண் என்றவாறு.

சாத்தா உண்டியோவென்று வினயவழி, நீயுண்ணென்றும், வயிறு குத்துமென்றும், பசித்தேனென்றும், பொழுதாயிற்றென்றும் வரும்; இவை செவ்வனிறையல்லவேனும், வினயபொருளை ஒருவாற்றா னறிவுறுத்தலின், அமைந்தவாறு கண்டுகொள்க.

அஃதேல், இவை 'தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற்றோன்றலும்' (சொல் - கருஎ.) என்புழிக் குறிப்பிற் றோன்றலா யடங்குமாகலின், ஈண்டுக் கூறல்வேண்டாவெனின் :—அவ்வா றடங்குமாயினும், 'செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்' (சொல் - கங) என்றதனுன் இவையெல்லாம் வழுவாதலெய்திற்று, அதனை யமைக்கல்வேண்டுமென்பது. (கரு)

கசு. செப்பினும் வினாவினுஞ் சினைமுதற் கிளவிக்
கப்பொரு ளாகு முறழ்துணைப் பொருளே.

**இதன் பொருள் :** செப்பின்கண்ணும் வினாவின்கண்ணும் சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் உறழ்பொருளுந் துணைப் பொருளும் அவ்வப்பொருளுக்கு அவ்வப்பொருளேயாம் என்றவாறு.

எனவே, சினையுமுதலுந் தம்முண்மயங்கி வருதல் வழுவென்பதாம்.

உறழ்பொருளாவது ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படுவது. துணைப்பொருளாவது ஒப்புமை கூறப்படுவது.

---

(கரு) சாத்தா உண்டியோ என்று வினவியவழி நீ உண் என்றும், வயிறு குத்தும் என்றும், பசித்தேன் என்றும், பொழுதாயிற்று என்றும் கூறும் இவைகள் பொருள் குறிப்பிற்றோன்றிக் குறிப்பிற் றோன்றலாய் அடங்குமாயினும் வினவியதற்கு விடையன்றாய் விடை வழுவாகலின் அமைக்கவேண்டிற்று என்றுரென்க.

உதாரணம்: இவள் கண்ணி னிவள்கண் பெரிய, நும்மரச னின் எம்மரசன் முறைசெய்யும் எனவும்; இவள் கண்ணி னிவள் கண் பெரியவோ, எம்மரசனி நும்மரசன் முறைசெய்யுமோ எனவும்;
இவள்கண்ணொக்கு மிவள்கண், எம்மரசனையொக்கு நும்மரசன் எனவும்; இவள்கண்ணொக்குமோ விவள்கண், எம்மரசனை யொக்குமோ நும்மரசன் எனவும் வரும்.

'அவன் கோலினுந் தண்ணிய தடமென் றோளே' எனவும்;

'துளிதலைத் தலைஇய தளிரன் னோளே' எனவும் மயங்கி வந்தன

வாறுவாம் பிறவெனின்:—அவை செய்யுள்பற்றி வருமுவமவழுவாக லின் ஈண்டைக்கெய்தா, அணியியலுட் பெறப்படும். இம்மகள் கண் நல்லவோ கயல் நல்லவோவென வழக்கின்கண்ணும் மயங்கி வருமாலெனின்:— உண்மைபுணர்தற்கு வினையதன்றி ஐயவுவமை வாய்பாட்டாற் கண்ணைப் புனைந்துரைத்தல் கருத்தாகலின், அன் னவையெல்லாம் உரையென்னுஞ்

செய்புளாமென்பது. இங்ஙனை முலையின் இங்ஙனை கண்ணல்ல என்னுந் தொடக்கத்தன மயக்க மின்மையின் இலக்கணவழக்காம் பிறவெனின் :— அற்றன்று: ஒத்தபண்பு பற்றியன்றே பொருவுவது, கண்ணொடு முலைக்கு ஒத்த பண்பின்மையாற் பொருவுதல் யாண்டையது! ஒத்த பண்பு பற்றிய பொருவுதற்கண்ணது இவ்வாராய்ச்சியென்பது.

---

(கசு) இவள்கண்ணி னிவள்கண் பெரிய ; நும்மரசனி னெம்மர சன் முறைசெய்யும் என்பன உறழ்பொருளில் வரும் செப்புக்குக் காட்டிய சினையும் முதலும். இவள் கண்ணி னிவள்கண் பெரியவோ? எம்மரசனின் நும்மரசன் முறை செய்யுமோ? என்பன உறழ்பொரு ளில் வரும் வினாவிற்குக் காட்டிய சினையும் முதலும்.

இவள்கண்ணொக்கு மிவள்கண்; எம்மரசனை யொக்கும் நும்மரசன் என்பன துணைப்பொருளில் வரும் செப்புக்குக் காட்டிய சினை யும் முதலும். இவள்கண்ணொக்குமோ இவள்கண்; எம்மரசனை யொக்குமோ நும்மரசன் என்பன துணைப்பொருளில் வரும் வினாவுக்குக் காட்டிய சினையும் முதலும். துணை — ஒப்பு. கோல் — முதல். தோள் — சினை.

தளிர் — சினை. அன்னோள் — முதல். புனைந்

துரைத்தல் — புனைந்து சொல்லுதல். ஒத்த பண்பு —

ஒத்த குணம். பண்ணுறுக்கும் முலைக்கும்

ஒத்தகுணமில்லை. ஆதலால் அவற்றின்கண்

இவ்வாராய்ச்சியுமின்றென்பது கருத்து.

5



காக்கப்பட்டன செப்புவழாநிலையும் வினாவழாநிலையுமென்பார் 'செப்பினும் வினாவினும்' என்றார். 'வழாஅலோம்பல்' (சொல் - கக.) என்புழி யடங்குமாயினும், நுண்ணுணர்வுடையார்க் கல்லது அதனுணர்தலாகாமையின், விரித்துக் கூறிய வாறு. தன்னினமுடித்தலென்பதனாற் 'பொன்னுந் துகிரு முத்து மணியும்' என வெண்ணுங்காலும் இனமாய பொருளே எண்ணப்படுமென்பது கொள்க. (கசு)

கள. தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.

**இதன் பொருள்:** தகுதிபற்றியும் வழக்குப்பற்றியும் நடக்கும் இலக்கணத்திற் பக்கச்சொற் கடியப்படா என்றவாறு.

தகுதியென்பது அப்பொருட்குரிய சொல்லாற் சொல்லுத

னீர்மையன்றென்று அது களைந்து தக்கதோர் வாய்பாட்டாற் கூறுதல். அது செத்தாரைத் துஞ்சினாரென்றலும், சுடுகாட்டை நன்காடென்றலும், ஓலையைத் திருமுகமென்றலும், கெட்டதனைப் பெருகிற்றென்றலுமென இத்தொடக்கத்தன.

வழக்கென்பது காரணமின்றி வழங்கற்பாடேபற்றி வருவது. பண்புகொள் பெயராயினும் பண்பு குறியாது சாதிப்பெயராய் வெள்ளாடு வெண்களமர் கருங்களமரென வருவனவும், குடத்துள்ளும் பிறகலத்துள்ளுமிருந்த நீரைச் சிறிதென்னாது சில வென்றலும், அடுப்பின்கீழ்ப் புடையை மீயடுப்பென்றலும், பிறவும் வழக்காறும்.

---

பொன்னுந் துகிரும் முத்தும் மணியும் விலைபொருள்களாகலானும் அணிபொருள்களாகலானும் ஓரினமாயின. புறநானூற்றிலே 'பொன்னுந் துகிரும் முத்தும் மன்னிய........மணியும்' என (உகஅ-ம் செய்யுள்) வருதல் காண்க.

(கஎ) வெள்ளாடு முதலியவற்றில் வரும் அடை பண்பு கருதாது சாதி குறித்து நின்றன என்றபடி. வெண்களமர் உழவரையும், கருங்களமர் பறையரையும் குறித்து நின்றன.

அடுப்பின் கீழ்ப்புடையை மீயடுப்பென்றது என்பதில், புடை என்றது பக்க அடுப்பை. புடை — பக்கம். புடையடுப்பென்றும் பாடம். பக்க அடுப்பு — நெருப்பு மூட்டும் உள்ளடுப்பின் பக்க

பொற்கொல்லர் பொன்னைப் பறியென்றலும், வண்ணக்கர் காணத்தை நீலமென்றலு முதலாகிய குழுவின் வந்த குறிநிலை வழக்கும், கண்கழீஇ வருதும் கான்மே னீர்பெய்து வருது மென்னுந் தொடக்கத்து இடக்கரடக்குந் தகுதியென்றும், மரூஉ முடிபை வழக்காறென்றும், உரையாசிரியர் அமைத்தாரா லெனின்:—குழுவின் வந்த குறிநிலைவழக்குச் சான்றோர் வழக்கின் கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின் அமைக்கப்படா வாகலானும், இடக்கரடக்கு 'அவையல் கிளவி' (சொல் - சசஉ.) எனவும், 'மறைக்குங்காலை' (சொல் - சசங.) எனவும், முன்ன ரமைக்கப்படுதலானும், மரூஉமுடிபு எழுத்ததிகாரத்துக் கூறப் பட்டமையானும், அவர்க்கது கருத்தன்றென்பது. கருமை முதலாயின ஒரு நிகரனவன்மையிற் காக்கையொடு சார்த்திக் களம் பழத்தை விகந்த துணையல்லது காக்கைக்கு வெண்மைநேராமை யிற் காக்கையிற் கரிது களம்பழம் என்புழிக் கரிது வெளிதாயிற் றன்று. ஆதலால் வழுவன்று. கிழக்குமேற் கென்பன வரையறை யின்றி ஒன்றனொடு சார்த்திப் பெறப்படுவனவாதலின், ஒன்றற் குக்

கீழ்பாலதனைப் பிறிதொன்றற்கு
மேல்பாலதென்றலும் வழூ என்று.
சிறுவெள்வாயென்பது இடுகுறி.
கருவாடென்பதுமது.

---

அடுப்புக்கள். அப்பக்க அடுப்புக்களின் மேலே கலச முதலியன வைத்
தற்குரியவாக மூன்று பிரிவாக ( ஃ போல )
வைத்திருக்கும் சூட்டடுப் பையே ஈண்டு
அடுப்பென்றதென்க. பக்க அடுப்பை இக்காலத்தும்
மேலடுப்பென வழங்குப. வண்ணக்கர் — நாணக
பரிசோதகர். வண் ணக்கஞ் சாத்தனார் முதலிய
பெயர்களை நோக்குக. காணம் — பொற் காசு.

இடக்கரடக்கலை இங்கே வழுவமைதியென்று
கூறிய சேனாவரையர் (எச்சவியல் சகூ-ம்
சூத்திரத்தில்) இது வழூவமைதியன்மையாற்
கிளவியாக்கத்துட் கூறாராயினர் என்று கூறியதாக
அச்சூத்திர வுரையுட் காணப்படுகின்றது.
ஆண்டடங்காது என்பதே கிளவியாக் கத்துட்
கூறாமைக்குக் காரணமாக இது
வேண்டியதன்மையின் இடையில் செருகப்பட்ட
வாக்கியம் போலும்.

ஒரு நிகரன அன்மை — பல வேறுவகை.

'காக்கையிற் கரிது களம்பழம்' என்புழிக்
காக்கையின் கருநிறத்தி லும் பார்க்கக் களம்பழம்

கரியது என்பது கருத்து. அன்றி, காக்கை வெண்மையுடையது என்பது கருத்தன்று. சிறு வெள்வாய் என்ப தன் பொருள் இக்கால வழக்கிற் காணப்படவில்லை.



அதனுணிவை வழக்காறெனை அமைக்கப்படாவாயினும், உரை யாசிரியர் பிறர்மத முணர்த்திய கூறினாரென்பது.

தத்தமக்குரிய வாய்பாட்டானன்றிப்
பிறவாய்பாட்டாற் கூறு தல் வழுவாயினும்,
அமைகவென மரபுவழு வமைத்தவாறு. (௧௭)

௧அ. இனச்சுட்டில்லாப் பண்புகொள்
பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே.

**இதன் பொருள் :** இனப்பொருளைச் சுட்டுதலின்றிப் பண் படுத்து வழங்கப்படும் பெயர்

வழக்குநெறியல்ல செய்யுணெறி என்றவாறு.

உதாரணம் : 'செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண் டிங்களுள் வெயில் வேண்டினும்' (புறம் - ௩அ.) என வரும்.

பலபொருட்குப் பொதுவாகிய சொல்லன்றே ஒரு பொருட் குச் சிறந்த பண்பான் விசேடிக்கப்படுவது ; ஞாயிறு திங்களென் பன பொதுச்சொல்லன்மையிற் செஞ்ஞாயிறென்றும் வெண் டிங்களென்றும் விசேடிக்கப்படாவாயினும், செய்யுட்கண் அணி யாய் நிற்றலின், அமைக்கவென்றார்.

பெருங்கொற்றன் பெருஞ்சாத்தன் என இல்குணமடுத்து வழக்கின்கண்ணும் இனஞ்சுட்டாது வருதலிற் செய்யுளாறென்றல் நிரம்பாதெனின் :— அவை இனஞ்சுட்டாமையின் வழு வாயினவல்ல,

இல்குணமடுத்தலின் வழுவாயின. இனஞ்சுட்டலாவது இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப்படுதல். வெண்மை முதலாயின விசேடித்தலாவது அக்குணமில்லா இனப் பொருளினீக்கி அக்குண முடையதனை வரைந்து சுட்டுவித்த

(கஅ) இல்குணம் — இயற்கையிலுள்ளதல்லாத குணம்.

பெருங்கொற்றன் என்புழிப் பெருமை கொற்றனுக்கு இயற்கையிலுள்ள குணமன்று. (உயர்த்தும்பொருட்டுச் சொன்ன குணமென்றபடி)

அக்குணம் — வெண்மைக்குணம். அக்குணமில்லா வினப் பொருள் செந்தாமரை. அக்குணமுடையது — வெண்மைக் குண முடையது.



லன்றே ; சுட்டப்படுவதன்கண் அக்குணமில்லையாயின் வரைந்து

சுட்டுவிக்குமாறென்னை ! அதனால் விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றதன்றாகலின் ஈண்டைக் கெய்தா ; 'வழக்கி னாகிய வுயர் சொற் கிளவி' (சொல் - உ௭.) என்புழி ஒன்றென முடித்தலென்

பதனான் அமைக்கப்படும்.

---

சுட்டப்படுவதன்கண் — இனஞ்சுட்டி விசேடிக்கப்படுவதன்கண். அக்குணம் — வெண்மை முதலிய குணம். இல்லையானல் அக்குணம், அக்குணமுடையதனை வரைந்து சுட்டுவிக்குமாறு எப்படி? (இல்லை என்றபடி). உதாரணமாக : பெருங் கொற்றன் என்புழிப் பெருமை

கொற்றன்கணில்லாத குணமாகலின் அவனை, இல்லாத அக்குணம் வரைந்து சுட்டுவிக்குமாறு எப்படி? (வரைந்து சுட்டுவிக்கமாட்டா தென்றபடி) வரைந்து சுட்டுவிக்கமாட்டாத அதனால் விசேடிக்கற்பால தாகிய குணம் விசேடியாது நின்றதன்று. (இனஞ் சுட்டாது நின்ற தன்று) என்றபடி. எனவே இல்குணமாய் நின்றதென்றபடி.

செஞ்ஞாயிறு, வெண்டிங்களில் விசேடணங்களாகிய செம்மை, வெண்மை ஆகிய குணங்கள் ஞாயிற்றிற்கும் திங்கட்கு மியற்கையாத லின் அவை விசேடிக்கற்பாலவேயாயினும், பொதுச்சொல்லல்லன வாகிய, அஞ்ஞாயிறு திங்களை விசேடித்து, இனஞ் சுட்டாது நிற்ற லானே, விசேடியாது நின்றனவாயின. பொதுச்சொல் — ஏனைய குணங்களுக்கும் பொதுவான சொல். அவை போலப் பெருமையும் கொற்றனுக்கு இயற்கையாகாது செயற்கையாதலின் (இல்குணமா தலின்) விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றதென்று சொல்லமுடி யாது என்றபடி. வரைதல் — எல்லைப்படுத்தல்.

வெண்டாமரையென்புழி, வெண்மையாகிய குணம், தன்னையுடைய தாமரையைச் செம்மையுடைய தாமரையினின்றும் நீக்கி வரைவுபடுத்தும். பெருங்கொற்றன் என்புழிப் பெருமை கொற்ற னுக்கு இல்குணமாகலின் அவனை யது வரைவுபடுத்தமாட்டாது. ஆத லின் அதற்கு இனஞ்சுட்டுதல் இல்லை. ஆதலால் அதனை இனஞ் சுட்டாது வந்ததென்று கொள்ளற்க; இல்குணமடுத்து வந்ததென்று கொள்க என்பது கருத்து. சேனாவரையர் கூறிய இக்கருத்தோ டொப்பவே தெய்வச்சிலையாரும், 'பெருவண்ணான், பெருங்

கொல் லன் என வழக்கின்கண்ணும் இனம் சுட்டாது வந்ததாலெனின்? பண் பாவது தமக்குள்ளதோரியல்பு; ஈண்டு அப்பெருமை இயல்பன்மை யின் அஃது உயர்த்துச் சொல்லுதற்கண் வந்ததென்க ' என்று கூறுதல் காண்க.



குறுஞ்சூலி, குறுந்தடி என்னுந் தொடக்கத்தன சூலி தடி யெனப் பிரிந்து நில்லாமையிற் பண்புகொள் பெயரெனப்படா. பண்படாது, வடவேங்கடந் தென்குமரி, முட்டாழை, கோட் சுறா எனத் திசையும் உறுப்புந் தொழிலு முதலாய அடை யடுத்து இனஞ்சுட்டாது வருவன ஒன்றென முடித்தலென்பத னாற் செய்யுளாறென அமைத்துக்கொள்ளப்படும்.

ஒன்றனதாற்றலான் ஒன்று பெறப்படுதலின், வழக்காறல்ல வென்றானுஞ் செய்யுளாறென்றானும் கூறவமையுமெனின் :— உய்த்துணர்வது சொல்லில் வழியென மறுக்க.

பண்புகொள் பெயர் இனங்குறித்து

வருதன் மரபு; அம்
மரபு வழக்கின்கண் வழுவற்கவென்றும்,
செய்யுட்கண் வழு
வமைக்கவென்றுங் காத்தவாறாயிற்று.
(கஅ)

---

சேனாவரையர் கருத்தின்படி விசேடணத்தை,
இனஞ்சுட்டும்
விசேடணம், (விசேடிப்பது) இனஞ்சுட்டா
விசேடணம் (விசேடியா
தது) இரண்டுமல்லாத விசேடணம் (
இல்குணவிசேடணம்; அஃதா
வது விசேடிப்பதும் விசேடியாததுமல்லாதது.) என
மூன்றாகப் பகுக்
கலாம். உதாரணம் :— முறையே வெண்டாமரை,
செஞ்ஞாயிறு,
பெருங்கொற்றன் என்பனவாம்.

வெண்டாமரை என்பதில் வெண்மை,
வெண்மைக்குணமில்லாத
தாமரை (செந்தாமரை) யினின்றும் நீக்கி,
வெண்மைக்குணமுள்ள
தாமரையையே வரைந்து சுட்டுதலின்,
இனஞ்சுட்டும் விசேடணம்
(விசேடிப்பது) ஆயிற்று. செஞ்ஞாயிறு என்புழி,
செம்மைக்குண

முள்ள ஞாயிறன்றி, வெண்மை முதலிய குணமுள்ள ஞாயிறு இல்லா

மையினுல் அவற்றினின்றும் நீக்குதலுமில்லாமையின் இனஞ்சுட்டாத

விசேடணம் ( விசேடியாதது ) ஆயிற்று. பெருங்கொற்றன் என்பு

ழிப் பெருமையென்னுங் குணம், கொற்றனுக்கு இல்லாத (புனைந்து சொன்ன) குணமாதலின், (செஞ்ஞாயிற்றிற்போல இயற்கையாக

உள்ள குணமல்லவாதலின் ) இரண்டுமல்லாத விசேடணமாயிற்று

எ க. இன்னுமதனைச் சுருங்கக்கூறின் இனஞ்சுட்டுவது விசேடிப்

பது ; இனஞ்சுட்டாதது விசேடியாதது ; இரண்டுமல்லாதது விசேடிப்

பதும் விசேடியாதது மல்லாதது என்னலாம்.

குறுந்தடி, குறுஞ்சூலி என்பவற்றிற் சூலி, தடி என்பன பிரிந்து நின்றவழி அப்பொருளுணர்த்தாமையின் ஒருசொல் என்றபடி.



௧௯. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

இதன் பொருள் :

தன்னியல்பிற் றிரியாது நின்ற பொருளை, அதனியல்பு கூறுங்கால் ஆக்கமுங் காரணமுங் கொடாது, இற்றெனச் சொல்லுக என்றவாறு

இயல்பாவது பொருட்குப் பின்றோன்றாது உடன் நிகழுந் தன்மை.

**உதாரணம் :** நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், உயிர் உணரும் என வரும்.

இற்றென்பது வினைக்குறிப்பு வாய்பாடாயினும், உளரும், உணரும் என்னுந் தெரிநிலைவினையும், இற்றென்னும் பொருள் பட நிற்றலின், இற்றெனக்கிளத்தலைபாம்.

நிலம் வலிதாயிற்று என இயற்கைப்பொருள் ஆக்கம் பெற்று வருமாலெனின் :—

கல்லுமிட்டிகையும் பெய்து குற்றுச் செய்

யப்பட்ட நிலத்தை வலிதாயிற்றெனின், அது செயற்கைப் பொருளையாம். நீர்நிலமும் சேற்றுநிலமும் முன் மிதித்துச் சென்று வன்னிலமிதித்தான், நிலம் வலிதாயிற்றென்றவழி மெலிதாயது வலிதாய் வேறுபட்டதென ஆக்கம் வேறுபாடு குறித்து நிற்ற
லின் இயற்கைப்பொருள் ஆக்கமொடு வந்ததன்றாம். அல்லது நிலத்திற்கு வன்மை விகாரமென்றோர்ந்து நிலம் வலிதாயிற்றென்னுமாயின், திங்கள் கரிதென்பதுபோலப் பிறழவுணர்ந்தார் வழக்காய் ஆராயப்படாதென்க.

(கக) உ௦. செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்.

இதன் பொருள் :

காரணத்தாற் றன்மை திரிந்த பொருளை, அத்திரிபு கூறுங்கால், ஆக்கங்கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

---

(கக) உளரும், உணரும் என்பனவும் உளருந்தன்மைத்து உணருந்தன்மைத்து என்னும் பொருள்பட நிற்றலின் இற்றெனக் கிளத்த லேயாம்.

இட்டிகை — செங்கல். பிறழஉணர்தல் — மாறுபடவுணர்தல். ௯௦



ஆக்கமொடுகூற லென்பதனாற் றிரிபு கூறுதல் பெற்றாம். என்னை ? அதன்கணல்லது வாராமையின்.

இயற்கைப்பொருள் செயற்கைப்பொரு ளென்பன, இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. (உ௦)

உக. ஆக்கந் தானே காரண முதற்றே.

இதன் பொருள்: செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுங்கால், காரணத்தை முற்கூறி அதன்வழி யாக்கங் கூறுக என்றவாறு.

தானேயென்பது செய்யுட்சுவை குறித்து நின்றது.

உதாரணம்: கடுக்கலந்த கைபிழியெண்ணெய் பெற்றமை யான் மயிர் நல்லவாயின; எருப்பெய்திளங்களை

கட்டு நீர்கால் யாத் தமையாற் பைங்கூழ் நல்லவாயின; நீர் கலத்தலால் நிலம் மெலி தாயிற்று; தீச்சார்தலால் நீர் வெய்தாயிற்று என வரும்.

மயிர் நல்ல, பயிர் நல்ல எனச் செயற்கைப் பொருள் ஆக்கம் பெறுது வந்தனவாலெனின்:— அந்நன்மை பொருட்குப் பின்ருேன்ருது உடன்ருேன்றிற்றேல் இயற்கையேயாம்; அவ்வாறன்றி, முன் றீயவர்ய்ப் பின் நல்லவாயினவேனும், தீபநிலைமை காணுதான் மயிர் நல்ல பயிர் நல்லவென்ருற் படுமிழுக்கென்னை? அது செயற்கையாவதுணர்ந்தான் ஆக்கங்கொடாது சொல்லினன்றே வழுவாவ தென்க.

---

(உ௦) ஆக்கமொடு கூறல் என்பதனல் திரிபுகூறல் பெற்ரும் என்றது: திரிபுகூறுதற்கண்ணல்லது ஆக்கங்கூறுதல் வாராமையின் அவ்வாக்கங் கொடுத்துக் கூறுகவெனவே திரிபுகூறுங்காலென்பது பெற்ருேமென்பது கருத்து. இதனல் "திரிபுகூறுங்காலென"த் தாம் வருவித்ததற்குக் காரணம் கூறியவாறு.

(உக) கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின; இதில் ஆயினவென்பது ஆக்கச்சொல். மயிருக்கு நன்மை இயற்கையன்று செயற்கை என்றபடி. எனவே மயிர் நல்லவாதற்குக் காரணம் கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமை என்க. மயிருக்கு அத்தன்மை இவற்றாலாயின தென்றபடி. கடு—கடுக்காய்.

முன் தீயவாய்ப் பின் நல்லவாயினவேனும் அத் தீயநிலை காணு

தான் மயிர் நல்ல பயிர் நல்ல என

ஆக்கங்கொடாது கூறிற் படு

மிழுக்கென்னையென விடைக்க. அதுஎன்றது நன்மையை.

யாக்கம்] சொல்லதிகாரம்

சுக

செயற்கைப் பொருளை ஆக்கமுங்

காரணமுங் கொடுத்துச் சொல்லுக வென்பதே

கருத்தாயிற் சூத்திரம் ஒன்றாகற்பாற்

றெனின் :— அவ்வாறோதின், ஆக்கமுங்

காரணமுஞ் செயற்கைப் பொருட்க

ணொத்தவாயினவென்பது பட்டுக்

'காரணமின்றியும் போக்கின்று' (சொல் - உஉ.)

என்பதனோடு மாறுகோடலானும், காரணஞ் செயற்கைப் பொருளதோ ஆக்கத்ததோவென ஐயுறப் படுதலானும், ஆக்கந்தானே காரண முதற்றெனப் பிரித்துக் கூறினரென்பது.

இயற்கைப்பொருள் ஆக்கமுங் காரணமும் பெறாது வருத லுஞ் செயற்கைப் பொருள் அவை பெற்று வருதலும் இலக்கண மெனவே, இவ்வாறன்றி வருவன மரபு வழுவென்பதாம்.

நுண்ணுணர்வுடையார்க்குத் 'தம்மரபினவே' (சொல் - கக.) என அடங்குவவாயினும், ஏனையுணர்வினர்க்கு இவ்வேறுபா டுணர லாகாமையின், விரித்துக் கூறினர். (உக)

உஉ. ஆக்கக் கிளவி காரண மின்றியும் போக்கின் றென்ப வழக்கி னுள்ளே.

இதன் பொருள்: காரண முதற்றெனப்பட்ட ஆக்கச்சொற் காரணமின்றி வரினுங் குற்றமின்று வழக்கினுள் என்றவாறு.

உதாரணம்: மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின என வரும்.

வழக்கினுட் காரணமின்றியும் வருமெனவே, செய்யுளுட் காரணம் பெற்றே வருமென்பதாம்.

**உதாரணம் :**

'பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் றடோய் தடக்கை'

(புறம் - கச.) எனவும்,

---

'ஆக்கமுங் காரணமும் செயற்கைப்பொருட்கண் ஒத்தவாயின என்பதுபட்டு' என்றது, செயற்கைப் பொருட்கு எப்படி ஆக்கம் நியதியாய் வரவேண்டுமோ, அப்படியே காரணமும் நியதியாய் வர வேண்டுமென வரவில் ஒத்ததன்மையுடையவாயின என்பது பட்டு என்றபடி. காரணம் ஆக்கம்பற்றி வருமென்பது இச்சூத்திரக் கருத்து.

(௨௨) நல்கவென்பதை நல்குதலால்
6
என ஏதுவாக்குக.



'தெரிகணை யெஃகந் திறந்தவா யெல்லாம்
குருதி படிந்துண்ட காக — முருகிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மால்
தப்பியா ரட்ட களத்து' (களவழி நாற்பது - ரு.)

எனவும்,

' வருமழைய வாய்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி — திருநுதா
லின்றென் குரற்கூந்தற் பெய்தமையாற் பண்டைத்தன்
சாயல வாயின தோள் '

எனவும் காரணம் பெற்று வந்தவாறு கண்டுகொள்க. குக்கி புறத்த, சிரல்வாய என ஆக்கமின்றி வந்தனவர் லெனின்:— தொக்கும்வழித் தொகுத்த லென்பதனுன் ஆண்டாக்கந் தொக்கு நின்றதென்பது.

' அரிய கானஞ் சென்றோர்க்
கெளிய வாகிய தடமென் றோளே

எனவும்,

(குறு - எஎ.)

' நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு '

(குறள் - ௩௭௫.)

எனவும், செயற்கைப் பொருள் செய்புளுட் காரணமின்றி வந்தன வாலெனின்:— களவுக்காலத் தரியன இக்காலத்தெளிய வாயின வென்பது கருத்தாகலான், இக்காலங் காரணமென்பது பெறப் படுதலானும், ஊழாலென்பது அதிகாரத்தான் வருமாகலானும், அவை காரணமின்றி வந்தனவெனப்படா வென்பது. (உஉ)

## உ௩. பான்மயக் குற்ற வையக் கிளவி

தானறி பொருள்வயிற் பன்மை

கூறல்.

இதன் பொருள்: திணை துணிந்து பாறுணியாத ஐயப் பொருளை அவ்வத்திணைப்பன்மையாற் கூறுக என்றவாறு.

---

படிந்துண்ட காகம் உருவிழுந்து எனவே படிந்துண்டல் உருவிழத் தற்கு ஏதுவாமென்க. குக்கில்—செம்போத்து. சிரல்—சிச்சிலி. இக் கால மென்றது கற்புக்காலத்தை.



இளவியென்றது ஈண்டுப் பொருளை. ஐயப்பொருளாவது சிறப்பியல்பாற் றோன்றாது பொது வியல்பாற் றோன்றிய பொருள்.

உதாரணம்: ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ இஃதோ தோன்றுவார். எனவும், ஒன்றோ பலவோ செய்

ப்ங்கன. எனவும் வரும்.

திணைவயியென்றது தானறிபொருள்வயி னெனப் பொதுப்

பட க் கூறியவதனுன், ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ கறவை யுய்த்த கள்வர். எனவும், ஒருத்திகொல்லோ பலர்கொல்லோ இக்குருக்கத்திநீழல் வண்டலயர்ந்தார். எனவும், திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மையொருமைப்பா லையமுங் கொள்ளப்படும்.

ஒருமையாற்கூறின் வழூப்படுதனேக்கிப் பன்மை கூறலென வழாநிலை போலக் கூறினுரேனும், ஒருமையைப் பன்மையாற் கூறுதலும் வழூவாதலின், ஐயப்பொருண்மேற் சொன்னிகழுமா றுணர்த்திய முகத்தாற் பால்வழூவமைத்தவாறும். (உரு)

உ௪. உருபென மொழியினு மஃறிணைப் பிரிப்பினு

மிருவீற்று முரித்தே சுட்டுங் காலை.

## இதன் பொருள் :

உருபெனச் சொல்லுமிடத்தும், ஒருமை:
யும் பன்மையுமாகப் பிரிக்கப்படும் அஃறிணைப்
பொதுச்சொற்

---

(உ௫) கிளவி என்றது ஈண்டுப் பொருளை
என்றது, 'ஐயக்கிளவி'
என்பதில் கிளவி என்பது சொல்லுக்கும்
பொருளுக்குமுள்ள ஒற்று
மையாற் பொருளை யுணர்த்திநின்ற தென்றபடி.

சிறப்பியல்பு என்றது ஐயுற்றபொருளின்
சிறப்பியல்பை. பொது
வியல்பென்றது அதன் பொதுவியல்பை.
பான்மயக்குற்ற ஐயப்
பொருளிலே பொதுவியல்பு திணை. சிறப்பியல்பு
பால். எனவே
திணையாற்றுேன்றிப் பாலாற் றுேன்றுத பொருளே
ஈண்டு ஐயப்
பொருளென்பது கருத்து. ஏனைப் பாலையத்திற்கும்
ஏற்பக் கொள்க.

ஒருமையைப் பன்மையாற் கூறலென்றது,

ஐயச்சொல்லை ஒருமை
வாய்பாட்டால் நிகழ்த்தி பொதுச்சொல்லைப்
பன்மை வாய்பாட்

டாற் கூறல் என்றபடி.



கண்ணும், இவ்விரு கூற்றினும் ஐயப்புலப் பொதுச்சொல்லாத லுரித்து என்றவாறு.

எனவே, ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்றுநின்ற வுருபு. எனவும், ஒன்று கொல்லோ பலகொல் லோ செய்புக்க வுருபு. எனவும், குற்றிகொல்லோ மகன்கொல் லோ தோன்றுநின்ற வுருபு. எனவும், ஒன்று கொல்லோ பல கொல்லோ செய்புக்க பெற்றம் •எனவும் சொல்லுகவென்பதாம்.

ஐயக்கிளவியென்பது அதிகாரத்தாற் பெற்றும்.

உருபினுமென்னது உருவெனமொழியினு மென்றதனன், உருபின் பொருளவாகிய வடிவு, பிழம்பு, பிண்டமென்னுந் தொடக் கத்தனவுங் கொள்க.

பன்மைகூறல் உயர்திணைப்பால்யத்திற் குரித்தென்றும், உரு வென மொழிதல் திணையையத்திற்குரித்தென்றும், உரையாசிரி யர் கூறினாரெனின் :— அவை அவற்றிற்கே

உரியவாயின்,

அஃறிணைப்பிரிப் பென்றாற்போல உயர்திணைப்பான் மயக்குற்ற வென்றும், திணையையத்தென்றும், விதந்தோதுவர் ஆசிரியர்; அவ்வாறோதாமையானும், நடையுள் அவை பொதுவாய் வருதலானும், அவை போலியுரையென்க.

ஒருவன்சொல்லோ பலர்சொல்லோ என்றற்றொடக்கத்து உயர்திணைப்பன்மை யொருமைப்பாலயத்திற்கு உருபு முதலா

---

(உச) உருபென மொழிதற்கண்ணும் அஃறிணைப் பிரிப்பின்கண்

ணும் உரித்தாமென்க. எது உரித்தாமெனின் ஐயப்புலப் பொதுச் சொல்லாய் வருதல் உரித்தாமென்க. எனவே உருபும் அஃறிணைப் பிரிப்பும் ஐயப்புலப் பொதுச் சொல்லாய் வருமென்றபடி. ஆதல் எழுவாய்; உரித்து பயனிலை.

உருபு என்றால் உருபு என்ற ஒரு சொல்லே வருமென்றுமாகும். என என்பதைக் கொடுத்து உருபென மொழியினுமென்றதனால் அதன் பொருள்பட வருவனவும் அதற்குப் பதிலாய் வரலாம் என்றபடி.

உக-ம் சூத்திரத்தில் உயர்திணைப்பான் மயக்குற்ற என்றும், இச்சூத்திரத்தில் திணை யையத்தென்றும் ஆசிரியர் சூத்திரிப்பாரென்பது கருத்து. நடை — வழக்கு. அவை :

...வின வேலாமையும், திணையத்திற்கும் ஏனைப்பாலையத்திற்கும் ஏற்புடைமையும், சுட்டிபுணர்கவென்பது போதரச் 'சுட்டுங்காலை' யென்றார். சுட்டுதல்—கருதுதல்.

உரு. தன்மை சுட்டலு முரித்தென மொழிப
வன்மைக் கிளவி வேறிடத் தான.

**இதன் பொருள்:** ஐயுற்றுத் துணியும்வழி அன்மைக் கிளவி அன்மைத்தன்மையைச் சுட்டி நிற்றலுமுரித்தென்று சொல்லுவர், துணிந்து தழீஇக் கொள்ளப்பட்ட பொருளின் வேறாய பொருளிடத்து என்றவாறு.

என்றது குற்றிகொல்லோ மகன்கொல்லோ என்றானும், ஒருவன் கொல்லோ ஒருத்தி கொல்லோ என்றானும், ஒன்று கொல்லோ பலகொல்லோ என்றானும், ஐயநிகழ்ந்தவழித் துணிதலுமுண்டு; பிற நடையுட்டுணிந்தவழி மறுக்கப்படும் பொருண்மேல் அன்மைத்தன்மை யேற்றினுமமையு மென்றவாறு.

மகனென்று துணிந்தவழிக் குற்றியன்று மகனெனவும், குற்றியென்று துணிந்தவழி மகனல்லன் குற்றியெனவும் ஆண் மகனென்று துணிந்தவழிப் பெண்டாட்டி யல்லள் ஆண்மக னெனவும், பெண்டாட்டி யென்று துணிந்தவழி ஆண்மகனல்லன் பெண்டாட்டியெனவும், ஒன்றென்று துணிந்தவழிப் பலவல்ல ஒன்றெனவும், பலவென்று துணிந்தவழி ஒன்றன்று பலவென வும் மறுக்கப்படும் பொருண்மேல்

அன்மைக்கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நின்றவாறு.

---

மொழிதலும். ஏனைப்பாலையும் என்றது உயர்திணை ஆண்மை பெண் மைப் பாலையத்தையும், அஃறிணை ஒருமைபன்மைப்பாலையத்தையும். பெற்ற மென்பது இயற்பெயராயினும் ஒருகாற் சொல்லுதற்கண் ஒருபான்மேல் நில்லாது இருபான்மேல் நிற்றலான் வழுவமைதியா யிற்று. என்று நச்சினார்க்கினியர் கூறுதல் மிகப்பொருத்தமாதலின் பெற்றம் இயற்பெயராதலின் வழுவன்று என்று கூறுவார் கூற்றுப் பொருந்தாது என்க.

(உரு) பிற என்றது வேறு என்ற பொருளில் நின்றது. நடை— வழக்கு.



உம்மை எதிர்மறையாகலான்,

வேறிடத்துச் சுட்டாமையே பெரும்பான்மை யென்பதாம். ஆகவே, இவ்வுருபு குற்றியன்று மகனென ஐயப்புலமாகிய பொதுப்பொருண்மேலானும், குற்றியல்லன் மகனெனத் துணிபொருண்மேலானும், அன்மைக்கிளவி அன்மை சுட்டி நிற்றல் பெரும்பான்மை யென்பதாம்; என்னை? வேறிடத்துச் சுட்டாமையாவது ஈண்டுச் சுட்டலே யாகலான்.

குற்றியன்று மகன் என்றவழி மகனென்பது நின்று வற்று மெனின்:—

'எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்விய னிலையல் செவ்வி தென்ப'

(சொல் - கூஅ)

என்பதனுன் எழுவாய் வெளிப்படாது நிற்றலு முண்மையான், வெளிப்படாது நின்ற இவனென்னு மெழுவாய்க்கு அது பயனிலை யாகலின், நின்றுவற்றுதல் யாண்டைய தென்க. அல்லனவற் றிற்கு மீதொக்கும்.

குற்றியல்லன் என்புழிக் குற்றியென்பது அல்லனென்னுஞ் சொல்லோடியைந்தவா றென்னையெனின்:— இவ்வுருபு குற்றியா மென்றவழி ஆமென்பதனோடு குற்றியென்பதூஉம் எழுவாயாய்

பொதுப்பொருள் என்றது இவ்வுருபு என்பதை. றது மறுக்கப்படும் பொருளை.
வேறிடமென்

இவ்வுருபு குற்றியன்று மகன் என ஐயப்புலமாகிய பொதுப் பொருண்மேல் அன்மைக்கிளவி அன்மை சுட்டிநிற்றல் என்றது, குற்றி என்பது இடைப்பிறவரலாய் நிற்ப, அன்று என்பது உருபு என்பதற்குப் பயனிலையாய் அதன்மேல் குற்றியல்லாத தன்மை யைக் குறித்து நின்றதென்றபடி. குற்றியல்லன் மகன் என்புழி அன்மைக் கிளவி துணிபொருண்மேல் அன்மை சுட்டி நின்றதென் றது, அல்லன் என்பது தனக்கு எழுவாயாய் வரும் இவன் என்ப தற்குப் பயனிலையாய், இவன் அல்லன் என நின்று, இவன்மேல் குற்றியல்லாத தன்மையைக் குறித்து நின்றதென்றபடி.

ஈண்டுச் சுட்டல் என்றது ஐயப்புலமாகிய பொதுப் பொருளை யுந் துணிபொருளையும். அல்லன என்றது ஏனைய உதாரணங்களை. ஈதொக்கும் என்றது இதுபோல எழுவாய் ஏற்ப வருவித்துக் கொள் ளப்படும் என்பது கருத்து.

இவ்வுருக்குற்றியாம் என்புழிக், குற்றியென்பது எழுவாயாய் நின்று ' ஆம் ' என்பதனோடு இயைந்தாற் போலவே, இவன் குற்றி

நின்றே இயைந்தாற்போல, இவன் குற்றியல்லன் என்புழி அமென்பத னெதிர்மறையாகிய அன்மைக்கிளவியோடும் குற்றி யென்பது எழுவாயாய் நின்றேபிலையுமென்பது. எழுவாயா பிலையதலி னன்றே யான்நீயல்லன் என்புழி நீயென்பது வேற்று மைக்கேற்ற செய்கை பெறாது நின்றதென்க. (உரு)

உசா. அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.

**இதன் பொருள் :** பண்புச்சொல்லும், சினைச்சொல்லும், முதற்சொல்லுமென மூன்றுங் கூறப்பட்ட முறை மயங்காமல், வழக்கைப் பொருந்தி நடக்கும், வண்ணச்சொல்லோடு தொடர்ந்த சினைச் சொல்லையுடைய முதற்சொல் என்றவாறு.

வடிவு முதலாகிய பிற பண்பு முளவேனும், வண்ணப் பண்பி னது வழக்குப்பயிற்சி நோக்கி 'வண்ணச் சினைச்சொல்' என்றார்.

**உதாரணம் :** செங்காலுரை, பெருந்தலைச்சாத்தன் என வரும். கால் செங்காரை, தலைபெருஞ் சாத்தன் என முறை மயங்கிவரின், மரபு வழுவாமென்க.

வழங்கினும் மயங்காது வருமெனவே,

'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவர
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி' (புறம் - உ௩அ)

...ல்லன் என்புழியும் ஆம் என்பதன் எதிர்மறையாகிய அன்மைக் ...ளவியோடும் குற்றியென்பது எழுவாயாய் நின்றே இயையும். ...ான் நீயல்லன் என்புழி நீ என்பது எழுவாயாய் நின்று அன்மை ...யோடு முடிந்தாற்போல வென்பது.

ஆம் என்பதன் எதிர்மறையாகிய அன்மைக்கிளவி என்ற வாக்கியத்தில் எதிர்மறையென்பது மறுதலை யென்றிருக்கவேண்டும். ஏனெனின்? உண்டான் உண்டிலன் என்பனபோல ஒரே யடியில் வருவதே எதிர்மறையாகலின், என்று சிலர் கூறுவர். அஃதுண் ...மயே; ஆயினும் எதிர்மறைப்பொருள் தருதல்பற்றி மறுதலையையும் ...திர்மறை என்றனர்போலும். மறுதலைவினைகளை எதிர்மறை என்று ...உரையாசிரியர் பலரும் வழங்கினர்.



எனச் செய்யுளுண் மயங்கியும் வரப்பெறு மென்றவாறும். செவி செஞ்சேவல், வாய்வன் காக்கை என்பன, செஞ்செவிச்சேவல், வல்வாய்க்

காக்கை என்னும் பொருள்பட நின்றமைபின், வண்ணச் சினைச்சொன் மயக்கமாயின. அஃதேல், சினையடையாகிய செம்மையும் வன்மையும் முதலடையாயினவா றென்னையெனின் :— சினையொடு முதற்கொற்றுமை யுண்மையான் அவை முதலொடு மியைபுடையவென்பது.

'பெருந்தோட் சிறுநுசுப்பிற் பேரமர்க்கட் பேதை' என்புழி மூன்றும்வழி முதல் கிடவாது பின்னும் அடையுஞ் சினையும் புணர்ந்தமையான் வண்ணச் சினைச்சொற் செய்யுளுண் மயங்கி வந்ததென்று உரையாசிரியர் கூறினாரெனின் :— மூன்றும் வழிப் புணர்க்கப்படும் பேதையென்னு முதற்சொல் பேரமர்க் கண்ணென்னுந் தொகையோடு வேற்றுமைப் பொருள்படத் தொக்கு, அத்தொகை சிறுநுசுப்பென்னுந் தொகையோடும் அப் பொருள்படத் தொக்கு, ஒரு சொல்லாய், 'பெருந்தோட்பல் யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்றாற்போல மூன்றும்வழிப் பிற சொல்லடுத்துப் பேதை யென்னுமுதல் கிடந்ததெனவே படு தலின், மயக்க மின்மையான்,

அவர்க்கது கருத்தன்றென்க. அன் றிப் பெருந்தோண் முதலாகிய மூன்றும் பலபெயர் உம்மைத் தொகைபடத் தம்முட்டொக்கு ஒரு சொல்லாய்ப் பின் பேதை யென்பதனோடு வேற்றுமைத் தொகைபடத் தொக்கனவெனினும், அவை உம்மைத்தொகைபடத் தொகாது நின்று பேதையென்பத னோடு வேற்றுமைத் தொகைபட ஒருங்கு தொக்கனவெனினும்,

---

(உகூ) சினையொடு முதற்கொற்றுமை யுண்மையான் அவை முதலொடுமியையுடைய வென்பது; என்றதனாற், செவிசெஞ்சேவல் வாய்வன்காக்கை என்பவற்றைச் செவியாற்சிவந்தசேவல் வாயான்வலியகாக்கை என விரிக்கலாமென்பது சேனாவரையர் கருத்தாயிற்று.

பல பெயரும்மைத் தொகைபடத்தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் பேதை என்பதனோடு வேற்றுமைத் தொகைபடத் தொகுதலாவது:-பெருந்தோளும் சிறுநுசுப்பும் பேரமர்க்கண்ணு மென விரித்துக் கொள்ளுமாறு உம்மைத் தொகைபடத்தொக்கு ஒரு சொல்லாகிப் பின் பெருந்தோளும் சிறுநுசுப்பும் பேரமர்க்கண்ணுமாகிய

தம்முளியையாது பேதை யென்பதனோடியைதலின், ஆண்டும் மயக்கமின்மை யறிக. அஃதேல், இவ்வாறு வருதல் வழக்கிற்கு முரித்தோவெனின்:— அடுக்கிய அடையுஞ் சினையும் பொதுமை நீக்குதற்கன்றி அணி குறித்து நிற்றலிற் செய்யுட்கே உரித்தென் பது. 'சிறுபைந்தூவி' எனச் சினையொடு குணமிரண்டடுக்கி வருதல் செய்யுட் குரித்தென்றும்,

'இளம்பெருங் கூத்தன்' என முதலொடு குணமிரண்டடுக்கி வருதல் வழக்கிற்குரித்தென்றும், பிறர் மதமேற் கொண்டு கூறினர். ஒன்றாக பலவாக இனஞ்சுட் டாதன செய்யுட்குரியவாம், இனஞ்சுட்டி நின்றன வழக்கிற் குரியவா மென்பதே உரையாசிரியர் கருத்தென்க.

அன்றிப் பிற நான் முடிந்தது தானுடன் படுத லென்பதனாற் சினையொடு குண மிரண்டடுக்கல் செய்யுளாறென்று கொள்ளினுமமையும்;

> 'முதலொடு குணமிரண் டடுக்கல் வழக்கியல்
> சினையோ டடுக்கல் செய்யு ளாறே'

ான்றுராகலின்.

இவற்றையுடைய பேதை என விரித்துக்கொள்ளுமாறு வேற்றுமைத் தொகையாகத் தொகுமென்றபடி. பேதையென்பதனோடு வேற்று மைத் தொகைபட (மூன்றும்) ஒருங்கு தொக்கன வெனினு மமையு மென்றது:—பெருந்தோட்பேதை, சிறுநுசுப்பிற்பேதை, பேரமர்க்கட் பேதை எனத் தனித்தனி பேதை யென்பதனோடு சென்றியைந்து வேற்றுமைத் தொகைப்பொருள் படும்படி, அம்மூன்றும் பேதை என்பதனோடு ஒருங்கு தொக்கன வெனினு மமையு மென்றபடி.

சினையொடு குணமிரண்டடுக்கலையும், முதலொடு குணமிரண் டடுக்கலையும் உரையாசிரியர் தமதுரைக்கண்ணே பிறர்மத மேற் கொண்டு கூறினரேயன்றி இந்நூலாசிரியர் கொள்கையைக் கொண்டு கூறினரல்லர் என்பார் 'பிறர்மத மேற்கொண்டு' கூறினர் என்றார். அங்ஙனங் கூறினரேனும் அவ்விரண்டனுள் சினையொடு குணமிரண் டடுக்கி வருதலை (சிறுபைந்தூவி என வருவதை)ச் செய்யுளாறெனப் 'பிறர்நூன் முடிந்தது தானுடம் படுதல்' என்னு முத்தியால் இந் நூற்கண்ணும் கொள்ளினுமமையும். ஏனெனின்? ஈரடை சினையை விசேடித்து வருதல் வழக்காறன்மையின் என்றபடி. எனவே இளம் பெருங்கூத்தன் என்பதுபோல முதலொடு குணமிரண்டடுக்கி வரும் வழக்காற்றைப்பற்றி ஈண்டாராய்ச்சி யில்லையென்பது சேனாவரையர்
7



வண்ணச் சினைச்சொ லென்றதனுன் வண்ணமுஞ் சினையு முத லுங் கூறுதற்கண்ணது இவ்வாராய்ச்சி

யென்பதாம். எனவே, இளம்பெருங்கூத்தன், பெரும்பலாக்கோடு என்னுங் தொடக்கத் தன வேண்டியவாறு வரப்பெறு மென்றவர்று.

மயங்காது வருகவென மரபுவழுக் காத்தவாறு. (உகூ)

உஎ. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியு
மொன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி ஞகிய வுயர்சொற் கிளவி
யிலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.

இதன் பொருள்: ஒருவனையும் ஒருத்தியையுஞ் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும், வழக்கின்கணுயர்த்துஞ் சொல்லுஞ் சொல்லாம், இலக்கண முறைமையாற் சொல்லு நெறியல்ல என்றவாறு.

உதாரணம்: யாம் வந்தேம், நீயிர் வந்தீர்,

இவர் வந்தார் என வரும்.

கருத்து. ஏனெனின்? வண்ணமும் சினையும் முதலுமாகி வரும் வண்ணச் சினைச் சொற்கண்ணேயே ஈண்டு ஆசிரியர்க்கு ஆராய்ச்சியாக லின். எனவே இளம்பெருங்கூத்தன், பெரும்பலாக்கோடு என்பன போல்வன வண்ணமுஞ் சினையு முதலுமென்ற நியதியின்றி வேண்டியவாறு வரலாமென்பது ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று.

(உஎ) ஒருவர் என்பது உயர்திணையில் ஆண், பெண் என்னு மிருபாலையும் ஒன்றென்பது அஃறிணை ஒன்றன்பாலையுங் குறித்து நின்றன.

உதாரணம்:-யாம் வந்தேமென்பது ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி. என்னை? ஒருவனும் யாம்வந்தேம் என்பான்; ஒருத்தியும் யாம் வந்தேம் என்பாளாகலின். நீயிர் வந்தீர் என்பது ஒருவரையும் ஒன்றனையுங் கூறும் பன்மைக்கிளவி. என்னை? ஒருவனையும் நீயிர் வந்தீர் என்ப; ஒருத்தியையும் நீயிர் வந்தீர் என்ப; ஒன்றனையும் நீயிர் வந்தீர் என்பவாகலின். இவர் வந்தார் என்பதும் ஒருவரையும் ஒன்றனையுங் கூறும் பன்மைக் கிளவி. என்னை? ஒருவனையும் இவர் வந்தார் என்ப; ஒருத்தியையும் இவர் வந்தார் என்ப; ஒன்றனையும் இவர் வந்தார் என்ப வாகலின்.

உயர்சொல் உயர்க்குஞ்சொல்.

உயர்சொற் கிளவி யென்புழிக்
கூறியதுகூறலன்மை பண்புத்தொகை
யாராய்ச்சிக்கட் சொல்லுதும்.

தாம் வந்தார் தொண்டனார் எனப் பன்மைக்கிளவி இழித்தற் கண்ணும் வந்ததாலெனின் :—ஆண்டு
உயர்சொற்றானே குறிப்பு நிலையாய் இழிபு
விளக்கிற்றென்பது.

இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல

வென்றதனான் இலக்கண மன்மையும், வழக்கினாகிய
வுயர்சொற்கிளவி யென்றதனான் வழு வன்மையுங்
கூறினார்; கூறவே, வழுவமைதி யென்றவாறாம்.
அஃதேல், வழக்கினாகிய வுயர்சொற்கிளவி யெனவே
வழுவமைதி யென்பது பெறுதும்; இலக்கண
மருங்கிற் சொல்லாறல்லவெனல்
வேண்டாவெனின் :— அங்ஙனங் கூறிற் செய்யுள்
வரைந்தவாறோ வழுவமைத்தவாறோவென
ஐயமாக்கலின், அவ்வாறு கூறல் வேண்டு
மென்பது.

பன்மைக் கிளவியு மெனப் பொதுவகையாற் கூறினேனும், உயர்த்தற்கண் வழங்கப்பட்டு வரும் உயர்திணைப்பன்மையும் விர வுப் பன்மையுமே கொள்ளப்படு மென்றற்கு 'வழக்கினுகிய' வென்றார்.

---

தான் வந்தான் தொண்டன் என்பது தாம் வந்தார் தொண்ட னர் என உயர்த்திக் கூறப்பட்டது. இங்கே 'தாம் வந்தார்' என்ப தளவில் உதாரணமாம். அதனை, 'ஒருவனையும் தாம் வந்தார் என்ப' என நச்சினர் கூறுதலானு முணர்ந்துகொள்க. தொண்டனர் என்பதற்கு விதி "இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி" என்னும் (இடையிய - ௨௨) சூத்திரமாகும்.

'வழக்கி னுகிய உயர்சொற் கிளவி' யென்றே யொழியின் செய் யுளுள் வாராதென்று வரைந்தவாறும்; அக்கருத்துத் தோன்றுமலே 'இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல' என்றுரென்பது. எனவே இலக் கணச் சொல்லல்லவாயினும் வழக்கினுகிய உயர்சொற்கிளவி யென் றதனல், அமைத்துக் கொள்ளப்படும் என்பது கருத்து. எனவே வழுவமைதியாயிற்று. இவ்வழுவமைதிகள் வழக்கினும் செய்யுளி னும் வருமென்பது கருத்து.

தன்னின முடித்த லென்பதனுன் எருத்தையும் ஆவையும்,
எந்தை வந்தான், எம்மன்னை வந்தாள் என வுயர்திணையாவுயர்த்து
வழங்கலும், ஒன்றென முடித்த லென்பதனாற் ' கன்னிஞாழல்,'
(சிலப்—கானல்வரி—க அ.) கன்னியெயில் என வஃறிணையாய் நின்று
உயர்திணை வாய்பாட்டாற் கூறப்படுதலும், பண்புகொள் பெயர்க்
கொடை, வழக்கினகத்தும், பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன்
என இல்குணமடுத்து உயர் சொல்லாய் வருதலுங் கொள்க. (உஎ)

உஅ. செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினு
நிலைபெறத் தோன்று மந்நாற்

சொல்லுந்
தன்மை முன்னிலை படர்க்கை
யென்னு
மம்மூ விடத்து முரிய வென்ப.

**இதன் பொருள் :** செலவு முதலாகிய நான்கு தொழிற்கண்ணும் நிலைபெறப் புலப்படாநின்ற அந்நான்கு சொல்லும், தன்மை

---

இவர், யாம் என்பன உயர்திணைப்பன்மை. நீயிர் என்பது விரவுப்பன்மை. இப்பன்மையே கொள்ளவேண்டும் என்றபடி.

அஃறிணை ஒன்றனை உயர்திணையாய் உயர்த்து வழங்குதல்போல ஒரெருத்தை எந்தை வந்தான் என்பதும், ஓராவை, 'எம்மன்னை வந் தாள்' என்பதும் அஃறிணையை உயர்திணையாய் உயர்த்து வழங் கினும், அவ்வொன்றனைப்போல ஒருமையைப் பன்மையாற் கூறுமை பற்றி அதற்கு இனமாகக் கொள்ளப்படுதலின் தன்னின முடித்த லாற் கொள்க என்றார். அன்னவன்றி, கன்னிஞாழல், கன்னி யெயில் என்பனவும், பெருங்கொற்றன் பெருஞ்சாத்தன் என்பன வும் முறையே, வாய்பாட்டானும், அடையானும் உயர்த்துக் கூறல் பற்றி ஒன்றெனமுடித்தலாற் கொள்கவென்றார்.

கன்னிஞாழல் கன்னியெயில் என அஃறிணையாய் நின்று, உயர்திணை வாய்பாட்டாற் கூறப்படுதலென்றது : ஞாழல், எயில் என்ற அஃறிணைப் பொருளை யுணர்த்துஞ் சொற்களை, கன்னி என்ற
உயர்திணைப்பொருளை யுணர்த்துஞ் சொல்லை அடையாகக் கொடுத்துக்
கன்னிஞாழல் கன்னியெயில் என வழங்குதலை.

பண்புகொள் பெயர்க்கொடை வழக்கினகத்தும் இல்குண மடுத்து உயர்சொல்லாய் வருதலுங் கொள்க எனவியைக்க. எப்படியெனில்? பெருங்கொற்றன் பெருஞ்சாத்தன் என. இவை இனஞ்சுட்டாது இல்குண மடுத்து வந்தன. உன்குணமடுத்து இனஞ் சுட்டாது வருவன (செஞ்ஞாயிறு போல்வன) செய்யுட்கே உரியவென்க.



முன்னிலை படர்க்கையென்னும்
அம்மூவிடத்திற்கு முரியவாய் வரும் என்றவாறு.

செலவு முதலாகிய தொழிற்கட் சிறப்பு

வகையால் நிலை பெறுது பொதுவாய் வரும் இயங்குதல் ஈதலென்னுந் தொடக்கத் தனவற்றி னீக்குதற்கு 'நிலைபெறத் தோன்றும்' என்றார்.

முற்றும் எச்சமும் தொழிற்பெயருமாகி அத்தொழில்பற்றி வரும் வாய்பாடு பலவாயினும், அவையெல்லாம் இந்நான்கு தொழிலும் பற்றித் தோன்றுதலின், 'நான்கு சொல்' லென்றார்.

பொருள் வகையான் முன்னறியப்பட்டமையான் 'அந் நாற் சொல்லும்' என்றார்.

இச் சூத்திரத்துள் ஈங்கு முதலாயின தன்மைக்கண்ணும், ஆங்கு முதலாயின படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன.

வினைச்சொன் மூன்றிடத்திற்கு முரியவாதல் வினையியலுட் பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டாவெனின்:—ஆண்டுப் பாலுணர்த்து மீற்றான் இடத்திற்குரிமை கூறினார், ஈண்டு ஈற்று

னன்றிச் செலவு முதலாயின முதனிலை தாமே இடங்குறித்து நிற்றலுடைமையான், இவ்வேறுபாடு ஆண்டுப் பெறப்படாமை யின், ஈண்டுக் கூறினரென்பது. அஃதேல், தருசொல் வருசொல்

---

(உ-அ) இயங்குதல், ஈதல் என்பன செலவு முதலிய தொழிற் கண் சிறப்புவகையா னிலைபெறாது பொதுவாய் வருமென்றது செலவு வரவின்கண் இயங்குதலும் தரவு கொடைக்கண் ஈதலும் பொதுவாய் வருதல். நான்கு சொல்லும் பற்றிவரும் வாய்பாடு பல வென்றது, சென்றான், வந்தான், தந்தான், கொடுத்தான் என முற் றாகியும்; சென்று, வந்து, தந்து, கொடுத்து என வினையெச்சமாயும்; சென்ற, வந்த, தந்த, கொடுத்த எனப் பெயரெச்சமாயும்; செல்லல், வருதல், தருதல், கொடுத்தல் எனத் தொழிற்பெயராயும் வருவன வற்றை. தொழிற்பெயர் வினையாலணையும் பெயருமாம்.

பொருள்வகையான் முன் அறியப்பட்டதென்றது, பொருள் வகையானே இத்துணையென (நான்கென) முன் அறியப்பட்டமையை. ஆதலின் அந்நாற்சொல்லும் என முற்றும்மை கொடுத்தார் என்பது.

வரவு தன்மைக்கண் வருமென்று மேற்கூறுதலால், அவ்வரவு 'என்கண் வந்தான்' என்பதுபோல, ஈங்கு வந்தான் என ஈங்கி



லாயிரு கிளவியுந் தன்மை முன்னிலை

யாயீரிடத்த, படர்க்கை

யிடத்த கொடைச்சொல்லுஞ்

செலவுச்சொல்லும் என வோதுக,

இச் சூத்திரம் வேண்டாவெனின்:—அங்ஙனமோதின், இடஞ் சுட்டு முதனிலை இந்நான்குமேயென்னும் வரையறை பெறப்படாமையின், இது வேண்டுமென்பது. அஃதேல், போதல் புகுதலென்னுந் தொடக்கத்தனவும் இடஞ் சுட்டுதலின் நான்கென்னும்

வரையறை அமையாதெனின்:—அவை இக்காலத்துச் சிலவிடத்துப் பயின்று வருமாயினும் மூன்றிடத்திற்கும் பொதுவாகலினன்றே, ஆசிரியர் அந்நாற்சொல்லுமென இவற்றையே வரைந்தோதுவராயிற் றென்பது.

உகூ. அவற்றுள்

தருசொல் வருசொல் லாயிரு கிளவியுந்
தன்மை முன்னிலை யாயி ரிடத்த.

இதன் பொருள்: கூறப்பட்ட நான்கு சொல்லுள், தரு சொல்லும் வருசொல்லுமாகிய இரண்டும் தன்மை முன்னிலை யாகிய இரண்டிடத்திற்குமுரிய என்றவாறு.

உதாரணம்: எனக்குத் தந்தான், நினக்குத் தந்தான், என்னுழை வந்தான், நின்னுழை வந்தான் எனவும்; ஈங்கு வந்தான் எனவும் வரும்.

தரப்படும் பொருளையேற்பான் தானும் முன்னின்றானு மாகலானும், வரவுதொழில் தன்கண்ணும் முன்னின்றான் கண்ணுஞ் சென்று முடிதலானும், ஈற்றானன்றி இவ்விரு சொல்லுந் தன்மை முன்னிலைக்குரியவாயினவாறு கண்டுகொள்க.

னேடும் இயைதலின் ஈங்கு தன்மைக்கண்ணும், செலவு படர்க்கைக்கண் வருமென்று கூறுதலின், அச்செலவு 'அவன்கட் சென்ருன்' என்பதுபோல ஆங்குச் சென்ருனென ஆங்கினேடும் இயைதலின் ஆங்கு படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன. எனவே ஈங்கு தன்மையிடத்தையும், ஆங்கு படர்க்கையிடத்தையும் உணர்த்துமென்றபடி. இவற்றைச் சிறப்புச் சூத்திரங்களில் வைத்து உணர்ந்துகொள்க.



'நிலைபெறத் தோன்று மந்நாற் சொல்லுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மூ விடத்து முரிய'

(சொல் – உஅ) என்று மூன்றிடத்திற்கும் வரைவின்றிபர்மெனவுங் கொள்ள வைத்தமையான்,

'பெருவிற லமரர்க்கு வென்றி தந்த'

(புறம் – ருரு) எனவும்,

'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது'

(அகம் — கசு) எனவும்,

மயங்கி வருவனவும் அமைக்கப்படும்.

அஃதேல், படர்க்கைச் சொன் மயக்கமு

மெய்துமா லெனின் :— அஃதெச்சவியலுட்

பெறப்படுதலின், ஈண்டுக் கொள்ளப்படாதென்க.

ஒருவன் சேய்நிலத்து நின்றும் அணிநிலத்துப் புகுந்தானுயிற் சேய்நிலநோக்க அணிநிலம் ஈங்கெனப்படுதலின், அவன்கண் வந்தான், ஆங்கு வந்தான் என்பன

இலக்கணமேயாம். இந்

---

(உகூ) அமரர்க்குத் தந்த என்புழி அமரர் என்னும் படர்க்கைச் சொல்லோடு தருதல் என்பதும் வேட்டுவன் வாங்கவாராது என் புழி (அவன்கண் வாராது) என வேட்டுவன்

என்னும் படர்க்கைச்

சொல்லோடு வருதல் என்பதும் இயைதல் வழுவமைதி. அஃதேல் படர்க்கைச்சொல் மயக்கமு மெய்துமாலெனின்? அஃதெச்சவிய லுட் பெறப்படுமென்றது, படர்க்கைக்குரிய செலல் கொடைகளும் தன்மை முன்னிலைகளோடு மயங்குமெனின்; அஃது, "கொடுவென் கிளவி படர்க்கை யானும்—தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்—றன்னிடத் தியலு மென்மனார் புலவர்" என்று எச்சவியலுட் கூறிய (ருஉ-ம்) சூத்திரத்தாற் பெறப்படும் என்றபடி. இங்ஙனங் கொடு வென் கிளவியை மாத்திரம் ஆசிரியர் விதந்து கூறினமையால் ஏனைய படர்க்கைச் சொற்கள் தன்மை முன்னிலைகளோடு மயங்காமை ஆசிரியர் கருத்தென்பது சேனாவரையருக்குக் கருத்துப்போலும். பராமுகமாகக் கூறியவிடத்து மயங்குமென்பர் நன்னூலுரையுள் மயிலைநாதர்.

ஆங்குவந்தான் என்புழி வருதல் படர்க்கையோடு வருதல் இலக்கணமாகாதெனின்? ஆங்கு என்று சுட்டப்படுமிடமே அதற்குத் தூரமான இடத்தை நோக்க ஈங்கெனப்படுதலின் வருதல் ஆங்கு என்பதனோடும் வருமென்றபடி. சேய் நிலத்திற்குந் தனக்கு மிடைநிலத்தில் நிற்பானொருவனிடை ஒருவன் வந்தால்



[கிளவி நான்குங் கொடைப்பொருளனவென்று உரையாசிரியர் கூறினரா லெனின்:—'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' என்பதனை அமைத்தாராகலின், அவர்க்கது கருத்தன் றென்க.

---

தன்னை நோக்க இடைநிலம் ஆங்காயினும் அவ் ஆங்கு என்று சுட் டப்பட்டவிடமே அதற்குச் சேய்நிலம் நோக்க ஈங்கெனப்படுதலின் அவ் ஆங்கினோடும் ஈங்கிற்குரிய வந்தான் என்பது வருமாதலின் இலக்கணமாமென்பது கருத்து.

இந்நான்கும் கொடைப்பொருளனவென்று உரையாசிரியர் கூறியதன் விளக்கமாவது:—தருதலும், கொடுத்தலுமாகிய இரண் டும் கொடைப்பொருளை யுணர்த்தி நின்றனபோலவே, வருதலும்

செல்லுதலுமாகிய இரண்டும் கொடைப்பொருளையுணர்த்தி நின்றன என்பதே. "தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது'' என்னும் உதாரணத்தில் வருதல் என்னுஞ் சொல் கொடைப்பொருளை யுணர்த் தாது வருதற்றொழிலையே உணர்த்தி வரவும் அதனையுங் கொண்டு வழூ வமைத்தாராதவின் கொடைப்பொருளில் வருமென்பது அவர்க்குக் கருத்தன்மை பெறப்படும் என்பதே சேனுவரையர் கருத்தாம்.

இளம்பூரணர் இந்நான்கு சொல்லுக்கு

முதாரணமாக; எனக் குத் தருங்காணம், எனக்கு வருங்காணம், நினக்குத் தருங் காணம், நினக்கு வருங்காணம், அவற்குச் செலுங்காணம், அவற்குக் கொடுக்குங்காணம் எனக் காட்டினமையை நோக்கும்போது நான்கு சொல்லுங் கொடைப்பொருளனவாய் நிற்றலும் நிலைமொழிகள் கோடற்பொருளில் நிற்றலும் அறியப்படுகின்றன. அன்றியும் இந் நான்கு சொல்லும் மூன்றிடத்திற்கும் கொடைப்பொருளில் வரு மென்றமையானும், ஏனையிரண்டும் ஏனையிடத்த என்னுஞ் சூத்திர விரிவுரையில் 'செலவினும்.........அம்மூவிடத்து முரிய வென்க.'

என்னும் சூத்திரத்தான் மயக்கங் கூறிவந்து, 'இளிக் கொடுத்தல் கோடற்பொருண்மை மூன்றிடத்துஞ் சொல் நிகழுமாறு கூறியது என்பாருமுளர்' என்று கூறியதனுலும், மூன்றிடத்திற்கும் இந் நான்கு சொல்லும் கொடைப்பொருளில் வழக்குப்பற்றி மரபாக உரியவாம் என்பதே அவர் கருத்தாகும்.

சேனுவரையரோ அவர் கருத்துக்கு மாருக, நினக்குத் தந்தான், நின்னுழை வந்தான், எனக் குத் தந்தான், என்னுழை வந்தான், அவன்கட் சென்ருன், அவற் குக் கொடுத்தான் என உதாரணங் காட்டி இந்நான்கு சொல்லும் மூன்றிடத்திற்கும் சிறப்புச் சூத்திரத்து நியமிக்கப்பட்டவாறே முத னிலைபற்றி உரியவாயின என்பர். முதனிலைபற்றி உரியவாயின என்ற கருத்தாற்ருன், உரையாசிரியர் கொடைப்பொருளன என்



தரவு வரவை யுணர்த்துவனவற்றைத் தருவதும் வருவதும் போலத் தருசொல், வருசொ லென்ருர். (உகூ)

௩௦. ஏனை யிரண்டு மேனை யிடத்த.

இதன் பொருள் :

செலவுச்சொல்லுங் கொடைச்சொல்லும் படர்க்கைக்குரிய என்றவாறு.

**உதாரணம்:** அவன்கட் சென்றான், ஆங்குச் சென்றான், அவற்குக் கொடுத்தான் என வரும்.

செலவுதொழில் படர்க்கையான்கட் சென்றுறுதலானும், கொடைப்பொருளேற்பான் படர்க்கையானாகலானும் ஈற்றானன்றி இவ்விருசொல்லும் படர்க்கையிடத்திற்குரியவாயினவாறு கண்டு கொள்க. (௫௦)

---

றாராலெனின், 'தான்டில் வேட்டுவன் வாங்க வாராது' என்றதை அமைத்தாராதலின் அவர்க்கது கருத்தன்றென்க என்றார். வேட்டுவன் வாங்கவாராது என்பது அவன்கண் வாராது என்று பொருடந்து வருதற்றொழில் அவன்கண் சென்று முடிவதாகவே கொள்ளப்படுதலின் ஆண்டு முதனிலைபற்றியே உரித்தாகுமென்பது பொருத்தமாகுமன்றி, வருதல் கொடைப்பொருளில் வாராமையின் மரபுபற்றி அவ்வவ்விடத்திற்குரியவாயின என்று கொள்ளும் உரையாசிரியர் கருத்துப் பொருந்தாதென்பதே சேனாவரையர் கருத்தாம். நச்சினார்க்கினியரும் சேனாவரையர் கருத்தையே பின்பற்றியுள்ளார். தெய்வச்சிலையார் இளம்பூரணர் கருத்தையே பின்பற்றியுள்ளார். நன்னூற்குரை உரைத்த மயிலைநாதரும் இளம்பூரணரையே பின்பற்றியுள்ளார். சங்கரநமச்சிவாயப் புலவர் நன்னூலுரைக்கண் சேனாவரையரைப் பின்பற்றி உதாரணங் காட்டிவிட்டு, இளம்பூரணரைப் பின்பற்றி இவை முதனிலைபற்றி உரியவாகாது மரபுபற்றி உரியவாயின எனக் கூறிச் சேனாவரையர் கருத்தையும் நச்சினார்க்கினியர் கருத்தையு மறுத்துள்ளார். ஆயின் சேனாவரையர் கருத்தே பொருத்தமாகும்.

தருசொல் வருசொல் என்பனவற்றிற்கு, தரவை யுணர்த்துஞ் சொல் வரவை யுணர்த்துஞ்சொல் என்பன பொருள். அவ்வாறு பொருள்படுவனவற்றையே தருவதும் வருவதும் போல வைத்துக் கூறினரன்றி அவற்றிற்குத் தருதலும் வருதலும் இல்லை என்றபடி. தருசொல் வருசொல் என்பவற்றை இளம்பூரணர் தரும்சொல், வரும்சொல் எனக் கொடைப்பொருள் தோன்ற விரிப்பர்.

(௩0) ஈற்றுனன்றி—விகுதியானன்றி, எனவே முதனிலையானே இவ்விருசொல்லும் படர்க்கைக் குரிய என்றபடி.
8



௩௧. யாதெவ னென்னு மாயிரு கிளவியு
மறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்.

**இதன் பொருள் :** யாது எவனென்னும் இரண்டுசொல்லும் அறியாப்பொருளிடத்து வினாவாய் யாப்புறத் தோன்றும் என்றவாறு.

**உதாரணம் :** இச்சொற்குப் பொருள் யாது, இச்சொற்குப் பொருள் எவன் என வரும்.

எவ்வகையானும் அறியாப்பொருள் வினவப்படாமையின், ஈண்டறியாப் பொருளென்றது பொதுவகையான் அறியப்பட்டுச் சிறப்புவகையான் அறியப்படாத பொருளையாம்.

யா, யாவை, யாவன், யாவள், யாவர், யார், யாண்டு, யாங்கு என்னுந் தொடக்கத்தன திணையும் பாலும் இடமு முதலாகிய சிறப்புவகையானுஞ் சிறிதறியப்பட்ட பொருளனவாகலின்,

அறியாப்பொருள்வயிற் செறியத்தோன்றுமையான், இவற்றையே விதந்து 'அறியாப்பொருள்வயிற் செறியத்தோன்றும்' என்றார். இவையுந் திணையும் பாலுங் குறித்து வருதலிற் சிறப்புவகையானும் அறியப்பட்ட பொருளனவேயன்றோவெனின்:—அற்றன்று. இச்சொற்குப் பொருள் யாது, எவன் என்று வினவுவழி, இறுப்பானும், அஃறிணை யொருமையும் பொதுமையுந் துணிந்து

(கக) சிறப்புவகையா னறியப்படாமை, திணை, பால், இடப், பெயர் முதலியவற்றானறியப்படாமை.

வினவுவோன் மரம் என்றசொற்குப் பொருள் யாதென்புழி, யாது என்ற சொல் அஃறிணை யொருமை உணர்த்தலின், அதனால் தான் வினவும் பொருளின் ஒருமை துணிந்து அவ்வொருமைப் பொருளெது வென்றறிதற்கு வினவுகின்றானல்லன், தானறியாத அச்சொல்லின் பொருளை யறிதற்கு வினவுகின்றானென்று உணருமன்றி, யாது என்னும் ஒருமைச் சொல்லால் வினவினமையாலே தான் வினவியபொருள் அஃறிணை யொருமைப் பொருளென்று துணிந்து அப்பொருளெதுவென்றறிதற்கு வினவுகின்றானென்று உணரானென்று அறிந்து கொள்க என்பார் வழக்கினகத்து வினவுவோனதும் இறுப்போனதும் குறிப்பொடுபடுத்துணர்க என்றார். பொதுமை என்றது; எவன் என்பது அஃறிணை யொருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலை.



அவற்றுட் பகுதியறிதற்கு வினவுகின்றானல்லன் பொதுவகை யான் வினவுகின்றானென்று உணரும்.

ஆகலின், அவ்வாறுதல் வழக்கினகத்து வினாவுவானதும் இறுப்பானதுங் குறிப்பொடு படுத் துணர்க.

முன்னர் வழுவமைத்தற்கு அவை இன்னபொருட் குரிய வென அவற்ற திலக்கணங் கூறியவாறு. (௩௧)

௩௨. அவற்றுள்

யாதென வரூஉம் வினாவின் கிளவி
யறிந்த பொருள்வயி னையந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாதலு முரித்தே.

இதன் பொருள்: கூறப்பட்ட இரண்டனுள் யாதென்னும் வினாச்சொல் அறியாப்பொருள் வினாதலேயன்றி அறிந்த பொருட்கண் ஐயநீக்குதற்கு ஆராய்ந்த சொல்லாதலு முரித்து என்றவாறு.

உதாரணம்: இம்மரங்களுட் கருங்காலி யாது, நம்பெரு மைந்தனுட் கெட்டவெருதியாது என வரும்.

இச் சூத்திரக் கருத்தின்படி யாது எவன் என்பன திணைபால் முதலியவொன்றுந் துணியாத வினாவின்கண் பொதுவாய் வருமென் பதும், வருஞ் சூத்திரக் கருத்தின்படி யாது என்பது திணைபால் முதலிய துணிந்த வினாவின் கண்ணும் வரும் என்பதும், திணை பால் முதலிய துணியாத வினாவின்கண் யாது என்பது வருங்கால் ஐயந் தீர்தற்கு வருமென்பதும் கருத்து. யாது எவன் என்பன

திணைபால் முதலிய துணியாத வினாவின்கண் வருமென்பது பற்றியே இளம்பூரணரும் ஐம்பாலுமறியலுற்றுவாரா; வினமாத் திர. முணர்தற்கு வருமென்றார். இம்மரம் யாது? என்றால், யாது என்றதனால் அஃறிணை யொருமை என்பது துணிந்து வினாவுகின்றானல்லன்; பொதுவாக என்னமரம் என்றறிதற்கு வினாவுகின்றான் எனபது அவர் கருதது.

(உ-உ) கருங்காலிமரம் இதுவென்பது

வினாவுவோனுக்குத் தெரிந்

தும் துணிவுபிறவாமையினாலே, தான் அறிந்த அதனை, நன்கு துணிந்து தன் ஐயத்தை நீக்கற்பொருட்டு இம்மரங்களுள் கருங்காலி யாது என்று வினாவுகின்றான் என்பார் ஐயந்தீர்தற்கு என்றார். தெய்

[கிளவி

நமருள் யாவர் போயினர்,
அவற்றுளெவ்வெருது கெட்டது எனப்
பிறவும் அறிந்த பொருள்வயின் ஐயந்தீர்தற்குத்
தெரிந்த கிளவியாய் வருதலின், அவையும்
ஈண்டமைக்கற்பாலவெனின்:— அவை அறிந்த
பொருள்வயின் ஐயந்தீர்தற்கல்லது யாண்டும்
வாராமையின், ஈண்டமைக்கப்படாவென்பது.
இதனான் வினாவழுவமைத்தார்.

(௩௨)

௩௩. இனைத்தென வறிந்த சினைமுதற்
கிளவிக்கு
வினைப்படு தொகுதியி னும்மை
வேண்டும்.

இதன் பொருள்: கேட்போரான் இத்துணையென்றறியப்பட்ட சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் வினைப்படு தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக
என்றவாறு.

உதாரணம்: 'பன்னிரு கையும் பாற்பட வியற்றி' (திருமுருகா-திருச்சீரலைவாய்.) எனவும், 'முரசு முழங்குதானை மூவருங் கூடி' (பொருநராற் - ருசு) எனவும் வரும்.

அறிந்த சினைமுதற்கிளவியெனவே, முன்னறியப்படாக்கால், முருகற்குக் கை பன்னிரண்டு, தமிழ்நாட்டிற்கு வேந்தர் மூவர் என உம்மை பெறாது வருமென்பதாம்.

ஐந்தலைநாகமுடன்றது, நான்மறைமுதல்வர் வந்தார் என் புழி, இனைத்தெனவறிந்த சினைமுதற்கிளவியாயினும், வினைப்படு

---

வச்சிலையாரும் ஐயமறுத்தலாவது:—இச்சொற்குப் பொருள் இது என உணர்ந்தான் ஒரு தலையாகத் துணிதலாற்றாது அஃதறிவான் ஒருவனை வினுதல் எனக் கூறுதல் காண்க.

அறிந்த பொருட்கண் வினாவாய் வருதற்குரியது அறியாப் பொருட்கண்ணும் வருதல் வழுவென்பது சேனாவரையர் கருத்து. தெய்வச்சிலையார் கருத்துமதுவே. அறிந்த பொருட்கண் ஐயந்தீர் தற்கு வருதலின் வழுவன்று

என்பர் நச்சினார்க்கினியர். ஐயந்தீர் தற்கண் வருதலும் மரபென்பது அவர் கருத்து

(கூகூ) வினைப்படல் - முடிக்குஞ் சொல்லைக் கொள்ளல்.

தொகுதி - இத்துணை யென்னுந்தொகை.

ஐந்தலை என்பது நாகத்துக்கும் நான்மறை என்பது முதல்வர்க்கும் அடையாய் நின்றனவன்றி உடலுதலும் வருதலுமாகிய வினை

யாக்கம்] சொல்லதிகாரம்

கூகூ

தொகுதி யன்மையின், உம்மை பெறுவாயின.
அஃதேல், பன் ளிருகையு
மென்புழியும் தொகுதிப்பெயர் வினையொடு
தொடராது கையென்பதனோடொட்டி நிற்றலின்
வினைப்படுதொகுதியன்றும் பிறவெனின் :— ஒட்டி
நின்றதாயினும், ஐந்தலைநாகம், நான்மறை
முதல்வர் என்பன போலாது
இருசொல்லும் ஒருபொருண்மேல் வருதலிற்
கையென்பதனோ டியைந்த
இயற்றியென்னும் வினை

தொகுதிப்பெயரோடு மியைந்ததாம்;
அதனைது வினைப்படு தொகுதியாமென்பது.
அஃதேல், கண்ணிரண்டுங் குருடு; எரு திரண்டு
மூரி எனப் பெயர் கொண்டவழி உம்மை
பெறுமா றென்னையெனின்:—பெயராக வினையாக
முடிக்குஞ்சொல்லொடு படுதலே ஈண்டு
வினைப்படுதலென்றாராகலின் அவையும் வினைப்
படு தொகுதியாமென்க. ஐந்தலை, நான்மறை
என்பனவற்றிற்கு நாகம்,
முதல்வர் என்பன முடிக்குஞ்சொ லன்மையின்,
வினைப் படு தொகுதியாகாமை யுணர்க.

'சிறப்புடைப் பொருளைத் தானினிது
கிளத்தல்' என்பதனாற்
சினைமுதற்கிளவியென்றாயினும், சிறவாத
பண்பு முதலாயின வுங் கொள்ளப்படும்.

உதாரணம் :
சுவையாறுமுடைத்திவ்வடிசில், கதியைந்து
முடைத்திக்குதிரை என வருகம்.

---

கலைக்கொண்டு முடியாமையின் அவை உம்மை
பெறு என்பது கருத்து.

பன்னிருகையும் பாற்படவியற்றி என்பதன்கண் பன்னிரண்டு என்பது இயற்றி என்பதனோடு முடியாது கையென்பதனோடு முடிந்த தன்றோவெனின்? அவையிரண்டுஞ் சேர்ந்து ஒரு பொருண்மேல் வருத லின் கையோடு இயைந்த இயற்றியென்பது பன்னிரண்டு என்னுந் தொகுதிப் பெயரோடும் இயைந்ததேயாம். பன்னிரண்டுகை என்பது இருபெயரொட்டி (பன்னிரண்டாகிய கை என) ஒரு பொருண்மேல் வருதலும், ஐந்தலைநாகம் என்பது அங்ஙனம் வாராமையுமுணர்க. ஐந்தலைநாகம் என்பது ஐந்தலையையுடைய நாகம் என விரியும்.

பன்னிரண்டு என்னுமெண் கையை இத்துணையெனத் தொகுத்து வந்தது. நான்மறை முதல்வர் என்புழி நான்கு என்னுமெண் மறையைத் தொகுத்து வந்ததன்றி, முதல்வரைத் தொகுத்து வந்ததன்று. ஆதலின் நான்கும் முதல்வரும் ஒரு பொருண்மேல் வந்தனவாகா, சூஉ



'இருதோடோழர்பற்ற' எனவும், 'ஒண்குழை யொன்றொல்கி யெருத்தலைப்ப' எனவும் உம்மையின்றி வந்தனவாலெனின்:— ஆண்டும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்குநின்றன வென்பது.

கச. மன்னைப் பொருளு மன்ன வியற்றே.

இதன் பொருள்: இல்லாப்பொருட்கும் இடமுங் காலமும் பொருளுமுதலாயினவற்றொடு படுத்து இன்மை கூறுதற்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம்: பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளுமில்லை எனவும், குருடு காண்டல் பகலுமில்லை எனவும், 'உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா' (நாலடி - கOச) எனவும் வரும். இல்லாப்பொருட்கு ஒருகாலு நிலையுறுதலின்மையின், 'மன்னாப்பொருள்' என்றார்.

இடமுதலாயினவற்றொடு படுத்தற்கணென்பது ஏற்புழிக் கோடலென்பதனாற் பெற்றாம். அவற்றொடு படாதவழிப் பவளக் கோட்டு நீலயானையில்லை என உம்மையின்றி வருமென்பதாம். முற்றும்மையும் எச்சவும்மையுமாகிய வேறுபாடுடையவேனும், உம்மை பெறுதலொப்புமையால், 'அன்னவியற்று' என்றார்.

இரண்டு சூத்திரத்தானும் மரபுவழுக் காத்தவாறு. (நச)

நரு.

எப்பொரு ளாயினு மல்ல தில்லெனி
னப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்.

இதன் பொருள்: யாதாயினு மொருபொருளையாயினும் ஒருவன் அல்லதில்லென்னும் வாய்பாட்டான் இல்லையென

---

(நச) மன்னாப்பொருள் என்பதற்கு என்றுமில்லாப் பொருள் என்பது கருத்து. இதற்கு நிலையாப் பொருள் என்றும் பொருள்

கூறுவாருமுளர்.

கோயிலுள்ளும் இல்லை என்பது இடத்தொடுபடுத்துக் கூறியது. கோயில் - இடம். பகலுமில்லையென்பது காலத்தொடுபடுத்துக் கூறியது. பகல் - காலம். உறுவர்க்குமாகா என்பது பொருளொடு படுத்துக் கூறியது. உறுவர் - பொருள். அன்னவியற்று என்று மாட்டியது உம்மை பெறுதலாகிய அவ்வளவிற்கே எனக் கொள்க என்பது சேனாவரையர் கருத்து.



லுறின், அப்பொருட்னையே கூறாது அப்பொருளல்லாத பிறிது பொருள் கூறுக என்றவாறு.

உதாரணம்: பயறுளவோ வணிகீர் என்று வினயவழி உழுந்தல்லதில்லை; கொள்ளல்லதில்லை என அல்லதில்லென்பான் பிறிது பொருள் கூறியவாறு கண்டுகொள்க.

அல்லதில்லெனினெனப் பொருள்பற்றியோதினாராகலின், அல்லதில்லென்னும் வாய்பாடேயன்றி, உழுந்தன்றியில்லை

உழுந்தேயுள்ளது என அப்பொருள் படுவனவெல்லாங் கொள்க.

உழுந்தல்லதில்லையெனப் பிறிது பொருள் கூறாது பயறல்லதில்லை யென அப்பொருள் கூறின், பயறுள்ள அல்லனவில்லையென

மறுதலைப் பொருள்பட்டுச் செப்பு வழுவாமா றறிக.

யாதானுமாக அல்லதில்லெனிற் பிறிதுபொருள் கூறுக வென எஞ்சாமற் றழீஇ யாப்புறுத்தற்கு எப்பொருளாயினு மென்றார்.

அல்லதில் லென்பதற்குத் தன்னுழையுள்ள தல்லதென்றும், அப்பொருளல்லாப் பிறிதுபொருள் கூறலென்பதற்கு இனப் பொருள் கூறுகவென்றும், உரைத்தாரால் உரையாசிரியரெனின்:— பயறுளவோ வென்று வினயவழிப் பயறில்லை யென்றுற்படும் வழுவின்மையானும், உள்ளதல்லதென்றல் கருத்தாயின் ஆசிரியர் அல்லதெனக் குறித்த பொருள் விளங்காமையின் அகப் படச் சூத்திரியா ராகலானும், பாம்புணிக் கருங்கல்லும் பயறும்

(௩ ரு) உரையாசிரியர் பிறிது பொருள் என்பதற்கு இனப் பொருள், என்று கூறினர். சேனாவரையர் யாதானுமாக; பிறிது பொருள் என்பர்.

தன்னுழை உள்ளதல்லது என்றது தன்னிடத்துள்ளதல்லாததை என்றபடி. உள்ளதல்லாதது - இல்லாதது. எனவே இல்லாததை இல்லை என்று சொல்ல விரும்பினால் இனப்பொருள் கூறுக என்பது உரையாசிரியர் கருத்து.

ஒருவன் பயறுளதோ என்று வினவினால் அப்பயறு தன்னி . ந்துள்ளதல்லதாயின் ( இல்லையாயின் ) பயறில்லை என்று சொல்வதனால் வரும் வழுவின்மையான் உழுந்தன்றி இல்லை என அதற்கு

ฅ தொல்காப்பியம்

[கிளவி

ற்பா ஞொருவனுழைச் சென்று பயறுளவோ வென்றவழிப்

பாம்புணிக் கருங்கலல்லதில்லை யென்றால் இனப்பொருள் கூறாமை பாற் பட்ட இழுக்கின்மையானும், அவை போலியுரை யென்க. அல்லதூஉம், இனப்பொருள் கூறுகவென்பதே கருத்தாயின் அப்பொருளல்லா இனப்பொருள் கூறலென்னாது பிறிது பொருள் கூறலென்னார் ஆசிரியர், அதனாலும் அஃதுரையன்மையுணர்க.

௩௯. அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.

இதன் பொருள்: அல்லதில் லென்பான், பிறிதுபொருள் கூறாது அப்பொருட்னையே கூறுமாயின், இப்பயறல்லதில்லை யெனச் சுட்டிக் கூறுக என்றவாறு.

பயறுளவோ என்றவழிச் சுட்டாது பயறல்லதில்லையெனிற் பயறுள உழுந்து முதலாயினவில்லையெனப் பிறிதுபொரு ளேற் பித்துச் செப்புவழுவாமென்பது.

அல்லதில்லென்பது அதிகாரத்தாற் பெற்றாம். தன்னினமுடித்தலென்பதனால், பசும்பயறல்லதில்லை,

பெரும் பயறல்லதில்லை எனக் கிளந்து கூறுதலுங் கொள்க.

'செப்பும் வினுவும்' (சொல் - கங.) என்றதனுல் இவ் வேறுபா டினிது விளங்காமையானும், 'பொருளொடு புணராச் சுட்டு' (சொல் - ௩௭.) என வழுவமைக்கின்றாராகலானும், இவற்றை விதந்து கூறினர்.

(௩௬)

---

இனப்பொருள் கூறல்வேண்டா வாதலானும், ஆசிரியர்க்கு உள்ளதல்ல தென்றல் கருத்தாயின் உள்ளதல்லதென்றே விளங்கச் சூத்திரிப்பா ரன்றி, விளங்காமையினுட்பட அல்லதென்று சூத்திரியாராகலானும் அது பொருந்தாதென்பது கருத்து.

(௩௬) அதிகாரத்தாற் பெற்றும் என்றது முற் சூத்திரத்துள் 'அல்லதில்' என்பது கூறப்பட்டு அதிகரித்து நிற்றலின், அதுபற்றி ஈண்டும் அதனை வருவித்தாம் என்றபடி. அதிகாரம் - தலைமை. 'அதிகாரமுறைமை' என்னும் உத்தியும் இதுபற்றி எழுந்ததேயாம். அதிகாரமுறைமை என்பதற்கு இடமுறைமை என்பர் பேராசிரியர். வடநூலார் முன்னின்ற ஒருசொல் பின்னும் (வருஞ் சூத்திரங்களிலும்) சென்றியைதலையும் அதிகாரமென்ப. கிளந்து கூறல் - இன்னதெனத் தெரித்துச் சொல்லல்.

விதந்து கூறல் - சிறப்பாகப் பிரித்தெடுத்துச் சொல்லல்.



௩௭ பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்று கும்மே.

**இதன் பொருள்:** சுட்டானன்றிப் பொருள் வரையறுத் துணர்த்தாச் சுட்டுப்பெயராற் கூறினும், பொருள் வேறாகாது இப்பயறெனச் சுட்டிக் கூறிய பொருளேயாம் என்றவாறு.

என்
சொல்லியவாறோவெனின்:—இவையல்லதில்லையென்ற வழி, இவையென்பது பயற்றையே சுட்டாது உழுந்து முதலா யினவற்றிற்கும் பொதுவாய் நிற்றலின் வழுவாமன்றே; ஆயினும், முன் கிடந்த பயறு காட்டி இவையென்றுணர்தலின், அவற்றையே சுட்டு முதலா னமைக்கவெனச் செப்புவழு வமைத்த

வாறு.

சாதியும் பண்புந் தொழிலு முதலாயினபற்றி ஒரு பொருளை வரைந்துணர்த்தாது எல்லாப்பொருண்மேலுஞ் சேற லிற் பொருளொடு புணராச் சுட்டுப்பெயரென்றார்.

வேறுபடாது, ஒன்றுகும் என்பனவற்றுள் ஒன்றே அமையு மெனின்:—பொருள் வரைந்துணர்த்தும் பெயரொடு பொருள் வரைந்துணர்த்தாச் சுட்டுப்பெயர் வேறுபாடுடைத்தேனும், ஒரு

---

(சுஎ) சுட்டும் முதல் - சுட்டுகின்ற காரணத்தால். முதல் - காரணம். " இரண்டாகுவதே - ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி " என்னுஞ் சூத்திரத்து 'அவ்விருமுதல்' என்ற பகுதியையும், அதன் விசேடவுரையையும் நோக்குக. முதல், முதனிலை, காரகம், காரணம் என்பன ஒருபொருட்கிளவிகள். இவை என்னும் சுட்டு அவற்றையே சுட்டுங் காரணத்தானமைக்கவென வழுவமைத்தவாறு என்க. அவற்றை என்றது முன் கிடந்த பயற்றை. பொருள் வரையறுக்காத சுட்டுப் பெயரென்றது, இவை என்னுஞ் சுட்டுப் பெயரை. இவை என்னுஞ் சுட்டு, பயறு முதலிய

பொருள்களுள் ...ன்றை இதுதானென்று
வரையறுக்காது யாவற்றிற்கும் பொது ...ாய் நிற்றல்
காண்க.

சாதியும் பண்புந் தொழிலு மூதலாயின
பற்றிப் பொருளை வரைந்
...ணர்த்தலாவது; பெரும்பயறு, சிறுபயறு, எனச் சாதிபற்றியும், ...ும்பயறு காராமணிப்பயறு எனப் பண்புபற்றியும், வறையற் ...டலை, சுண்டற்கடலை எனத்
...ரைந்துணர்த்தலை.
தொழில்பற்றியும் பொருள்களை

9

சூ சூ

# தொல்காப்பியம்

[கிளவி

பொருண்மேன் முடிதலின் ஒரு பொருட்டாமென்பது விளக்கி பொருள் வேறுபடா தொன்றாகு மென்றார்.

அப்பொருள் கூறுதற்க ணென்றது பொதுப்படக் கூறிய வதனால், பிறிதுபொருள் கூறும்வழியும் இவையல்லதில்லையெனச் சிறுபான்மை சுட்டுப்பெயராற் கூறினுமமையு மென்பதாம்.

யானை நூல் வல்லானொருவன் காட்டுட்போவுழி ஓர் யானை யடிச்சுவடு கண்டு இஃதரசுவாவாதற்கேற்ற இலக்கண முடைத்து

என்ற வழியும்,

'இஃதோர் — செல்வற் கொத்தனம் யாமென

மெல்லவென்

மகன்வயிற் பெயர்தந் தேனே'

என்புழியும் சுட்டுப்பெயர் பொருளொடு புணராது நிற்றலின், அவற்றையே அமைக்கின்றது இச்சூத்திரமென்பாருமுளர். (௩எ)

---

யானை அடிச்சுவடு கண்டு இஃது அரசுவாவாதற்கேற்ற விலக்கண முடைத்து என்புழி, யானை ஆண்டு (சுட்டியஇடத்து) இல்லையாயினும் இஃது என்பது அதனையே சுட்டி நிற்றலினாலும், 'இஃதோர்—செல்வற் கொத்தனம் யாமென மெல்லவென், மகன்வயிற் பெயர்தந் தேனே.' (அகம் - உசு) என்றவழி, '(இஃதோர் செல்வன்) இந்தச் செல்வன் என்பது சுட்டிய இடத்தில் மகன் இல்லையேனும் அவனையே சுட்டி நிற்றலானும் இவற்றையே பொருளொடு புணராச் சுட்டு என்றார் என் பாருமுளர் என்பது கருத்து. இக்கருத்து யார் கருத்தென்பது தெரிய வில்லை. சேனாவரையர் மறுக்காமையால் இதுவும் அவர்க்குக் கருத் தேயாம். மேற்காட்டிய உதாரணச் செய்யுளடிகளின் பொருள், 'இந் தச் செல்வனுக்கு யாம் இயைந்தேமென்று மெல்ல என்மகனிடம் சென்றேன்' என்பது. இது தலைவி தோழிக்குக் கூறியது.

'பொருளொடு புணராச் சுட்டு' என்பதற்கு, சுட்டு தான் உணர்த்துதற்குரிய அஃறிணைப் பொருளைக் குறிக்காது உயர்திணைப் பொருளைக் குறிக்குமாயினும் என்று பொருள்கூறி "இஃதோர் செல்வற்கு" என்புழி இஃது என்னுஞ் சுட்டுப்பெயர் அஃறிணைப் பொருளைக் குறியாது இவன் என்று உயர்திணைப் பொருளைக்குறித்து நின்றதென்பர் நச்சினார்க்கினியர். சேனாவரையர் கருத்து அஃதன்று என்பது "இஃது அரசுவாவாதற்கேற்ற இலக்கணமுடைத்து என்று முன்கூறிய உதாரணத்தால் அறியப்படுகின்றது. இஃதோர் செல்வன் என்புழி இ என்னுஞ் சுட்டு இஃதெனத் திரிந்து நின்றதாகக் கொள்க. 'அவ்வனைத்தும்' எனபது 'அன்றியனைத்தும்' (தொல் - வேற் றுமை - ரு) எனத் திரிந்து நின்றதுபோல.

கள்

௩.அ. இயற்பெயர்க் கிளவியுஞ்
சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலுங் காலந்
தோன்றிற்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக்
கிளவா
ரியற்பெயர் வழிய வென்மனார் புலவர்.

**இதன் பொருள்:** இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிதுவினைகோடற்கு ஒருங்கு நிகழுங்காலந் தோன்றுமாயின், உலகத்தார் சுட்டுப் பெயரை முற்படக் கூறார், இயற்பெயர்க்கு வழியவாகக் கூறுவரென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

வினைக்கொருங்கியலுங்கால் அப்பெயர் எழுவாய்பும் உருபேற்றும் நின்றனவெல்லாங் கொள்ளப்படும்.

வினைக்கெண்புழி அவ்விருபெயரும் ஒருவினைகோடலுந் தனித் தனி வினைகோடலுங் கொள்க. ஒருங்கியலும் என்றதனால் அவை யொரு பொருண்மேல் வருதல் கொள்க.

**உதாரணம்:** சாத்தன் அவன் வந்தான்,
சாத்தன் வந்தான்,
அவன் போயினன் எனவும், சாத்தி வந்தாள் அவட்குப் கொடுக்க எனவும் வரும்.
பூக்

அவன்றான்

வந்தான், அவனொருவனுமறங்கூறும், ஈடுதான்று
குருடு என இயற்பெயரல்லா விரவுப்பெயர்க்கும் உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப்பெயர்க்கும் வரையறையின்றிச் சுட்டுப்

(கஅ) அப்பெயரென்றது சுட்டுப்பெயரை. அவை–இயற்பெய

ரும் சுட்டுப்பெயரும். இயற்பெயராவது :- காரணமின்றிப் பொருளையே குறித்து இட்டு வழங்கும் பெயர். சேனவரையரும் " இயற்பெயர் சினைப்பெயர் " பெயரி—உ௦) என்னுஞ் சூத்திர உரையுள், இயற்பெயராவன சாத்தன், கொற்றன் என வழங்குதற்பயத்தவாய் நிமித்தமின்றிப் பொருளைபற்றிவரு மிடுபெயர் எனக் கூறுதலானு மறிந்துகொள்க. தான் - விரவுப்பெயர். முன்னையதென்றது விரவுப்பெயரை. விரவுப்பெயராவது :- உயர்திணை அஃறிணை என்னும் இருதிணையினும் விரவுநிலையுடைய பெயர். இயற்பெயரும் விரவுப்பெயராதலின் அதற்கு இனமென்றார். சேனவரையரும் மேற்காட்டிய சூத்திர உரையுள் " இயற்பெயரும் விரவுப்பெயரு மொக்குமாயின், அவற்றுள் ஒரு



பெயர் முற்கிளக்கவும்படுதலின், இயற்பெயர்க் கிளவியென்றார். அவ்வாறவை முற்கிளக்கப்படுவது ஒருவினை கோடற்கண்ணே யென்பது. அற்றேல், அவை முடவன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க, நங்கை வந்தாள் அவட்குப் பூக் கொடுக்க, குதிரை வந்தது அதற்கு முதிரை கொடுக்க எனத் தனித்தனி வினை கோடற்கண் சுட்டுப்பெயர் பிற்கிளக்கப்படுதல், பின்னையதற்குத் தன்னினமுடித்தலினானும் வினையிரண்டற்கும் இயற்பெயரென்ற மிகையானுங் கொள்க.

பிறிதுவினை கோடற்கணெனவே, அவன்
சாத்தன், சாத்த

னவன் என ஒன்றற்கொன்று பயனிலைபாதற்கண்ணும், ஒரு பொருண்மேல் நிகழுமெனவே, அவனுஞ் சாத்தனும் வந்தார், சாத்தனும் அவனும் வந்தார் என வேறு பொருளாய் வருதற் கண்ணும், யாதுமுற்கூறினும்
அமைபுமென்பதாம்.

வினை யென்றது முடிக்குஞ் சொல்லை.

சுட்டுப்பெயர்
யாண்டும் இயற்பெயர்வழிக் கிளக்கப்படுமென
யாப்புறுத்தற்கு, முற்படக் கிளவாரென்றும்,
இயற்பெயர் வழிய வென்றுங் கூறினர்.

சுட்டுப்பெயரென்றாராயினும், அகர
இகரச் சுட்டுப்பெயரே

கொள்க.

இதுவுமோர் மரபு வழூஉநிலை.
(கஅ)

---

சாரனவற்றிற்கு அப்பெயர் கொடுத்த

தென்னையெனின், அவற்றது

சிறப்பு நோக்கி அப்பெயர் கொடுத்தார். பாணியும் தாளமும் ஒரு பொருளனவாயினும் இசைநூலார் தாளத்துள் ஒருசாரனவற்றிற்குப் பாணியென்னும் பெயர் கொடுத்தாற்போல் என்பது'' என்று கூறுதல் காண்க. நன்னூலார் இதனை முதற்பெயர் என்ப. விரவுப்பெயரை முதற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயர் எனப் பகுத்துக் கோடற் கேற்ப அங்ஙனங் கூறுவர். 'அவ்வாறனைவ' என்புழி அவை என்

றது விரவுப்பெயர், உயர்திணைப்பெயர், அஃறிணைப்பெயர் என்னு மூன்றையும். முன்னையதென்றது விரவுப்பெயரை. மிகை என்றது இயற்பெயரை இரண்டாம்முறையுங் கூறினமையை. யாண்டும் என்றது ஒருவினை கோடற்கண்ணும் தனித்தனி வினை கோடற்கண்ணும் என்றபடி. உகரச் சுட்டுக் கொள்ளாமைக்குக் காரணம், வழக்கின்மை போலும்.



ரு கூ. முற்படக் கிளத்தல் செய்யுளு

ளுரித்தே.

**இதன் பொருள் :** இயற்பெயருஞ் சுட்டுப்பெயரும் வினைக்கொருங்கியலும்வழிச் சுட்டுப்பெயரை முற்படக் கூறுதல் செய்யுளு ளுரித்து என்றவாறு.

உதாரணம் :

'அவனணங்கு நோய்செய்தா ளாயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர்
வாழ்த்தி—முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணிபி லென்னைகொல்
பின்னை யதன்கண் விளைவு'

எனவரும். இதனுட்சேந்தனென்பது இயற்பெயர்.

ஒருவினை கொள்வழிச் சுட்டுப்பெயர் முற்கிளத்தல் வந்த வழிக் கண்டுகொள்க.

இது செய்யுளிடத்து மரபுவழு வமைத்தவாறு. (௩௯)

௪௦. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியுஞ்
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத்
தோன்றும்.

இதன் பொருள் : சுட்டை முதலாகவுடைய காரணப் பொருண்மையை உணர்த்துஞ் சொல்லுஞ் சுட்டுப்பெயர்போலத் தன்னாற் சுட்டப்படும் பொருளை யுணர்த்துஞ்

சொற்குப்பின் கிளக்கப்படும் என்றவாறு.

ஈண்டுச் சுட்டப்படும் பொருள்

தொடர்மொழிப் பொருள்.

உதாரணம்: சாத்தன்

கையெழுதுமாறுவல்லன் அதனாற் றந்தை யுவக்கும்,

சாத்தி சாந்தரைக்குமாறு வல்லள் அதனாற்

கொண்டானுவக்கும் எனவரும்.

---

(௩௯) அவன் என்னும் சுட்டுப்பெயர் செய்யுளில் முன்வந்தது. இச்செய்யுளில் சுட்டுப்பெயரும் இயற்பெயரும் தனித்தனி வினை கொண்டன. வினை என்றது ஈண்டுப் பயனிலையை. சேந்தன்—இயற் பெயர்; ஓருபகாரி என நன்னூல் நமச்சிவாயருரையிற் கீழ்க்குறிப்பாக டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் காண்பித்திருக்கிறார்கள். அஃ துண்மையேயாதல் நன்னூல் ௩௯௭-ம் சூத்திர உரையுள் "கொய் தளிர்த் தண்டலைக் கூத்தப்பெருஞ் சேந்தன்" என வரும் வெண்பாவா லறியலாம்.

சுட்டு முதலாய காரணக்கிளவி உருபேற்று நின்ற சுட்டுமுதற் பெயரோ டொப்பதோ ரிடைச்சொல்லாகலின், 'சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்' என்றார். செயற்கென்னும் வினையெச்சம், உருபேற்று நின்ற தொழிற்பெயரோடு ஒப்புமை யுடைத்தாயினும், உருபும் பெயரு மொன்றாகாது பகுப்பப் பிளவு பட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான், அதனின் வேறாயினாற் போல, இதுவும் உருபேற்ற சுட்டுப்பெயரோடு ஒப்புமை யுடைத் தாயினும் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான், வேறாகவே கொள்ளப்படுமென்பது. அஃதேல், சாத்தன் வந்தான் அஃதாசற்குத் துப்பாயிற்று எனத் தொடர்மொழிப் பொருளையுஞ் சுட்டுவருஞ் சுட்டுப்பெயர் கூறாது காரணக்கிளவியே கூறிய

---

(சo) சுட்டு முதலாகிய காரணக்கிளவியென்றது, ஈண்டு அதனால் என்னுஞ் சுட்டிடைச்சொல்லை. ஆநுருபேற்ற சுட்டுப்பெயரன்றென்க.

தொடர்மொழிப்பொருள் என்றது, சாத்தன்கையெழுதுமாறு வல்லன் என்ற தொடர்மொழிப் பொருளை. அத் தொடர்மொழிப் பொருளை அதனால் என்பது சுட்டிவந்ததென்றபடி. உருபும் பெயரு மொன்றாகாது என்னும் வாக்கியத்தொடர் பின்வருந் தொடரோடு தொடர்புள்ளதாகக் காணப்படவில்லை. உருபும் பெயருமென்றாகாது என்றிருப்பிற் பொருத்தமாகும். ஆயின் பிளவுபட்டிசையாது ஒற்று மைப்பட் டிசைத்தலான் என்ற வாக்கியமே, செயற்கு என்னும் வினை யெச்சத்திற்கும், செயற்கு என்னும் உருபேற்ற தொழிற்பெயருக்கு முள்ள வேறுபாட்டை யுணர்த்த அமையுமாதலின், 'உருபும் பெயரு மொன்றாகாது பகுப்ப' என்றவரையும் அத்தொடரை நீக்கிவிடலாம். பின்னும், உருபேற்ற சுட்டுப்பெயர்க்கும் சுட்டுமுதலாகிய காரணக் கிளவிக்கும் வேறுபாடு கூறுங்காலும் 'பிளவுபட்டிசையாது ஒன்றுபட் டிசைத்தலான்' என்றே கூறுதல் காண்க.

செயற்கு என்னும் வினையெச்சம் பிளவுபடாது ஒன்றுபட்டிசைக்கும்; உருபேற்று சுட்டுப்பெயர் செயல் என்னுந் தொழிற்பெயர்க்கும் குவ்வுபிருக்குமிடையில் பிளவுபட்டிசைக்கும்; இதுவே அவ்விரண்டற்குமுள்ள வேறுபாடாகும். அவைபோலவே, அதனல் என்னும் சுட்டு முதலாகிய காரணச்சொல் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைக்கும். அதனல் என்னும் உருபேற்ற சுட்டுப்பெயர் அதன்+ஆல் எனச் சாரியையோடு கூடிய சுட்டுப்பெயர்க்கும் உருபிற்குமிடையில் பிளவுபட்டிசைக்கும் என்றபடி.

 யாக்கம்] சொல்லதிகாரம்

எக

தென்னையெனின்:—அவ்வாறு வருவன
தன்னின முடித்த லென் ..க்கு லடங்கும். ஈண்டுச்
சுட்டப்படும் பொருளை யுணர்த்துவது
பெயரன்மையின், சுட்டுப்பெயரிபற்கையென்றது வழக்கினகத்துச்
..ட்டப்படும் பொருளை யுணர்த்துஞ் சொற்குப்
பின்னிற்றலுஞ் செய்யுளகத்து முன்னிற்றலுமாகிய
அத்துணையேயாம். செய்யுட் கண் முன்னிற்றல்
வந்தவழிக் கண்டுகொள்க. பொருள் பற்றுது
..ண்பு முதலாயினபற்றி வந்த சுட்டாதலின்
வேறோதப்பட்ட தென்று உரையாசிரியர்
கூறிஞராலெனின்:—சாத்தன் வந்தான்
அஃதரசற்குத் துப்பாயிற்று எனவும்,

கிழவன் பிரிந்தான் அதனைக் கிளத்திபுணர்ந்திலள் எனவும், எழுவாயாயும் ஏனை வேற்றுமையேற்றும் அச் சுட்டுப் பயின்றுவருதலாற் பண்பு முதலாயினவற்றைச் சுட்டுஞ் சுட்டெனப் பொதுவகையாற் கூறுது காரணக் கிளவியென ஒருசார் வேற்றுமைக்குரிய வாய்பாடுபற்றி யோதுதல் குன்றக்கூறலாகலானும், சுட்டுப்பெயராயிற் சுட்டு முதலாகிய காரணக்கிளவி என்றும் சுட்டுப்பெயரியற்கையிற் செறியத் தோன்றும் என்றுங் கூறுதல் பொருந்தாமையானும் அது போலியுரை யென்க.

இதனுல் வழக்கின்கண் மரபு வழாநிலையுஞ் செய்யுட்கண் மரபு வழுவமைதியு முணர்த்தினர். (சo)

---

அவ்வாறு வருவன என்றது, தொடர்மொழிப் பொருளைச் சுட்டி எழுவாயாயும் உருபேற்றும் வரும் சுட்டுப்பெயர்களை.

உரையாசிரியர் சுட்டு முதலாகிய காரணக்கிளவி என்பதை, இடைச்சொல்லாகக் கொள்ளாது, உருபேற்றுநின்ற சுட்டுப்பெயராகக் கொண்டு பண்பு முதலியவற்றைச் சுட்டிவந்த

சுட்டாதலின் வேறோதப்
பட்டன வென்று கூறினாலெனின், சுட்டுப்பெயர் எழுவாயாயும், மூன்ற னுருபையேயன்றியும் ஏனை யுருபுகளையும் ஏற்றும் பயின்று வருதலின் அவையுமடங்கப் பண்பு முதலாயினவற்றைச் சுட்டும் சுட்டெனப் பொதுவகையான் ஆசிரியர் கூறுது மூன்றும் வேற்றுமைக்குரிய வாய்பாடுபற்றிக் காரணக்கிளவி எனக் கூறுதல் குன்றக்கூறலாமாகலானும், உருபேற்ற சுட்டுப்பெயரென்றே கூறுவ ரன்றி, 'சுட்டு முதலாகிய காரணக் கிளவி' என்றும், 'சுட்டுப்பெய ரியற்கையின்' என்றும் கூறுராகலானும், அவர் கருத்துப் பொருந் தாது என்பது கருத்து. 'சுட்டுப்பெய ரியற்கையின்' என்று கூறிய தனல் சுட்டுமுதலாகிய காரணக்கிளவி என்றது உருபேற்ற சுட்டுப் பெயரன்றென்பது பெறப்படுமென்பது சேனவரையர் கருத்து.



சச. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கு
மியற்பெயர்க் கிளவி முற்படக்

கிளவார்.

**இதன் பொருள் :**

வினைக்கொருங்கியலும்வழிச் சிறப்பினுகிய பெயர்க்கும் இயற்பெயரை உலகத்தார் முற்படக் கிளவார் பிற் படக் கிளப்பர் என்றவாறு.

வினைக்கொருங்கியலுமென்பது எற்புழிக்கோட லென்பதனுற் பெற்றும்.

ஈண்டுச் சிறப்பாவது மன்னர் முதலாயினுராற் பெறும் வரிசை.

**உதாரணம் :** ஏனுதிநல்லுதடன், காவிதிகண்ணந்தை என வரும்.

உம்மையால், தவம், கல்வி, குடி, உறுப்பு முதலாயினவற்று ணுகிய பெயருங் கொள்ளப்படும். அவை முனிவ னகத்தியன் எனவும், தெய்வப்புலவன் றிருவள்ளுவன் எனவும், சேரமான் சேரலாதன் எனவும், குருடன் கொற்றன் எனவும் வரும்.

திருவீரவாசிரியன், மாந்தக்கொங்கேனாதி என இயற்பெயர் முன் வந்தனவாலெனின் :—அவை தொகைச்சொல்லாகலான், அவற்றின்கண்ணதன்று இவ்வாராய்ச்சியென்பது. ஆண்டியற் பெயர் முன்னிற்றல் பண்புத்தொகை யாராய்ச்சிக்கட் பெறு தும். (சக)

சஉ. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பி னொன்றிட னிலவே.

**இதன் பொருள் :** ஒருபொருளைக் குறித்து வந்த பல பெயர்ச்சொற்கள், ஒருதொழிலே முடிபாகக் கூறுது பெயர்

---

(சக) வரிசைப்பெயர்—பட்டப்பெயர். ஏனாதி, காவிதி என்பன பட்டப்பெயர்கள். தொகைச்சொல் என்றது ஈண்டு ஈறுகெட்டு இரு சொல்லு மொன்றி நிற்றலே. திருவீரன் ஆசிரியன் என ஈறுகெடாது இருசொல்லுந் தனித்தனி வருதற்கண்ணேயே இவ்வாராய்ச்சி என் பது கருத்து. முன்வரல் பிற்கால வழக்கென்பர் நச்சினார்க்கினியர். முன் என்றது ஈண்டு இடமுன்னே.

ரோறும் வேருகிய தொழில்களைக் கொடுத்து முடிப்பின், ஒரு பொருளவாய் ஒன்று என்றவாறு.

ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் என்ருது, ஆசிரியன் வந்தான் பேரூர் கிழா னுண்டான் செயிற்றியன் சென்ருன் என வேறு வேறு தொழில் கிளந்தவழி, வந்தானும் உண்டானும் சென்ருனும் ஒருவனுகாது வேருய்த் தோன்றியவாறு கண்டுகொள்க.

எந்தை வருக எம்பெருமான் வருக மைந்தன் வருக மணுளன் வருக என்புழிக் காதன் முதலாயினபற்றி ஒருதொழில் பலகால் வந்தமையல்லது வேற்றுத்தொழிலன்மையான், ஒருதொழில் கிளத்தலேயாமென்பது.

ஈண்டுத் தொழிலென்றது முடிக்குஞ் சொல்லை.

ஆசிரியன் வந்தானென்று ஒருகாற்கூறி
இடையிட்டு அவ
னையே பின்னொருகாற் பேரூர்கிழான்
சென்றானென்று கூறியவழி,
ஒரு தொடரன்மையான்
ஆண்டாராய்ச்சியில்லையென்பது. அஃதேல்,
ஆசிரியன் வந்தான் பேரூர்கிழா னுண்டான்
செயிற்றியன்
சென்றான் என இடையீடின்றி நின்றனவும் ஒரு
தொடரன்மை யின், ஆராய்ச்சியின்றாம்
பிறவெனின் :—அற்றன்று. உட்டொடர்
பலவாயினும், அவற்றின் றொகுதியாய்
அவன்றொழில் பலவுங்
கூறுதற் பொருண்மைத்தாகிய பெருந்தொடர்
ஒன்றெனவே படு
மென்பது.
ஆசிரியன் பேரூர்கிழான்
செயிற்றியனிளங்கண்ணன் சாத்
தன் வந்துண்டு சென்றானென்றது, ஆசிரியன் வந்தான் பேரூர்
கிழா னுண்டான் செயிற்றியன் சென்றானெனப் பெயர்தோறும்
வேறுதொழில் கிளத்தன்மரபன்மையின்,
மரபுவழுக் காத்தவா றாயிற்று.

(சஉ) இடையீடின்றி நின்றன என்றது, சேர்ந்து (அண்மைப் பட்டு) நின்றன என்றபடி. அண்மைப்பட்டு நிற்றல்—காலதாமத மின்றிச் சொல்லப்பட்டு நிற்றல். காலதாமதமின்றிச் சொல்லப்பட்டு நிற்பினும். (ஒரு தொடரன்மையின்) பலதொடராயிருத்தலின் அதன் கண்ணும் ஆராய்ச்சி இல்லையெனின், தொடர் பலவாயினும் அத் தொடர்கள் ஒருவனுடைய தொழிலையே உணர்த்திவருதலின் பெருந் தொடர் ஒன்றெனவேபடும். ஆதலின் ஆராய்ச்சியுண்டென்பது கருத்து.





சந. தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவியென்
றெண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.

இதன் பொருள்: தன்மைச்சொல்லும்

அஃறிணைச்சொல் லும் எண்ணுதற்கண் விராய் வரப்பெறும் என்றவாறு.

என் சொல்லியவாறோவெனின் :—
உயர்திணைச்சொல்லும்
அஃறிணைச்சொல்லும் எண்ணுதற்கண்
விராய் வந்து உயர்திணை
முடிபு கொள்ளினும், அஃறிணைமுடிபு
கொள்ளினும் வழுவர்
மாகலின், 'மயங்கல்கூடா தம்மரபின' (சொல்—கக) எனவே
அவை விராவெண்ணப்படாமையும் எய்தி
நின்றது; தன்மைப்
பன்மைச்சொல்லால் அஃறிணைச்சொல்லு
முடிபுமாகலால், தன் மைச்சொல்லும்
அஃறிணைச்சொல்லும் விராய்வந்து உயர்திணை
முடிபு கொள்ளினும் அமைபுமெனத்
திணைவழுக் காத்தவாறு.

உதாரணம் :
யானுமென்னெஃகமுஞ்சாறும் என வரும்.

பன்மைத் தன்மைவினை கோடல்
எற்றாற் பெறுதுமோ
வெனின் :—தன்மைச்சொல்லே
யென்றதனானும்,

'பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே'
(சொல்—உ௦௬)

---

(சஙு) இச்சூத்திரம் திணைவிராய்வருதலை
அமைக்க எழுந்ததென
உரையாசிரியர் கூறியதே பொருத்தம் என்பர்
சிலர். உரையாசிரியர்
எண்ணுங்கால் தன்மைச் சொல்லும்
(உயர்திணைச்சொல்லும்) அஃ
றிணைச்சொல்லும் விரவிவரினும்
அமைக்கப்படுமென்பது இச்சூத்திரக்
கருத்தென்பர். சேனாவரையர்,
தன்மைச்சொல்லும் அஃறிணைச்
சொல்லும் விராய்வந்து தன்மைப்பன்மை
வினைகொள்ளினும்
அமைக்கப்படும் என்பது இச்சூத்திரக் கருத்து
என்பர். தன்மைச்

சொல்லும் அஃறிணைச்சொல்லும் விரவித் தன்மைப் பன்மை வினை கொள்ளும் என்பதைச் சேனாவரையர் எப்படிப் பெற்றாரெனின்?
தன்மைச்சொல்லே என ஆசிரியர் கூறியதனால்,

அத்தன்மைச்சொல்
முடிபுகொள்ளுங்கால் தனக்குரிய தன்மைவினையொடு முடியுமென்பது
பெறப்படுதலினாலும், " அவற்றுள்—தன்மை யுரைக்கும் பன்மைக்
கிளவி எண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே" என்ற (வினை—கஉ)
சூத்திரத்துக்குத் தன்மைப் பன்மைவினைமுற்று அஃறிணையை யுளப்
படுத்தலினாற் றன்றிணை திரிவது, தன்மைச் சொல்லையும் அஃறிணைக்



என்பதனானும் பெறுதுமென்பது. அஃதேல், 'எண்ணியன்
மருங்கிற் றிரிபவை யுளவே' என்பதனன்

விராய்வந்து உயர்
______________________ கிளவியையும்
எண்ணுமிடத்து அவ்விரு சொல்லுக்கும் முடிபாய்
வரு மிடத்தென்பதே கருத்தாகலானும் பெற்ரூர்
என்பது. அஃதேல், அச் சூத்திரத்தானேயே முடிபு
கோடலும் பெறப்படும்; ஆதலால் ஈண்டுக் கூற

வேண்டாவெனின்,— ஆண்டுத் தன்மைப் பன்மை
வினைமுற்றுத் தன்மைச்சொல்லையும்
அஃறிணைச்சொல்லையும் விரவி எண்ணுமிடத்து,
அவற்றிற்கு முடிபாய் வருங்கால்
அஃறிணையையுளப்படுத்துத் திணைதிரியும் என்று
கூறியதன்றி, அவ்விரண்டற்கும் முடிபாய்
வருமென்று கூறாமையின் அதனால் அது
பெறப்படாதாம். ஆதலின் முடிபுகோடல் இதனாற்
கூறவேண்டுமென்பது. உய்த்துணரலாமெனின்,—
உய்த் துணர்ந் திடர்ப்படுவது எடுத்தோத்து
இல்லாதவிடத்தன்றோ வென்க. அற்றேல் ஆசிரியர்
தன்மைச்சொல்லும் அஃறிணைக்கிளவியும் எண்ணு
மிடத்து அமைக்கப்படும் என்று கூறச் சேனாவரையர்
இருதிணையும் விரவி உயர்திணை முடிபுகொள்ளினும்
அமைக்கப்படுமென்று கூறல் பொருந்துமோ எனின்?
அங்ஙனம் தாம் பொருள்கொண்டதற்கு அவர் கூறுங்
காரணங்கள் இரண்டு. ஒன்று,— "பலவயினானு
மெண் ணுத்திணை விரவுப்பெயர்—அஃறிணை
முடிபின செய்யுளுள்ளே" [கிள—௫௦] என்று
பிறண்டும் முடிபுகோடலைப்பற்றியே ஆசிரியர் விதி
கூறுவது. (அஃதாவது :- உயர்திணைப்பெயரும்,
அஃறிணைப்பெயரும் எண்ணுதற்கண்
விரவிவருமென்னுது விரவிவந்து அஃறிணை முடிபு
பெறும் என்று முடிபுபெறுதலைக்குறித்தே

ஆசிரியர் அச்சூத்திரத்து விதி கூறலான், ஆசிரியர்க்கு ஆராய்ச்சி திணைவிராய் வருதற்கண்ண தன்று முடிபுகோடற்கண்ணதே என்பது). ஒன்று,— உயர்திணைப் படர்க்கைச்சொல்லும் அஃறிணைச்சொல்லும் பெரும்பாலும் மயங் கலின் அவையுமடங்க, இச்சூத்திரத்தை 'உயர்திணைச் சொல்லும் அஃ றிணைக் கிளவியும்' என்று சூத்திரியாது, 'தன்மைச் சொல்லே அஃறி ணைக் கிளவி' என்று (எதிரது நோக்கி) சூத்திரித்தமையால் தன்மைச் சொல்லும் அஃறிணைச்சொல்லும் விராய்வந்து ஒரு முடிபெய்தும் என்பதே ஆசிரியர்க்குக் கருத்தாம் என்பது. உயர்திணைப் படர்க்கைச் சொல்லும் அஃறிணைச்சொல்லும் விராய் எண்ணலை இச்சூத்திரத்துத் தன்னின முடித்தலாற் கொள்ளலாமெனின்? பெரும்பான்மையான வழக்கைக்கூறிச் சிறுபான்மையான வழக்கைத் தழுவலாமேயன்றிச், சிறுபான்மையான வழக்கைக் கூறிப் பெரும்பான்மையான வழக் கைத் தழுவுதல் பொருந்தாதென்பதே சேனாவரையர் கருத்தாதலால் 'படர்க்கைச்சொல்லும் அஃறிணைச்சொல்லும் விராய் எண்ணல் வழக்குப்பயிற்சி உடைமையால்' என்று கூறினமையானே அறியப் படும். அற்றேல் வருஞ்சூத்திரத்து ஒருதொடரின்கண் விராய்

[கிளவி

திணை முடிபு கோடலும் பெறப்படுதலின்,
இச்சூத்திரம் வேண்
டாவெனின் :—உய்த்துணர்ந் திடர்ப்படுவது
எடுத்தோத்தில்வழி
யென மறுக்க.
(சஙு)

---

எண்ணலையே கூறலின், இதனையு மங்ஙனமே
கூறினரென்றலென்னை
யெனின் ? அஃதொக்குமன்னாயினும், ஒருவர் என்பது
ஒருவர், இருவர், மூவர் என எண்ணுமுறைக்கணிற்கும்
ஒருவனென்பது அன்விகுதி பற்றி
எண்ணுமுறைமைக்கணில்லாது என்று ஆசிரியர்
கூறும்
விதியை உற்றுநோக்கின் அதுவும் விகுதிபற்றிய
முடிபேயாம் என் பது சேனாவரையர் கருத்தாம்.
இரண்டு முதலிய பன்மைகளோடு அவ்விகுதி
(ஒருமைவிகுதி) வாராமை இயல்பேயாதலின்

இருவன் மூவன் என வாராதென விலக்கலாற் பயனில்லையெனின்? அற்றன்று; இரண்டு முதலியவற்றோடு ஒருமை விகுதி வாராமை இயல்பேயாயி னும் ஒருவனோடு மற்றொருவனைச் சேர்த்து எண்ணுதற்கண் (அஃதா வது நால்வர் நிற்புழி அவரை எண்ணுங்கால்) ஒருவன், இருவன், மூவன், நால்வன் என எண்ணலாமோ என்று மாணுக்கனுக்கு ஐய நிகழுதலுங் கூடும்; அவ்வைய நிகழாமற் கூறினார் என்பதே சேனா வரையர் கருத்தாம். இக்காலத்தும் சிறுவர்சிலர் எண்ணுமாறு ஒருவன் என்று ஆசிரியன் தொடக்கிவிட, ஒருவன், இரு வன், மூவன் என எண்ணிவிடுவது வழக்கு. அவ்வழக்கு நோக்கி இவ்வாறு கூறினுரெனினுமமையும். 'பொதுப்பிரிபாற்சொல் ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லாது' எனவே பொதுப்பிரியாப்பாற்சொல் ஒருமைக்கும், இருமை முதலியவற்றிற்கும் எண்ணுமுறைக்கண் நிற்குமென்பதாம்.

இனி,

'பலவயினானு மெண்ணுத்திணை விரவுப்பெய
ரஃறிணை முடிபின செய்யுளுள்ளே'

என்னுஞ் சூத்திரத்துத் திணைவிரவி அஃறிணை முடிபைப்பெறும் என ஆசிரியர் கூறிய கருத்தை நோக்கும்போது, திணைவிரவிவரும் என்பதும் அதனாற் பெறவைத்தமை தோன்றலின் அவ்விதியை அநுவாதமாகக்கொண்டு, சூத்திரக்கருத்தான் முடிபுகோடற்பொருளும் அநுவாதத்தாற் றிணைவிரவுதற்பொருளும் தோன்ற அச்சூத்திரஞ் செய்யப்பட்டதென்று கொள்ளுதலே பொருத்தமாகுமென்பது எமது கருத்து. அங்ஙனங் கொள்ளின், இச்சூத்திரத்திற்கும், "வியங்கோ ளெண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்" என்ற சூத்திரத்திற்கும் அவ்வாறே கொண்டுவிடலாம்.

அங்ஙனங் கொள்ளின் உரையாசிரியர் கருத்தும், சேனாவரையர் கருத்தும் இரண்டும் இச்சூத்திர முதலிய
வற்றிற்கு (சக—சரு—ருக) க் கருத்தாகும் என்பது.

திணைவிராய் வரு

யாக்கம்] சொல்லதிகாரம்

எஎ

சச. ஒருமை யெண்ணின் பொதுப்பிரி

பாற்சொல்

லொருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது.

இதன் பொருள்: ஒருமையெண்ணினை யுணர்த்தும் பொதுப்பிரி பாற்சொல்லாகிய ஒருவன் ஒருத்தியென்னுஞ் சொற்கள், ஒரு மைக்கண்ணல்லது, இருமை முதலாகிய எண்ணுமுறைக்கணில்லா என்றவாறு. எனவே பொதுப்பிரியாப் பாற்சொல்லாகிய ஒருவரென்னுஞ்சொல் இருவர் மூவரென எண்ணுமுறைக்கண்ணு நிற்குமென்பதாம்.

பொதுப்பிரி பாற்சொலென்றாரேனும், ஒருவன் ஒருத்தி யென்பனவற்றது பாலுணர்த்துமீறே கொள்ளப்படும். என்னை? எண்ணுமுறை நில்லாவென்று விலக்கப்படுவன அவையேயாகலி னென்பது.

மகன் மகளென்னுந் தொடக்கத்துப் பெயர்ப்பொதுப் பிரி பாற்சொல்லினீக்குதற்கு ஒருமையெண்ணினென்றும், ஒருவர்

மெனப் புரோவாதமுன் கூறப்படாதிருக்க அநுவதிக்கப்பட்டதென் றல் பொருந்துமோ வெனின், விரந்துகூருது ஒரோவோரிடங்களில், முன்னோர் கூறிய இலக்கணங்களையும் பழைய வழக்குக்களையும், தங்கருத்துள் வைத்து அநுவதித்துக்கூறலும் இவ்வாசிரியர்க்கு இயல்பேயாதலிற் பொருந்துமென்க. அவ்வாருதல் இவ்வதிகாரத்து வரும் அக௲ம், கஉ௬ம் சூத்திர முதலியவற்றை நோக்கியுணர்க. எடுத்தோத்து—சூத்திரம்.

(சச) பொதுவென்பது ஆண் பெண் இரண்டற்கும் பொது

வாகிய ஒருவர் என்பதை. அதனிற் பிரிந்தது எனவே ஒருவன் ஒருத்தி என்பனவாம். பாற்சொல்லென்றது பாலுணர்த்துமீற்றை. அவை அன்விகுதியும் இகரவிகுதியும்.

ஒருமை எண்ணின் என்று கூருது பொதுப்பிரிபாற்சொல் என்று மாத்திரங் கூறின் மகன் மகள் என்றற்ருெடக்கத்துக்குப் பெயர்ப் பொதுபிரிபாற்சொல்லையு முணர்த்துமாகலின் அவற்றை நீக்குதற்கு ஒருமையெண்ணினென்றும் பொதுப்பிரிபாற்சொல்லென்ருது ஒருமை எண்ணின்பாற்சொல் என்ருல் ஒருவர், ஒன்று என்பவற்றையு முணர்த்துமாகலின், அவற்றினீக்குதற்குப் பொதுப்பிரிபாற்சொல் லென்றுங் கூறினர்.

மகன் மகள் என்பன மக என்னும்

பொதுமையிற் பிரிந்தன. சொல் என்பதற்கேற்ப நில்லாது என ஒருமையாற் கூறினர்,



ஒன்றென்பனவற்றினீக்குதற்குப் பொதுப்பிரி பாற்சொலென்றுங் கூறினர்.

ஒருவரென்னும் ஆண்மைப்பெண்மைப் பொதுவிற் பிரிதலிற் பொதுப்பிரிபாற்சொலென்றார்.

பொதுப்பிரி பாற்சொலென்னும் ஒற்றுமையான் நில்லாதென ஒருமையாற் கூறினர்.

ஒருவன் ஒருத்தியென ஒருமைக்கணிற்றலும், இருவன் மூவன் இருத்தி முத்தி என எண்ணுமுறைமைக்கண் நில்லா

மையுங் கண்டுகொள்க.

ஒன்றெனமுடித்தலென்பதனான் ஒருவேன் ஒருவை யென்னுந் தன்மைமுன்னிலையீறும் எண்ணுமுறைநில்லாமை கொள்க.

இது பால்வழுக்காத்தவாறு.

(சச)

சரு. வியங்கோ ளெண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.

**இதன் பொருள்:** வியங்கோளொடு தொடருமெண்ணுப் பெயர் திணைவிராய்வருதல் வரையார் என்றவாறு.

**உதாரணம்:** ஆவுமாயனுஞ்செல்க என வரும்.

தன்மைப் பன்மை வினைபோலாது வியங்கோள் இருதிணைக்கு முரிய சொல்லாகலான் இருதிணைச் சொல்லைபு முடிக்குமன்றே, அதனான் ஆவுமாயனுஞ் செல்க என்புழி வழுவின்மையின்

---

எண்ணுமுறை நில்லாமை—இருவேன், இருவை என எண்ணு முறை நில்லாமை. ஏனையனவுமன்ன.

ஒருமை எண்ணின் பொதுவாகிய ஒருவர் என்னுஞ் சொல்வி னின்றும் பிரிந்த ஒருவன் ஒருத்தி என்பன எண்ணுமுறைக்கண் ஒருவன் இருவர் மூவர் என ஓடா. ஒருவர் என்பது ஒருவர் இருவர் மூவர் என எண்ணுமுறைக்கண் ஓடும் என இளம்பூரணரும் தெய் வச்சிலையாரும் கூறுவர்.

(சூ) வியங்கோள்

இருதிணைக்கண்ணும் சேறலின் இருதிணைச் சொற்கு முடிபாகுமாதலின் முடிபுகோடற்கண்ணதன்றுவழு, இன



அமைக்கற்பாற்றன்றெனின்:—இருதிணைப்பொருட்கு முரித்தே னும், ஒருதிணைப்பொருளைச் சொல்லுதற்கண் இருதிணைப் பொருளு முணர்த்தாமையின், ஒருதிணையேயுணர்த்தல்வேண்டும்; ஒருதிணையுணர்த்தியவழி ஏனைத்திணைப்பெயரோடு இயையா மையிற் றிணைவழுவாம், அதனனமைக்கல் வேண்டுமென்பது.

எண்ணென்ற வுறழென்ற வாயிரண்டு மினனென்றல் வேண்டுமென்பது இலக்கணமாகலான், யானுமென்னெஃகமுஞ் சாறும் என்புழியும் ஆவுமாயனுஞ்செல்க என்புழியும் இன னல்லன உடனெண்ணப்படுதலின் வழுவென்றாரால் உரையாசிரிய ரெனின்:—திணைவேறுபாடுண்டேனும் யானுமென் னெஃகமும் என்புழி வினைமுதலுங் கருவியுமாகிய இயைபும் ஆவுமாயனும் என்புழி மேய்ப்பானும் மேய்க்கப்படுவனவுமாகிய இயைபு

முண்மையான் உடனெண்ணப்படுதலானும், யானை தேர் குதிரை காலாளெறிந்தான் என முன்னர் உதாரணங் காட்டுபவாகலானும்,

னல்லன விராய் எண்ணுதற்கண்ணதே வழு என்பது உரையாசிரியர் கருத்து. சேனாவரையர், வியங்கோள் இருதிணைக்கண்ணும் வரு மெனினும் ஒருதிணைப்பொருளைச் சொல்லற்கண் இருதிணைப்பொருளு முணர்த்தாமையின் ஒருதிணைப்பொருளையே உணர்த்தல் வேண்டும்; ஒருதிணைப்பொருளை யுணர்த்தியவழி ஏனைத் திணைப்பொருளோடு ரியையாமையின் திணைவழுவாமாதலான் முடிவின்கண்ணதே வழு வென்றார்.

ஒருதிணைப் பொருளுணர்த்தும்வழி இருதிணைப் பொருளுமுணர்த் தாமை என்றது, ஆசெல்க என்றால் செல்க என்னும் வியங்கோள் வினைமுற்று அஃறிணைப்பொருட்கு முடிபாயினமையின் அஃறிணைப் பொருளையே உணர்த்துமன்றி உயர்திணைப்பொருளை யுணர்த்தாது; ஆதலின் அதனோடு ஆயன்முடிதல் திணைவழுவென்றபடி.

எண்—எண்ணுதல். உறழ்—உறழ்ந்துகூறல். அவ்விரண்டன் கண்ணும் இனப்பொருளே ஒன்றிவரல்வேண்டும். எண்ணும் உறழும் இனனொன்றல்வேண்டுமென்பதை, கிளவியாக்கம் கசு-ம் சூத்திரத்தை யும் அதன் உரையையும் நோக்கி அறிக.

யானை, தேர், குதிரை, காலாள் என்புழிக் காலாள் இனமல்லா த்து. பிறுண்டும்—பிறவிடத்தும். ஆசிரியர்க்கு ஆராய்ச்சி முடிபு கோடற்கண்ணது என்றது, ஆசிரியர்க்கு ஆராய்வு திணைவிராய் வருதற்கண்ணதன்று; முடிபுகோடற்கண்ணதே ஆகலானும் என்ற



பிறாண்டும். 'எண்ணுத்திணை விரவுப்பெய ரஃறிணைமுடிபின (சொல்-டுக) என ஆசிரியர்க்கு ஆராய்ச்சி முடிபுகோடற்கண்ண

தாகலானும், அவர்க்கது கருத்தன்றென்க. அல்லதூஉம், திணை விராயெண்ணல் வழுவென்பதே கருத்தாயின்,

> ' நெடுநல் யானையுந் தேரு மாவும்
> படையமை மறவரு முடையம் யாம் ' (புறம்—எ௨)

எனவும், ' இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும் ' (குறள்-௬௨௦) எனவும், படர்க்கைச்சொல்லும் அஃறிணைக்கிளவியும் விராயெண்ணுதல் வழக்குப்பயிற்சி யுடைமையான் அவையுமடங்க உயர்திணைச்சொல்லே யஃறிணைக்கிளவி எனப் பொதுப்பட வோதாது ' தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி ' (சொல்-௪௩) எனத் தன்மைச் சொல்லையே விதந்தோதல் குன்றக்கூறலா மாகலானும், அவர்க்கது கருத்தன்மை யறிக.

> ' ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
> பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீருமெம்
> மம்பு கடிதுவிடுது நும்மரண் சேர்மின் ' (புறம்—௯)

எனத் திணைவிராய்வந்து முன்னிலைவினை கோடல் எற்றாற்பெறுது மெனின் :—அங்கிகரன செய்புண் முடிபெனப்படும், அவற்றை யதிகாரப் புறனடையாற் கொள்க. திணைவிராயெண்ணப்படும் பெயர் வியங்கோளல்லா விரவுவினையொடு தொடர்ந்து வருவன வழக்கினு ளுளவேல், ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்க. (௪௫)

---

படி. முடிபுகோடல்—ஒருசொல் மற்றொருசொல்லைத் தனக்கு முடிக்குஞ் சொல்லாகக் கொள்ளுதல்.

ஆவும், பார்ப்பன மக்களும், பிணியுடையீரும் பெருநீரும் சேர்மின் எனத் திணைவிரவிவந்து முன்னிலைவினைகோடல், சொல்லதிகாரப் புறனடையால் (எச்-கூஎ) கொள்ளப்படும்.

வியங்கோளல்லா விரவுவினை என்றது, செய்யும் என்னும் முற்று, வேறு, இல்லை, உண்டு முதலியவற்றை. இச்சூத்திரமுடிபு அஃறிணை முடிபின செய்யுளுள்ளே என்ற முடிபிலடங்காமையின் வேறு கூறப்பட்டது.



அக

ய சூ. வேறுவினைப்
பொதுச்சொ லொருவினை கிளவார்.

இதன் பொருள்: வேறுபட்ட வினையையுடைய பல பொருட்குப் பொதுவாகிய சொல்லை ஒன்றற்குரிய வினையாற் கிளவார் என்றவாறு.

எனவே, பொதுவினையாற் கிளப்ப ரென்றவாறும். அவை அடிசில் அணி இயம் படையென்னுந் தொடக்கத்தன.

அடிசில் என்பது உண்பன தின்பன பருகுவன நக்குவன வென்னு நால்வகைக்கும், அணியென்பது கவிப்பன கட்டுவன

செறிப்பன பூண்பனவென்னுந்

தொடக்கத்தனவற்றிற்கும், இயமென்பது

கொட்டுவன ஊதுவன எழுப்புவனவென்னுந்

தொடக்கத்தனவற்றிற்கும் படையென்பது

எய்வன எறிவன

வெட்டுவன குத்துவனவென்னுந் தொடக்கத்தனவற்றிற்கும், பொதுவாகலின், அடிசிலயின்றார், மிசைந்தார் எனவும்; அணியணிந்தார், மெய்ப்படுத்தார் எனவும்;

இயம்இயம்பினார், படுத்தார் எனவும்;

படைவழங்கினார், தொட்டார் எனவும்; பொதுவினையாற் சொல்லுக. அடிசிறின்றார்,

பருகினார் எனவும்; அணி கவித்தார், பூண்டார் எனவும்; இயங்கொட்டினார், ஊதினார்

எனவும்; படையெறிந்தார், எய்தார் எனவும்; ஒரு சார்க்குரிய வினையாற்சொல்லின் மரபு வழுவாமென்பது.

பொருளின் பொதுமையைச்

சொன்மேலேற்றி வேறு வினைப்

பொதுச்சொலென்றார்.

(சகூ)

சஎ. எண்ணுங் காலு மதுவதன் மரபே.

இதன் பொருள்: வேறுவினைப் பொருள்களைப் பொதுச் சொல்லாற் கூறாது பிரித்தெண்ணுமிடத்தும் அதனிலக்கணம் ஒருவினையாற் கிளவாது பொதுவினையாற் கிளத்தலேயாம் என்றவாறு.

(சசு) பொருளின் பொதுமைமையச் சொன்மேலேற்றி வேறுவினைப்பொதுச்சொல் என்றார், என்றது வெவ்வேறு வினைக்குப் பொதுவாய் வருவது சொல்லன்று பொருள்; அப்பொருளின் பொதுமையை ஒற்றுமைபற்றிச் சொன்மேலேற்றிப் பொதுச்சொல்லென்றார் என்றபடி. பொது அடிசில் என்னுஞ் சொல்லன்று; அதனுணர்த்தப்படும் உணவு என்றபடி.





உதாரணம்: சோறுங்கறியுமயின்றார், யாழுங்குழலுமியம்பினார் எனவரும். சோறுங்கறியுந் தின்றார், யாழுங்குழலு மூதினார் எனின் வழுவாம். அஃதேல், 'ஊன்றுவை

கறிசோறுண்டு வருந்துதொழி லல்லது'
(புறம்-கச) என்புழி உண்டென்பது
ஒன்றற்கேயுரிய வினையாகலின் வழுவாம்
பிறவெனின் :—உண்ட லென்பது உண்பன
தின்பனவெனப் பிரித்துக் கூறும்வழிச் சிறப்பு
வினையாம் ; பசிப்பிணி தீர நுகரப்படும்
பொருளெல்லாம் உணவெனப்படுமாகலிற்
பொதுவினையுமாம், அதனான் வழுவன் றென்பது.
கறியொழித்து ஏனையவற்றிற்கெல்லாம் உண்டற்
றொழி லுரித்தாகலிற் பன்மைபற்றிக்
கூறினாரெனினுமமையும். ()

சஅ. இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந்
திசையா.

**இதன் பொருள் :** இரட்டித்து நின்று
பொருளுணர்த்துஞ் சொற்கள் இரட்டித்து
நிற்றலிற் பிரிந்து நில்லா என்றவாறு.

**உதாரணம் :** சுருசுருத்தது,
மொடுமொடுத்தது என இசை பற்றியும்,
கொறுகொறுத்தார், மொறுமொறுத்தார் எனக்
குறிப் புப்பற்றியும், குறுகுறுத்தது,
கறுகறுத்தது எனப் பண்பு பற்றியும்

இரட்டித்து வந்தன பிரிந்து நில்லாமை கண்டுகொள்க. அஃதேல், குறுத்தது குறுத்தது எனப் பிரிந்தும் வந்தனவா லெனின் :— அற்றன்று. குறுத்ததென்பதோர் சொல் குறுவென் பதோர் சொல்லடுத்துக் குறுகுறுத்ததென நின்று குறுமை மிகுதியுணர்த்திற்றாயிற் குறுத்ததென்பது குறுமைபுணர்த்தக் குறுவென்பது

மிகுதியுணர்த்திற்றுதல்வேண்டும் குறுவென்பது மிகுதியுணர்த்தாமையிற் குறுகுறுத்ததென்பது ஒரு சொல்லாய் நின்று அப்

பொருளுணர்த்திற்றெனவே படும். அதனாற்றான்

---

(சஎ) ஏனையவென்றது ஊன், துவை, சோறு, கறி என்பவற்றுள் கறி ஒழிந்தவற்றை. உண்டு என்பது உண்பனவற்றிற்குச் சிறப்புவினையாயும் நிற்கும். நுகரப்படுவனவெல்லாவற்றிற்கும் பொது வாயும் நிற்குமென்றபடி.

(௬௮) குறுகுறுத்தது என்பது குறுத்தது, குறுத்தது எனப் பிரிந்தும் வந்ததாலெனின் அங்ஙனம் வாராது. ஏனெனில் குறுகுறுத் தது என்பது மிகக் குறுத்தது என்னும் பொருளில் வருதலின் குறு, மிகுதியுணர்த்தக் குறுத்தது

என்பது குறுமையையுடையது என்னும் யாக்கம்]



அக்குறுமை மாத்திரமுணர்த்தி நிற்பது அதனின் வேறுமென் ..ஆ.

கறுகறுத்ததென்பதுக்கும் ஈதொக்கும். கறுத்தது கறுத் த்து, குறுத்தது குறுத்தது எனச் சொன்முழுவதும் இருமுறை வாராமையின், அடுக்கன்மை யறிக.

ஈண்டிரட்டைக் கிளவி யென்றது, மக்களிரட்டை விலங் கிரட்டைபோல வேற்றுமையுடையனவற்றையன்றி இலையிரட் டையும் பூவிரட்டையும்போல ஒற்றுமையும் வேற்றுமையு முடையனவற்றை யென்றுணர்க.

இரட்டித்து நின்று பொருளுணர்த்துவனவற்றைப் பிரித்து வழங்கன் மரபன்மையின், மரபுவழுக்காத்தவாறு.

(சஅ)

சகூ. ஒருபெயர்ப் பொதுச்சொ லுள்பொருளொழியத்
தெரிபுவேறு கிளத்த றலைமையும் பன்மையு
முயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்.

இதன் பொருள்: உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் ஒருபெயராய்ப் பலபொருட்குப் பொதுவாகிய சொல்லைப் பிற உள்பொருளொழியத் தெரிந்துகொண்டு பொதுமையின் வேறாகச் சொல்லுக தலைமையானும் பன்மையானும் என்றவாறு.

தெரிபென்பதற்குச் செயப்படுபொருள் தலைமையும் பன்மையு மேயாம்.

---

பொருளில் வருதல் வேண்டும். குறு மிகுதிப்பொருளுணர்த்தாமையின் குறுகுறுத்தது என இரட்டையாய் நின்றே மிகக் குறுத்தது என்னும் பொருளை உணர்த்துமென்றபடி. அக்குறுமை

மாத்திரம் உணர்த்தி நிற்பது என்பது குறுத்தது குறுத்தது எனவரும் அடுக்கை. அது குறுமை என ஒரு பொருளை மாத்திரம் உணர்த்து மென்றபடி. குறுத்தது குறுத்தது என்பதிற்போல குறுகுறுத்தது என்பதில் முதற் சொல் முழுதும் வாராமையின் அடுக்கன்மையறிக. ஒருசொல் முழுதும் இருமுறை வாராமையின் அடுக்கன்றென்பர் நச்சினார்க்கினியர்.

(சுகூ) ஒருபெயர்ப்

பொதுச்சொல்—ஒருபொருட்கு இடப்பட்ட பெயராய்ப் பலபொருட்கு உரியதாயுள்ள சொல். ஈண்டு ஒற்றுமை

பற்றிப் பொருளின் பொதுமையைச்

சொன்மேலேற்றிப் பொதுச் சொல் என்றார் என்க. அவை, சேரி தோட்டம் முதலியன. சேரி—

பலரிருப்பது. 'சேரி—பலரிருப்பது' என்பர்

இளம்பூரணர். 'பல

குடி சேர்ந்தது சேரி; பல பொருள் தொக்கது தோட்டம்' என்பர்



பிறரும் வாழ்வாருளரேனும் பார்ப்பனச்சேரியென்றல் உயர் திணைக்கட் டலைமைபற்றிய வழக்கு. எயினர்நாடென்பது அத் திணைக்கட் பன்மைபற்றிய வழக்கு. பிறபுல்லு மாவுமுளவே னும் கமுகந்தோட்டமென்றல் அஃறிணைக்கட் டலைமைபற்றிய

வழக்கு. ஒடுவங்காடென்பது அத்திணைக்கட் பன்மைபற்றிய வழக்கு. பார்ப்பார் பலராயினுங் கழுகு பலவாயினும் அவை தாமே பன்மைபற்றிய வழக்காம்.

பலபொருளொருசொல்லினீக்குதற்கு ஒருபெயரென்றார்.

ஒன்றெனமுடித்தலென்பதனான், அரசர்பெருந்தெரு, வயிர கடகம், ஆநீண்டுகுற்றி, ஆனநர், எருத்தில் எனப் பொதுச் சொல்லின்றி வருவனவுங் கொள்க

உள்பொருளெல்லாங் கூறுது ஒன்றனையெடுத்துக் கூறுதன் மரபன்றாகலின், பொதுச்சொன்மேற் சொன்னிகழுமா றுணர்த் திய முகத்தான் மரபுவழுக்காத்தவாறு. (சகூ)

---

நச்சினார்க்கினியர். தெரு முதலியன அன்னவன்றி ஒரு பொருட்கே யுரியன. அரசர் பெருந்தெரு அரசருக்கே யுரியது. பொதுச்சொல் என்றால், வாரணம்போன்ற பல பொருளைத் தருஞ் சொல்லையுங் குறிக்குமாதலின் அப்பலபொருளொருசொல்லைக் குறியாமனீக்குதற்கு ஒருபெயர்ப் பொதுச்சொல் என்றார் என்பது கருத்து. பலபொருளொரு சொல் — பல பொருளை யுணர்த்தி வருவது. அன்னதன்றி இது பல பொருட்குரியதாய் வருவது என்றபடி. பெயர் — ஈண்டு நாமம். பலபொருளொருசொல், ஒவ்வொருபொருட்கும் வேறுவேறு சொல்லா கும் என்பதும், எழுத்தொப்புமைபற்றி ஒருசொல் என்பர் என்பதும் சேனாவரையர் கருத்து. கிளவி—டுஎ௲ம் சூத்திர உரை நோக்குக.

ஆ நீண்டு குற்றி என்புழிக் குற்றி ஆ நீண்டற்கென்றே நடப்பட் டது; ஆயினும் பிறவுந் தீண்டு மென்றபடி.

அரசர் பெருந்தெரு — அரசர் செல்லுதற்கெனச் சமைக்கப்பட்ட பெருந்தெரு. ஆதலின் ஒரு பொருட்கே யுரியதாயிற்று. பிறருஞ் செல்லலா மென்றபடி.

வயிரகடகம்—வயிரத்தாற் செய்த கடகம். (பிறமணிகளுமிருக்கலாம்)

ஆனதர்—ஆன் செல்லுகின்ற வழி. பிறவுஞ் செல்லலாம்.

எருத்தில் — எருத்துமாடு கட்டற்கியற்றிய கொட்டில். பிறவு நிற்கலாம்.



## அ௫

௫௦. பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லா
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.

**இதன் பொருள் :** உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரினும் வினையினும் பொதுமையிற் பிரிந்து ஆண்மைக்கும் பெண்மைக்குமுரியவாய் வருவனவெல்லாம் வழுவாகா, வழக்கு வழிபட்டனவாகலான் என்றவாறு.

உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணுமென்பது அதிகாரததான வநதது.

'தொடியோர் கொய்குழை யரும்பிய குமரி ஞாழல்' என்பது உயர்திணைக்கட்பெயரிற் பிரிந்த ஆண்ணொழி மிகுசொல். வடுகரசராயிரவர் மக்களையுடையரென்பது பெயரிற்பிரிந்த பெண்ணொழி மிகுசொல். இவர்வாழ்க்கைப்பட்டாரென்பது தொழிலிற் பிரிந்த ஆண்ணொழி மிகுசொல். இவர் கட்டிலேறினர் என்பது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல். நம்பி நூறெருமையுடைய னென்பது அஃறிணைக்கட் பெயரிற் பிரிந்த ஆண்ணொழி மிகுசொல். நம்மரச னாயிரம் யானையுடைய னென்பது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல். தொடிசெறித்தலும், மக்கட்டன்மையும் இல்வாழ்க்கைப்படுதலும், கட்டிலேறுதலும், எருமைத் தன்மையும், யானைத்தன்மையும் ஒழிக்கப்படும் பொருட்குமுண்மையாற் பொதுவாய் நிற்கற்பாலன ஒருபாற் குரியவாய் வருதலின், மரபுவழு வமைத்தவாறு.

பிறசொல்லாற்பிரிவன 'வேறுபடு வினையினு மினத்தினுஞ் சார்பினும்' (சொல்-௫௩) எனவும், 'தெரிநிலை யுடைய வஃறிணை யியற்பெயர்' (சொல்-௧௭௧) எனவும், 'வினையுங் காலத் தத்த மரபின் வினையோடல்லது பாறெரிபிலவே' (சொல்-௧௭௨) எனவும் முன்னேதப்படுதலானும், ஆண்டு வழுவின்மையானும், ஈண்டுத் தாமே பிரிவனவே கொள்க.

தம்மாற்றும்பிரியுமென்பார் 'பெயரினுந் தொழிலினும்' என்றார். பெயர்க்கண்ணும் வினைக்கண்ணுந் தாமே பிரிவனவெனினுமமையும்.

---

(௫௦) தம்மாற் பிரிவதென்றது, பிறிதொன்றாற் பிரியாது தாமே பிரிவதென்றபடி. காரணங் கூறாது வாளா, பெயரினும், வினையினும், பிரிபவை யென்றதனல் தாமே பிரியுமென்பது பெறப்பட்டது என்றபடி.

அஃறிணைக்கட் டொழிவிற் பிரிந்தன வுளவேற் கண்டுகொள்க. இன்றிவ்வூர்ப் பெற்றமெல்லா மறங்கறக்கும், உழவொழிந்தன என உரையாசிரியர் காட்டினாராலோவெனின் :—பெற்றமென்னும் பொதுப்பெயர் கறத்தலு முழுதலுமாகிய சிறப்புவினையாற் பொதுமை நீங்குதல் வழுவன்மையான் ஈண்டைக்கெய்தாமையின், அவர்க்கது கருத்தன்றென்பது. (௫௦)

## ௫௧. பலவயி னானு மெண்ணுத் திணை விரவுப்பெய ரஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.

இதன் பொருள் : திணை விராயெண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச்சொற் கொண்டு முடியும் என்றவாறு.

உதாரணம் :

'வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார்'

எனவும்,

' கடுஞ்சினத்த கொல்களிறுங்
கதழ்பரிய கலிமாவு
நெடுங்கொடிய நிமிர்தேரு
நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும்.'

(புறம்–௫௫)

எனவும் வரும்

எண்ணுத்திணை விரவுப்பெயர் பெரும்பான்மையும் அஃறிணைச்சொற் கொண்டு முடியுமெனவே, சிறுபான்மை உயர்திணைச் சொற் கொண்டு முடியவும் பெறுமென்பதாம். உதாரணம்:

' பார்ப்பா ரறவோர் பசுப்பத்
தினிப்பெண்டிர்

மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டு'



(சிலப்–வஞ்சினமாலை) எனவும்,

' பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி

காற்ற வழிவிலங்கி னூரே பிறப்பிடைப்
போற்றி யெனப்படு வார்'

(ஆசாரக்கோவை—கூச) எனவும் வரும்.

இருதிணைப்பெயரும் விராய்வந்து ஒருதிணைச்சொல்லான் முடிதல் வழுவாயினும், செய்யுளகத்தமைகவெனத் திணைவழு வமைத்தவாறு.

'பாணன் பறையன் றுடியன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை'

(புறம்—கருரு)

என விருதிணைப்பெயரும் விரவி வாராது உயர்திணைப் பெயரே வந்து செய்யுளுள் அஃறிணை முடிபு கொண்டனவென்று உரையாசிரியர் கூறினாலெனின் :—பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கேற்ற தொகை கொடுத்தல் வழூ வன்மையான்,

அவ்வுரை போலிபுரையென்க குடியென்று கூட்
டாதவழிப் பாணன் பறையன் றுடிபன்
கடம்பனென் றிந்நால் வருமல்லது
குடியில்லையென்றேயாம்.

' தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம்
மான்றேரு
மெம்மை நினையாது விட்டனரேல்
விட்டகல்க ' எனவும்,

' யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான் '

எனவும், இவை யெவ்வாறு
வந்தனவாமெனின் :—அவை தலை மைப்
பொருளையும், தலைமையில் பொருளையும்
விராயெண்ணித்

தலைமைப்பொருட்கு வினை கொடுப்பவே தலைமையில் பொருளு
முடிந்தனவாவதோர் முறைமைபற்றி வந்தன, எண்மைக்கெய்தா
னென்பது. தானுந் தன் புரவியுந் தோன்றினா
னென்பதுமது. (ருக)

ருஉ. வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
*

விணைவேறுபடாஅப் பலபொரு
ளொருசொலென்
றாயிரு வகைய பலபொரு
ளொருசொல்.

---

(௫௧) குடி என்று சுட்டுதலாவது, பாணன் முதலிய பெயர்கள் தத்தம் பொருளைச் சுட்டாது தத்தம் குடியைச் சுட்டி நிற்றல். என்றது பாணன் குடி பறையன் குடி என நிற்றலை. ஈண்டுக் காட்டிய இரு செய்யுளுக்கும் தலைமைப் பொருள் தலைவனுக்கும். அஅ



இதன் பொருள் : விணைவேறுபடும் பலபொருளொருசொல் லும் விணைவேறுபடாப் பலபொரு ளொருசொல்லுமென இரண்டு வகைப்படும் பலபொருளொருசொல் என்றவாறு.

இனமுஞ் சார்பு முளவேனும் வேறுபடுத்தற்கண் விணை சிறப் புடைமையின், அதனாற் பெயர் கொடுத்தார், ஆதீண்டுகுற்றி யென்பதுபோல.

இலக்கணச் சூத்திரங்களே யமையும் இச்சூத்திரம் வேண்டா பிறவெனின் :— இருவகையவென்னும் வரையறை அவற்றாற் பெறப்படாமையானும், வகுத்துப் பின்னு மிலக்கணங் கூறியவழிப் பொருள் இனிது விளங்குதலானும், இச்சூத்திரம் வேண்டு மென்பது.
(ருஉ)

ருங. அவற்றுள்
வினைவேறு படூஉம் பலபொரு
ளொருசொல்
வேறுபடு வினையினு மினத்தினுஞ்
சார்பினுந்
தேறத் தோன்றும் பொருடெரி
நிலையே.

இதன் பொருள் : அவ்விரண்டனுள்ளும், வினைவேறுபடும் பலபொருளொருசொல், ஒருபொருட்கே சிறந்த வினையானும், இனத்தானும், சார்பானும், பொருடெரிநிலைக்கட்

பொதுமை நீங்கித் தெளியத்தோன்றும் என்றவாறு.

மாவென்பது ஒருசார்விலங்கிற்கும் ஒருமரத்திற்கும் வண்டிற்கும் பிறபொருட்கும் பொது. குருகென்பது ஒருபறவைக்கும் உலைமூக்கிற்கும் வளைக்கும் பிறவற்றிற்கும் பொது. நாகமென்பது மலைக்கும் ஒருசார்மரத்திற்கும் யானைக்கும் பாம்பிற்கும் பிறவற்றிற்கும் பொது. சேவென்பது ஒருசார்ப்பெற்றத்திற்கும் ஒரு மரத்திற்கும் பிறவற்றிற்கும் பொது.

---

(ரு௨) இலக்கணச் சூத்திரமென்றது, வினை வேறுபடுஞ் சொல் விது வினை வேறுபடாச் சொல்விது ான அவற்றின் இலக்கணங் கூறுஞ் சூத்திரங்களை. [ அவை ருக, ருச-ம் சூத்திரங்கள்.]

யாக்கம்] சொல்லதிகாரம்

அ௰க

மாப்பூத்தது; மாவுமருது மோங்கின என வேறுபடு வினை யானும் இனத்தானும், மரமென்பது விளங்கிற்று. கவசம்புக்கு நின்று மாக்கொணுவென்றவழிக் குதிரையென்பது சார்பினுல் விளங்கிற்று. குருகுமுதலாயினவு மன்ன.

வேறுபடுவினையினு மென்ருரேனும், ஒன்றென

முடித்தலென் பதனுன், இம்மாவயிரம், வெளிறு என வேறுபடுக்கும் பெயருங் கொள்ளப்படும்.

இனத்தொடு சார்பிடை வேற்றுமை யென்னையெனின்: — ஒரு சாதிக்கணணைந்த சாதி இனமெனப்படும்; அணைந்த சாதி யன்றி ஒருவாற்ரு னியையுடைய்பது சார்பெனப்படுமென்பது. ()

ருசு. ஒன்றுவினை மருங்கி னென்றித் தோன்றும்

வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொன்

னினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.

இதன் பொருள் : வேறுபடாத வினை கொண்டவழி வேறு படாது தோன்றும் வினை வேறுபடாப் பலபொருளொருசொல் ஆராயுங்கால் கிளந்து சொல்லப்படும் என்றவாறு.

உதாரணம்: மாமரம் வீழ்ந்தது; விலங்குமா வீழ்ந்தது என வரும்.

வினைவேறுபடாப்

பலபொருளொருசொலென வேறுநிற்பன வில்லை வேறுபடுவினை முதலாயினவற்றுன் வேறுபடுவனதாமே பொதுவினை கொண்டவழி வினைவேறுபடாப் பலபொருளொரு சொல்லா மென்பது அறிவித்தற்கு ஒன்று வினைமருங்கி ஞென்

---

(ருக) ஒரு சாதிக்கண் அணைந்தசாதி யென்றது, ஒரு சாதிக்கண் சேர்ந்த சாதிகளே. மாவும், மருதுமோங்கின என்புழி மாவும் மருதும் மரச்சாதி என்றற்கண் இரண்டுஞ் சேர்ந்த சாதியாதல் காண்க. அங்ஙன மன்றிக் கவசமும் பாய்மாவும் ஒருவாற்றானியைபுடைமை காண்க. மாச்

செலுத்துவோன் சட்டையிட்டுக் கொண்டே செலுத்தல் வழக்கா தலின் ஒருவாற்ரு னியைபு என்ருர்.
12.
இதனைச் சந்தர்ப்ப மென்னலாம்.



றித் தோன்றுமென்ருர். 'ஒன்றுவினை மருங்கி னென்றித் தோன்றும்' என ஒரு சூத்திரமாக உரையாசிரியர் பிரித்தாராலெனின் :— அங்ஙனம் பிரிப்பின் ஒன்றுவினை மருங்கினென்றித் தோன்று தலும் வினைவேறுபடூஉம் பலபொருளொருசொற்கே இலக்கண மாய் மாறுகோடலானும், வினைவேறுபடுவன தாமே பொதுவினை கொண்டவழி வினைவேறுபடாதனவாமென்பது அதனாற் பெறப் படாமையானும், அது போலியுரை யென்க.

முன்னும் பின்னும் வருஞ் சார்பு முதலாயினவற்ருற் குறித்த பொருள் விளங்காக்கால் கிளந்தே சொல்லுகவென யாப்புறுத் தற்கு 'கினையுங்காலை'

என்றூர்.

ஆங்கென்பது உரையசை:

குறிக்த பொருள் விளங்காமைக்கூறல் மரபன்மையின் மரபு வழுக் காத்தவாறு.

(ருச)

ருரு. குறித்தோன் கூற்றந் தெரிந்துமொழி கிளவி.

இதன் பொருள்: ஒருபொருள் வேறுபாடு குறித்தோன், அஃதாற்றன் முதலாயினவற்ருன் விளங்காதாயின், அதனைத் தெரித்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம்:

'அரிதாரச் சாந்தங் கலந்தது போல
வுருகெழத் தோன்றி வருமே - முருகுறழு
மன்பன் மலைப்பெய்த நீர்'

எனவும்,

---

(ருச) ஒன்று வினைமருங்கி ளென்றித்

தோன்று மென்பதை
வேறாகப் பிரிக்கின் முதற் சூத்திரத்திற்கே இலக்கணமாகி முடியுமாத லானும், வினை வேறுபடாப் பல பொருளென ஒருசொல் உள்ளதென வும் படுமாதலானும் அது பொருந்தாதென்பது கருத்து. வினையால் வேறுபடுஞ் சொற்களே பொதுவினை கொண்டவழி வினை வேறுபடாச் சொல்லாகு மென்க. மாவேறினான் என்பதுபோல. முதற் சூத்திரத் திற்கே இலக்கணமாதல்,— வினை வேறுபடும் பலபொரு ளொருசொல் வேறுபடு வினையைக் கொண்டு வேறுபடுதலன்றிப் பொது வினையைக் கொண்டும் வேறுபடுமென்றுதல் இப்பொருள் மேற் சூத்திரப்பொரு ளோடு மாறுகோடலின் "மாறுகோடலானும்" என்றார்.



'வாரு மதுச்சோலை வண்டுதிர்ந்த நாண்மலரா
ஞறு மருவி நளிமலைநன் னாட'

எனவும் வரும். 'கலந்ததுபோல வருமே யிலங்கருவி யன்பன் மலைப்பெய்த நீர்' எனவும், 'நாறு மருவி நளிமலை நன்னாட' எனவும் தெரித்து மொழியாதவழிக் குறித்தது விளங்காது வழூப்படுதலின் மரபுவழூக் காத்தவாறு. வடநூலார் இதனை நேய மென்ப.

'ஊட்டியன்ன வொண்டளிர்ச் செயலை'

என்புழி இன்னதனை யென்று தெரித்து மொழியாமையின் வழூவாம் பிற வெனின்

:—உவமையென்னு மலங்காரமாயினன்றே இன்னதொன் றனை யெனல் வேண்டுவது. செயலையுந் தளிரினது செய்யாத நிறத்தைச் செய்ததுபோலக் கூறுங் கருத்தினனுகலிற் பிறிதோ ரலங்காரமாம். அதனுன் அது கடாவன் றென்பது.

'படுத்துவைத் தன்ன பாறை மருங்கி

னெடுத்து நிறுத்தன்ன விட்டருஞ் சிறுநெறி' —

(மலைபடு—கரு) என இன்னோரன்ன வெல்லாம் அவ் வலங்காரம் பற்றி வந்தன.

'ஒல்லேங் குவளைப் புலாஅன் மகன்மார்பிற்

புல்லெருக்கங் கண்ணி நறிது'

என்புழிக் குவளை புலானுறுதற்கும் எருக்கங்கண்ணி நறிதாதற் கும் காரணங் கூறாமையின் வழூவாம். பிறவெனின் :- புதல்வற் பயந்த பூங்குழன் மடந்தை பரத்தையிற் பிரிந்து வந்த கிளவ னொடு புலந்துரைக்கின்ற ளாகலிற் குவளை புலானுறுதற்கு அவன் றவற்றோடு கூடிய அவள் காதல் காரணமென்பதூஉம், எருக்கங்

கண்ணி நறிதாதற்கு மகிழ்நன் செய்த துனி கூர் வெப்பம் முகிழ் நகை முகத்தாற் றணிக்கும் புதல்வன்மேல் ஒருகாலைக் கொரு காற் பெருகுமன்பு காரணமென்பதூஉம் பெறப்படுதலின், வழுவாகா தென்பது.

மீக்கூற்ற மென்புழிப்போலக் கூற்றுக் கூற் ற மெ ன நின்றது.

(௫௫)

---

(௫௫) தெரிந்து மொழியாமையை (குறித்த பொருளை விளக்கற் கேற்ற சொற்களில்லாமற் கூறலை) வடநூலார் நேயம் என்னுங் குற்ற மென்ப. மீக்கூற்றம் என்பதுபோலக் கூற்றுக் கூற்றம் என



௫௬. குடிமை யாண்மை யிளமை மூப்பே
யடிமை வன்மை விருந்தே குழுவே

பெண்மை யரசே மகவே குழவி
தன்மை திரிபெய ருறுப்பின்
கிளவி
காதல் சிறப்பே செறற்சொல்
விறற்சொலென்
றூவறு மூன்று முளப்படத்
தொகைஇ
யன்ன பிறவு மவற்றொடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி
யெல்லா
முயர்திணை மருங்கி னிலையின
வாயினு
மஃறிணை மருங்கிற் கிளந்தாங்
கியலும்.

**இதன் பொருள் :** குடிமை முதலாக
விறற்சொலீறாகச்
சொல்லப்பட்ட பதினெட்டு முளப்பட
அன்னபிறவும் அவற்

ஞடு பொருந்தித் தொக்கு பின்னத்தி னுணருங் கிளவிகளெல் லாம், உயர்திணைப்பொருண்மேல் நின்றனவாயினும், அஃறிணைப் பொருளை யுணர்த்திநின்ற வழிப்போல,
அஃறிணைமுடிபே கொள்ளும் என்றவாறு.

**உதாரணம் :** குடிமை நன்று, குடிமை தீது; ஆண்மை நன்று, ஆண்மை தீது என வரும். ஒழிந்தனவற்றிற்கும் இவ் வாறு பொருந்தும் வினை தலைப்பெய்க.

---

நின்றது" என்ற உரையால் குறித்தோன் கூற்றம் என்பதில் கூற்றம் என்பது சொல்லை என்பது பெறப்படும். படவே சொற்கும் பொருட்குமுள்ள வொற்றுமைபற்றிப் பொருள் என்று பொருள் கூறினர் என்பது பெறப்படும். தெரித்துமொழி கிளவி என்றதனால் வேறுபாடு என்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. நச்சினார்க்கினியர் தெரிவித்துச் சொல்லும் சொல்லாகச் சொல்லுக என்று கூறிய பொருளை நோக்கும்போது
மொழிகளாற் சொல்லுக
சேனவரையரும் தெரிவித்து மொழியும்
என்பதையே சுருங்கிய வாய்பாட்டால்
தெரித்துச் சொல்லுக எனக் கூறியிருக்கவேண்டும்.

இப்பொருட்குச் சொல்லுகவென்பது
அவாய்நிலையான் வருவிக்கப்பட்டதாகும்.
மொழிக என்றதனீறு தொக்குநின்றதென்பாரு முளர்.

செய்யாதநிறம்—இயற்கைநிறம்

பிறிதோரலங்காரம்—தற்குறிப்பேற்றம். யாக்கம்]



தன்மைதிரிபெயர் அலி. இதனோ டொருபொருட் கிளவி யாய் வருவனவுங் கொள்க.

உறுப்பின்கிளவி குருடு முடம் என்னுந் தொடக்கத்தன. காதற்சொல் பாவை யானையென ஒப்புமை கருதாது காதல்பற்றி வருவன. சிறப்புச்சொல் கண்போலச் சிறந்தானைக் கண்ணென்றலும், உயிர்போலச் சிறந்தானை உயிர் என்றலும் என இவை முதலாயின. செறற்சொல் செறுதலைப் புலப்படுக்கும் பொறியறை கெழீஇயிலி யென்னுந் தொடக்கத்தன. விறற்சொல் விறலை யுணர்த்தும் பெருவிறல் அருந்திறலென்னுந் தொடக்கத்தன. தன்மை திரிபெயர் முதலாயின பொருள்வகையான் ஆறாக வடக்கப்பட்டன.

குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, பெண்மை, உறுப்பின்கிளவி, சிறப்புச்சொல், விறற்சொல் என்பன உயர்திணைக்கண் ஆகுபெயராயல்லது வாரா; அல்லன இருதிணைக்கண்ணும் ஒத்த வுரிமையவெனக் கொள்க. காதல் பற்றிச் சிறுவனை 'யானையென்றலும் ஆகுபெயராமன்றோ வெனின்:—யாதானுமோ ரியைபுபற்றி யொன்றன்பெய ரொன்றற் காயது ஆகுபெயராம்; இயைபு கருதாது காதன் முதலாயின வற்றான் யானையென்றவழி ஆகுபெயருள் அடங்காவென்பது. சிறுவனை யானையென்றலும் ஒன்றன்பெயர் ஒன்றற்காத லொப் புமையான் ஆகுபெய ரென்பாருமுளர்.

சொல்லானன்றித் திணைவேறுபாடு சொல்லுவான் குறிப் பொடுபடுத் துணரப்படுதலின். 'முன்னத்தி னுணருங் கிளவி' என்றார்.

(௫௬) இதனோ டொருபொருட்கிளவியாய் அஃறிணை முதலியவற்றை.

வருவனவென்றது

செறிதல்—அறிதல். பொறியறை—பொறியற்றது. காதறை. மூக்கறை என்பனவுமன்ன. கெழீஇயிலி—நட்பில்லாதது. ஒன்றன் பெயர் ஒன்றுக்காத லென்றது யானையின்பெயர் மகனுக்காதலே.



அஃறிணை முடிபின வென்றது அஃறிணைமருங்கிற் கிளந் தாங்கியலும் எனப் பொதுப்படக் கூறியவதனால், குடிமை நன்று, குடிமை நல்ல; அடிமை நன்று, அடிமை நல்ல என வேற்றுமை ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலும் கொள்ளப் படும்.

அன்ன பிறவு மென்றதனான் வேந்து வேள் குரிசில் அமைச்சு புரோசு என்னுந்

தொடக்கத்தனவுங் கொள்க.

குடிமை முதலியன உயர்திணை
புணர்த்தும்வழி அஃறிணை யான் முடிதல்
வழுவாயினும் அமைகவெனத் திணை வழு வமைத்த
வாறு.

(ருசு) ருள. கால முலக

முயிரே யுடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூத
ஞாயிறு திங்கள் சொல்லென
வரூஉ
மாயீ ரைந்தொடு பிறவு மன்ன
வாவயின் வரூஉங் கிளவி
யெல்லாம்
*பால்பிரிந் திசையா வுயர்திணை
மேன.

இதன் பொருள்: காலமுதலாகச் சொல்லப்பட்ட பத்தும் அத்தன்மைய பிறவுமாகிய அப்பகுதிக்கண் வருஞ் சொல்லெல் லாம், உயர்திணைச் செல்லாயினும், உயர்திணைக்கட்

பால்பிரிந் திசையா, அஃறிணைப்பாலா யிசைக்கும் என்றவாறு.

**உதாரணம்** : இவற்குக் காலமாயிற்று, உலகம் பசித்தது, உயிர் போயிற்று, உடம்பு நுணுகிற்று, தெய்வஞ் செய்தது, வினை விளைந்தது, பூதம் புடைத்தது, ஞாயிறு பட்டது, திங்களெழுந்தது, சொன் னன்று என வரும்.

பிறவு மென்றதனால், பொழுது நன்று, யாக்கை தீது, விதி வலிது, கனலி கடுகிற்று, மதி நிறைந்தது, வெள்ளி யெழுந்தது, வியாழ நின்று என்பன போல்வன கொள்க.

---

புரோக—புரோகிதன்.
"மடியாவுள்ளமொடு......புரோகமயக்கி" என்னும் பதிற்றுப்பத்து (ஏழாம்பத்து)ப் பதிக உரை நோக்குக். **யாக்கம்]**

காலமென்றது காலக் கடவுளை.
மக்கட் டொகுதியை.

உலகமென்றது . ஈண்டு

உயிரே யுடம்பேயெனப் பொதுவகையாற் கூறினரேனும், மக்களுயிரு முடம்புமே கொள்ளப்படும். என்னை? உயர்திணை முடிபுகொள்ளாவென விலக்கப்படுவன அவையேயாகலினென்பது. 'அஃறிணை யென்மனா ரவரல பிறவே' என்புழி அஃறிணையா யடங்கி உயர்திணை முடிபெய்தாமையின், அவையும் விலக்கற் பாட்டிற் கேலாவெனின்:—அற்றன்று: மக்கட்சுட்டுடைமையான் அவை உயர்திணையேயாமென்பது. யாதோ மக்கட்சுட்டுடைய வாறெனின்:—அறஞ்செய்து துறக்கம் புக்கான் எனவும், உயிர் நீத் தொருமகன் கிடந்தான் எனவும், உயிருமுடம்பும் அவரின் வேறன்றி அவராக வுணரப்பட்டு உயர்திணைக் கேற்ற முடிபு கொண்டு நிற்றலின் மக்கட்சுட்டுடைய வென்பது, ஓராவை எம் மன்னை வந்தாளென்றும் ஓரெருத்தை எந்தை வந்தானென்றும் உயர்திணை வாய்பாட்டாற் கூறியவாறுபோல, உயிரு முடம் பும் அவ்வாறு கூறப்பட்டன வென்று கொள்ளாமோவெனின்:— கொள்ளேம்: அவற்றான் வரும் பயனோக்கிக் காதலால் எம் மன்னை எந்தையென்றான் ஆண்டு; ஈண்டுக் காதன் முதலாயின வின்மையின் மக்கட்சுட்டுடைய வென்பது.

பால்வரை தெய்வமென்பது எல்லார்க்கு மின்பத் துன்பத் திற்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது. வினையென் பது அறத் தெய்வம். சொல்லென்பது நாமகளாகிய தெய்வம்.

அஃறிதல், குடிமை யாண்மை யென்பனவற்றோடு இவற்றிடை வேற்றுமை யென்னையெனின் :—அவை இருதிணைப் பொருட்கண்ணுஞ் சேறன்மாலைய ; இவை அன்னவல்ல வென்பது.

உலகமென்பது இடத்தையும் ஆகுபெயரான் இடத்துநிகழ் பொருளாகிய மக்கட்டொகுதியையு முணர்த்துமாகலான், இருதிணைக்கண்ணுஞ் சென்றதன்றோவெனின் :—அற்றன்று : வடநூலுள் உலகமென்பது இருபொருட்குமுரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட்டொகுதியைபுணர்த்தும் வழியும் உரிய பெயரேயாகலின் ஆகுபெயரன்று ; அதனால் ஒருசொல் இருபொருட்



கண்ணுஞ் சென்றதெனப்படாது இருபொருட்குமுரிமையான் இரண்டுசொல்லெனவே படுமென்பது. வேறுபொருளுணர்த்தலின் வேறுசொல்லாதலே துணிவாயினும், பலபொருளொருசொல்லென்புழி எழுத்தொப்புமை பற்றி ஒருசொல்லென்றார்.

மேலென்பது ஏழாம் வேற்றுமைப் பொருளுணர்த்துவதோரிடைச்சொல்லாகலின், ஈறு திரிந்து மேனவென நின்றது.

இதுவுந் திணைவழுவமைதி.

(ருஎ)

ருஅ. நின்றாங் கிசைத்த லிவணியல்
பின்றே.

இதன் பொருள்: ஈறு திரியாது நின்றாங்கு நின்று உயர் திணையா யிசைத்தல் ஈண்டியல்பின்று என்றவாறு.

ஈண்டென்றது காலமுதலாகிய சொற்களை. அவை இடையீடின்றி மேற்சொல்லப்பட்டு நிற்றலின் 'இவண்' என்றார்.

இவணியல்பின்றெனவே, குடிமை ஆண்மை முதலாயின சொல்லின்கண், குடிமைநல்லன்; வேந்து செங்கோலன் என நின்றாங்கு நின்று உயர்திணையாயிசைத்தல் இயல்புடைத்தென்பதாம்.

(ருஅ)

ருகூ. இசைத்தலு முரிய வேறிடத் தான.

இதன் பொருள்: காலமுதலாகிய சொல் உயர்திணையா யிசைத்தலுமுரிய, ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்டவழி என்றவாறு.

காலன் கொண்டான், உலகர் பசித்தார் என வாய்பாடு வேறு பட்டவழி உயர்திணையாய் இசைத்தவாறு கண்டுகொள்க. (ருகூ)

(ருஎ) எழுத்தொப்புமை யென்றது, திணைப் பொருளை உணர்த்தும் வழியும் உலகமென்புழி, உயர் அஃறிணைப் பொருளை உணர்த்தும் வழியும் சொல்லான் வேறுபினும் யிருத்தலே.

எழுத்தான் ஒன்று யாக்கம்].

கூo. எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே.

இதன் பொருள்: இனமாகிய பலபொருட்கண் ஒன்றனை வாங்கிக் கூறியவழி அச்சொற் றன் பொருட்கினமாகிய பிற பொருளைக் குறிப்பாலுணர்த்தலு முரித்து என்றவாறு.

உம்மை எதிர்மறையாகலான் உணர்த்தாமையு முரித் தென்பதாம்.

உதாரணம்: அறஞ்செய்தான் றுறக்கம் புகும் எனவும், 'இழிவறிந் துண்பான்க ணின்பமெய்தும்' எனவும் வரும் இவை

சொல்லுவார்க்கு இனப்பொருளியல்புரைக்குங் குறிப்புள்வழி, மறஞ்செய்தான் றுறக்கம் புகான், கழிபேரிரையன் இன்பமெய் தான் என வினஞ் செப்புதலும், அக்குறிப் பில்வழி இனஞ் செப்பாமையுங் கண்டுகொள்க.

எடுத்தபொருளை உணர்த்துமொழியை 'எடுத்த மொழி' என்றார்.

இனனல்பொருளி னீக்குதற்கு 'இனம்' என்றார்.

அஃதேல், மேற்சேரிக் கோழி யலைத்தது எனக் கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டது எனவும், குடங்கொண்டான் வீழ்ந்தான் எனக் குடம் வீழ்ந்தது எனவும், இவை பினஞ் செப்புமென்றும், ஆ வாழ்க அந்தணர் வாழ்க என்பன இனஞ்செப்பா வென்றும் உரையாசிரியர் கூறினாலெனின்:—அற்றன்று: கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டலின்றி மேற்சேரிக் கோழி யலைத்த லமை யாமையானும், குடம் வீழ்தலின்றிக் குடங்கொண்டான் வீழ்த லமையாமையானும், கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டலும் குடம் வீழ்தலும் சொல்லானன்றி இன்றியமையாமையாகிய பொரு

(௬௦) புகையாகிய பொருள் தன்னோடியைபுடைய நெருப் பென்னும் பொருளை இயைபான் உணர்த்தல்போல்வனவே பொருளாற்றல் என்பதும், அறஞ் செய்தான் துறக்கம் புகுமென்ற தொடர்மொழிப் பொருள் மறஞ்செய்தான் நரகம் புகுமென்னும் தனக்கு இனமான தொடர்மொழிப் பொருளைக் குறிப்பாலுணர்த்தல் போல்வனவே சொல்லாற்றலென்பதும் சேனவரையர் கருத்து. ஆத
13



[கிளவி ளாற்றலாற் பெறப்படுமாகலான் ஈண்டைக்கெய்தா, இது சொல் லாராய்ச்சியாகலா னென்பது. இன்னோரன்ன சொல்லாற்றலாற் பெறப்பட்டவெனின் :—புகையுண்டென்றவழி எரியுண்மை பெறு தலுஞ் சொல்லாற்றலாற் பெறப்பட்டதா மென்பது. இனி ஆ வாழ்க அந்தணர் வாழ்க என்புழிச் சொல்லுவான் ஒழிந்த விலங் கும் ஒழிந்த மக்களுஞ் சாகவென்னுங் கருத்தினனாயின் இவையு மினஞ் செப்புவனவன்றோ வென்பது. அதனான் அவை போலி யுரையென்க.

ஒருதொடர் ஒருபொருளுணர்த்தி யமையாது வேறொரு பொருளுங் குறித்து நிற்றல் வழுவாயினும் அமைகவென மரபு வழுக் காத்தவாறு.

(௩௦)

௩௧. கண்ணுந் தோளு முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக் கியலு மெழுத்தலங்
கடையே.

தம்வினைக் கியலு மெழுத்தான் முடிதலும் தம்முதல் வினைக் கியலு மெழுத்தான் முடிதலுமெனச் சினைநிலைக்கிளவி இருமுடி புடையவற்றுள், முதல்வினைக் கியலு மெழுத்தான் முடிவுழியென் பார், தம்வினைக் கியலு மெழுத்தலங் கடை யென்றார்.

இதன் பொருள்: கண்முதலாயவும் பிறவும் பன்மை குறித்துநின்ற சினைநிலைக்கிளவி; அவை தம் வினைக்கியலுமெழுத் தான் முடியாது தம் முதல்வினைக்கியலுமெழுத்தான் முடியும் வழிப் பன்மையாற் சொல்லப்படும் யாப்புறவுடையவல்ல; முத லொன்றாயின் ஒருமையானும், பலவாயிற் பன்மையானுங் கூறப் படும் என்றவாறு.

---

லாற் சேனாவரையர் புகையா லனல் பெறல் போலவே, குடங் கொண் டான் வீழ்ந்தமையின் அவனுடையைபுபட்ட குடமும் வீழ்ந்தது என்பதும், மேலைச்சேரிக் கோழி அலைத்தது என்றதனானே அத் தொழிற்கியைபுடைய மற்றொன்று அலைப்புண்டதென்பதும் ஒரு பொருளோடு மற்றொரு பொருட்குள்ள இயைபுபற்றி அறியப்படுத லின் பொருளாற்றலான் என்றார் என்க.



உதாரணம்: கண்ணல்லள், தோளல்லள், முலைநல்லள் எனவும்; கண்ணல்லர்,

தோணல்லர், முலைநல்லர் எனவும் வரும்.

பிறவுமென்றதனாற் புருவங் காதென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க.

பன்மைகூறுங் கடப்பாடிலவேயென்றதனாற் பால்வழுவும், தம்வினைக்கியலுமெழுத்தலங்கடையென்றதனாற் றிணைவழுவும் அமைத்தார்.

---

(சுசு) கண் முதலிய சினைகள் தமக்குரிய அஃறிணைப்பன்மை விகுதியான் முடியாது தம் முதலாகிய உயர்திணைக்குரிய விகுதியான் முடியுங்கால், முதல் (கருத்தா) ஒன்றுயின் ஒருமை விகுதியானும், முதல் (கருத்தா) பலவாயிற் பன்மை விகுதியாலும் முடியுமென்பது இச்சூத்திரக் கருத்து. உதாரணம்: சாத்தி கண்நல்லள், சாத்திகள் கண்நல்லர் என வரும். இவ்வுதாரணங்களுள், கண்ணாகிய சினை தன் வினை விகுதியான் முடியுங்கால், கண்நல்லன என (அகரவிகுதியான்) முடிதல் வேண்டும். அங்ஙனம் முடியாமல் தன் முதலுக்குரிய விகுதியான் முடியுங்கால், எழுவாய் சாத்திஎன ஒருமை யாயவழி அதற்கேற்பக்

கண்ணால்லள் என (அள் என்னும்) ஒருமை விகுதியானும், சாத்திகள் எனப் பன்மையாயவழி, அதற்கேற்ப கண் நல்லர் என அர் என்னும் பன்மைவிகுதியானும் முடிந்து நிற்கும் என்றபடி. ஏனைய தோண் முதலியவற்றிற்கும் இவ்வாறே கொள்க.

இங்கே நல்லன என்னும் அஃறிணை வினையிற் பகுதியே

தம் முதலுக்குரிய அள், அர் என்னும் விகுதிகளைப்பெற்று நல்லள், நல்லர் என நின்றதெனக் கொள்க. ஆதலின், "உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்—அதனொடு சார்த்தின் அத்திணை முடியின" என்னும் நன்னூற் சூத்திரத்தில், 'அதனொடு சார்த்தின்' என்பதற்கு, அதனொடு தம் வினையைச் சார்த்திச் சொல்லுமிடத்து என்று பொருள் கோடலே பொருத்தமாம். இக்கருத்து இலக்கண விளக்க நூலாசிரியருக்கும் உண்டு என்பதை அவருரை நோக்கித் தெளிந்து கொள்க. சங்கரநமச்சிவாயப் புலவருக்கும் இக்கருத்து உண்டு என்பதை வினையியல் உரு-ம் சூத்திரத்துள் உரைத்த விரிவுரை நோக்கித் தெளிக.

பன்மை கூறுங் கடப்பாடிலவே என்றதனாற் பால்வழுவமைத்

தார் என்றது, பன்மை கூறுங் கடப்பாடிலவே என்றதனால் ஒருமையாலுங் கூறலாம் என்பதைப் பெறப்படவைத்து அவ்வொருமை

[கிளவி

பன்மை கொண்டன, பன்மையொருமை மயக்கமில்லாத் திணைவழுவாகலின், தம்வினைக்கியலு மெழுத்தலங்கடை யென் பதனான் அமைக்கப்படும்.

மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் என ஒருமைச் சினைப் பெயர் நின்று உயர்திணை கொண்டனவும், நிறங்கரியள், கவவுக் கடியள் எனப் பண்புந்தொழிலும் நின்று உயர்திணைகொண்ட னவும் தன்னினமுடித்த லென்பதனு னமைக்கப்படும்.

கோடு கூரிது களிறு, குளம்பு கூரிது குதிரை என வஃ றிணைப் பன்மைச் சினைப்பெயர் நின்று முதல்வினையாகிய ஒருமை யான் முடிந்தனவும் அமையுமாறென்னை யெனின்:—ஆண்டுப் பன்மையொருமை மயக்கமல்லது திணைவழுவின்மையின் ஈண்

யொடு கண் முதலிய பன்மைச் சினைகள் முடியினும் அமையுமெனப் பால்வழுவமைத்தமையை.

தம் வினைக்கியலு மெழுத்தலங்கடை என்றதனாற் றிணைவழு வமைத்தார் என்றது, தம் வினைக்கியலு மெழுத்தல்லாதது உயர்திணை வினைக்கியலும் எழுத்தேயாகலின் அவ்வுயர்திணை வினைக்கியலும் எழுத்துத் தம்வினைக்கியலு மெழுத்தன்றாகலின் அதனொடு முடிதல் திணைவழுவாமென வழுவமைத்தமையை.

இவற்றுள் ஒருமைவிகுதி கொண்டதைப் பால்வழுவென்றமை யாற் றிணைவழுவன்று என்றார் என்பது கருத்தன்று. தம்வினைக் கியலு மெழுத்தலங்கடை யெனவே திணைவழுவென்பதும், பெறப்படும். ஏனெனின்? ஒருமை விகுதியும் உயர்திணை விகுதியேயாதலின்.

ஆகோடு கூரிது என்புழிக் கூரிது என்னுஞ் சினை வினையிலுள்ள துவ்விகுதியோடு, சினையாகிய கோடும், கோடுகூரிது என முடியும், முதலாகிய ஆவும் ஆகூரிது என முடியும். ஏனெனின்? அஃறிணைக் குரிய எழுத்து முதல் சினை இரண்டற்கும் ஒன்றேயாகலின். ஆவந் தது என்புழி, ஆவுக்குரிய வந்தது என்னும் வினையிலுள்ள து என்னும் ஒருமை விகுதியே கூரிது என்னும் சினை வினைக்கும் விகுதியாய் நிற்றலின் இரண்டற்கும் ஒன்றேயாமாறு காண்க. நம்பி கண் நல்லன் என்புழி அன்விகுதி முதலாகிய நம்பிக்கு அன்றி, கண்ணுக்கு ஏற்புடைத்தாகாமை காண்க. கண் தனக்குரிய வினை பெறின் நம்பிக்குக் கண் நல்லன என முடியும் என்க. ஆதலினாற் றான் ' தம்வினைக் கியலும் எழுத்தலங் கடை ' என்றார்.



டைக் கெய்தா ; அப்பன்மையொருமைமயக்கம் ஒன்றெனமுடித்த லென்பதனா னமைக்கப்படும். அஃதேல், இச் சூத்திரத்தாற்

றிணைவழூவோடுகூடிய பால்வழூவமைக்கப்பட்டதென்பது
எற்றாற் பெறுதுமெனின் :— சினைக்கிளவிக்குத்
தம்வினைக்கியலு மெழுத் தாவது
அஃறிணை வினைக்குரிய வெழுத்தாம் ;
அஃதல்லாதது
உயர்திணை வினைக்குரிய வெழுத்தேயாம். என்னை? அஃறிணைக்கு மறுதலை உயர்திணையேயாகலான். அதனாற் றிணைவழூவுதலும் பெறுதுமென்பது. அஃதேல்,
தம்வினைக்கியலுமெழுத்தாவன சினைவினைக்குரிய
வெழுத்தென்றும், அவையல்லாதனவாவன
முதல்வினைக்குரிய வெழுத்தென்று முரைக்க ;
உரைக்கவே, உயர் திணைச் சினையும் அஃறிணைச்
சினையு மெல்லா மடங்குமெனின் :— அற்றன்று :
அஃறிணைக்கட் சினைவினைக்குரிய எழுத்தோடு முதல்
வினைக்குரிய எழுத்திற்கு வேறுபாடின்றி
எல்லா மஃறிணை யெழுத்தேயாகலின்,
தம்வினைக்கியலு மெழுத்தலங்கடை யென் பதற்
கேலாதாகலான், கண் முதலாயின
உயர்திணைச்சினையேயா மென்பது.
(௬௧)

கிளவியாக்கம் முற்றிற்று.

நல்லன் என்ற வினையோடு முடிந்தபின் நல்லன என்ற வினை யோடு முடியாது, என்று விதிப்பது பொருந்தாது என்று உரையா சிரியர் முதலிய மூவரையும் மறுத்துரைப்பாருமுளர். அவ்வாறு, சேனவரையர் கூறவில்லை. இளம்பூரணரும், நச்சினார்க்கினியருமே கூறுகின்றனர். ஆதலின் சேனவரையருரையையுங் கூட்டி அவர் மறுத்தல் பொருந்தாதென்க.

இன்னுமவர் நால்வருரையையு மறுத்துத் தாம் சினைக்கிளவி பன்மை கூறுங் கடப்பாடில என்பதற்குச் சினைச்சொற்கள் தாம் பன்மையைக் குறிக்குங் கடப்பாடில என்று பொருள்கூறி இடத் திற்கேற்றவாறு பன்மையையுங் குறிக்கும் ஒருமையையுங் குறிக்கு மென்றுங் கூறுகின்றனர். அவ்வாறு பொருள் கோடற்கு 'பன்மை குறிக்கும்' என்று சூத்திரமிருப்பிற் பொருந்துமேயன்றி, 'பன்மை கூறும்' என்றிருத்தலாற் பொருந்தாது. கூறும் என்பதும் அப்பொரு டருமெனின் அது மயங்கவைத்தலாமென்க.

## உ. வேற்றுமையியல்

௬௨. வேற்றுமை தாமே யேழென மொழிப.

நான்குசொற்கும் பொதுவிலக்கண முணர்த்தினர் அதற் கிடையீடின்றி அவற்றது சிறப்பிலக்கண முணர்த்துதன் முறைமையாயினும், வேற்றுமையிலக்கண முணர்த்துதற்கு

வேறிடமின்மையானும், பொதுவிலக்கணமாத லொப்புமையானும், உருபேற்றல் பெயர்க்கிலக்கணமாகலின் வேற்றுமை புணர்த்திப் பெயருணர்த்தன் முறையாகலானும், கிளவியாக்கத்திற்கும் பெய ரியற்குமிடை வேற்றுமையிலக்கண முணர்த்திய வெடுத்துக் கொண்டார். வேற்றுமையாவன பெயரும் ஓரிடைச்சொல்லுமாக லின், அவற்றதிலக்கணமும் பொதுவிலக்கணமேயாம்.

---

(க) இடையீடு - இடையிலிடுவது; தடை. இடையீடின்றி—கிளவி யாக்கத்தின்பின் வேறிலக்கணமோதாது என்க.

பொது இல்க்கணமாத லொப்புமையான் என்றது, வேற்றுமை இலக்கணமும் பொதுவிலக்கணமாதலாகிய ஒப்புமையுடைமையான் என்றபடி. ஒப்புமை - ஒத்ததன்மை. அஃது ஈண்டு இயைபைக் காட்டி நின்றது. எதனோடு ஒத்ததன்மையெனின்? கிளவியாக்கத்தோ டொத்த தன்மைஎன்க. கிளவியாக்கம்நான்குசொற்கும்பொதுவிலக்கணமுணர்த் திற்று. இதுவும் அதுபோலவே பொதுவிலக்கணமுணர்த்தலின்; அதன் பின் வைத்தார் என்பது கருத்து. வேற்றுமையிலக்கணமும் பொது விலக்கணமாதலை விளக்குவாராயே; வேற்றுமையாவன பெயரும் ஓர் இடைச்சொல்லுமாகலின் அவற்றிலக்கணமும் பொதுவிலக்கணமே யாமென்றார். வேற்றுமையாவனவெல்லாம் பெயரும் அப்பெயரேற்று வரும் ஓரிடைச்சொல்லுமேயாதலின் பெயர்ச்சொல் இடைச்சொல் என்னும் இரண்டற்கும் பொதுவிலக்கணங் கூறுவதே வேற்றுமை யியலும் என்பது கருத்தாயிற்று. பெயரும் என்று பகுத்துக்கொண் டமையானே எழுவாயும் அதனுளடங்கும். பெயரின் திரிபே விளி யாதலின் அதுவும் அதனுளடங்கும் என்க. பன்மைபற்றிக் கூறினு ரெனினு மமையும். 'வேற்றுமையாவன பெயரும் ஓரிடைச் சொல் லுமே யாகலின்' என்றது உருபும் உருபேற்றதுவும் வேற்றுமை என்றபடி.

கOரு

வேற்றுமையிலக்கணமென ஒன்றுயினும் சிறப்புடைய எழுவகைவேற்றுமையும் அவற்றது மயக்கமும் விளிவேற்றுமையுந் தனித்தனி யுணர்த்தத் தரும் வேறுபாடு யாப்புடைமை யான், மூன்றோத்தா னுணர்த்தினர்.

பொதுவிலக்கண முணர்த்திச் சிறப்பிலக்கண முணர்த்து தன் முறைமையாகலின், முதற்கண்ணதாகிய பெயர்ச்சொற்குப் பயனிலைகோடலும் உருபேற்றலும் காலந்தோன்றாமையுமாகிய இலக்கண முணர்த்துவார் இயைபுபட்டமையான் வேற்றுமை யிலக்கணமுணர்த்தினரென மேலோத்தினோடு இவ்வோத்திடை யியைபு கூறினால் உரையாசிரியரெனின் :—அற்றன்று : இவ் வோத்துப் பெயரிலக்கண நுதலி

யெடுத்துக்கொள்ளப்பட்டதா யின், உருபேற்றலும் பயனிலைகோடலுங் காலந்தோன்றாமைபு மாகிய பெயரிலக்கணம் முன்னோதி, இயைபுபடுதலான் வேற் றுமை புணர்த்துங் கருத்தினராயின் அவற்றையும் இன்ன விலக் கணத்தவென உணர்த்திப் பின்னும் எடுத்துக்கொண்ட பெய ரிலக்கணமேபற்றி யோதிப் பெயரியலென ஓரோத்தான் முடியற் பாற்றன்றே; அவ்வாறன்றி, வேற்றுமையிலக்கணமே முன்கூறி 'அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே' (சொல்—கூகூ) எனவும், 'ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப' (சொல்—கூக) எனவும் வேற்றுமையிலக்கணங்கூறி அச் சூத்திரத்தாற் பயனிலை கோட லும் உருபேற்றலும் பெயர்க்கிலக்கணமென்பது உய்த்துணர

---

யாப்பு - பொருத்தம்; நியமம்.

இவ்வோத்தும் பெயரிலக்கணம் நுதலி எடுத்துக்கொள்ளப்பட்ட தாயின் பெயரிலக்கணம் முன்ஓதிப் பின் வேற்றுமையிலக்கணமோதிப் பின்னும் பெயரிலக்கணமே ஓதிப் பெயரியலென ஓரியலாய் முடித் தல் வேண்டும். அவ்வாறன்றி, வேற்றுமையிலக்கணமோதி அவ் வேற்றுமை இலக்கண மோதுமுகத்தான் . உருபேற்றலும் பயனிலை கோடலும் பெயருக்கிலக்கணமென்பது உய்த்துணரவைத்துப், பின்னும் வேற்றுமையிலக்கணமும் அதன் மயக்கமும்

விளியிலக்கணமும் உணர்த்தி அதன்பின் பெயரியலென வேறோரோத்திற்குப் பெயர் கொடுத்தமையானும்... இவ்வோத்துப் பெயரிலக்கணநுதலி எடுத்துக் கொள்ளப்பட்டதன்று என்க.

இச்சூத்திர உரைக்கண் இளம்பூரணர் சேனவரையர் நச்சினார்க் கினியர் என்னும் மூவரும் பயனிலைகோடலையும் பெயர்க்கு இலக்கண



[ வேற்றுமை வைத்துப் பின்னும் வேற்றுமையிலக்கணமே யுணர்த்தி, இதனை வேற்றுமையோத்தென்றும், அவற்றது மயக்கமுணர்த்திய வோத்தை வேற்றுமை மயங்கியலென்றும், சிறப்பில்லா விளிவேற் றுமை உணர்த்திய வோத்தை விளிமரபென்றும், நுதலியதனாற் பெயர்கொடுத்து, மூன்றோத்தாக வைத்து, பெயரியலென வேறோ ரோத்திற்குப் பெயர்கொடுத்தமையானும், 'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே' (சொல்-கருரு) என்பது முதலாகிய ஐந்து சூத்திரமும் பெயரிலக்கண முணர்த்து

மோத்தின்முன் வையாது இடைவைத்தல்

பொருந்தாமையானும், இவ்வோத்துப் பெயரிலக்கண

நுதலி யெடுத்துக்கொள்ளப்பட்டதன்று, வேற்

றுமை யிலக்கணமே நுதலி யெழுந்ததெனவேபடும்; அதனன் அவர்க்கது கருத்தன்றென்க. அஃதேல், 'பெயர்நிலைக் கிளவி

காலந் தோன்றா' (சொல்–௭௦) எனப்

பெயரிலக்கணம் ஈண்டுக்

கூறியதென்னையெனின்: — பயனிலைகோடலும் உருபேற்றலும் பெயர்க் கிலக்கண மென்பது ஈண்டுப் பெறப்பட்டமையான். அவற்றொடியைபக் காலந்தோன்றாமைபும் ஈண்டே கூறினர். பெய ரிலக்கணமாத லொப்புமையா னென்பது.

இதன் பொருள்: வேற்றுமைபாவன ஏழென்று சொல்லுவர் தொல்லாசிரியர் என்றவாறு.

செயப்படுபொருள் முதலாயினவாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துணர்த்தலின், வேற்றுமை பாயின. செயப்படுபொருண்

---

மாகக் கூறல் எவ்வாறு பொருந்தும்

?எழுவாயுருபேற்ற பெயர் ஏனை வேற்றுமை

உருபுகளை ஏற்காது. ஆதலால் எழுவாயுருபேற்ற

பெய ரும் வேறு, ஏற்காத பெயரும் வேறு

என்க. மயிலைநாதரும், நன்னூ
லுரையுள் (பெப-கூ) பெயர்வேற்றுமையும் ஏனையுருபுகளை ஏற்கு
மால் அஃதொழிந்ததென்னையோவெனின் ? பெயர் எழுவாயுருபாவது
தன் பயனிலைதோன்ற நின்றகாலையன்றே, ஆண்டுப் பிறவுருபுகளை
ஏலாது. ஏற்பின் தன்பொருண்மையும், ஏற்கும்
உருபின் பொருண் மையும்
ஒருங்குடைத்தாதல்வேண்டும். அதனாற்
பயனிலைகொள்ளாது நின்ற பெயரே உருபுகளை
ஏற்குமெனக்கொள்க எனக் கூறல் காண்க.
சங்கரநமச்சிவாயரும் இவ்வாறே கூறுவர்.

உருபுகள் தம்மையேற்ற பெயர்ச்சொற்களின்
பொருளை வேற் றுமைப்படுத்து உணர்த்தலின்
வேற்றுமை என்று பெயர் பெற்றன.



முதலாயினவற்றின் வேறுபடுத்துப்
பொருண்மாத்திர முணர்த்
தலின், எழுவாயும் வேற்றுமையாயிற்று.
அல்லதூஉம், வேற்
றுமை யென்பது பன்மைபற்றிய வழக்கெனினு
மமையும்.
தாமேயென்பது கட்டுரைச்சுவைபட

நின்றது. (க)

௬௩. விளிகொள் வதன்கண் விளியோ

டெட்டே.

இதன் பொருள்:

விளிகொள்வதன்கண்ணதாகிய விளி யோடு தலைப்பெய்ய வேற்றுமை யெட்டாம் என்றவாறு.

வேற்றுமையென்பது அதிகாரத்தான் வந்தது.

முன்னர்

'விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு

தெளியத் தோன்று மியற்கைய வென்ப'

(சொல்-௧௧அ)

என்பவாகலின், விளிகொள்வதென்றது விளிகொள்ளும் பெயரை. அதன்கண் விளியென்றதனால், பெயருமன்று, பெயரின் வேறுமன்று, விளிவேற்றுமையாவது திரிந்தும் இயல்பாயும் நிற்கும் பெயரிறுதி யென்பதாம்.

'வேற்றுமை தாமே யேழென மொழிப'

(சொல்-௬௨) எனப்

பிறர்மதங்கூறி இச் சூத்திரத்தால் தந்துணிபுரைத்தார். (உ)

---

அங்ஙனமே

பெயர் வேற்றுமையும் (எழுவாயும்) தன்பொருளை மாத்திரம் உணர்த்தி, தன்னைச் செயப்படுபொருள் முதலியவற்றினின்றும் வேறுபடுத்தலின் தானும் வேற்றுமையாயிற்று. உதாரணமாக - கந்தன் என்ற பெயர்ச்சொல் தான் எழுவாய்ப்பட்டு நிற்குங்கால் ஐ முதலிய உருபுகளை ஏற்று அவற்றால் செயப்படுபொருள் முதலியவாக வேறு படுக்கப்படாமல் தன்பொருளாகிய கந்தனென்ற பொருளைமாத்திரம் உணர்த்தித் தன்னை அவற்றினின்றும் வேறுபடுத்திக் காண்பித்தலால் தானும் வேற்றுமையாயிற்று என்க. மயிலைநாதரும் நன்னூலுரையுள் (பெய—உச) 'முதலாவது' சாத்தன் என அப்பெயர்தான் தன்பொருண்மையிற் றிரிபின்றி ஏனையவற்றின் வேறுபடுத்தது, என்பர்.

பன்மைபற்றிய வழக்கென்றது: வேற்றுமைசெய்தல் எழுவாய்க் கின்றேனும், மற்றவையெல்லாம் வேற்றுமைசெய்தலாகிய பன்மை பற்றி வேற்றுமை என்று பெயர்கொடுக்கப்பட்டமையை. பன்மை பற்றிப் பெயர்கொடுத்தற்கு விதி கிளவியாக்கம் சஅ-ம் சூத்திரத்துள் கூறப்பட்டது; ஆண்டுக் காண்க. கட்டுரைச்சுவை என்றது - அச்சூத்திரத் தொடரைச் சுவைபடச்செய்து நிற்றலை.

(உ) பிறர்மதமென்றது: வடநூலுட் பாணினிமதத்தை,

[வேற்றுமை சுச. அவைதாம்
பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி யென் னு மீற்ற.

இதன் பொருள் : எட்டெனப்பட்ட வேற்றுமையாவன
விளிவேற்றுமையை இறுதியாகவுடைய பெயர், ஐ, ஒடு, கு, இன்,
அது, கண்ணும் என்றவாறு.

பெயர் ஐ ஒடு கு இன் அது கண் என்பன பல பெயர்
உம்மைத்தொகை. அஃது ஒருசொல்லாய் விளியென்னு மீற்ற வென்பதனான்
விசேடிக்கப்பட்டது. பெயரும் ஐயும் ஒடுவும்
குவ்வும் இன்னும் அதுவும் கண்ணும் என விரியும்.

சிறப்புடைப்பொருளைத் தானினிதுகிளத்த லென்பதனான்
ஒடுவென்றும் அதுவென்றும் ஓதினாகலின்,

ஆனுருபும் அகர
வுருபும் கொள்ளப்படும்.

விளிவேற்றுமையினது சிறப்பின்மை விளக்கிய பெயர்
ஐ ஒடு கு இன் அது கண் விளி யென்னுந
'விளியென்னு மீற்ற' வெனப் பிரித்துக் கூறினர்.
(௬)

கூ௫. அவற்றுள்
எழுவாய் வேற்றுமை
பெயர்தோன்று நிலையே.

**இதன் பொருள்:** மேற்சொல்லப்பட்ட வேற்றுமையுள், முதற்கட் பெயரென்று கூறப்பட்ட வேற்றுமையாவது பெயர் தோன்றிய துணையாய் நிற்கு நிலைமையாம் என்றவாறு.

---

(௬) பெயரும் ஐயும் ஒடுவும் குவ்வும் இன்னும் அதுவும் கண்ணும் என விரியும். பலபெயர் உம்மைப் பொருள்படத் தொக்குநிற்றலின் பலபெயர் உம்மைத்தொகை யென்றார்.

விளி என்னும் ஈற்ற என்பது

பெயர்முதலியவற்றை விசேடித்து வருதலால் அது விசேடணம். பெயர் முதலிய விசேடியமென்க. பிரித்துக்கூறிய தென்றது அவற்றேடொருங் கெண்ணுது அடையாகக் கூறி யதை. விசேடணம் என்பது வடமொழி. அதற்குப் பதிலான தமிழ்ச் சொல் அடை என்பது. யியல்] சொல்லதிகாரம்

கOள

பெயர் தோன்றிய துணையாய் நிற்கு நிலைமையாவது, உருபும் விளியுமேலாது பிறிதொன்றனேடு தொகாது நிற்கு நிலைமை. எனவே, உருபும் விளியுமேற்றும் பிறிதொன்றனேடு தொக்கும் நின்ற பெயர் எழுவாய்வேற்றுமையாகா தென்றவாறும்.

---

(ச) பிறிதொன்றனேடு என்றது: முடிக்குஞ்சொல்லோடு தொகாமையை; தொகாமை - சேராமை. முடிக்குஞ்சொல்லோடு தொகின் அது எழுவாய்த்தொடரெனப்படும். வேற்றுமை என்றது ஈண்டு உருபை. எனவே பெயர்மாத்திரையாய் நிற்றலே முதல் வேற்றுமைக்கு உருபு என்றபடி. 'எழுவாயுருபு திரிபில்பெயரே' என்ருர் நன்னூலாரும். இச் சூத்திரத்தும் வருஞ் சூத்திரத்தும் முதல் வேற்றுமைக்குப் பொருள் கருத்தா என்பது

கூறப்படவில்லை. ஆதலால் உரைகாரர் இச்சூத்திரத்துக்குக் கூறும் பொருள் ஏற்புடைத்தன்று என்று சிலர் கூறுவர். ஆயின் வருஞ்சூத்திரத்துப் பெயர்ப்பயனிலையே

என்று கூறுவதை நோக்கும்போது முதல் வேற்றுமைக்குப் பொருள் கருத்தாவென்பது கூறப்பட்டதேயாம். எங்ஙனமெனில் பெயர் பயனிலைகொள்ளுமெனவே அப்பயனிலையாகிய வினைக்குத்தான் கருத்தாவாக நிற்குமென்பது பெறப்படுமாதலின். அங்ஙனேல் மற்றைய

வேற்றுமைகளுக்குப்போல் இதற்கும் பொருளை வெளிப்படையாகக் கூறாத தென்னையெனின், மற்றைய வேற்றுமைகளுக்குருபுகளுண்மையின் அவ்வுருபுகளைக்கூறி அவற்றின் பொருளையும் அவ்வவ் வேற்றுமை கூறும்வழிக் கூறினர். இது அன்னதோர் உருபைப் பெறாது பயனிலைகொள்ளு முகத்தானேயே தன்பொருளை உணர நிற்றலின் அம்முகத்தானே கூறினரென்பது. ஏனைய வேற்றுமைகளின் பொருள் உருபாலும் பயனிலையாலு மறியப்படும். இதன் பொருள் பயனிலைகொண்டே உணரப்படுமென்க.

இதுபற்றியே நன்னூலுரையுள் (பெய—கூஅ) சங்கரநமச்சிவாயரும் "எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்" என்னுஞ் சூத்திரத்து இதன் பயனிலையும் உடன் கூறாது ஈண்டே கூறிய தென்னையெனின் அவிகாரியாய்நின்ற பெயர் இப்பயனிலைகளை அவாவியகாலத்தன்றி

அவிகாரியினின்றும் விகாரி யாகத் தன்னைத்தானே வேற்றுமைசெய்தல் தோன்றுமையினென்க.
தன்னைத்தானே வேற்றுமைசெய்தல்,

"நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேன்மே லுயர்த்தி நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்"

என்பதனானும் உணர்க.

இரண்டாவது முதலிய வேற்றுமைக்கு உருபும் பொருளும் கூறிப் போந்து பயனிலையுங் கூறினர். இதற்கு உருபும் பயனிலையுங் கூறிப்



உதாரணம் : ஆ, அவன் என வரும்.

(ச)

---

பொருள் கூறாதது என்னையெனின் 'எழுவா யுருபு திரிபில் பெயரே' என்ற துணையானே அதன்பொருளும் திரிபில் பெயர்ப்பொருளே யென்பது தானேபோதருமென்க.
அஃதாவது அவிகாரியாய் நின்ற தன் னைத்தானே விகாரியாக வேற்றுமை செய்தல் எனக் கூறுதல் காண்க.

இனிச் சிலர் 'எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே' என்பதற்கு '

வேற்றுமைப்பெயர்' எனப் பாடங்கொண்டு எழுவா யென்பதற்கு வாக்கியத்தின் முதற்கண் நிற்பது (வினைமுதல்) என்
றுதல்.கருத்தாவென்றுதல் பொருள்கொள்ளின் பெயராகியவேற்றுமை, வாக்கியத்தின் முதற்கட்டோன்றுநிலையுடையது என்றாயினும் பெயர் வேற்றுமை கருத்தாப்பொருளில் தோன்றுநிலையுடையது என்றாயினும் பொருள்கொண்டுவிடலாம் என்கின்றனர். இவ்வாறு பொருள்கொள் வது சூத்திரப்போக்கிற்குப் பொருத்தமின்மையொடு சூத்திரமும் இசையிற் பிறழுகின்றது. இசையிற் பிறழுமாற்றைச் செவி கருவியாக உணர்ந்துகொள்க. அன்றியும், ஆசிரியர் வேற்றுமைகூறுங்கால் 'அவைதாம் பெயர் ஐ ஒடு கு—இன் அது கண் விளி என்னுமீற்ற' என்று முதற்கண்ணதாகிய பெயரை உருபுகளோடெண்ணிவிட்டமை யானே, பெயர் என்னும் சொல்லும் ஓர் உருபோ என்று மாணுக்கர்க் கையம் நிகழுமாதலின் அதனை நீக்கற்கும், வடமொழியுள் எழு வாய்க்கு உருபு இருத்தல்போலத் தமிழ்மொழியுள் எழுவாய்க்கு உருபு இல்லை என்பதை உணர்த்தவுமே 'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே' என்று கூறினாராதலின் அக்கருத்துக்கு மாறாக இவ்வாறு வலிந்து பொருள்கோடல் பொருந்தாதென்க. அன்றியும் 'இரண்டாகுவதே ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி' என்றற்

ரூடக்கமாக ஏனையவேற்றுமைகளுக்குக்
கூறியதுபோலவே,இதற்கும் குறியீடும்

உருபுங் கூறவேண்டுமாதலின் எழுவாய்வேற்றுமை
பெயர்

தோன்று நிலையே என்று கூறினாராதலானும்,
எழுவாய்வேற்றுமை என்பதற்கு
முதல்வேற்றுமை என்று பொருள்கோடல்
பொருத்த

மாம். நச்சினார்க்கினியரும் 'மேல் இரண்டாவது மூன்றாவது என்று ஆளுமிடத்து இதனை முதல்வேற்றுமை என்றே ஆளவேண்டுமாதலின் எழுவாய் என்றார்' என்று கூறுதலும் ஈண்டு நோக்கத் தக்கது. நச்சினார்க்கினியர் வினைமுதலாகிய எழுவாய் என்று கூறுதலின் எழுவாயென்பதற்கு வினைமுதல் என்று பொருள் கூறலும் அவர்க்குக் கருத்தெனின், அற்றன்று; எழுவாயே வினைமுதலாகியும் நிற்றல்பற்றி அங்ஙனம் கூறினாரென்க. அதுவே அவர்க்குக் கருத்தாதல் " இதனை [எழுவாயை] முற்கூறியதென்னையெனின்? சாத்தன் குடத்தைக் கையால் வனைந்து கொற்றனுக்குக் கொடுத்தான் என வினைமுதல்நின்று ஏனையவற்றை நிகழ்த்தவேண்டுதலின் "



௬௬.

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினவிற்

கேற்றல்

பண்புகொள வருதல் பெயர்கொள

வருதலென்

றன்றி யனைத்தும் பெயர்ப்பய

னிலையே.

**இதன் பொருள் :** பொருண்மைசுட்டல்—ஆ வுண்டு என்பது. வியங்கொளவருதல்—ஆ செல்க என்பது. வினைநிலையுரைத்தல்—ஆ கிடந்தது என்பது. வினாவிற்கேற்றல்—அஃதியாது, அஃதெவன் என வினாச்சொல்லோடு தொடர்தல். பண்பு கொளவருதல்—ஆ கரிது என்பது; தன்னினமுடித்தலென்பதனால், ஆவில்லை, ஆ வல்ல என்னுந் தொடக்கத்துக் குணப்பொருளவல்லா வினைக்குறிப்போடு தொடர்தலுங் கொள்க. பெயர்கொளவருதல்—ஆ பல என்பது. அன்றியனைத்தும் பெயர்ப்பயனிலையேயென்பது அவ்வாறும் பெயர்வேற்றுமைப் பயனிலையா மென்றவாறு.

முடிக்குஞ்சொற்பொருள் அத்தொடர்மொழிக்குப் பயனாகலிற் பயனிலையென்றார்.

உண்டென்பது பண்புமுதலாயின
சுட்டாது உண்மையே சுட்டலின், வேறுகூறினார்.
பொய்ப்பொருளின் மெய்ப்பொருட்கு வேற்றுமை
புண்மையாகலின், அவ்வுண்மையைப்
பொருண்மை யென்றார்.

---

என்று கூறும் வாக்கியத்தான் இனிதுணரப்படும். வினைமுதல் என்பது வினைமுதலாய் என்றும் பாடமிருக்கலாம். சங்கரநமச்சிவாயரும், "இதனை முதல்வேற்றுமை என்றதென்னை எனின், பெயராயே நிற்ற லானும் வினை முதலாய் நடத்தலானும்" எனக் கூறுதல் காண்க. சூத்திரத்துக்குப் பொருள்கூறுங்காலும் எழுவாய்வேற்றுமை—முதல் வேற்றுமை என்று கூறியதும் ஈண்டு நோக்கத்தக்கது. பெயர் என்று கூறியமையானும் பெயரின் விகாரம் விளி என்று கூறியமையானும் முதல் வேற்றுமையின் உருவம் உணர்த்தல்வேண்டுவதவசியமன் றெனின்? யாம் முன்னர்க்கூறிய காரணங்களோடு உய்த்துணர்ந் திடர்ப்படாமை காரணமாகவும் ஆசிரியர் முதல் வேற்றுமையின் உருவத்தைக் கூறினாரென்றலே பொருத்தமாம்.

(ரு) பொருண்மை என்றது உண்மையை. உண்மை உளதாந் தன்மை. பயனிலை—பொருள் நிற்பது. அத்தொடர்மொழிக்கு முடிக்

வியங்கொளவருதல்

வினைநிலையுரைத்தற்கண்ணும், வினாவிற் கேற்றல் பெயர்கொளவருதற்கண்ணும்,
வினைக்குறிப்பாயவழிப் பண்புகொளவருதற்கண்ணும் அடங்குமாயினும், வினையும் பெய ரும் பண்பும் முடிக்குஞ்சொல்லாதலையன்றி முடிக்கப்படுஞ் சொல்லாதலுமுடைய, வியங்கோளும் வினாவும் முடிக்குஞ்சொல்லே யல்லது நில்லாமையின், அவ்வேறுபா டறிவித்தற்கு வேறு கூறினா ரென்பது.

'பெயர்தோன்றுநிலை' (சொல்-கூ)
என்றதனானும், அன்றி யனைத்தும் பெயர்ப்பயனிலையே யென்பதனானும், பெயர் தோன்றிய துணையாய் நின்று பயனிலைத்தாதல் எழுவாய்வேற்றுமைய திலக்கணமென்பது பெற்றாம்.

ஆபல என்புழிப் பலவென்பதற்குப் பயனிலை யாதெனின் :— அது பயனிலையாய் ஆவென்பதனை முடித்தற்கு வந்ததாகலின், தான் பிறிதோர்சொன்னோக்காது ஆவென்பதனோடு தொடர்ந்து அதனை முடித்தமைந்து மாறுமென்பது. அஃதேல், பயனிலை கொள்ளாதது எழுவாய்வேற்றுமையாமா றென்னையெனின் :— உருபேற்றல் பெயர்க்கிலக்கணமாயினும் உருபேலாதவழியும் பெயராமாறுபோல, எழுவாய்வேற்றுமை பயனிலை கொள்ளாத வழியும் எழுவாய்வேற்றுமையேயாமென்பது. இலக்கியமெங்குஞ் செல்லாதன இலக்கணமாமா றென்னையெனின் :—ஆண்டிலக்கண மாவன உருபேற்றற்கேற்ற தன்மையும் பயனிலையும் பயனிலை

---

குஞ் சொல்லின் பொருள் பயனுகலின் என்றது, சாத்தன் உண் டான் என்புழி, சாத்தன் என்னும் நிலைமொழி உண்டானென்னும் முடிக்குஞ்சொல்லோடு தொடர்ந்த வழியே அத் தொடர்மொழிப் பொருள் இஃது என்பது அறியப்படுமென்பது. முடிக்குஞ் சொல் லைப் பொருளென்ருர் தொடர்மொழிப் பொருள் அதன் கண்ணதாக லின் என்று

பிறரும்கூறல்காண்க. இலக்கணவிளக்க நூலாரும் முடிக்குஞ் சொற்பொருள் அத்தொடர்மொழிக்குப் பொருள்நிலை யாகலின் பயனிலை என்றார் என்று பெயரியல் ௬௬-ம் சூத்திர உரையுள் கூறுதல் காண்க.

முடிக்கப்படுஞ் சொல்லாத லென்றது—தான் வேறிடத்துப் பய னிலை ஏற்று முடிக்கப்படுஞ் சொல்லாதலை. முடிக்குஞ்சொல்—பயனிலை. முடிக்கப்படுஞ் சொல்—எழுவாய். மாறும்—ஒழியும்; நீங்கும்.



கோடற்கேற்ற தன்மையுமாகலின், அத்தன்மை எல்லாவற்றிற்கு முண்மையின் இலக்கணமாமென்பது.

அகரச்சுட்டு அன்றியென வீறுதிரிந்து நின்றது. அன்றி யனைத்தும் பெயர்ப்பயனிலையெனவே, பயனிலைகோடல் பெயர்க் கிலக்கணமென்பதூஉம் பெற்றாம்.

(ரு)

௲எ. பெயரி னாகிய தொகையுமா ருளவே
யவ்வு முரிய வப்பா லான.

**இதன் பொருள் :** பெயரும் பெயருந்தொக்க தொகையுமுள; அவையுமுரிய எழுவாய்வேற்றுமையாய்ப் பயனிலைகோடற்கு என்றவாறு.

உதாரணம் : யானைக்கோடு கிடந்தது, மதிமுகம் வியர்த்தது, கொல்யானை நின்றது, கருங்குதிரை யோடிற்று, உவாப்பதினான்கு கழிந்தன, பொற்றொடி வந்தாள் என வரும்.

பெயரினாகிய தொகையுமென்னும் உம்மையாற், பெயரொடு பெயர் தொக்கனவேயன்றி, நிலங்கடந்தான், மாக்கொணர்ந்தான் எனப் பெயரொடு வினை வந்து தொக்க வினையினாகிய தொகையுமுளவென்பதாம். ஆகவே, பெயரொடு பெயரும் பெயரொடு தொழிலுந் தொக்கன தொகையென்பது பெற்றாம்.

---

ஆண்டு என்பது பெயரையும் எழுவாயையும் சுட்டிநின்றது. பயனிலையும் என்றது, பெயர் பயனிலையாயும் யனைத்தும் என்றது அவ்வனைத்துமென்றபடி. நிற்றலை. அன்றி

எல்லாவற்றிற்கு முண்மையின் என்றது எல்லாப் பெயருக்கும் எல்லா எழுவாய்க்கு முண்மையின் என்றபடி. உருபேற்றற் கேற்ற தன்மையும் பயனிலை பாதலும் எல்லாப் பெயருக்குமுரிய இலக்கணம்.

பயனிலை கோடற்கேற்ற தன்மை எழுவாயாய்

நிற்கும் எல்லாப்
பெயருக்குமுரிய இலக்கணம். அகரச் சுட்டு 'கிளந்த வல்ல செய்யு ளுட் டிரிநவும்' என்னும் எழுத்ததிகாரப் புறனடைச் சூத்திர விதியால் அன்றி எனத் திரிந்து நின்றது. பெயர் என்றது ஈண்டு எழுவாயை. வருஞ் சூத்திரத்துப் 'பெயரென்றது எழுவாயை' என்று சேனாவரை

யரும் கூறுதல் காண்க.



அவ்வுமுரியவெனப் பொதுவகையாற் கூறினாரேனும்,

ஏற்புழிக்கோடலென்பதனான் எழுவாய் வேற்றுமையாதற்கேற்

புடைய பெயரினாகிய தொகையே கொள்ளப்படும்.

இருதொடர்படச்
சூத்திரித்திடர்ப்படுவ தென்னை? பெயரி
ஞகிய தொகையும் எழுவாய்வேற்றுமையாமென்றோத வமையா
தோவெனின்:—அங்ஙனமோதிற் பெயரொடு பெயரும் பெய
ரொடு வினையுந் தொக்கன
தொகைச்சொல்லாமென்னுந் தொகை யிலக்கணம்
பெறப்படாதாம்; அவ்விலக்கண
முணர்த்துதற்கு இவ்வாறு பிரித்தோதினுரென்பது.

பெயரினுகிய தொகையுமென்ற
வும்மையான் வினையினுகிய
வினைத்தொகை தழுவப்பட்டதென்றும், '
எல்லாத் தொகையு
மொருசொன் னடைய' (சொல்-௪௨௦) என்பதனுல் தொகைச்
சொல்லெல்லாம் எழுவாய்வேற்றுமையாதல் பெறப்படுதலின்,
ஈண்டு அவ்வுமுரியவப்பாலானவென்றது
தொகைச்சொற்குப்

(சு) உம்மையினுலே வினையினுகிய தொகையும் கொள்ளப்படுதலின் அத்தொகைக ளிரண்டையும் 'அவ்வுமுரிய' என்றது சுட்டி வருதலின் வினையினுகிய தொகையும் எழுவாய் வேற்றுமையாவான் செல்லும். அதனை விலக்கி ஏற்புழிக் கோடலால் பெயரினுைய தொகையே கொள்க என்பது 'அவ்வு முரிய......கொள்ளப்படும்' என்னுந் தொடரின் கருத்தாகும். வினைத்தொகைக்கு நிலை

மொழி வினையன்று பெயரே என்பது சேனாவரையர் கருத்து. ஆசிரியர்க்குமதுவே கருத்தாதல் 'ஞகாரை யொற்றிய தொழிற் பெயர்' [எழு-புள்-க-ம் சூ] எனக் கூறுமாற்றான் அறியப்படும். அதனை 'வினையின் றொகுதி காலத்தியலும்' என்னும் சூத்திர உரையுள்

சேனாவரையர் கூறுமாற்றானறிக. 'எல்லாத் தொகையு மொரு

சொன் னடைய' என்பதற்கு எழுவாய் வேற்றுமையாம் என்னும்

கருத்துண்டாயின் அவை 'எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று

நிலையே' என்பதனால் எழுவாய் வேற்றுமையாகிப் பொருண்மை

சுட்டலும் என்னுஞ் சூத்திரத்தினாலே பயனிலையுங் கொண்டு முடியும்.

முடியவே 'அவ்வுமுரியவப்பாலன' என்றது கூறியது கூறிற்றும். ஆதலால் அது பொருந்தாதென்பது கருத்து. இக்சூத்திரத்து 'பெயரினாகிய தொகையுமா ருளவே' என்பதை வேறு தொடராக வைத்தற்குக் காரணம் தொகையிலக்கணம் பெறவைத்தற்கே என்று சேனாவரையர் கூறினர். அங்ஙனம் கூறினமையானே தொகையிலக்



பயனிலை கோடன்மாத்திரமெய்துவித்தற்கென்றும், உரையாசிரியர்

...றினாலெனின் :—அற்றன்று :
வினைத்தொகைக்கு நிலைமொழி வினையென்பது
உரையாசிரியர்க்குக் கருத்தன்மை 'வினையின்
தொகுதி காலத் தியலும்' (சொல்—சகரு) என்னுஞ்
சூத்திரத்திற் சொல்லுதும். இனி 'எல்லாத்
தொகையு மொருசொன் னடைய'
(சொல்—சஉ0) என்பதற்கு
ஒருசொன்னடையவா மென்பதல்லது
எழுவாய்வேற்றுமையாமென்னுங்
கருத்தின்மையானும், அக்கருத் துண்டாயின்
அவையும் எழுவாய்வேற்றுமையாய் நின்று 'அன்றி
யனைத்தும் பெயர்ப்பய னிலையே' (சொல்—கூகூ)
என்றதனுல் பயனிலை யெய்துமாகலின் அவ்வு
முரிய வப்பா லான வென்றல் கூறியது
கூறிற்றுமாகலானும், அதுவு முரையாசிரியர்
கருத்தன் றென்க.

---

கணமும் இச் சூத்திரப் பொருளாகக்
கூறப்பட்டதென்பது கருத் தன்று. பெயரினுகிய
தொகையும் எழுவாய் வேற்றுமையா மெனின்
பெயரேயன்றித் தொகையும் எழுவாய்
வேற்றுமையாமென் பதே பெறப்படுமன்றித்
தொகையாவது இது என்பதும் அது இரண்
டென்பதும் பெறப்படாதாம். அது பற்றிப்

பெயரிணுகிய தொகையு மாருளவே என வேறு தொடராக வைத்து உம்மையினுலே பெய ரும் வினையும் நோக்க தொகையையும் தழுவித் தொகையிலக்கணம் பெற வைத்தாரென்பதே கருத்தாம். உம்மையினுல் தழுவுவதெற்றுக்கு? பெயரிணுகிய தொகையும் வினையிணுகிய தொகையும் உள என்று கூறவமையுமெனின்? அங்ஙனம் கூறிற் பெயரும் வினையும் நோக்கதும் எழுவாய் வேற்றுமையாதலும் பயனிலை கோடலுமாகிய இரண்டிலக்கணமு மெய்துவான் செல்லும். அதனை யொழித்தற்காகவும் சுருங்கிய வாய்பாட்டாற் கூறுதற்காகவும் உம்மையினுற் றழுவினுரென்பது. எனவே உம்மையாற்றழுவியதே ஈண்டு அதன் பிரதானமின்மையைக் காட்டும் என்க. உம்மையாற்றழுவுங்காலும் அவையும் என்ற சுட்டு இரு தொகையையும் சுட்டும் என்பது கரு தியே .சேனுவரையர் ஏற்புழிக்கோடலால் பெயரிணுகிய தொகையே ஈண்டு கொள்ளப்படுமென்ருர். அங்ஙனேல் இதன்கண் வாக்கிய பேதம் என்னும் குற்றம் வருமே எனின் வராது; ஏனெனின்? பெயர் எழுவாயாய்ப் பயனிலை கோடலைத் தாங் கூறல் அதிகாரப்பட்டமையினுன் அவற்ருேடு தொகைப்பெயர் எழுவாயாய்ப் பயனிலை கோடலையும் ஒருங்கு முடிக்கக் கருதிய ஆசிரியர், இயைபும் சுருக்கமும் நோக்கித் தொகையிலக்கணத்தையும் ஈண்டே பெறவைக்க விரும்பி, அதனை; அறுவதிந்துக் கூறினுராகலான் என்பது. அன்றியும் அவ்வு

அஃதேல், தொகையும் எழுவாய்வேற்றுமையாமென்பதே இச் சூத்திரத்திற்குக் கருத்தாயின் 'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே' (சொல்—கூ௫) என்னுஞ் சூத்திரத்தின் பின் வைக்கவெனின் :—பெயர் தோன்றிய துணையாய் நிற்றலும்

மென்று சுட்டிக்கூறவே அத்தொடர்ப் பொருளும் இத்தொடர்ப் பொருளை நோக்கியே வந்தாயிற்று. அதனானும் அக்குற்றம் வராதென்க. எனவே இது 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே, அஃறிணை என்மனா ரவரல பிறவே, ஆயிருதிணையி னிசைக்குமன சொல்லே' என்புழியும் முதலிரண்டுதொடரையும் அநுவாதமாகக் கூறியதுபோல இதுவும் கூறப்பட்டதென்பது பெறப்படும். இங்கே வாக்கியபேதம் எனனுங் குற்றம் வருமென்று கருதியே சேனாவரையர் அதனை ஒழித்ததற்காகவே,முதலாஞ்சூத்திரத்து முதலிருதொடரையும் ஆசிரியர் வேறுவைத்தது விளங்கவைத்தற்கு எனக் காரணங் கூறிப் பரிகரித்ததுபோல,உம்மையினால் தொகையிலக்கணம் பெறுவித்தற்காக வேறு தொடராக வைத்தார் எனக் காரணங் கூறி அக்குற்றத்தைப் பரிகரித்தார் என்க.

இன்னும் சிலர் இச்சூத்திரத்தில் சேனாவரையர் 'உம்மையாற் பெயரொடு வினைவந்து தொக்க வினையினாகிய தொகையுமுள என்பதாம்' என்று கூறுகின்றனர். எழுவாய் வேற்றுமைபற்றிக் கூறுமிவ்விடத்தில் உம்மையாற் பெயரும் வினையும் தொக்க தொகையும் உண்டு என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்; நிலங்கடந்தான் என்பதைத் தொகைச்சொல் என்று கருதி, அதற்குப் பிரமாணம் யாண்டுமின்மையின் உம்மைக்கு இவ்விடத்திற்கு ஏற்புடைத்தாகாத பொருளைக் கொண்டனர் என்று சேனாவரையரை மறுக்கின்றனர். இங்கே தொகையுமாருளவே என்று பயனிலை கொடுத்து முடித்தமையினாலே தொகையும் என்றதிலுள்ள உம்மை ஏனைத்தொகையைத் தழுவுமேயன்றித் தனிப்பெயரைத் தழுவாது என்றுகொண்டே

சேனாவரையர் அவ்வாறு பொருளுரைத்தனர். பெயரேயன்றி 'அவையும் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளும் அப் பகுதிக்கண் உரிய' எனப் பின்வரும்உம்மையையே எச்சவும்மை யாகச் சேனாவரையர் கொண்டனர். பெயரும் பெயரு மன்றிப் பெயரும் வினையும் சேர்ந்திசைக்கும் என்பது 'பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப—வேற்றுமை உருபு நிலைபெறு வழியுந்—தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்' [எழு-புண-க.ப] என்னுஞ் சூத்திரத்தால் நன்கு பெறப்படுதலினாலும் பெயரும் வினையும் தொக்கு வருதல் தமிழ் மொழிக்குச் சிறப்பாக உரியதோர் இலக்கணமாதலானும் தமிழுக்கே உரிய அச்சிறப்பு

ியல்]

## சொல்லதிகாரம். ககரு

பயனிலைகோடலுமாகிய
எழுவாய்வேற்றுமையிலக்கண மிரண்டுந்
தொகைச்சொற்கு மெய்துவித்தற்கு
அவ்விரண்டு சூத்திரத்திற்கும்
..ல் வைத்தாரென்பது. ஆண்டு வைப்பின், '
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே '
(சொல்—கூகூ) என்றதனாற் பயனிலைகோடல்
பெயர்க்கேயாய்த் தொகைக்கெய்தாதாமென்பது.
(கூ)

சூ-அ. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி

யவ்விய னிலையல் செவ்வி தென்ப.

இதன் பொருள் :

மூன்றிடத்துப்பெயரும் செவிப்புலனாகத் தோன்றி நின்று பயனிலை கோடல் செவ்விதென்ப ஆசிரியர் என்றவாறு. எனவே, அவ்வாறு தோன்றாது நின்று. பயனிலை கோடலுமுண்டு; அது செவ்விதன்று என்றவாறும்.

பெயரென்றது எண்டொழுவாயை.

---

வினை வடநூல் விதிகொண்டு தொகையன்றென்றேனையோர் கூறல் பொருந்தாதாகலானும் அதற்குப் பிரமாணம் யாண்டுமின்மையின் என்று அவர் கூறியது பொருந்தாது. இன்னும் பெயரினாகிய தொகை யும் என்ற உம்மையினாலே வினையினாகிய தொகையு மென்று கொள் ளுங்கால் வினையும் வினையும் தொக்க தொகை என்று பொருள்படுமே யன்றி வினைபெயரொடு தொக்க தொகை வினைத்தொகையென்று பொருள்படாமையானும் வினைத்தொகையின் முதனிலை பெயரென் பதே

சேனாவரையர் கருத்தாகலானும், ஆசிரியர்க்கு மதுவே கருத் தென்பது முன்னர்க் காட்டினுமாகலானும், சேனாவரையர் கருத்தே பொருத்தமாம். அங்ஙனேல் பெயரும் வினையும் தொக்க தொகையை வினையினாகிய தொகை என்று சேனாவரையர் கூறுவதும் பொருந் தாதேயெனின் நிலைமொழி பெயராய் நிற்ப அதனோடு வருமொழி பெயராய் வந்து பொருந்துவதே பெயரினாகிய தொகை எனப் படுதல் போலவே நிலைமொழி பெயராய் நிற்ப அதனோடு வினைவந்து பொருந்துவதே வினையினாகிய தொகை எனப்படும். ஆதலின் சேனாவரையர் கூறியதே பொருத்தமாமென்பது. வினைச்சொல் நிலைமொழியாக நிற்குந் தொகை தமிழ் மொழியில் இல்லை என்பது சேனாவரையர் கருத்து. வினைத்தொகையில் வினை நிலைமொழியாக வருகின்ற தன்றோவெனின்? ஆண்டு வினை என்றது முதனிலைத் தொழிற்பெயரை என்பது சேனாவரையர்க்குக் கருத்தாதல் மேலேயுரைத்தா மாதலின் அது கடாவன்றென்க.

(எ) எழுவாய்—முதல் வேற்றுமை.

கருவூர்க்குச் செல்லாயோ சாத்தா என்றவழிச் செல்வல் எனவும், யான் யாது செய்வல் என்றவழி இது செய் எனவும், இவன் யார் என்றவழிப் படைத்தலைவன் எனவும் செப்பியவழி, யான் நீ இவன் என்னும் எழுவாய் வெளிப்படாது நின்று, செல்வல், இது செய், படைத்தலைவன் என்னும் பயனிலைகொண்ட வாறு கண்டுகொள்க.

எவ்வயிற்பெயரு மென்ற தென்னையெனின் :—செல்வல், இது செய் என்னுந் தன்மை முன்னிலை வினைகளான் யான் நீ யென்பன வற்றின் பொருளுணரப்படுதலின், யான் செல்வல், நீயிது செய் யெனப் பெயர் வெளிப்படுதல் பயமின்றாயினும் வழக்கு வலியுடைத்தாகலின், அவ்வாறு வருதல் பயமின்றெனப்படா தென்பது விளக்கிய எவ்வயிற் பெயருமென்றா ரென்பது.

அவ்வியலானிலையலென விரியும்.

பயனிலைக்கு இருநிலைமையுமோதா து

எழுவாய்க்கே யோது தலாற் பயனிலை
வெளிப்பட்டே நிற்கும்.

எவ்வயிற் பெயரும் பயனிலை கோடல்
செவ்விதென் றுரு பேற்றல்
செவ்விதன்றுமெனவுரைத்து அவ்வாய்
நீயிரென்பன உருபேலாவென்று காட்டினால்
உரையாசிரியரெனின்:—அவ் வாயென்பது இடைச்
சொல்லாய் ஆண்டென்னும் பொருள்பட

---

எவ்வயின்—எவ்விடம். என்றது—எல்லா இடமு மென்றதை;மூன் றிடமும் என்றபடி. இருநிலைமை என்றது வெளிப்பட்டுநிற்றலையும் வெளிப்படாது நிற்றலையும், அவ்வியலான் என்றது, முன் சொன்ன அப்பயனிலை கோடலான் என்றபடி.

அவ்வாய் என்பது

இடைச் சொல்லாதலின் உருபும் பயனிலையும் ஏலாது. என்னை? சாத்தன் அவ்வாய்ச் சென்றான் என்புழி அவ் வாய் என்பது ஏழாம் வேற்றுமைப் பொருள்பட வருதலின் பயனிலையும் ஏலாதென்க. சென்றான் என்பது சாத்தனுக்குப் பயனிலை யாக வந்தது. நும்மின் திரிபாகிய நீயிர் என்னுஞ் செயற்கைப்

பெயரை இயற்கைப் பெயராகக் கொண்டு
உருபேலாதெனின், நீ என்பதன் திரிபாகிய நின்
என்பதனையும் இயற்கைப் பெயராகக் கொண்டு
பயனிலை கொள்ளாதென்று கூறல் வேண்டும்.
ஆதலின் செயற்கைப் பெயரை உருபேலா
தென்றல் பொருந்தாது. நும்மை



ன்றவழி உருபேயன்றிப் பயனிலையும்
ஏலாதாம். இனி அல்
வழிக்கண் நும்மென்பது திரிந்து நீயிரென
நின்ற திரிபைப்
பெயரெனக் கொண்டு உருபேலா தென்றாராயின்,
நீயென்பதன்
திரிபாகிய நின் என்பதனையும் பெயராகக்
கொண்டு பயனிலை
கொள்ளாதென்றுங் கூறல்வேண்டும்; அன்றி
நும்மின் திரிபா
கிய நீயிரென்பதனை 'எல்லா நீயிர் நீயெனக்
கிளந்து'. (சொல்-

கூ௪௪.) என இயற்கைப்பெயரோடு ஒருங்கு வைத்தது நீயி ரென்னுந் திரிபே இயல்பாக வேற்றுமைக்கண் நும்மெனத் திரிபினு மமையுமென்னுங் கருத்தினராயன்றே. அதனன் இயல் பாகக் கொள்ளப்பட்ட நிலைமைக்கண் நீயிரென்பதனை உருபேலா தென்றாராயின் நும்மெனத் திரிந்து உருபேற்பதனை உருபேலா தென்றல் பொருந்தாதாம். அதனனது போலியுரை யென்க. (எ)

௱௬. கூறிய முறையி னுருபுநிலை திரியா
தீறுபெயர்க் காகு மியற்கைய
வென்ப.

எழுவாய் வேற்றுமை யுணர்த்தி ஏனை யறுவகை வேற்றுமை யிலக்கணமு முணர்த்திய வெடுத்துக்கொண்டார்.

பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்று கூறப்பட்ட முறைமையையுடைய உருபு தந்நிலை திரியாது பெயர்க்கீறு மியல்பை யுடையவென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு,

உதாரணம்: சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்த னின், சாத்தனது, சாத்தன் கண் என வரும்.

அம்முறைபற்றி அவை யெண்ணுப் பெயரான் வழங்கப் படுதலிற் 'கூறிய முறையி னுருபு' என்றார்.

---

இயற்கைப் பெயராகக் கொள்ளாது நீயிர் என்பதை இயற்கைப் பெயராகக் கொள்ளினும் நீயிர் என்பது நும் எனத்திரிந்து உருபேற் றலின் ஆண்டும் உருபேலாதென்றல் பொருந்தாது. ஆகையால் இரு வழியானு முரையாசிரியர் கருத்துப் பொருந்தாமை அறிக.

(அ) எண்ணுப் பெயராய் வழங்குவதாவது—முதலாவது இரண்டாவது என வழங்குதலே,



வினைச்சொ லிறுதிநிற்கு மிடைச்சொற் றுமென வேறு உணரப்படாது அச்சொற்

குறுப்பாய் நிற்குமன்றே, இவையவ் வாறு பெயர்க்குறுப்பாகாது தாமென வேறுணரப்பட்டிறுதி நிற்குமென்பார் 'நிலைதிரியாது' என்றார்.

உருபு பெயர் சார்ந்து வருமெனவே, உருபேற்றலாகிய பெயரிலக்கணமும் பெறப்பட்டது (அ)

எ௦. பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழினிலை யொட்டு மொன்றலங் கடையே.

இதன் பொருள் :

பெயர்ச்சொற் காலந் தோன்றா, வினைச் சொல்லோடொக்கும் ஒரு கூறல்லாத விடத்து என்றவாறு.

சாத்தன், கொற்றன், உண்டல், தின்றல் எனக் காலந் தோன்றாது நிற்றலும், உண்டான், தின்றான் எனத் தொழினிலை யொட்டுவன காலந்தோன்றி நிற்றலுங் கண்டுகொள்க.

உண்டான், தின்றான் என்னுந் தொடக்கத்துப் படுத்துச் சொல்லப்படும் தொழிற்பெயர் வினைச்சொற்போலத் திணையும் பாலுங் காலமு முதலாயினவற்றை விளக்கி, அன் ஆன் முதலாகிய வீற்றவாய் வருதலின், 'தொழினிலையொட்டும்' என்றார். ஒட்டுமென்பது உவமைச்சொல்.

---

வினைச்சொல்லிறுதி நிற்கு மிடைச்சொல் என்றது—நடந்தான்

என்புழி ஆன் என்னும் விகுதி யிடைச்சொல்லை. இஃது அச்சொற் குறுப்பாய் நின்றது. உருபிடைச் சொல் பெயருக் குறுப்பாகாது தாமென வேறுணரப்பட்டு நிற்கு மென்றது; சாத்தனை என்புழி சாத்தன் என்னும் பெயருக்கு ஐ உறுப்பாகாது உருபென வேறுண ரப்பட்டு நிற்றலை. வினைச் சொற்களில் விகுதி இடைச்சொற்கள அவற்றிற் குறுப்பாய் நிற்கும். இவை யவை போலாகாது வேறாய் நிற்கு மென்பது கருத்து.

(௬) தொழினிலை யொட்டும் ஒன்று என்றது—வினையாலணையும் பெயரை. பெயரென்றது ஈண்டுப் பெயர்களைக் குறியாது பொருள் களைக் குறித்து நின்றது. இளவியாக்கம் ௧௧-ம் சூத்திரக் குறிப்பு நோக்குக.

பெயராகிய நிலைமையுடையது பெயர்நிலையென அன்மொழித் தொகை. பெயர்-பொருள். தொழினிலையுமது.

காலந் தோன்றா வென்பன ஒரு சொல்லாய்ப் பெயர் நிலைக் கிளவி யென்பதற்கு முடிபாயின. பயனிலை கோடலும் உருபேற்றலுமாகிய பெயரிலக்கணம் ஈண்டுப் பெறப்படுதலின், அவற்றோடியையக் காலந் தோன்றாமை யாகிய பெயரிலக்கணமும் ஈண்டே கூறினார். பெரும்பான்மை பற்றிக் காலந்தோன்றாமை பெயரிலக்கணமாயிற்று. (சா)

எக. இரண்டா குவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்

பவ்விரு முதலிற் றோன்று மதுவே.

இதன் பொருள்: 'பெயர் ஐ ஒடு கு' என்னுஞ் சூத்தி ரத்து ஐ எனப் பெயர் பெற்ற வேற்றுமைச்சொல் இரண்டாவ தாம். அஃதியாண்டு வரினும் வினையும் வினைக்குறிப்புமாகிய அவ்விரண்டு முதற்கண்ணுந் தோன்றுமவை பொருளாகவரும் என்றவாறு.

உதாரணம்: குடத்தை வனைந்தான், குழையையுடையன் என வரும்.

எண்ணுமுறைபான் இரண்டாவதென்பது பெறப்படுமாயி னும், இக்குறி தொல்லாசிரியர் வழக்கென்ப தறிவித்தற்கு ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி யிரண்டாவதென்றார். இது மூன்றாவது முதலாயினவற்றிற்கு மொக்கும்.

---

தொழினிலை தொழிலாகிய நிலையுடையது. அது என்றது அன்மொழித் தொகையை, பெரும்பான்மை பற்றி என்றார்; சிறுபான்மை காலம் விளக்குவனவு முளவாதலின். அவை வினையாலணையும் பெயர்.

பெயரியவென்பது பெயரென்பது முதலாக முடிந்ததோர் பெயரெச்சம்.

தம்மை யுணர்த்துவனவும் பெயரெனப்படுதலின் 'ஐயெனப் பெயரிய' வென்றார்.

வினையே வினைக்குறிப்பென்றாயினும் அவற்றின் செயப் படுபொருளே கொள்ளப்படும்; அவ்விருமுதலிற் றோன்றுமென்

றமையான், முதலாதற்கும் வேற்றுமைப் பொருளாதற்கு மேற் பன அவையேயாகலின். என்னை அவை முதலாதற் கேற்றவா

றெனின்: — செயப்படுபொருண் முதலாயின தொழிற்குக் காரண மாகலானும், 'ஆயெட் டென்ப தொழின் முத னிலையே'

(சொல்-ககஉ.) என அவற்றை முதனிலையென்று கூறுபவாக லானு மென்பது. அஃதேல், செயப்படுபொருளாவது வினை முதற்றொழிற் பயனுறுவதாதலால், குழை முதலாயினவற்றிற்கு அவ்விலக்கண மேலாமையிற் செயப்படு பொருளன்மையான் வினைக்குறிப்பெனல் வேண்டா வெனின்:—அற்றன்று; 'அம்

---

(கo) பெயரிய என்பது பெயர் என்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம். தம்மை உணர்த்துவனவு மென்றது—எழுத்தாகிய தம்மை உணர்த்துவனவு மென்றபடி. முதலென்றது—காரணத்தை அவ்விரு முதலிற் றோன்றும் என்றது—வினைச் செயப்படு பொருளும் வினைக் குறிப்புச் செயப்படுபொருளும் ஆகிய அவ்விரு காரணத்தின் கண்ணும் தோன்றலை. செயப்படுபொருளும் வினைக்கு முதலாதல் பற்றிச் செயப்படுபொருளை முதல் என்றார்.

சூத்திர உரையுள் அஃது என்றது உருபை. சோற்றை உண்டான் என்புழி ஐயுருபேற்ற சோறாகிய செயப்படுபொருள் உண்ணுதற்றொழில் நிகழ்தற்குத்தான் காரணமாயும் அத்தொழிற் பயனை உற்று அவ்வுருபிற்குப் பொருளாயும் நிற்றலின் முதலாதற்கும் வேற்றுமைப் பொருளாதற்கும் ஏற்பன அவையே யாகலின் என்றார். அவையே என்றது வினைச் செயப்படு பொருளையும் குறிப்புச் செயப்படு பொருளையும். செயப்படு பொருள் காரணமாதலை வினையியல் உகூ-ம் சூத்திரம் நோக்குக. குழை முதலாயினவற்றிற்கு அவ்விலக்கண மேலாமையினென்றது குழை முதலிய குறிப்புச் செயப்படுபொருள்களுக்கு, தொழிலுக்குக் காரணமாதல் ஏலாமையின் என்றபடி.

முக்காலமுங் குறிப்பொடுங் கொள்ளு, மெய்ந்நிலையுடைய' (சொல்.
ப.௦௦.) என்றாராகலின், குறிப்புச் சொற்
காலமொடு தோன்றித்
தொழிற் சொல்லாதலும் குழை முதலாயின
தொழிற் பயனுறு
தலும் ஆசிரியர் துணிபாகலின், அவையுஞ்
செயப்படுபொருளா
மென்பது. ஆயின், செயப்படுபொருட்கட்
டோன்றுமென்
வமையும், வினையே வினைக்குறிப்பெனல்
வேண்டாவெனின்:—
அங்ஙனங் கூறின், செயப்பாடினிது விளங்குஞ்
சிறப்புடைத்
தெரிநிலை வினைச் செயப்படுபொருளேயே
கூறினரோ குறிப்புப்
பொருளு மடங்கப் பொதுவகையாற் கூறினரோ வென்றைய
மாம், ஐயநீங்க வினையே வினைக்குறிப்பென்றாரென்பது. வினை
யினைக் குறிப்பென்பன ஈண்டாகு பெயர்.

புகழை நிறுத்தான், புகழை நிறுத்தல், புகழையுடையான்,
புகழையுடைமை என இரண்டாவது பெயரொடு தொடர்ந்தவழி
யும் வினைச்செயப்படுபொருளும் குறிப்புச் செயப்படுபொருளும்
பற்றியே நிற்குமென்பார், எவ்வழி வரினு மென்று யாப்
புறுத்தார்.

இயற்றப்படுவதும், வேறு படுக்கப்படுவதும், எய்தப்படு
வதுமெனச் செயப்படுபொருண் மூன்றும். இயற்றுதலாவது

---

பண்டு குழையையுடையன் என்புழி உடையன் என்பது உடையனு
யிருந்தான் எனக் காலம் பெற்று நிற்குங் கால் குழையும் உடைமை
யாக்கப்பட்டமையாகிய தொழிற் பயனுற்றே நின்றமையிற் குறிப்பு
வினையும் செயப்படு பொருளேயாம் என்பது. ஆதலின் அவையுக்

தொழிற்குக் காரணமாதல் காண்க. வினை
வினைக்குறிப்பு ஆகுபெய
ரென்றது வினையும் வினைக்குறிப்பும் அவற்றின்
செயப்படு பொரு
ளுக்கு ஆதலே.

இச்சூத்திரத்துள் வரும் இரண்டாவது என்னும் பெயரும் பொருளும் ஐயுருபிற்கே உரியதாகலின் ஒரு பொருளையே நுதலி வந்த தாம். அதனால் ஒரு சூத்திரமாயிற்று. இங்ஙனம் வருவது வாக்கிய பேதமாகாது. பெயரியல் உக-ம் சூத்திரம் நோக்குக. ஐ இரண்டாவது என்பது மேலே பெறப்பட்டதாதலின் ஈண்டுக் கூறல் வேண்டா வெனின், தொல்லாசிரியர் குறியென்பதறிவித்தற்கு மீளவுங் கூறினர். பெற்றதன் பெயர்த்துரை நியமித்தற்கன்றி, மீளவும் ஒன்று அதனைப் பெறுதற்குமே யாதலின். விளியியல் எ-ம் சூத்திர உரை நோக்குக. நிறுத்தான் உடையான் வினையாலணையும் பெயர்; நிறுத்
தல் உடைமை தொழிற்பெயர்.
16

முன்னில்லதனை யுண்டாக்குதல். வேறு படுத்தலாவது முன்னுள்ளதனைத் திரித்தல். எய்தப் படுதலாவது இயற்றுதலும் வேறுபடுத்தலு மின்றித் தொழிற்பயனுறுந் துணையாய் நிற்றல் (௧௦)

எஉ. காப்பி னொப்பி னூர்தியி னிழையி
னோப்பிற் புகழிற் பழியி னென்று
பெறலி னிழவிற் காதலின்
வெகுளியிற்

செறலி னுவத்தலிற் கற்பி னென்று
வறுத்தலிற் குறைத்தலிற் றொகுத்தலிற்
[பிரித்தலி

னிறுத்தலி னளவி னெண்ணி னென்று
வாக்கலிற் சார்தலிற் செலவிற் கன்றலி
னோக்கலி னஞ்சலிற் சிதைப்பி னென்று
வன்ன பிறவு மம்முதற் பொருள
வென்ன கிளவியு மதன்பால
வென்மனார்.

செயப்படு பொருண் மூன்றனையும் பற்றி வரும் வாய்பாடு

களை விரிக்கின்றார்.

இதன் பொருள்: காப்பு முதலாகச் சிதைப்பீறாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டுப் பொருளும் அவை போல்வன

பிறவுமாகிய அம்முதற் பொருண்மேல் வரும் எல்லாச் சொல்லும்

இரண்டாம் வேற்றுமைப்பாலவென்று சொல்லுவர் புலவர்

என்றவாறு.

என்றுவென்பது எண்ணிடைச்சொல்.

இன்னெல்லாம் புணரியனிலையிடைப் பொருணிலைக் குத

வாது (சொல்-உருo.) எண்ணின் கண் வந்தன. முன்னர் வரு

வனவற்றிற்கும் ஈதொக்கும்.

'அம்முதல்' என்றது கூறப்பட்ட செயப்படுபொருள்

என்றவாறு.

(கக) செயப்படுபொருள் மூன்றென்றது—இயற்றப்படுவது முத லாக முற்கூறிய மூன்றினையும், புணரியனிலையிடைப் பொருள்நிலைக்



உதாரணம் : எயிலை யிழைத்தான் என்பது இயற்றப் படுவது. கிளியை யோப்பும், பொருளை யிழக்கும், நாணை யறுக் கும், மரத்தைக் குறைக்கும், நெல்லைத் தொகுக்கும், வேலியைப் பிரிக்கும், அறத்தை யாக்கும், நாட்டைச் சிதைக்கும் என்பன வேறு படுக்கப்படுவன. குறைத்தல் சுருக்குதலும் சிறிதிழக்கச் சிதைத்தலுமாம். அறுத்தல் சிறிதிழவாமற் சினையையாயினும் முதலையாயினும் இருகூறு செய்தல். ஊரைக் காக்கும், தந்தையைப் பொக்கும், தேரையூரும், குரிசிலைப் புகழும், நாட்டைப் பழிக்

கும், புதல்வரைப் பெறும், மனைவியைக் காதலிக்கும், பகை
வரை வெகுளும், செற்றாரைச் செறும், நட்டாரை யுவக்கும், நாலைக் கற்கும், பொன்னை நிறுக்கும், அரிசியை யளக்கும், அடைக்காயை யெண்ணும், ஊரைச் சாரும், நெறியைச் செல்லும், வினைக் கன்றும், கணையை நோக்கும், கள்வரை யஞ்சும் என் பன எய்தப்படுவன. வெகுளலுஞ் செறலும் கொலைப்பொருள வாயவழி வேறு படுக்கட்படுவனவாம். செறல் வெகுளியது காரியம்.

இயற்றப்படுவது ஒரு தன்மைத்தாகலின், அதற் கொரு வாய்பாடே கூறினர். ஏனைய பலவிலக்கணத்தவாகலிற் பல வாய்பாட்டான் விரித்துக் கூறினர்.

அன்னபிறவு மென்றதனால், பகைவரைப் பணித்தான், சோற்றையட்டான், குழையை யுடையான், பொருளையிலன் என்னுந் தொடக்கத்தன கொள்க.

காப்பு முதலாயின பொருள்பற்றி

யோதப்பட்டமையான்,
ஊரைப் புரக்கும், ஊரை யளிக்கும்,
தந்தையை நிகர்க்கும், தந்

தவாதென்றது—சாரியையாகாதென்றதை.
குறைத்தல்—முன் இருந்த
நிற் சுருக்குதலும், சிறிதிழக்கும்படி
துணித்தலுமாம். சுருக்குதல்—
ஒதுக்கிச் சுருக்குதல். செறல்—கடுங்கோபம்.
பொருள்பற்றிஓதல்—பொ
ருள்குறித்து ஓதல். காப்பு முதலாயின பொருள்
பற்றி ஓதப்பட்டதென்
றது—காப்பு முதலாயினவற்றைச் சொற்பற்றிக்
கூறுது காவல் முத
லிய பொருள் பற்றிக் கூறியதை. சொற்பற்றிக்
கூறல்—சொல்லாகிய
ன்னை உணர்த்துதல் கருதிச் சொல்லல்.
அஃதாவது: கடி என் கிளவி ஞ்சக்கிளவி என்பன
போலக் கிளந்து ஓதல். காப்பென் கிளவி



தையை யொட்டும், தேரைச் செலுத்தும், தேரைக் கடாவும்
என்பன போல்வன வெல்லாங் கொள்க.

இயற்றப்படுதன் முதலாகிய வேறுபாடு, குறிப்பு வினைச்
செயப்படு பொருட்கண் ஏற்பன கொள்க. (கக)

எஏ. மூன்றா குவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி யனைமுதற் றதுவே.

**இதன் பொருள்:** மேல் ஒடுவெனப் பெயர் கொடுத்தோதிய வேற்றுமைச்சொல் மூன்றாவதாம். அது வினைமுதலுங் கருவியுமாகிய இரண்டு முதலையும் பொருளாவுடைத்து என்றவாறு.

மேல் ஐயொடு குவ்வென்றோதியவழி ஆனுருபுந் தழுவப் பட்டமையான், ஈண்டும் அவ்வாறே கொள்ளப்படும்; படவே, மூன்றாவதாதலும் வினைமுதல் கருவிப் பொருட்டாதலும் ஆனுருபிற்குமெய்தும்.

வினைமுதலாவது கருவி முதலாயின காரணங்களைத் தொழிற் படுத்துவது. கருவியாவது வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படு பொருட்க ணுய்ப்பது.

அனையென்பது அத்தன்மையாகிய முதலென அவற்ற திலக்கணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

முதலென்பதற்கு மேலேயுரைத்தாம்.

**உதாரணம்.** கொடியொடு துவக்குண்டான், ஊசியொடு குயின்ற தூசும் பட்டும் எனவும், அகத்தியனாற் றமிழுரைக்கப் பட்டது, வேலானெறிந்தான் எனவும் வரும்.

---

என்றோதாது காப்பு என வாளா ஓதுதலின் காப்பு முதலாயின பொருண்மேனின்றன. சார்பென் கிளவி (வேற்றுமை மயங்—க) முதலியன பொருள்பற்றி ஓதப்பட்டன அல்லவெனின் அற்றன்று. ஆண்டுப் பொருட்கும் சொற்குமுள்ள ஒற்றுமைபற்றிச் சார்பு பொருளையே சார்பென் கிளவி என்றார்.

(கஉ) முதல்—காரணம், இரண்டாம் வேற்றுமைச் சூத்திரக் குறிப்புட் காட்டப்பட்டது. கொடியொடு துவக்குண்டான் - கொடியாற் கட்



பிறபொருளு முளவேனும் வினைமுதல் கருவி சிறந்தமையான், 'வினைமுதல்கருவி யனைமுதற்று' என்றார்.

வினைமுதல் கருவிக்கண் ஓடுவெனுருபு இக்காலத் தருகியல்லது வாராது. (கஉ)

எச. அதனி னியற லதற்றகு கிளவி
யதன்வினைப் படுத லதனி னாதல்
லதனிற் கோட லதனொடு மயங்க
லதனோ டியைந்த வொருவினைக் கிளவி
யதனோ டியைந்த வேறுவினைக் கிளவி
யதனோ டியைந்த வொப்ப லொப்புரை
யின்னா னேது வீங்கென வரூஉ
மன்ன பிறவு மதன்பால வென்மனார்.

அதனினியறல்—மண்ணானியன்ற குடம் என்பது. மண் முதற்காரணம். முதற் காரணமாவது காரியத்தோ டொற்றுமையுடையது. அதற்றகுகிளவி—வாயாற்றக்கது வாய்ச்சி, அறிவானமைந்த சான்றோர் என்பன. இவை கருவிப்பாற்படும். அதன் வினைப்படுதல்—சாத்தனான் முடிபுமிக்கருமம் என்பது. இது

வினைமுதற்பாற்படும். அதனினுதல்—வாணிகத்தானாயினான் என்பது. அதனிற் கோடல்—காணத்தாற் கொண்ட வரிசி என்பது. இவையுங் கருவிப்பாற்படும். இவையைந்து பொருளும் ஓடுவுருபிற்குஞ் சிறுபான்மை யுரியவாயினும், பெரும்பான்மைபற்றி ஆனுரு

டப்பட்டான், ஈண்டு கட்டுதற்குக் கொடி கருத்தா. கொடியாற் கட்டினான் என்புழிக் கொடி கருவியாகும். மேல் என்பது வேற்றுமையியல் கூ-ம் சூத்திர உரையைக் குறித்து நின்றது. அவற்றது என்றது வினைமுதலையும் கருவியையும். தோற்றுவாய்- தோற்றுமிடம். அத்தன்மை என்றமையால், வினைக்கு முதலாதற் றன்மையுடையது வினைமுதல்; வினை செய்தற்குக் கருவியாய் நிற்குமியல்பினது கருவி என்றபடி. கருவி,காரகக்கருவி (இயற்றுதற்கருவி) ஞாபகக்கருவி (அறிதற்கருவி) என இருவகைப்படும். காரகம் - இயற்றுவிப்பது. (துணையாய் நின்று தொழிலை இயற்றச் செய்வது,) ஞாபகம் - அறிவிப்பது (துணையாய் நின்று பொருளை அறியச் செய்வது) என்பர் நச்சினார்க்கினியர். பிறபொருள் - உடனிகழ்ச்சி ; ஏது என்பன,



பிற்கே யுரியபோலக் கூறினார். அதனொடு மயங்கல்—எண்ணொடு விராயவரிசி என்பது. அதனொடியைந்த வொரு வினைக் கிளவி—ஆசிரியனொடு வந்த மாணாக்கன் என்று வருதற்றொழில் இருவர்க்கு மொத்தலின் ஒருவினைக் கிளவியாயிற்று. அதனொடியைந்த வேறு வினைக்கிளவி—மலையொடுபொருத மால்யானை என்பது. பொருதல்

யானைக்கல்லதின்மையின் வேறு வினைக் கிளவியாயிற்று. அதனோ டியைந்த வொப்பலொப்புரை—பொன்னோ டிரும்பனையர் நின்

னொடு பிறரே என்பது. ஒப்பல்லதனை யொப்பாகக் கூறலின் ஒப்பலொப்புரையாயிற்று. இம் மூன்றற்கும் உடனிகழ்தல் பொது வென்பதூஉம் அவை ஒடுவெனுருபிற்கே யுரியவென்பதூஉ முணர்த்திய, அதனோடியைதல் மூன்றற்குங் கூறினார். அதனொடு மயக்கற்கும் ஈதொக்கும். எல்லாப்பொருட்கண்ணும் அதுவென் றது உருபேற்கும் பெயர்ப்பொருளை. 'அதற்கு வினைமையுடை மையின்' (சொல்—எசு) என்பதற்கும் ஈதொக்கும். இன்னனேது வென்பது முயற்சியிற் பிறத்தலா னொலி நிலையாது என்பது அதனினதலெனக் காரகவேது முற்கூறப்பட்டமையான், இது ஞாபகவேதுவாம். இப்பொருள் ஆனுருபிற்கும் இன்னுருபிற்கு முரித்தென்பது விளக்கிய ஏதுவென்றது இன்னேதுவென்றார். இன்னமெனன்பது உம்மைத்தொகை. அவற்றதேதுப்பொருண்மை யென்றவாறு.

---

(கஅ.) அது என்றது உருபேற்கும் பெயர்ப் பொருளை என்றது மண்ணனியன்ற குடம் என்புழி உருபேற்ற மண் என்னும் பொருளை. இவ்வாறு பிறவு முணர்ந்து கொள்க. ஒப்பலொப்பு—இரும்பு. பொன் னுக்கு இரும்பு ஒப்பாகாமையின் ஒப்பலொப்பாயிற்று.

இன்றுனேது வென்பது இன்னும் ஆனும் ஒரு தொடரின்கண் ஏதுப் பொருளில் வருவது. இன் ஐந்தாம் வேற்றுமை உருபு. ஆன் மூன்றும் வேற்றுமை உருபு. அதற்கு முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலேயாது என்பது உதாரணம். முயற்சியிற் பிறத்தல் என்பதில் இன் காரகஏதுப் பொருளில் நின்றது; பிறத்தலே முயற்சி செய்விப்பதாக லின். சொல்லுவான் எழுத்தைப் பிறப்பித்தற்கு அவன் முயற்சி செய் தற் காரணம் என்றபடி. பிறத்தலான் ஒலி நிலேயாதென்பது ஞாபக ஏது; ஒலியின் நிலேயாமையைப் பிறத்தல் அறிவித்தலின். பிறப்பது எதுவோ அது நிலேயாதாகலின் ஒலியின் நிலேயாமையும் பிறத்தலால் அறியப்படும் என்றபடி.

யியல்] சொல்லதிகாரம்

கஉள

என வென்பதனை மாற்றி ஏது வென்பதன் பின்கொடுத்து,

ஈங்கு வரூஉ மன்ன பிறவு மென விகைக்க. ஈங்கனமென்று பாட மோதுவாருமுளர்.

அதனினியற லென்பதற்குத் தச்சன் செய்த சிறுமாவைய மென்றும், இன்றெனென்பதற்குக் கண்ணற் கொத்தை காலான் முடவனென்றும், உதாரணங்காட்டினுரால் உரையாசிரியரெனின்:- அற்றன்று: தச்சன் செய்த சிறுமாவையமென்பது ' விளைமுதல் கருவி

யனை முதற்று' (சொல்—எ௬)
என்புழியடங்குதலான் ஈண்டுப் பாற்படுக்க வேண்டாமையானும், சினைவிகாரத்தை முதன்மேலேற்றிக் கூறும் பொருண்மை இன்றென்பதனைப் பெறப்படாமையானும், அது போலியுரை யென்க.

ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமையாகற்பாலவெனின் :— அற்றன்று : வேற்றுமை மயக்கமாவது ஒரு வேற்றுமையது ஒரு பொருட் கண்ணாக, சில பொருட் கண்ணாக ஏனை வேற்றுமையுஞ் சேறலன்றே ; அவ்வாறன்றிச் சிறிதொழித்து எல்லாப்பொருட் கண்ணும் இரண்டுருபுஞ் சேறலானும், வடநூலுட் பொருள் வேற்றுமையல்லது உருபுவேற்றுமையான் ஒரு வேற்றுமையாக வோதப்படாமையானும், ஈண்டெல்லா வாசிரியரும் ஒரு வேற்றுமையாகவே யோதினாரென்க. வடநூலொடு மாறுகொள்ளா

---

தச்சன் செய்த சிறுமாவையம் என்புழி செய்தற்குக் கருத்தா வையமாயவழி தச்சன் மூன்றும் வேற்றுமைக் கருத்தாவாம். வையம்

செயப்படுபொருளாகியக்கால் தச்சன் முதலாம் வேற்றுமைக் கருத்தா வாகும். இவற்றை முறையே தச்சனால் வையம் செய்யப்பட்டது. வையத்தைத் தச்சன் செய்தான் என மாறிக் கூறிக்காண்க. தச்சன் செய்த சிறுமாவையம் என்பது மூன்றும்வேற்றுமையாங்கால் தச்சனால் செய்யப்பட்ட சிறுமாவையம் என விரியும். ஈண்டுச் செய்த வென்னும் பெயரெச்சம் செயப்பாட்டுவினைப் பொருளில் நின்றது.

தச்சன் செய்த சிறுமாவையம் என்பது ' மூன்றுருவதே வினை முதல் கருவி ' என்பதில், வினை முதலுள் அடங்குதலானும் இச்சூத்தி ரத்தால் ' அதனினியறல் ' என்று பகுதிப்படுத்தல் வேண்டாமையா நும் இன்னான் என்பதற்கு இதனான் என்று பொருள் கூறல் பொருந் தாமையின் கண்ணாற் கொத்தை எனச் சினை விகாரத்தை முதன் மேலேற்றிக் கூறுவது இன்னான் என்பதற்குப் பொருந்தாமையா

மைக் கூறல் ஆசிரியர்க்கு மேற்கோளாயின்,
விளிவேற்றுமையை
எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கற்பாலராவர்,
அவ்வாறடக்க விலரெனின் :—அற்றன்று :
விளிவேற்றுமையை எழுவாய் வேற்
றுமைக்க ணடக்கல்
ஆண்டெல்லார்க்கும் ஒப்ப முடிந்ததன்று ;

'எழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறெனை விளம்பான் பெயரது விகாரமென்
ருேதிய புலவனு முளனொரு வகையா
னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்'

என்பவாகலின், ஐந்திர நூலார் விளி
வேற்றுமையை எட்டாம் வேற்றுமையாக
நேர்ந்தாரென்பது பெறப்படும்; ஆசிரியர் அவர்
மதம்பற்றிக் கூறினுராகலின்,
அதனொடு மாறுகொள்ளாதென்பது. இக்கருத்து
விளக்கியவன்றே, பாயிரத்துள் 'ஐந்திர
நிறைந்த தொல்காப்பியன்' எனக் கூறிற்றென்க.
அன்னபிறவுமென்றதனல்,
கண்ணுற்கொத்தை, தூங்கு கையா

ளேங்குநடைய, (புறம்-உஉ)
மதியோடொக்குமுகம்,
சூலொடு கழுதை பாரஞ் சுமந்தது என்பனபோல்வன கொள்க. ()

எரு. நான்கா குவதே
குஎனப் பெயரிய வேற்றுமைக்
கிளவி
யெப்பொரு ளாயினுங் கொள்ளு
மதுவே.

**இதன் பொருள்:** மேல் கு எனப் பெயர் கொடுத்தோதப் பட்ட வேற்றுமைச்சொல் நான்காவதாம். அது யாதாயினுமொரு பொருளாயினும் அதனை ஏற்றுநிற்கும் என்றவாறு.

---

னும் அவ்வுரை பொருந்தாது. சிலர் இன்னன் என்பதற்கு இவ்வாறுள்ளவன் என்று பொருள் கொண்டு அதற்குதாரணமாகக் கண்ணுற் கொத்தை காலான் முடவன் என்னுமிவற்றை உரையாசிரியர் கூறி யது பொருத்தமானதே யென்கின்றனர். அங்ஙனமாயின் ஐம்பாலு மடங்குதற் கேற்ற ஒரு சொல்லாற் கூறுது ஒரு பாலாற் கூறுதல் சிறப்பாகுமா?

பொருள் வேற்றுமை யல்லது என்பதைப் பொருள் வேற் றுமையானல்லது எனத்

திருத்திக்கொள்க. வடநூலார் பொருள் வேறுபட்டவிடத்து வேற்றுமையை வேருகக் சொள்வர். பொருள் வேறுபடாது உருபு வேறுபட்டால் ஒன்ருகவே கொள்வர் என்பது கருத்து.



உதாரணம்:

அந்தணற் காவைக் கொடுத்தான் என வரும்.

மாணுக்கற்கு நூற்பொருளுரைத்தான் எனக் கொடைப் பொருளவாகிய சொல்லானன்றிப் பிற வாய்பாட்டாற் கூறப்படு மனவும், மாணுக்கற்கு அறிவு கொடுத்தானெனக் கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கட்செல்லாது ஆண்டுத் தோன்றும் பொருளுமெல்லா மடங்குதற்கு 'எப்பொருளாயினும்' என்ருர்.

பிறபொருளு முளவாயினும்,
கோடற்பொருள் சிறந்தமை யின்,
எப்பொருளாயினுங் கொள்ளுமென்றார்.
(கச)

எசுரு. அதற்குவினை யுடைமையி னதற்குடம்படுதலி
னதற்குப்படு பொருளி னதுவாகு கிளவியி
னதற்கியாப் புடைமையி னதற்பொருட் டாதலி
னட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்
றப்பொருட் கிளவியு மதன்பால வென்மனார்.

அதற்கு வினையுடைமை—கரும்பிற்கு வேலி என்பது, வினை—ஈண்டுபகாரம். அதற்குடம்படுதல்—சாத்தற்கு மகளுடம்பட்டார் என்பது. சான்றோர் கொலைக்குடம்பட்டார் என்பதுமது. அதற்குப்படு பொருளாவது பொதுவாகிய பொருளைப் பகுக்

குங்கால் ஒருபங்கிற்படும் பொருள்; அது சாத்தற்குக் கூறு கொற்றன் என்பது. அதுவாகு கிளவி—கடிசூத்திரத்திற்குப் பொன் என்பது. பொன் கடி சூத்திரமாய்த் திரியுமாகலின் அதுவாகுகிளவி யென்றார். கிளவி–பொருள். அதற்கு யாப் புடைமை—கைக்கு யாப்புடையது கடகம் என்பது. அதற்பொருட் டாதல்—கூழிற்குக் குற்றேவல் செய்யும் என்பது. நட்பு—அவற்கு நட்டான், அவற்குத் தமன் என்பன. பகை—அவற்குப் பகை, அவற்கு மாற்றான் என்பன. காதல்—நட்டார்க்குக் காதலன்,

---

(கச) பிறவாய்பாடென்றது, கொடுத்தான் என்பதன்றி, உரைத் தான் என்பதுபோல வருவனவற்றை. அவையுங் கொடைப் பொருளே. பிறபொருளென்றது வினையுடைமை முதலியவற்றை.

(கரு) உபகாரமென்றது—கரும்பைக் காத்தற்கு உபகாரமாய்ச் செய்த வேலி என்பது. படுதல்—ஒரு பங்கிற் படுதல்.

17

புதல்வற் கன்புறும் என்பன. சிறப்பு—வடுகரசர்க்குச் சிறந்தார் சோழியவரசர், கற்பார்க்குச் சிறந்தது செவி என்பன.

அப்பொருளென்றது அன்னபொருளை; இவ்வாடையு மங் நூலானியன்ற தென்றதுபோல. எனவே, அன்னபிறவு மென்ற வாறும்.

அப்பொருட்கிளவியு மென்றதனால், பிணிக்கு மருந்து, நட் டார்க்குத் தோற்கும், அவற்குத் தக்காளிவள், உற்றார்க்குரியர் பொற்றொடிமகளிர் என்பன போல்வனவெல்லாங் கொள்க. (கரு)

எஎ. ஐந்தா குவதே
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யிதனி னிற்றிது வென்னு மதுவே.

இதன் பொருள் : மேல் இன்னெனப் பெயர் கொடுத்தோதப் பட்ட வேற்றுமைச்சொல் ஐந்தாவதாம். அஃது இப்பொருளி னித்தன்மைத்து இப்பொருளென்னும் பொருண்மையை உணர்த் தும் என்றவாறு.

ஐந்தாவது நான்குபொருண்மையுடைத்து ; பொருவும், எல்லையும், நீக்கமும், ஏதுவுமென. அவற்றுட் பொருவு இருவகைப்படும் ; உறழ்பொருவும் உவமப்பொருவுமென. ஏதுவு மிருவகைப்படும் ; ஞாபகவேதுவும், காரகவேதுவுமென. அவற்றுண் ஞாபகவேதுப் பொருண்மை மேலே கூறப்பட்டது. காரகவேதுப் பொருண்மை அச்ச மாக்க மென்பனவற்றாற் பெறப்படும். நீக்கப் பொருண்மை தீர்தல் பற்றுவிடுத லென்பனவற்றாற் பெறப்படும். ஏனையிரண்டும் இதனினிற்றிது வென்பதனாற் கொள்ளப்படும்,

அப்பொருள் என்றது—அதுபோன்ற பொருளை. இவ்வாடையுமந் நாலானியன்றது என்புழி அந்நாலென்பது அதுபோன்ற நால் என்னும் பொருளை உணர்த்திநின்றது. எனவே அந்நாலானியன்றதன்று என்றபடி.

(கசு) ஏனைய இரண்டுமென்றது—எல்லையும் பொருவும். அவை இதனினிற்றிது என்பதனாற் கொள்ளப்படும். எங்ஙனம் கொள்ளப் படுமெனின்? இதனின் இத்தன்மைத்து இது என்பதனான் எல்லைப் பொருளும்; இதனினும் இத்தன்மைத்து இது என்பதனான் உறழ்



அவ்விரண்டனையும் அஃதிருமுறையா னுணர்த்துமாகலான். எல்லைப்பொருள்—கருவூரின்கிழக்கு ; இதனினூங்கு என வரும். கிழக்கு, ஊங்கு என்பன வினைக்குறிப்பல்லவேனும் இற்றென்னும் பொருள்பட நிற்றலின், இற்றென்றலேயாம். பொருவுப் பொருட்குதாரணம் முன்னர்ப்பெறப்படும். (கசு)

எஅ. வண்ணம் வடிவே யளவே
சுவையே

தண்மை வெம்மை யச்ச மென்று
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை
யென்று

முதுமை யிளமை சிறத்த
லிழித்தல்

புதுமை பழமை யாக்க மென்று
வின்மை யுடைமை நாற்றந்
தீர்தல்

பன்மை சின்மை பற்று
விடுதலென்

றன்ன பிறவு மதன்பால
வென்மனார்.

**இதன் பொருள்:** வண்ணமுதலாகப்

பற்றுவிடுதலீறாகச் சொல்லப்பட்டனவும்

அவைபோல்வன பிறவும் ஐந்தாம் வேற்று

மைத் திறத்தனவாம் என்றவாறு.

வண்ணம் வெண்மை கருமை முதலாயின. வடிவு வட்டஞ்

சதுர முதலாயின. அளவு நெடுமை குறுமை முதலாயின. சுவை :

கைப்புப் புளிப்பு முதலாயின. நாற்றம் நறுநாற்றம் தீநாற்ற

முதலாயின.

---

பொருவும், இதுபோல இத்தன்மைத்து இது என்பதனான் உவமப்

பொருவும் ஆகிய பொருவுப் பொருளும் கொள்ளப்படும்.

கருவூரின் கிழக்கு என்றதில் நீக்கப்பொருளை வைத்து உணர்த் துங்கால் கருவூரின் என்பது இதனின் எனவும், கிழக்கு [கிழக்குள் ளது] என்பது இற்று எனவும் மருவூர் என்பது இது எனவும் உணரப்படும். மருவூர் —வருவிக்கப்பட்டது.

காக்கையிற் கரிது களம்பழம் என்பதைக் காக்கையினும் கரிது என விரித்து உறழ் பொருவுக்கும், காக்கைபோலக் கரிது என விரித்து உவமப் பொருவுக்கும் உதாரணமாகக் கொள்க.

உதாரணம் : காக்கையிற்கரிது களம்பழம், இதனின் வட்டமிது, இதனி னெடிதிது, இதனிற் றீவிதிது, இதனிற் றண்ணிதிது, இதனின் வெய்திது, இதனி னன்றிது, இதனிற் றீதிது, இதனிற் சிறிதிது, இதனிற் பெரிதிது, இதனின் வலிதிது, இதனின் மெலிதிது, இதனிற் கடிதிது இதனின் முதிதிது, இதனினிளதிது, இதனிற் சிறந்ததிது, இதனி னிழிந்ததிது, இதனிற் புதிதிது, இதனிற் பழைதிது, இவனி னிலனிவன், இவனினுடையனிவன், இதனி னுறுமிது, இதனிற் பலவிவை, இதனிற் சிலவிவை எனவும், அச்சம்—கள்ளரி னஞ்சும் எனவும், ஆக்கம்—வாணிகத்தினுயினுன் எனவும், தீர்தல்—ஊரிற் றீர்ந்தான் எனவும், பற்றுவிடுதல்—காமத்திற் பற்றுவிட்டான் எனவும் வரும்.

அச்சமுதலிய நான்குமொழித்து ஒழிந்த இருபத்துநான்கும் ஒத்தபண்பு வேறுபாடுபற்றிப் பொருஉப்பொருள் விரித்தவாறு.

அன்னபிறவுமென்றதனுல், அவனி னளியனிவன், அதனிற் சேய்த்திது, இகழ்ச்சியிற் கெட்டான், மகிழ்ச்சியின் மைந்துற்றான் என்பனபோல்வன கொள்க.

பல வாய்பாட்டோடு வழக்கின்கட்பயின்று வருதலுண்டைமை யாற் பொரூஉப்பொருள் இதற்குச் சிறப்புடைத்தாகலின், பெரும் பான்மையும் அதனையே விரித்தார். (கஎ)

எகூ. ஆறு குவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினு மிதன திதுவென
மன்ன கிளவிக் கிழமைத் ததுவே.

**இதன் பொருள் :** அதுவெனப் பெயர்கொடுத் தோதப் பட்ட வேற்றுமைச்சொல் ஆறுவதாம். அது உடையதாய் நிற்குந்

---

(கஎ) அச்சம் முதலிய நான்குமென்றது—அச்சம் ஆக்கம் தீர் தல் பற்று விடுதல் என்பனவற்றை. பண்பு—குணம்.

அச்சமும் ஆக்கமும் ஏதுவும்; தீர்தலும் பற்று விடுதலும் நீக்க மும் பற்றிவந்தன. ஏனையவெல்லாம் பொருவு [ஒப்பு].

ரியல்] சொல்லதிகாரம்

கநந.

தன்னானும் பிறிதொன்றானும்
இதனதிதுவென்பதுபட நிற்குங் கிளவியிற்
றோன்றுங்
கிழமைப் பொருளாகவுடைத்து என்ற

வாறு.

எனவே, ஆறுவது கிழமைப்பொருட்டென்றும், அக்கிழமை தன்னான் வந்த தற்கிழமையும் பிறிதான் வந்த பிறிதின்கிழமையு மென இரண்டென்றுங் கூறியவாறும்.

தன்னென்றது தன்னோடொற்றுமையுடைய பொருளை. பிறிதென்றது தன்னின் வேறாகிய பொருளை.

அஃதேல்,

தன்னினும் பிறிதினுமாகிய கிழமைத்தென்னாது இதனதிதுவெனு மன்ன கிளவிக் கிழமைத்தென்றதென்னை யெனின் :—பொருட்கிழமையும், பண்புக்கிழமையும், தொழிற்கிழமையும் அவைபோல்வனவுமெனக் கிழமை தாம் பல. அவற்றுளொன்று சுட்டாது இதனதிதுவென்னுஞ் சொல்லாற்றோன்றும் கிழமைமாத்திரம் சுட்டுமென்றற்கு ' இதனதிதுவெனு மன்ன கிளவிக் கிழமைத்து' என்றார்.

இதனவில்லையென்னும்
பன்மையுருபுத்தொடரு மடங்கு தற்கு
அன்னகிளவியென்றார்.

ஒன்று பல குழீஇய தற்கிழமையும், வேறு பல குழீஇய தற்கிழமையும், ஒன்றியற்கிழமையும், உறுப்பின்கிழமையும், மெய் திரிந்தாய தற்கிழமையுமெனத் தற்கிழமை ஐந்துவகைப்படும்.

---

(கஅ) அவற்றுளொன்று சுட்டாது. . .

.சுட்டும்என்றது: இது பொருட்கிழமை இது பண்பின் கிழமை என்று அவற்றுள் ஒன்றைச் சுட்டாது இதனுடையது இது என்கிற சொல்லாற் பெறப்படுங் கிழமை (உரிமை) மாத்திரஞ் சுட்டிவருவது ஆறும் வேற்றுமை என்றபடி. சாத்தனது ஆடை என்புழி ஆடை என்பது பொருளாதலின் அப் பொருளைச் சுட்டாது, அப்பொருள் சாத்தனுடையதென அவனுடைய பொருளென்னும் உரிமை மாத்திரம் குறித்து வரும் என அறிக. எனவே இதனுடையது இதுஎன்னும் உரிமைமாத்திரங் காட்டுவதன்றிக் கிழமையின் பேதங் காட்டாது. அப்பேதம் உணர்வோரால் இன்ன கிழமை என உணரப்படுமென்பதாம்,

பொருளின்கிழமையும், நிலத்தின் கிழமையும், காலத்தின் கிழமையுமெனப் பிறிதின்கிழமை மூவகைப்படும். அவற்றிற்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும். (கஅ)

அ௦. இயற்கையி னுடைமையின் முறைமையிற்
கிழமையிற்

செயற்கையின் முதுமையின் வினையி
னென்று கருவியிற் றுணையிற் கலத்தின்
முதலி
னொருவழி யுறுப்பிற் குழூவி னென்று
தெரிந்துமொழிச் செய்தியி னிலையின் வாழ்ச்சியிற்
றிரிந்துவேறு படூஉம் பிறவு மன்ன
கூறிய மருங்கிற் றோன்றுங் கிளவி
யாறன் பால வென்மனார் புலவர்.

**இதன் பொருள் :** இயற்கை முதலாக வாழ்ச்சி யீறுகச் சொல்லப்பட்டனவும் திரிந்து வேறுபடூஉமன்ன பிறவுமாகிய மேற் கூறப்பட்ட கிழமைப்பொருட்கட் டோன்றுஞ் சொல்லெல்லாம் ஆறும்வேற்றுமைத் திறத்தனவென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

திரிந்து வேறுபடூஉமன்ன பிறவுமென்றாரேனும், திரிந்து வேறுபடுதல் அன்ன பிறவுமென்றதனாற் றழுவப்படுவனவற்றுள் ஒருசாரனவற்றிற்கே கொள்க.

**உதாரணம் :** எள்ளது குப்பை, படையது குழாம் என்பன குழூஉக்கிழமை. அவை முறையானே ஒன்று பல குழீஇயதும் வேறு பல குழீஇயதுமாம். சாத்தனதியற்கை, நிலத்ததகலம் என்பன இயற்கைக்கிழமை. சாத்தனது நிலைமை, சாத்தனதில்லாமை என்பன நிலைக்கிழமை இவையொன்றியற்கிழமை. யானையதுகோடு, புலியதுகிர் என்பன உறுப்பின்கிழமை. உறுப்

(கக) ஒன்றியற்கிழமை என்றது—பண்புக்கிழமையை. இது தொழிற்பண்பு குணப்பண்பு என இருவகைப்படும். சாத்தனது இயற்கை, நிலத்ததகலம் என்பன குணப் பண்பு. சாத்தனதுநிலைமை சாத்தனது இல்லாமை—தொழிற் பண்பு. செய்யுட்கிழமை எனினும்

டாவது பொருளினேகதேச

மென்பதறிவித்தற்கு ஒருவழியுமுப் பென்றார். சாத்தனது செயற்கை, சாத்தனது கற்றறிவு என்பன செயற்கைக்கிழமை. அரசனது முதுமை, அரசனது முதிர்வு என்பன முதுமைக்கிழமை. முதுமையென்பது பிறிதோர் காரணம்பற்றாது காலம் பற்றி ஒருதலையாக அப்பொருட்கட்டோன்றும் பருவமாகலிற் செயற்கையுளடக்காது வேறு கூறினர். சாத்தனது தொழில், சாத்தனது செலவு என்பன வினைக்கிழமை. இவை மெய்திரிந்தாய தற்கிழமை. சாத்தனது உடைமை, சாத்தனது தோட்டம் என்பன உடைமைக்கிழமை. மறியது தாய், மறியது தந்தை என்பன முறைக்கிழமை. இசையது கருவி, வனைகலத்தது திகிரி என்பன கருவிக்கிழமை. அவனது துணை, அவனதிணங்கு என்பன துணைக்கிழமை. நிலத்தது தொற்றிக்கலம், சாத்தனது விலைத்தீட்டு என்பன கலக்கிழமை. ஒற்றியது முதல், ஒற்றியது பொருள் என்பன முதற்கிழமை. கபிலரது பாட்டு, பரணரது பாட்டியல் என்பன செய்யுட்கிழமை. தெரிந்து

மொழியாற் செய்யப்படுதலிற் றெரிந்து

மொழிச் செய்தியாயின. இவை பொருட்பிறிதின்கிழமை. முருகனது குறிஞ்சிநிலம், வெள்ளியதாட்சி என்பன கிழமைக்கிழமை. காட்டதியானை, யானையது காடு என்பன வாழ்ச்சிக்கிழமை. அவற்றுண் முருகனது குறிஞ்சிநிலம், யானையது காடு என்பன நிலப்பிறிதின்கிழமை. காட்டதியானை என்பது பொருட் பிறிதின் கிழமை. ஏனையது காலப்பிறிதின்கிழமை.

திரிந்து வேறுபடூஉ மன்ன பிறவு

மென்றதனால், எட்சாந்து, கோட்டுநூறு, சாத்தனதொப்பு, தொகையதுவிரி, பொருளது கேடு, சொல்லது பொருள் என்னுந் தொடக்கத்தனகொள்க. அவற்றுள் எட்சாந்து, கோட்டுநூறு என்பன முதலாயின முழுவதூஉந் திரிதலின், வேறு கூறினர்.

மேற்சொல்லப்பட்ட தற்கிழமை பிறிதின்கிழமை யென்பன வற்றை விரித்தவாறு. (கக)

---

டுசய்தற்கிழமையெனினும் ஒக்கும். ஏனையதென்றது

அக. ஏழா குவதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் யிடத்தி
னிலத்திற் காலத்தி
னனைவகைக் குறிப்பிற்
றோன்று மதுவே.

இதன் பொருள்: கண்ணெனப் பெயர்கொடுத்தோதப்பட்ட வேற்றுமைச்சொல் ஏழாவதாம். அது வினைசெய்யா நிற்றலாகிய இடத்தின் கண்ணும், நிலமாகிய இடத்தின் கண்ணும், காலமாகிய இடத்தின் கண்ணுமென அம்மூவகைக் குறிப்பின்கண்ணுந் தோன்றும் என்றவாறு.

எனவே, ஏழாவது
இடப்பொருண்மைத் தென்றவாறும்.

குறிப்பிற்றேன் றுமது வென்றது அவற்றை யிடமாகக் குறித்தவழி அவ்வேற்றுமை தோன்றுமென்றவாறு.

எனவே, இடமாகக் குறிக்கப்படாதவழி

அப்பெயர்க்கண் வேற்றுமை தோன்று தென்பதாம்.

தன்னினமுடித்த லென்பதனான் ஏனை வேற்றுமைச் சொற் களும் அவ்வப்பொருட்கட் குறிப்பில்வழி அவ்வப்பெயர்க்கண்

வாராமை கொள்க.

உதாரணம்: தட்டுப்புடைக்கண் வந்தான், மாடத்தின்க ணிருந்தான், கூதிர்க்கண் வந்தான் என வரும். (உ௦)

அஉ. கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சா ரயல்புடை தேவகை யெனாஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ
வன்ன பிறவு மதன்பால வென்மனார்.

இதன் பொருள்: கண் முதலாக இடமீறாகச் சொல்லப் பட்ட பத்தொன்பது பொருளும் அவைபோல்வன பிறவும்

ஏழாவதன் றிறத்தன என்றவாறு.

(௨௦) வேற்றுமைச் சொல் என்றது உருபை. தட்டுப் புடைக் கண் வந்தான் என்பது வினை செய்யிடத்தின்கண் வந்தது. ஏனையவை முறையே இடத்தின் கண்ணும் காலத்தின் கண்ணும் வந்தன. நிலம்—இடம்.

ரியல்] எழுத்ததிகாரம்

க்கள்

கண்ணென்னும் பொருளாவது

'கண்ணின்று கூறுதலாற்

பனவ ஞயின்' (கலி—௩எ) எனவும், '

கண்ணகன்ஞாலம்' எனவும்,

கண்ணென்னு மிடைச்சொல்லா

லுணர்த்தப்படும் இடப்பொ

ருண்மை. தேவகையென்பது திசைக்கூறு.

கண்கால்புறமகமுள்

ளென்பன முதலாயினவற்றது பொருள்

வேற்றுமைவழக்கு

நோக்கி புணர்ந்து கொள்க.

கண்ணின்று சொல்லியானை

என கண்ணின்றிவை சொல்லற்

பாலையல்ல என்றும், ஊர்க்காற்செய்யை

ஊர்க்கட்செய் என்றும்,

ஊர்ப்புறத்து நின்ற மரத்தை ஊர்க்கண்மரம்

என்றும், எயிலகத்

துப் புக்கானை எயிற்கட்புக்கான் என்றும்,

இல்லுளிருந்தானை

இற்கணிருந்தான் என்றும், அரசனுழை

யிருந்தானை அரசன்க

ணிருந்தான் என்றும், ஆலின்கீழ்க்

கிடந்தவாவை ஆலின்கட்

கிடந்தது என்றும், மரத்தின்மேலிருந்த

குரங்கை மரத்தின்கண்

ணிருந்தது என்றும், ஏர்ப்பின்சென்றானை

ஏர்க்கட்சென்றான்

னென்றும், காட்டுச்சாரோடுவதனைக்

காட்டின்கணோடும் என்றும்,

உறையூர்க்கயனின்ற சிராப்பள்ளிக்குன்றை

உறையூர்க்கட் குன்று

என்றும், எயிற்புடைநின்றாரை எயிற்கணின்றார்

என்றும், வட

பால்வேங்கடம் தென்பாற்குமரி என்பனவற்றை

வடக்கண்வேங்

கடம் தெற்கட்குமரி என்றும்,
புலிமுன்பட்டானைப் புலிக்கட்
பட்டான் என்றும், நூலினிடையுங்கடையுந்தலையுநின்ற
மங்கலத்தை
நூற்கண்மங்கலம் என்றும், கைவலத்துள்ளதனைக்
கைக்கண்ணுள்
ளது என்றும், தன்னிடத்து நிகழ்வதனைத் '
தன்கணிகழ்வது
என்றும் அவ்விடப் பொருள்பற்றி
ஏழாம்வேற்றுமை வந்தவாறு
கண்டுகொள்க.

எனஅவென்பது எண்ணிடைச்சொல்.

கண்முதலாயினவெல்லாம் உருபென்றால்
உரையாசிரிய
ரெனின் :—உருபாயின், ஏழாவதற்குக் கண்ணென்பது
உருபாதல்

---

(உக) கண் கால் முதலியவெல்லாம்
இடவிசேடத்தைக் காட்டி
வந்த இடைச்சொற்கள் என்பது சேனாவரையர்
கருத்து. இவற்றை
இடைச்சொலென்றாரேனும் பெயர்த்தன்மை யடைந்து
நின்ற இடைச்

சொற்கள் என்று கொள்க; ஏனெனலின்
இடவிசேடத்தையுணர்த்தலா
னும், சாரியை ஏற்பதானும்,
18
கண்ணுருபு தன்னையேற்ற பெயர்ப்



மேலே பெறப்பட்டமையாற் பெயர்த்துங் கண்காலென்றல் கூறியது கூறிற்றுமாகலானும், ஊர்ப்புறத்திருந்தான், ஊரகத் திருந்தான், கைவலத்துள்ளது கொடுக்கும் எனப் புறம் அகம் வலமென்பனவற்றுவழி அத்துச்சாரியை கொடுத்து உதாரணங் காட்டினமையானும், அவர்க்கது கருத்தன்றென்க. உருப ல்லவேல், என்னுழை, என்முன் என நிலைமொழி உருபிற்கோதிய செய்கை பெற்றவாறென்னையெனின் :— 'அதற்பொருட்டாகலின்' (சொல்—எகூ) எனவும் 'தம்முடைய தண்ணளியுந் தாமும்' எனவும் உருபின் பொருள்பட வரும் பிறமொழி வந்துழியும் நிலைமொழி அச்செய்கை பெற்று நிற்றலின், அச்செய்கை உருபுபுணர்ச்சிக்கே யென்னும் யாப்புறவின் றென்க.

அன்னபிறவுமென்றதனால், பொருட்கணுணர்வு, என்கணன் புடையன், மலர்க்கணுற்றம், ஆகாயத்துக்கட்பருந்து என்னுந் தொடக்கத்தன கொள்க. (உக)

பொருளை இடமாகக் குறிக்கும். இவையே இடவிசேடமுணர்த்துங் கண் முதலியவற்றிற்கும் கண்ணுருபுக்குமுள்ள வேறுபாடாகும். ஊர்ப்புறத் திருந்தான் என்புழிப் புறம் என்பது உருபாயின் அத்துச்சாரியை பெறுது வரும்; இதுபோல்வன பெற்று வருதலின் கண்கால் முதலிய இவைகள் உருபன்று; பெயர்த் தன்மைப்பட்டு நின்றதோரிடைச்சொல் என்பதாம். பெயர் சாரியை ஏற்றுவரும். உருபு ஏலாது என்ற படி. இதன்விரிவை இலக்கண விளக்கம் பெயரியல் சசு-ம் சூத்திர உரைநோக்கி உணர்க. அதற்பொருட்டு என்பதில் பொருட்டு என்பது நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு. தம்முடைய என் புழி உடைய என்பது ஆறும்வேற்றுமைச் சொல்லுருபு. யாப்

புறவு—நிச்சயம்.

ஏழுவேற்றுமைகளையும் வைத்த முறையைப்பற்றித் தெய்வச் சிலையார் கூறியவற்றை இக்கே தருகின்றும். "யாதானும் ஒரு தொழிலும் செய்வான் உள்வழியல்லது நிகழாமையின் அது செய்து முடிக்கும் கருத்தா முன்வைக்கப்பட்டான். அவன் ஒருபொருளைச் செய்துமுடிக்குங்கால் செய்யத்தகுவது இதுவெனக் குறிக்கவேண்டு. தலின் செயப்படுபொருள் இரண்டாவதாயிற்று. அவ்வாறு அப் பொருளைச் செய்துமுடிக்குங்கால் அதற்காங்கருவி தேடுமாதலின் அக்கருவி மூன்றுவதாயிற்று. அவ்வாறு, செய்துமுடித்த பொருளைத் தான் பயன்கோடலேயன்றிப் பிறர்க்குங் கொடுக்குமாதலின் அதனை ஏற்றுநிற்பது நான்காவதாயிற்று. அவ்வாறு கொடுப்புழி அவன்

௩௯. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை

யீற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்து

பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கு

மெல்லாச் சொல்லு முரிய வென்ப.

இதன் பொருள்: வேற்றுமைத்தொகையை விரிக்குமிடத்து, வேற்றுமையேயன்றி, அன்மொழித்தொகையை விரிப்புழிப் பல்லாற்றான் அன்மொழிப் பொருளொடு புணர்ந்து வரும் எல்லாச்சொல்லும், விரிக்கப்படும் என்றவாறு.

உருபு தொகப்பொருணிற்றலின், வேற்றுமைத் தொகையை வேற்றுமைப் பொருளென்றார். தொகையை வேற்றுமைப்பொருளென்றும், பொருளென்றும் யாண்டு மாள்ப.

அன்மொழித்தொகை

பண்புத்தொகை முதலாகிய தொகை

இறுதிநின்றியறலின்,
ஈற்றுநின்றியலுந்தொகை யென்றார்.

தாழ்குழல், பொற்றொடி, மட்காரணம் என்னும் அன்மொழித்தொகைகளை விரிப்புழி, தாழ்குழலையுடையாள், பொற்றொடியை யணிந்தாள், மண்ணாகிய காரணத்தா னியன்றது என வரும் உடைமையும், அணிதலும், இயறலும், கருங்குழற்பேதை, பொற்றொடியரிவை, மட்குடம் என்னும் வேற்றுமைத்தொகை களை விரிப்புழியும், கருங்குழலையுடைய பேதை, பொற்றொடியை யணிந்தவரிவை, மண்ணானியன்ற குடம் என வந்தவாறு கண்டு கொள்க.

---

கையினின்றும் அப்பொருள் நீங்கிநிற்பது ஐந்தாவதாயிற்று. அவ்வாறு நீங்கியபொருளைத் தனதென்று கிழமைசெய்தலின் அக்கிழமை ஆறாவதாயிற்று. ஈண்டுக் கூறப்பட்ட எல்லாவற்றிற்கும் இடமும், காலமும் பொதுவாகிநிற்றலின் அவை ஏழாவதாயின.''

(உஉ) அன்மொழித்தொகை இறுதி நின்றியைதலின் என இயைக்க.

இச்சூத்திரத்துக்குச் சேனாவரையர் உரைத்த உரையைச் சிவஞான முனிவர் மறுத்துள்ளார்.

சேனாவரையர் உரையே பொருத்த

மென ஓராராய்ச்சி எழுதி யாம் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளிப் படுத்தியுள்ளாம். அவ்வாராய்ச்சி இந்நூற்கு அனுபந்தமாகச் சேர்க்கப் படும். அதனுட் காண்க.



பொருள்புணர்ந்திசைக்குமெனவே, இருதொகைக்கண்ணும் ஒரு வாய்பாட்டா னன்றிப் பொருள்சிதையாம லுணர்த்துதற் கேற்ற வாய்பாடெல்லாவற்றானும் வருமென்பதாம். அவ்வாறுதல் மேற்காட்டப்பட்டனவற்றுட் கண்டுகொள்க.

அன்மொழித்தொகையிற் சொற்பெய்து விரித்தல் யாண்டுப் பெற்றாமெனின்:—அதுவும் அநுவாதமுகத்தான் ஈண்டேபெற்ற மென்க. பெறவே, இரண்டுதொகையும் விரிப்புழி வரும் வேறு பாடு கூறியவாறும்.

இதனை 'வேற்றுமைத் தொகையே யுவமைத் தொகையே' (சொல்-சகஉ) என்னுஞ் சூத்திரத்தின்பின் வைக்கவெனின்:— அதுவுமுறையாயினும், இனி வருஞ் சூத்திரங்களான் வேற்று மைத்தொகை விரிபற்றிய மயக்கமுணர்த்துதலான், ஆண்டுப்படு முறைமை யுணர்த்துதல் ஈண்டு மியைபுடைத் தென்க.

உரையாசிரியர் இரண்டு சூத்திரமாக அறுத்து ஆசிரியர் மதவிகற்பங்கூறித் தம்மத மிதுவென்பது போதா ஒன்றாக வுரைப்பாரு முளரென்றார். இரண்டாய் ஒன்றாயவழிப் பிறிதுரை யின்மையின், உரையாசிரியர் கருத்து இதுவேயாம். (உஉ)

## ௩. வேற்றுமைமயங்கியல்

அ௪. கரும மல்லாச் சார்பென் கிளவிக்
குரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை.

மேற்கூறப்பட்ட வேற்றுமை தம்முண்மயங்குமாறுணர்த்திய வெடுத்துக்கொண்டார். அம்மயக்கம் இருவகைப்படும்; பொருண் மயக்கமும், உருபுமயக்கமுமெனை. பொருண்மயக்கமாவது தன் பொருளிற்றீராது பிறிதொன்றன்பொருட்கட்சேறல். உருபு மயக்கமாவது தன்பொருளிற்றீர்ந்து சேறல். 'யாத னுருபிற் கூறிற் றாயினும்' (சொல்—க0௬) என்பதனான் உருபுமயக்கமுணர்த் தினர்; அல்லனவீற்றுமெல்லாம் பொருண்மயக்கமுணர்த்தினர். இவ்விருவகை மயக்கமு முணர்த்துதலான், இவ்வோத்து வேற் றுமைமயங்கியலென்னும் பெயர்த்தாயிற்று மயக்கமேயன்றி வேற்றுமைக்கோதிய இலக்கணத்திற் பிறழ்ந்து வழீஇயமை வனவும் பிறவும் இயைபுடையன ஈண்டுணர்த்துதலான், இக்குறி பன்மைநோக்கிச் சென்ற குறியென வுணர்க.

**இதன் பொருள் :** இரண்டாவதற்கோதப்பட்ட சார்பு பொருண்மை கருமச்சார்புங் கருமமல்லாச் சார்புமென இரண்டு வகைப்படும். அவற்றுள், கருமச்சார்பு தூணைச்சார்ந்தான் எனவொன்றனையொன்று மெய்யுறுதலாம். கருமமல்லாச்சார்பு மெய்யுறுதலின்றி அரசரைச்சார்ந்தான் என வருவதாம். கருமமல்லாத சார்பு பொருண்மைக்கு உரித்தாய் வருதலுமுடைத்து ஏழாவது என்றவாறு.

**உதாரணம் :** அரசர்கட்சார்ந்தான் என வரும்.

---

(க) வழீஇயமைவனவென்றது, பிறிது பிறிதேற்றலும், உருபு தொகவருதலும், வேற்றுமைச்சொல் எதிர்மறுத்து மொழிதலும் என்பவற்றை. பிற என்றது வினைமுதலும் ஆகுபெயரும் ஆகியவற்றை.

இக்குறி என்றது வேற்றுமைமயங்கியல் என்னுங் குறியை. குறி—பெயர். கருமச்சார்ச்சி என்றது மெய்யுறுதலாகிய தொழிலை.



கருமமாவது ஈண்டு மெய்யுறுதலாயின், அரசர்கட்சார்ந் தான் என்புழி உறுதலின்மையிற் சார்பாமாறென்னையெனின் :— தூண்பற்றுக ஒருசாத்தன் சார்ந்தாற்போல அரசர் பற்றுக அச்சார்ந்தானொழுகுதலிற் சார்பாயிற்றென்பது.

உம்மை எதிர்மறை.

தூணின்கட் சார்ந்தான் எனக் கருமச்சார்ச்சிக்கண் ஏழாவது சென்றுற் படுமிழுக்கென்னையெனின் :— அன்னதோர் வழக்கின் மையே பிறிதில்லையென்க. இக்காலத்து அவ்வாறு வழங்குபவா லெனின் :— கருமமல்லாச்சார்ச்சிக்கண் வருமுருபைச் சார்தலொப் புமையாற் கருமச்சார்ச்சிக்கண்ணுங்கொடுத்து உலகத்தார் இடைத் தெரிவின்றி வழங்குகின்றாரெனவேபடும்; ஆசிரியர் கருமமல்லாச் சார்பென்கிளவியென விதந்து கூறினமையானென்பது. (க)

அரு.

சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்
வினைநிலை யொக்கு மென்மனார் புலவர்.

இதன் பொருள்: சினைமேனிற்குஞ் சொல்லிற்கு இரண் டாவதும் ஏழாவதும் வினைநிலைக்கண் ஒக்குமென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

உதாரணம்: கோட்டைக்குறைத்தான், கோட்டின்கட்

குறைத்தான் என வரும்.

மயக்கமேயன்றி வழீஇயமைவனவும் பிறவுமுணர்த்துதலான் பன்மைநோக்கிச் சென்றகுறி யென்றார். பன்மை—மிகுதி. மிகுதி யென்றது மயக்கமே பெரிதும் உணர்த்தலே. உம்மையெதிர்மறை யென்றது உரிமையைமறுத்து உரித்தாய் வாராமையையுமுணர்த்தல் பற்றி.

இடைத்தெரிவின்றி வழங்குகின்றாரென்றது, இது இவ்விடத்து வழங்குவதென்று இடந்தெரியாது வழங்குகின்றாரென்றபடி; என்றது கருமமல்லாச்சார்ச்சி இது, கருமச்சார்ச்சி இது என்ற இடவேறுபாடு தெரியாது, கருமமல்லாச்சார்ச்சிக்கண் வழங்குவதைக் கருமச்சார்ச்சிக்கண்ணுங் கொடுத்து வழங்குகின்றார் என்றபடி. இடை—இடம்,



வினைக்குறிப்பை நீக்குதற்கு வினையென்றார்.

வினைநிலையொக்குமென்றாரேனும்,
புகழ்தல் பழித்தலென்னுங்
நாடக்கத்தனவொழித்து மயங்குதற்கேற்கும்
அறுத்தல் குறைத் [illegible] முதலாயின வினையே
கொள்ளப்படும்.

இரண்டாவதன்பொருட்கண் ஏழாவது சென்றதாயினும் , புலவரவிற்றன்றி இரண்டாவதுபோல ஏழாவது வழக்கின்கட் பயின்று வருதலின், ஒக்குமென்றார்; அதுகாரணத்தால், கரும மல்லாச் சார்ச்சிக்குஞ் சினைக்கிளவிக்கும் ஏழாவது உரிமை யுடைத்தென உடன்கூறாது, வேறு கூறினாரென்பது. (உ) .பசு. கன்றலுஞ் செலவு மொன்றுமார் வினையே.

இதன் பொருள் : கன்றற்பொருண்மேல் வருஞ் சொல்லும் செலவுபொருண்மேல் வருஞ்சொல்லும் இரண்டாவதற்கும் ஏழா வதற்கும் ஒரு தொழில் என்றவாறு.

உதாரணம் : சூதினைக்கன்றினான், சூதின்கட்கன்றினான்; நெறியைச் சென்றான், நெறிக்கட்சென்றான் என வரும்.

பொருள்பற்றியோதினமையால்,'சூதினையிவறினான், சூதின்க ணிவறினான் ; நெறியைநடந்தான், நெறிக்கணடந்தான் என வருவனவுங் கொள்க.

இரண்டாவதற்கு இப்பொருள் மேலே கூறப்பட்டமையால், கன்றல் செலவென்னும் பொருட்கு ஏழாவதுமுரித்தென்றேத

---

(உ) வினை—தெரிநிலைவினை. வினைநிலைக்கண்—வினையைக்கொண்டு முடிந்துநிற்றற்கண். புகழ்தல், பழித்தல் போன்றவினைகள் மயங்குதற் கேற்றவல்ல என்றபடி.

கருமமல்லாச்சார்ச்சிக்கண் இரண்டாவது வழங்குவதுபோல் ஏழாவது வழங்குதல் பயில்வுடையதன்று; சினைநிலைக்கிளவிக்கண் இரண்டாவதும் ஏழாவதும் ஒப்பப் பயின்றுவரும்; அக்காரணத் தான் இரண்டையுமுடன்கூறாது வேறு கூறினார். அதுகாரணம்— பயின்றுவருங்காரணம்.

(கூ) கன்றலுஞ் செலவுமெனப் பொருள்பற்றி ஓதினமையால் கன்றற்பொருள்பற்றிவரும் இவறன் முதலிய சொற்களும், செலவுப்



வமையுமெனின், அங்ஙனமோதின் ஏழாவதன்வரவு சிறுபான்மை யென்பது படும்; ஆகலின் உடனோதிஞரென்பது.

சினைநிலைக்கிளவி நிலைமொழிவரையறையாகலானும், இது வருமொழி வரையறையாகலானும், வேறு கூறினாரென்பது. (௩)

அஎ. முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே.

**இதன் பொருள்:** முதற்சொல்லோடு தொடர்ந்த சினைச் சொல்லிற்கு, ஆறும் வேற்றுமை முதற்கண் வருமாயின், சினைச் சொல்லின்கண் இரண்டாம் வேற்றுமையே வரும் என்றவாறு.

**உதாரணம்:**

யானையது கோட்டைக் குறைத்தான் என வரும்.

'சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்' (சொல்—அரு) என்றதனான் முதற்சினைக்' கிளவிக்கும் இரண்டு வேற்றுமையு மெய்துவதனை நியமித்தவாறு. இது வருஞ் சூத்திரத்திற்குமொக்கும். (௪)

---

பொருள்பற்றிவரும் நடத்தல் முதலிய சொற்களும், கொள்ளப்படுமென்க. - கன்றல்—அடிப்படல்,

மேல் என்றது, வேற்றுமையியல் ககம் சூத்திரத்தை. வேறோதினார் என்றது, அதனோ டொருங்கோதாது வேறு கூறினார் என்றபடி.

சினைநிலைக்கிளவி என்ற சூத்திரம் நிலைமொழிவரையறைபற்றிய விதியாகலானும், இச்சூத்திரம் வருமொழி வரையறைபற்றிய விதியாகலானும், இரண்டையும் ஒரு சூத்திரமாக்காது வெவ்வேருகக் கூறினரென்பது கருத்து.

(ச) நியமித்ததென்றது,— சினைநிலைக்கிளவி என்னுஞ் சூத்திரத்தானே சினைக்கு ஐயுங் கண்ணும் வருமென்று கூறியதனுனே, முதலோடு சேர்ந்த சினைக்கண்ணும் இரண்டும் வரும் என எண்ணியதை. முதற்கு அதுவந்தால் சினைக்கு (கண்வாராது) ஐ மாத்திரம் வரும் என நியமித்ததென்றபடி. ஆதலின் இது நியமச்சூத்திரமாகும்.



௺அ. முதன்முனைவரிற் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருத றெள்ளி தென்ப.

**இதன் பொருள்:** அம் முதற்சினைக் கிளவிக்கண், முதற்சொன்முன் ஐகாரவேற்றுமை வரின், சினைச்சொன்முன் கண்ணென்னும் வேற்றுமை வருதறெள்ளிது என்றவாறு.

உதாரணம்: யானையைக் கோட்டின்கட் குறைத்தான் என

வரும்.

தெள்ளி தென்றதனுன், யானையைக் கோட்டைக் குறைத் தான் எனச் சிறுபான்மை ஐகார வேற்றுமையும் வருமென்பதாம்.

சினைக்கிளவிக்கண் மயக்க முணர்த்துகின்ற சூத்திரத்திடைக்

'கன்றலுஞ் செலவும்' என்னுஞ் சூத்திரம் வைத்த தென்னை யெனின்:—ஐயுங் கண்ணுமென்பது அதிகாரத்தான் வரச் சூத்திரஞ் சுருங்குமாகலின், 'சினைநிலைக் கிளவிக்கு' என்னுஞ் சூத்திரத்தின் பின் அதனை வைத்தாரென்பது. (ரு).

அக.

முதலும் சினையும் பொருள்வேறு படாஅ நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே.

இதன் பொருள் : முதலுஞ் சினையும் முதலாயது முதலே யாய்ச் சினையாயது சினையேயாய்த் தம்முள் வேறுபொருளாகா. சொல்லுங்கால், சொல்லுவானது சொல்லுதற் குறிப்பினுன் முதலென்றுஞ் சினையென்றும் வழங்கப்படும் என்றவாறு.

சொற்குறிப்பினவென்றது முதலெனப்பட்டதுதானே தன்னைப் பிறிதொன்றற்கு ஏகதேசமாகக் குறித்தவழிச் சினையுமாம்;

---

(ரு) சுருங்கும் என்றதனுல் அங்ஙனம் வையாதொழிந்தால், ஐயையும் கண்ணையும் அதனேடு சேர்த்துச் சூத்திரஞ் செய்யவேண்டும்; அதனுல் சூத்திரம் விரியுமென்பது பெறப்படும்.

(சு) ஆய் என்னும் வினையெச்சம் ஆகாவென்பதனேடு முடியும். எனவே சொல்லுவான் குறிப்பின்படி முதல்சினையாயும், சினைமுதலாயும் வரும் என்றபடி. அங்ஙனம் மாறிவருங்காலும் முன்னிரு சூத்

19

சினையெனப் பட்டதுதானே தன்கண் ஏகதேசத்தை நோக்கி முதலெனக் குறித்தவழி முதலுமாமென்றவாறு

கோட்டது நுனியைக் குறைத்தான், கோட்டை நுனிக்கட்

குறைத்தான், கோட்டை நுனியைக் குறைத்தான் என முதற் கோதப்பட்ட உருபு சினைக்கண்ணும் வந்ததாலென்று ஐயுற் றார்க்கு, கருத்து வகையாற் கோடென்பது ஆண்டு முதலாய நிற்றலின், முதலிற் கோதிய உருபே முதற்கண் வந்ததெனா ஐய மகற்றியவாறு.

(கூ)

கூ०. பிண்டப் பெயரு மாயிய றிரியா
பண்டியன் மருங்கின் மரீஇய
மரபே.

இதன் பொருள்: பிண்டத்தை யுணர்த்தும் பெயரும்

முதற்சினைப் பெயரியல்பிற் றிரியா; அவ்வாறு அவற்றை முதலுஞ் சினையுமாக வழங்குதல் மேற்றொட்டு வழங்கி வாராநின்ற கூற்றான் மருவிய முறை என்றவாறு.

பிண்டம் பலபொருட்டொகுதி.

ஈண்டு ஆயியறிரியாவென மாட்டெறிந்தது, முதற்சினைக் கிளவிக்குப் போலப் பிண்டப் பெயர்க்கு முதற்கண் ஆறாவது வரிற் சினைக்கு இரண்டாவது வருதலும், முதற்கு இரண்டாவது வரிற் சினைக்கு ஏழாவது வருதலும், சிறுபான்மை இரண்டாவது வருதலுமாம்.

---

திரங்களுட் கூறியபடி முதற்குக்கூறிய உருபு முதற்கும், சினைக்குக்கூறிய உருபு சினைக்குமே வரும். அஃதாவது,-யானையது கோட்டைக் குறைத்தான் என்றவழி முதற்கண்வந்த அவ்வுருபே, கோட்டை முதலாகக்கருதிக் கோட்டது நுனியைக் குறைத்தான் என்றவழியும் வருதல்.

ஏகதேசம்—ஓரிடம். இங்கே உறுப்பைக் குறித்துநின்றது. முன் (வேற்று —கஅ) ஒருவழியுறுப்பென்றார் ஆசிரியர்.

முதற்கோதிய உருபு—முன்னிரு சூத்திரங்களானும் முதற்கோதிய உருபு என்றபடி.

**உதாரணம்:** குப்பையது தலையைச் சிதறினன், குப்பையைத் தலைக்கட் சிதறினன், குப்பையைத் தலையைச் சிதறினன் என வரும்.

பிண்டமும் முதலுஞ் சினையுமேயாகலின் வேறு கூறல் வேண்டாவெனின் :—குப்பை யென்புழி, தொக்க பல பொருளல்லது, அவற்றின் வேறாய் அவற்றானியன்று தானொன்றெனப்படும் பொருளின்மையின், தொல்லாசிரியர் அதனை முதலென்று வேண்டார்; அதனான் வேறு கூறினாரென்பது. படை காடு கா முதலாயினவுமன்ன. (எ)

௩௯. ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே.

**இதன் பொருள்:** அதனோடியைந்த ஒருவினைக் கிளவியென மூன்றுவதற்கோதிய ஒருவினை யொடுச்சொல் உயர்பொருளைப் புணர்த்தும் பெயர்வழித் தோன்றும் என்றவாறு.

**உதாரணம்:** அரசனோடிளையர் வந்தார், ஆசிரியனொடு மாணக்கர் வந்தார் என வரும்.

உயர்பொருட் பெயர்வழி ஒடுக்கொடுக்கவெனவே, உயர்பில் வழிச் சாத்தனுங் கொற்றனும் வந்தார் என இரு பெயரும் எழுவாயாய் நிற்குமென்பதாம். நாயொடு நம்பி வந்தான் என

இடிபெயர்க்கண்ணும் ஒருவினை யொடுச்சொல் வந்ததாலெனின் :— யாதானுமோராற்றான் அதற்குயர்புண்டாயினல்லது அவ்வாறு கூறார்; கூறுபவாயின், அஃது ஒருவினையொடுச்சொ லெனப் படாது, கைப்பொருளொடு வந்தான் என்பதுபோல, அது தனக்

(எ) குப்பையென்பது தொக்கபலபொருளல்லது, தொக்கபல பொருளின் வேறாய் அப்பொருளானியன்று தாளெருபொருளாய் இருப்பதில்லாமையால் அதனை முதலெனவேண்டார்; அதனல் வேறு கூறினரென்க. அல்லது இன்மையின் எனவிலைக்க. குப்பை யென்பது பலபொருட்கூட்டமாவதன்றிப் பலபொருளானியன்ற தொரு பொருளாகாமை யறிக. எனவே குப்பை பலபொருளா னியன்றதொரு பொருளாயிருப்பின் அதனை முதலுஞ் சினையுமாகப் பிரிக்கலாம். அங்ஙனமில்லாமையின் ஆகாதென்றபடி.



குண்டாக வந்தானெனப் பிறிது பொருள்படுவதோ ரொடுவுருபா மென்க.

இதனை வேற்றுமை யோத்தின்கண் ' அதனினியறல்

(சொல்—எ௯) என்னுஞ் சூத்திரத்தின்பின் வையாது ஈண்டுவைத்த தென்னையெனின் :—வேற்றுமையது பெயரும் முறையுந் தொகையும் பொதுவகையான் அவற்றதிலக்கணமும் உணர்த்தியதல்லது, இன்னவேற்றுமை இன்னபொருட்கண் இன்னவாறுமென்னும் விசேடவிலக்கண மதிகாரம்பட்டின்றாகலான், ஆண்டு வையாது,

மூன்றாவது இப்பொருட்கண் இவ்வாறுமென விசேடவிலக்கணம் 'மூன்றனு மைந்தனும்' (சொல்—௯௨) எனக் கூறுகின்றாராகலின், அதனேடியைய ஈண்டு வைத்தார்; இதுவும் ஒருபொருள்பற்றி யோதுகின்ற விசேடவிலக்கணமாகலானென்பது. (அ)

௯௨. மூன்றனு மைந்தனுந் தோன்றக் கூறிய
வாக்கமொடு புணர்ந்த வேதுக் கிளவி
நோக்கோ ரனைய வென்மனார் புலவர்.

**இதன் பொருள் :** மூன்றாம்வேற்றுமைக்கண்ணும் ஐந்தாம் வேற்றுமைக்கண்ணும் விளங்கச் சொல்லப்பட்ட ஆக்கத்தோடு

கூடிய ஏதுச்சொல் அவ்வேதுப்பொருண்மையை நோக்கு நோக்கு ஒருதன்மைய என்றவாறு.

**உதாரணம்:** வாணிகத்தானாயினான், வாணிகத்தானாய பொருள் எனவும், வாணிகத்தினாயினான், வாணிகத்தினாயபொருள் எனவும் வரும்.

---

(அ) 'அதனோடியைந்த ஒருவினைக்கிளவி' (வேற்றுமை இயல் கக-ம் சூத்திரப்பகுதி.) வேற்றுமையோத்தின்கண் விசேடவிலக்கணவதிகாரம்பட்டின்று என்றது,— ஆண்டு விசேடவிலக்கணத்தைச்சொல்லுமதிகாரம் பொருந்திவரவில்லை என்றபடி. பொருந்திவரின் ஆண்டும் வைக்கலாமென்பதாம். 'ஒருபொருள்' என்றது அதனோடியைதல் என்னும் பொருளை. இப்பொருட்கண் விசேடவிலக்கணமாவது ஒடுச்சொல் உயர்பின்வழித்தாதல்.

பிறிதுபொருள் என்பதற்கு வேறுவினையொடு என்று கூறலாம். மயங்கியல்]



வாணிகத்தான், வாணிகத்தின் என வுருபொடு தொடர்ந்து நின்ற சொல்லை ஏதுக்கிளவியென்றார்.

'அதன்வினைப்படுதலதனிறுதல்' (சொல்—எச) என்றும் '1 துமைபழமையாக்கம்' (சொல்—எஅ) என்றும் மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் ஏதுப்பொருண் மேற்கூறப்பட்டமையான் இச் சூத்திரம் வேண்டாவெனின் :— அற்றன்று : பிரிநிலையேகார முதலாகிய இடைச்சொல்லும் ஒருசார்வினைச்சொல்லும் முன் னோதப்பட்டனவேனும், எச்சமாதலொப்புமையான் எச்சவாராய்ச் சிக்கண் அவைதம்மையே

'பிரிநிலை வினையே பெயரே யொழியிசை—
யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே'

(சொல்—சஙப)

எனப் பின்னுங் கூறினாற்போல,

ஏதுப்பொருண்மை மூன்றாவ

தற்கும் ஐந்தாவதற்கும் மேற்கூறப்பட்டதாயினும், மயக்கமாத லொப்புமையான் மயக்கவாராய்ச்சிக்கண் ஈண்டுங் கூறினாரகலின், கூறியது கூறலென்னுங் குற்றமின்றென்பது. இஃது 'அச்சக் கிளவி' (சொல்—கoo) என்பதற்குமொக்கும்.

அஃதேல், மயக்கமாவது ஒரு வேற்றுமை பிறிதொன்றன் பொருட்கட் சேறலன்றே; ஏதுவின்கண் வரும் மூன்றுவதும் ஐந்தாவதும் தம்பொருளேபற்றி நிற்றலின் மயங்கின வெனப் படாவெனின் :—நன்று சொன்னாய். ஏதுப்பொருண்மை தனக் குரியவாற்றான் அவற்றிற்குத் தன்பொருளாயினவாறுபோலப் பிறிதொன்றற் குரியவாற்றாற் பிறிதொன்றன் பொருளாதலு முடைமையின், அம்முகத்தான் மயங்கினவெனவே படுமென்பது.

---

(க) ஒருசார்வினைச்சொல் என்றது வினையெச்சத்தையும் பெய ரெச்சத்தையும். அவை வினையியற்கண் முன் ஓதப்பட்டனவேனும் என்றபடி.

அவற்றிற்கு என்றது மூன்றையும் ஐந்தையும். தன்னென்று ஒருமையாற் கூறியது ஒவ்வொன்றையும் நோக்கி. மூன்றும் வேற்று மைக்கு ஏதுப்பொருள் தனக்குரியவாற்றாற் றன்பொருளாயினவாறு போலப் பிறிதொன்றாகிய ஐந்தாம் வேற்றுமைக்குரியவாற்றால் அதன் பொருளாதலும் உடைய; ஐந்தாம்வேற்றுமைக்கும் அவ்வாறே கொள் ளுங்கால் அவ்வாயிலான் ஒன்றுடனென்று மயங்கினவெனவே படும்.



அல்லதூஉம் ஒருபொருட்கண் இரண்டுருபுசென்ற துணையான் மயக்கமாயிற்றெனினு மமையும்.

ஆக்கமொடுபுணர்ந்த வேதுக்கிளவி யெனவே,

ஆக்கமொடு புணராது ஞாபகவேதுப் பொருண்மைக்கண் வரும் இன்னும் ஆனும் ஒத்தவரவினவல்ல வென்பதாம். ஆண்டைந்தாவது பெருவரவிற்றெனக் கொள்க. (௬௰)

௬௰௧. இரண்டன் மருங்கி னோக்க னோக்கமவ்
விரண்டன்
மருங்கி னேதுவு மாகும்.

இதன் பொருள்: 'நோக்கலினஞ்சலின்' (சொல்—எ௨) என இரண்டாவதற்கோதிய நோக்கப்பொருண்மை நோக்கிய நோக்கமும் நோக்கனோக்கமுமென இரண்டுவகைப்படும். நோக்கிய நோக்கம் கண்ணானோக்குதல். நோக்கனோக்கம் மனத்தானொன்றனை நோக்குதல். அந்நோக்கனோக்கமாகிய பொருள் மூன்றாவதற்கும் ஐந்தாவதற்குமுரிய ஏதுப்பொருண்மையுமாம் என்றவாறு.

நோக்கனோக்கத்தா னோக்கப்படும் பொருளை நோக்கனோக்க மென்றார்.

நோக்கனோக்கமவ் விரண்டன் மருங்கினேதுவுமாகு மெனவே, அவ்வேதுப்பொருண்மைக்குரிய இரண்டுருபும் அவ் வேதுப் பொருண்மையிற் றீராது இரண்டாவதன்பொருட்கண் வருமென்பதாம். ஓம்படைப்பொருட்கண் வருவனவற்றிற்கும் மீதொக்கும்.

உதாரணம் :

'வானோக்கி வாழு முயிரெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி'

(குறள்—ருசஉ)

---

அன்றி, ஒருபொருட்கண்ணே இரு உருபுஞ்சென்று மயங்குதலின் மயக்கமெனினுமமையும். புணராது வரும் இன்னும் ஆனுமென்க. புணராது வரும் என்னும் வினைகளுக்குக் கருத்தா இன்னும் ஆனும்.

ஆக்கமொடுபுணர்ந்த ஏதுக்கிளவி என்பது காரகவேதுவைக் குறிக்குமன்றி, ஞாபகவேதுவைக் குறியாமையின் ஞாபகவேதுக்கண் இன்னும், ஆனும் ஒத்தவரவினவல்ல என்பது கருத்தாகும்.

என்புழி வானை நோக்கி வாழும், கோலை நோக்கி வாழும் என இரண்டாவது வருதலேயன்றி, வானுேக்கி வாழும், வானி ேனுக்கி வாழும், கோலானேக்கி வாழும், கோலினேக்கி வாழும் என மூன்ருவதும் ஐந்தாவதும் வந்தவாறு கண்டுகொள்க.

ஏதுவாயினவாறென்னையெனின் :—உயிருங்குடியும் வானையுங் கோலையும் நோக்குவது அவற்ருனய பயன்பற்றி அவற்றைத் தாமின்றியமையாமையன்றே; அதனன் அவ்வாறு பயன்படுவன அவற்றதின்றியமையாமைக்கு ஏதுவாதலுமுடைய வென்பது. அஃதேல், வானுங்கோலும் ஏதுவாயவழி நோக்கப்படுவன பிற வாவான் செல்லுமெனின் :—அற்றன்று : கண்ணுட்குத்தினன் என்றவழிக் கண்ணே செயப்படுபொருளாதலும் பெறப்பட்டாற் போல, வானேனுக்கும், கோலானேக்கும் என்புழியும்

அவை தாமே செயப்படுபொருளாதலும் பெறப்பட்டமையால், நோக் கப்படுவன பிறவாவான் செல்லாவென்பது. (௧௦)

௬௪. அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி
னதுவெ னுருபுகெடக் குகரம் வருமே.

இதன் பொருள்: ஆறும்வேற்றுமைப்பொருண்மேல் வரும் உயர்திணைத்தொகைக்கண் உருபு விரிப்புழி அதுவென்னுமுருபு கெட அதன் பொருட்கண் நான்காமுருபு வரும் என்றவாறு.

ஈண்டு அதுவெனுருபு கெடுதலாவது அவ்வுருபாண்டு வாராமை.

---

(௧௦) அவ்வாறு பயன்படுவனவென்றது, வாளையும், கோலையும்; அவ்விரண்டும் உயிரும் குடியுமாகிய அவ்விரண்டினது இன்றியமை யாமைக்கு ஏதுவாதலுடைமையினென்க.

இன்றியமையாமை—இல்லாமல் முடியாமை.

எனவே வானுகிய
மழையை இன்றியமையாமையுடையது உயிரும், கோலாகிய நீதியை இன்றியமையாமையுடையது குடியும் என்க. அவையின்றி வாழ மாட்டாவென்பது கருத்து. கண்ணுட்குத்திஞனென்புழிக் கண்குத்து தற்கு இடமாதலன்றிக் குத்தப்படுதலிற் செயப்படுபொருளாதலும் பெறப்பட்டாற்போலவென்க. வானும் கோலும் நோக்குதற்குத் தாம் காரணமாவதோடு நோக்கப்படுதலுமுடைமையிற் செயப்படுபொருளாதலுமுடைய வென்றபடி.



நம்பி மகன், நங்கை கணவன்

என்னுந் தொகைகளை விரிப்புழி, நம்பிக்கு மகன், நங்கைக்குக் கணவன் என நான்கனுருபு வந்தவாறு கண்டு கொள்க.

உயர்திணைத் தொகைவயி னதுவெனுருபு கெடக் குகரம் வருமென்றதனுன், அஃறிணைப்பாலேன்றநிற்றல் ஆறனுருபு பெற்றும்.

உயர்திணைத்தொகைவயின் ஆருவதனை விலக்கி நான்காவதே சேறலின், 'இதனதிதுவிற்று' (சொல்—கக0) என்னுஞ் சூத்திரத்தாற் கூறப்படும் பொருளோடு உடன்வையாது இதனை வேறு கூறினர்.
(கக)

கூரு. தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டு மூன்றுங்
கடிநிலை யிலவே பொருள்வயி னை.

இதன் பொருள்: தனக்கேயுரித்தாய் நில்லாது ஒருகால் ஈற்றுப்பெயரோடுஞ் சென்று தடுமாறு தொழிலொடு தொடர்ந்த பெயர்க்கு இரண்டாவதும் மூன்ருவதுங் கடியப்படா, அவ்வேற்றுமை தொக அவற்றின் பொருணிற்குந் தொகையிடத்து, என றவாறு.

உதாரணம் : புலிகொன்றயானை, புலிகொல்யானை என்புழிப் புலியைக்கொன்ற யானை எனவும், புலியாற் கொல்லப்பட்ட யானை எனவும் இரண்டாவதும் மூன்றாவதும் மயங்கியவாறு கண்டு கொள்க.

---

(கக) ஆறனுருபு அஃறிணைப்பாலேன்றல்—சாத்தனது சாத்தன, என்பன சாத்தனுடையது, சாத்தனுடையன என்று குறிப்புவினைப் பெயராகி நின்றவழி அஃறிணை ஒருமைப்பாலும் பன்மைப்பாலுந் தோன்றுதல்.

'இதனது இதுவிற்று' என்னும் பொருள் அஃறிணைப்பொரு

ளில் வருதலால் அதற்குதாரணமாகிய யானையது கோடு கூரிது என் பதன்கண் யானைக்குக் கோடு கூரிது என நான்காவதும் ஒப்பச் செல்லும்; உயர்திணைத் தொகையின்கண் நான்காவது மாத்திரமே சேறலின் இதனை வேறுகூறினாரென்பது.

கொன்ற், கொல்லென்பன வினைமுதற்பொருட்குரியவாகப் புலியென்பது செயப்படுபொருளாயவழியல்லது இரண்டாவது வாராமையானும், அச்சொற்கள் செயப்படுபொருட்குரியவாகப் புலி வினைமுதலாயவழியல்லது மூன்றாவது வாராமையானும், இவை ஒருபொருட்கண் வந்தனவன்மையின், மயக்கமாமா றென்னையெனின் :—ஒருபொருட்கண் வாராமையின் மயக்க மெனப்படாதாயினும், தடுமாறு தொழிற்கிளைக்கண் இரண்டும் வந்து நிற்றலின் மயக்கப்பாற்படுமென்பது. (கஉ)

கக. ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப வுணரு மோரே.

**இதன் பொருள் :** தடுமாறுதொழிலொடு புணர்ந்தபெயருள், இறுதிப்பெயர்முன்னர்ப் பொருள் வேறுபாடுணர்த்துஞ்சொல் வரின்,

அச்சொல்லால் அப்பொருள் வேற்றுமை தெரிவர்

உணர் வோர் என்றவாறு.

**உதாரணம்:** புலிகொல்யானை

யோடாநின்றது, புலிகொல் யானைக்கோடு வந்தன

என வரும்.

பிறமயக்கம்போலாது ஈண்டுப்

பொருள்வேறுபாடுணர்ந் தல்லது

உருபு விரிக்கலாகாமையின், 'மெய்யறி பனுவலின்

வேற் றுமை தெரிப' வென்றார்.

முன் புலியைக் கொன்ற யானை பின்

பிறிதொன்றனா னிறந் துழியும்

புலிகொல்யானைக்கோடு வந்தனவென்ப ;

அவ்வழிக் கொன்றது, கொல்லப்பட்டதென்னும்

வேறுபாடு குறிப்பா னுணரப்படுமென்பார்

'உணருமோர்' என்றார். பிறவுமன்ன. (கரு)

(கக) புலிகொல்யானை என்புழிப் புலியைக்கொன்ற யானையோ, புலியாற் கொல்லப்பட்ட யானையோ என அறிவது பின்வருஞ் சொல்லாலென்பது இச் சூத்திரத்தின் கருத்து.
பனுவலென்றது ஈண்டுச் சொல்லை. கொன்றது கொல்லப்பட்டது என்னும் வேறுபாடென்றது, புலிகொல்யானைக்கோடு என்புழிப் புலியைக் கொன்ற யானையோ, புலியாற் கொல்லப்பட்ட யானையோ என்னும் பொருள் வேறுபாட்டை. அது சொல்லுவான் குறிப்பான்



அறியப்படுமென்பதாம்.



கஎ. ஓம்படைக் கிளவிக் கையு மானுந்
தாம்பிரி விலவே தொகைவரு காலை.

இதன் பொருள்:

ஓம்படைப்பொருண்மைக்கு ஐகாரவுருபும் ஆனுருபும் ஒத்தவுரிமைய, அவ்வேற்றுமை தொக்கவழி என்றவாறு.

ஓம்படுத்தல் பாதுகாத்தல்.

புலிபோற்றி வா என்புழி ஓம்படைக்கிளவி இரண்டாவதற்
கோதிய காப்பின்கணடங்குதலின்,
புலியைப்போற்றி வாவென
ஐகாரவுருபும், புலி அவன் போற்றி வருதற்கு ஏதுவாதலு
முடைமையாற் புலியாற்போற்றி வா வென ஆனுருபும், ஒத்த
வுரிமையவாய் வந்தவாறு கண்டுகொள்க.

புலியேதுவாதலுமுடைத்தாயின், இரண்டன் மருங்கினேக்க
னேக்கமு மோம்படைக் கிளவியு மேதுவுமாகும் என வமைபும்
இச்சூத்திரம்
வேண்டாவெனின் :—அங்ஙனமோதின் ஓம்படைப்
பொருண்மைக்கு ஐந்தாமுருபுமெய்தும்; அதனை விலக்குதற்கு
ஐயுமானுந் தாம் பிரிவிலவென வேறு கூறினர். இவை பிரிவில
வெனவே, இன்னுருபு பிரிவுடைத்தாய்,

புலியிற் போற்றிவா
வெனச் சிறுபான்மை வருமென்பதாம்.

●

இரண்டு வேற்றுமைக்கும் ஓம்படைப் பொருண்மை இச்
சூத்திரத்தா னெய்துவித்தாரெனினு மமையும்.

தாமென்பது செய்யுட்சுவைபட நின்றது.
(கச) ————

(கச) புலியைப்போற்றிவா என்றது, உன்னைக் கொல்லாமற் புலியைப் போற்றிவா என்றபடி. இது இரண்டாவதற்கோதிய ' காப்பின் ஒப்பின் ' என்னுஞ் சூத்திரத்துக் காப்பின்கண்ணடங்கும். இனி, தன்னையவன் போற்றிவருதற்குக் காரணம் புலியாதலிற் புலி ஏதுப்பொருளுமாம்.

இனிக் காப்பின்கண் அடக்காது ஓம்படைப்பொருண்மையை இரண்டுருபிற்கும் எய்துவித்தாரெனினுமமையும்.

கூஅ. ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்
கேழு மாகு முறைநிலத் தான.

இதன் பொருள் : ஆறும் வேற்றுமைக்கண்ணேதிய வாழ்ச்சிக் கிழமைக்கு உறைநிலத்தின்கண் ஏழாவதும் வரும் என்றவாறு.

காட்டியானை என்பது காட்டதியானையென விரிதலேயன்றிக் காட்டின்கண் யானையெனச் சிறுபான்மை ஏழாவது விரியினு மமையு மென்றவாறு.

யானைக்காடு, நம்பியூர் என்பன வாழ்ச்சிக்கிழமைப் பொருள வாயினும், ஆண்டேழாவது மயங்காதென்றற்கு 'உறைநிலத்தான' வென்றார். எனவே, உறைநிலப் பெயர் பின்மொழியாயவழியது இம்மயக்கமென்பதாம்.

(கரு)

கூகூ. குத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி
யப்பொரு ளாறற் குரித்து மாகும்.

**இதன் பொருள் :** குவ்வென்னு முருபு தொக வருங் கொடையெதிர் கிளவியாகிய தொகையினது கொடையெதிர்த லாகிய அப்பொருண்மை ஆறும்வேற்றுமைக் குரித்துமாம் என்றவாறு.

நாகர்பலி என்பது நாகர்க்கு நேர்ந்த பலியென விரிதலே யன்றி நாகரது பலியென விரியினுமமையு மென்றவாறு.

கொடையெதிர் கிளவி யென்பதற்குத் தருசொல் வருசொற் குரைத்த துரைக்க.

---

(கரு) யானைக்காடு என்பதும் காட்டுயானையென்பதும் வாழ்ச் சிக்கிழமையில் வந்தாலும் உறைநிலத்தோடு ஆருவது ஏழாவது விரியுமென்றபடி. காட்டதியானையென்புழி

வந்தவழியே
உறைநிலமா
இய காட்டோடு ஆறுவது வருதல் நோக்குக.
மிடம். பின்—ஈண்டு இடப்பின்.
உறைநிலம்—வாழு

(கசு) கொடைஎதிர் கிளவி — கொடையெதிர் பொருளையுணர்த்துஞ் சொல். 'தருசொல் வருசொல்' (கிளவி உக).



கொடையெதிர்தல் கொடையை விரும்பி மேற்கோடல்.

நாகர்க்குக் கொடுத்தலை விரும்பி மேற்கொண்டவழித் திரி பின்றி அவர்க்கலி துடைமையாதலின், கிழமைப்பொருட்குரிய உருபாற் கூறினு மமையு மென்றவாறு. (கசு) கOO.

அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு
மெச்ச மிலவே பொருள்வயி ஞன.

**இதன் பொருள்:** அச்சப் பொருண்மைக்கு ஐந்தாம் வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் ஒத்த கிழமைய, வேற்றுமை தொக அவற்றின் பொருணின்றவழி என்றவாறு.

பழியஞ்சும் என்புழி, பழியினஞ்சும், பழியையஞ்சும் என விரண்டும், ஒத்த கிழமையவாய் நின்றவாறறிக.

அஃதேல், ஒருபொருட்கண் வரினன்றே மயக்கமாவது; இவை செயப்படுபொருளும் ஏதுவுமாகிய பொருள் வேறுபாடுடையனவாகலின் மயக்கமர்மாறென்னையெனின்:—அற்றன்று: ஈண்டேதுவாதலே அஞ்சப்படுதலாய் வேறன்றி நிற்றலின், ஒருபொருட்கண் வந்தனவேயாம் ; அதனான் மயக்கமாமென்பது. (கஎ)

கoக. அன்ன பிறவுந் தொன்னெறி பிழையா
துருபினும் பொருளினு மெய்தடு மாறி
யிருவயி னிலையும் வேற்றுமை யெல்லாந்
திரிபிட னிலவே தெரியு மோர்க்கே.

---

கொடையை விரும்பி மேற்கோடல் என்றது நேர்தலே. நேர்ந்த பொருள் அவர்க்குரிமையாதலின் ஆறுவதும் வருமென்பதாம்.

அஃது—மேற்கொள்ளப்பட்ட அப்பொருள். திரிபின்றி—தப்பாமல்.

(கஎ) பழியினஞ்சும், பழியைஅஞ்சும் என்புழி இரண்டும் வெவ் வேறு பொருளில் வந்தனவாதலின் மயக்கமாமாறு இல்லையெனின்,— அற்றன்று. ஈண்டு ஏதுப்பொருளாய் நின்றபழியே அஞ்சப்படுவது மாய் நிற்றலின் இரண்டும் ஒருபொருட்கண்வந்த மயக்கமேயாம்,

இதன் பொருள் : மேன்மயக்கங் கூறப்பட்ட வேற்றுமையே யன்றி, அவைபோல்வன பிறவும், தொன்றுதொட்டு வரும் வழக்கிற் பிழையாது, உருபானும் பொருளானும் ஒன்றனிலைக்

களத்து ஒன்று சென்று, பிறிதொன்றன் பொருளுந் தன் பொருளுமாகிய ஈரிடத்தும் நிலைபெறும் வேற்றுமையெல்லாந் திரிபுடையவல்ல தெரிந்துணர்வோர்க்கு என்றவாறு.

பொது வகையான் இருவயினிலையு மென்றாரேனும், வழி

போயினரெல்லாங் கூறைகோட்பட்டார் என்றவழிக் கூறை கோட்படுதல் கடவுளரை யொழித்து

ஏனையோர்க்கேயாயினவாறுபோல ஏதுப்பொருட்கண் வரும் மூன்றாவதும் ஐந்தாவதும் ஒரு

பொருளேபற்றி நிற்றலின் இருவயினிலையற்கேலாமையான், அவற்றையொழித்து அஃதேனையவற்றிற்கேயாம். என்னை? ஏனைய தன்பொருளிற் றீராது பிறிதொன்றன்

பொருட்கட் சேறலுடைமையான் இருவயினிலையற் கேற்றவாறறிக.

அன்ன பிறவாவன — நோயினீங்கினான் நோயைநீங்கினான் எனவும், சாத்தனை வெகுண்டான் சாத்தனொடு வெகுண்டான் எனவும், முறையாற்குத்துங்குத்து முறையிற்குத்துங்குத்து எனவும், கடலொடு காடொட்டாது கடலைக் காடொட்டாது எனவும் வருவனவும் பிறவுமாம்.

இக்காலத்துச் சிதைந்து தொன்னெறி பிழையாதன வழங்குமயக்கமு முண்மையால் ஆராய்ந் துணரப்படுமென்பார் 'தெரியுமோர்க்கு' என்றார்.

(கஅ) கοஉ. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
யொருசொன் னடைய பொருள்சென் மருங்கே.

(கஅ) கடவுளுக்குக் கூறையின்மையின் கோட்படுதலு மில்லை யென்க. ஏதுப்பொருட்கண்வரும் மூன்றுவதும் ஐந்தாவதும் என்றது கூ—ம் சூத்திரப் பொருளை.

சாத்தனொடுவெகுண்டான் ஏதுப்பொருள். இது மூன்றுவதற்கோதிய ஏதுப்பொருள். கடலொடு காடொட்டாது—அதனொடு மயங்கலாயடங்கும். சிதைந்து—தொன்னெறிகுலைந்து.



இதன் பொருள்: பலவுருபுந் தம்முட்டொடர்ந் தடுக்கி வந்த வேற்றுமைச் சொற்களெல்லாம் முடிக்குஞ்சொல் லொன்றனுன் முற்றுப்பெற்று நடக்கும், அவ்வொன்றனுற் பொருள் செல்லு மிடத்து என்றவாறு..

ஈண்டு வேற்றுமைக் கிளவியென்றது வேற்றுமை யுருபை யிறுதியாகவுடைய சொல்லை.

உதாரணம்: 'என்னொடு நின்னொடுஞ் சூழாது' எனவும்,

'அந்தணர் நூற்கும் அறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்'

(குறள்—௫௪௩) எனவும் வரும்.

சாத்தன்றாயைக் காதலன், நாய் தேவனுயிற்று என்புழி தாயை, தேவன் என்பன, காதலன் ஆயிற்றென்னும் பயனிலைக்கு அடையாய் இடை நின்றாற்போல, கோட்டை நுனிக்கட் குறைத்தான், தினையிற் கிளியைக் கடியும் என்புழி, நுனிக்கண், கிளியை யென்பன, குறைத்தான், கடியுமென்னு முடிக்குஞ் சொல்லிற்கு அடையாய் இடைநின்றவாகலான், அவையடுக்கன்மையின், அவை யுதாரணமாதல் உரையாசிரியர் கருத்தன் றென்க.

குழையைச் சாத்தனது கள்ளரின் என இவ்வாறு தொடராது வருவனவற்றை நீக்குதற்கு உருபு தொடர்ந்தடுக்கியவென்றும், நீ தந்த சோற்றையுங் கூறையையுமுண் டுடுத்திருந்தேம் என இன்னோரன்னுழி ஒரு சொல்லாற் பொருள் செல்லாமையின் அவற்றை நீக்குதற்குப் பொருள் சென்மருங்கென்றுங் கூறினர். பிறவுமன்ன.
(கக)

(கக) உருபு தொடர்ந்துவருங்காலு

மடுக்கிவரவேண்டுமென்பார்
உருபுதொடர்ந்தடுக்கியவென்றும், ஒருசொல்லாற்
பொருண்முடிக்கக்
கூடியனவே அடுக்கல் வேண்டுமென்பார் பொருள்சென்மருங்கினென்றுங் கூறினர்.

சோற்றையுங் கூறையையு முண்டுடுத்து என்பது, சோற்றையுண் டுங் கூறையையுடுத்தும் என நிரநிறையாய் முடிதலின் அவை அடுக்கி முடியாதன என்றபடி.



கoசு. இறுதியு மிடையு மெல்லா வுருபு
நெறிபடு பொருள்வயி னிலவுதல் வரையார்.

இதன் பொருள்:
வேற்றுமைத்தொடரிறுதிக்கண்ணும்
அதனிடைநிலத்தும் ஆறுருபுந் தத்தமக்கோதிய

பொருட்கணிற் றலை வரையார் என்றவாறு.

உதாரணம்: கடந்தானிலத்தை,

வந்தான்சாத்தனொடு, கொடுத்தான்சாத்தற்கு,
வலியன்சாத்தனின், இருந்தான் குன் றத்துக்கண்
எனவும்; நிலத்தைக்கடந்தான் சாத்தனொடு வந்
தான், சாத்தற்குக்கொடுத்தான்,
சாத்தனின்வலியன், சாத்தன தாடை,
குன்றத்துக்கணிருந்தான் எனவும் வரும்.

---

(உ௦) "இறுதியு மிடையும் எல்லா உருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல்
வரையார்"

என்பதற்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் மூவரும், 'வேற்றுமைத்தொடர் இறுதிக்கண்ணும் இடைநிலத்தும் ஆறுருபும் தத்தமக்கு ஓதியபொருட்கண் நிற்கு' மென்று பொருள்கூறத், தெய் வச்சிலையார் 'முதற்கணின்ற வேற்றுமையுருபே பொருளொடு முடிதலன்றி, இறுதிக்கண்ணும் இடையின்கண்ணும் எல்லாவுருபும்

விரவி வந்து முடிக்கும் பொருண்மைக்கண்ணே நிலைபெறுதல் நீக்கார்' என்று பொருள்கூறி, குயவன் குடத்தைத் திரிகையால் அரங்கின்கண் வனைந் தான் என உதாரணங் காட்டுவர். ஒருவாக்கியத்தின்கண் முதலில் நிற்குமெழுவாயும் இறுதியில்நிற்கும் பயனிலையுமொழிய மற்றைய வெல்லாம் இடைநிற்பனவாகவும், அவற்றின்கண் முதலுமிடையும் இறுதியும் வருத்துக்கோடல் மரபன்மையின் அஃதெவ்வாறு பொருந் தும் ? பல உருபு விரவி இடைநின்று ஒருமுடிபுகோடலை இச்சூத்திரத் தாற் கூறுதலே ஆசிரியர்க்குக் கருத்தாயின், ' விரவிநின்று எல்லா உருபும் ஒருவினைகொள்ளு ' மென்று கூறுவாரன்றி இங்ஙனம் கூறார். ஆதலின் மூவருங்கூறிய உரையே பொருத்தமாகும். அங்ஙனேல் பலஉருபும், இடைவிரவற்கு விதிகூறவேண்டாமோ எனின் ?

" உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
ஒருசொன் னடைய பொருள்சொன் மருங்கே
"

என்னும் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கொண்டவாறு பொருள் கொள்ளின் அதுவுமடங்கும்.

அடுக்கென்பது ஒருசொல் அடுக்கிவருதலே யாதலின், ஓருருபே அடுக்கிவரல் வேண்டுமெனின் ? பலவகைப் புத்த கங்களை யடுக்கினும் அவ்வடுக்குப் புத்தகவடுக்கேயாமாறுபோலப் பல

நெறிபடு பொருள்வயி னிலவுதல்வரையா ரெனவே, அப் பொரு ளுணர்த்தாக்கால் நிலவுதல் வரையப்படு மென்பதாம். அங்ஙனம் வரையப்படுவன யாவையெனின் :— ஆறுவதும், ஏழாவதும், சாத்தனதாடை, குன்றத்துக்கட் கூகை என விடைநின்று தம்பொருளுணர்த்திறுற்போல, ஆடை சாத்தனது, கூகை குன்றத் துக்கண் என விறுதிநின்றவழி அப்பொருளுணர்த்தாமையான், அவ்வுருபுகள் ஆண்டு வரையப்படும். ஆறனுருபேற்ற பெயர் உருபொடு கூடிப் பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்றலுடைமையான், அந்நிலைமைக்கண் ஆடை சாத்தனது என இறுதிக்

---

வகை உருபடுக்கினும் அதுவும் உருபடுக்கென்றே சொல்லப்படுமாக லின் பலவுருபு அடுக்குதலும் அடுக்கென்றே கொள்ளப்படுமென்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும். இளம்பூரணர் கருத்துமதுவே.

சேனாவரையர் கோட்டைநுனிக்கட் குறைத்தான்

என்பனபோல் வனவற்றில் நுனிக்கண் என்பது குறைத்தான் என்பதற்கடையாய் ஒருசொல்லாய் நிற்குமென்று கூறினரன்றி, பலஉருபு அடுக்கிவாராது என மறுத்துக்கூறுமைபால், அங்ஙனம்கோடலும் ஒருவாறு பொருந்து மென்பதும் அவர்க்குக் கருத்தேயாம். அன்றிச் சேனாவரையர் அடை யென்று கூறினமையானே, அவை அடுக்கி ஒருமுடிபுபெறும் என் பதும் மறுக்கப்பட்டதென்றே கொண்டாலும் மறுக்கப்பட்ட அதற்கு விதியும் வேண்டியதில்லை. அடை என்றே கொள்ளப்படும். ஆதலினானும் தெய்வச்சிலையார் கருத்துப் பொருந்தாதென்க.

இனித் தெய்வச்சிலையார் இறுதியுமிடையும் முதலும் உருபுவிரவி ஒருமுடிபுகோடற்கு இச்சூத்திரத்தால் விதிகூறினமையானே, அவ் வுருபுகள் தனித்தனி வினைகொண்டு முடிதலும் கூறவேண்டுமென்பது பற்றிப் பிறிதுபிறிதேற்றலும் என்று வருஞ் சூத்திரத்தா லதனைக் கூறினரென்று கூறுவர். பொருள்சென்மருங்கின் ஒருவினைகொண்டு முடியும் எனவே பொருள்செல்லாவிடத்துத் தனித்தனிவினையான்முடியு மென்பது பெறுதுமாகலின் அதனைக்கிளந்து கூறல்வேண்டா என்க. ஒருவினைகொண்டுமுடிதல் கூறினமையின், தனித்தனி வினைகொண்டு முடிதலும் மாணாக்கர்க் கையம் நிகழாமைக் கூறவேண்டுமெனின் ? தனித்தனி

வினையொடுமுடிநலே அதற்கு இயல்பென்பது அவரியல் பாகவே அறிந்ததாகலான் அதன்கண் அவர்க்கு ஐயம் நிகழாமையான் அது பொருந்தாதென்க.

இனித் தொடரிறுதிக்கண் உருபு விரிந்துநிற்றல் எதனாற் பெறப்படுமெனின்?



கண்ணு நிற்குமென்பது. இவ் வரையறை புணர்த்துதற்கும் 'மெய்யுருபு தொகாஅ விறுதி யான' (சொல்—க௦ரு) என முன்னருணர்த்தப்படும் வரையறைக்கு இடம் படுத்தற்கும் 'ஈறுபெயர்க் காகும்' (சொல்—கூகூ) என்றோதப்பட்ட உருபு தம்மையே இறுதியு மிடையும் நிற்குமென வகுத்துக் கூறினாரென்பது. (உ௦)

---

"ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான"

என்ற சூத்திரத்தாற் பெறுதுமென்றார். அதுபொருந்தாது. ஏனெனின் அச்சூத்திரம் இறுதியிற்றொகுமென்று விதித்தவற்றுள் இவை தொகும் இவை தொகாவென்று வரையறுக்க வந்ததேயன்றி விரியை உணர்த்த வந்ததன்றாகலின்.

இறுதியிற்றொகா என்றதனானே விரிந்து நிற்றலும் பெறப்படுமெனின்? இறுதியிற்றொகா என்ற விலக்கினாலேயே உருபு மாறி இறுதியினு நிற்குமென்பது பெறப்படவைத்து, அங்ஙன நிற்கு முருபுகளுள் இவை தொகும் இவை தொகா என்று வரையறை கூறினரென்றல் சூத்திரஞ் செய்யும் வன்மையற்றவர் ஆசிரியர் என்பதைப் புலப்படுத்தி அவரை இழிவுபடுத்தலானும், முன்னர்த் தொகுமெனக் கூறியவற்றிற்கே பின்னர் இவை தொகும்; இவை தொகா என வரையறை கூறல் வழக்காறுதலானும், இறுதியிற் றொகா என்றதனானே தொகுதலும் முன்னர் ஆசிரியர் கூறியுள்ளார் என்பதும், அதுமுதற் சூத்திரத்துட் கூறிய 'உருபுதொக வருதல்' என்றதே என்பதும் பெறப்படுதலினாலும், இறுதியு மிடையு மென்பன அதிகாரத்தான் வர உருபு தொகுத்தல் இறுதியிலும் இடையிலும் என்பது பெறப்படுமாதலானும், அவர் கருத்துப் பொருந்தாதென்க.

ஆதலால் 'இறுதியுமிடையும்' என்னும் சூத்திரத்திற்கும், 'பிறிது பிறிதேற்றலும்' என்னுஞ் சூத்திரத்திற்கும் மூவருங் கூறியபொருளே பொருத்தமாமென்பது நன்கு துணிபப்படும்.

ஆடைசாத்தனது என்புழி முற்றுயும், கூகை குன்றத்தின்கண் என்புழி, கூகையானது குன்றத்துக்கண் உள்ளது என்றும் பொருள் படுமாதலின் அவை இறுதியில் வாரா.

அங்ஙிலைமைக்கண் என்றது முற்றுய

அங்நிலைமைக்கண் என்றபடி.

இவ்வரையறை என்றது—ஆருவதும், ஏழாவதும் இறுதியில் நில்லா என்ற வரையறையை. இறுதியுமிடையும் உருபுகள் விரிந்து நிற்கும் என்றமையினுனே அவ்வுருபுகள் இரண்டிடத்தும் தொக்கும் வருமெனத் தொகைக்கிடம்படுத்தலானே இறுதியிற்ருெகாதவற்றிற்கு மிடம்படுத்தற்கும் வகுத்துக் கூறினுரென்பது கருத்து.





கoச. பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலு
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப.

இதன் பொருள் : பிறிதோருருபு பிறிதோருருபை யேற்றலும் ஆறுருபுந் தொக்குநிற்றலும், நெறிபடவழங்கிய வழக்கைச்

சார்ந்துவருதலான், வழுவாகா என்றவாறு.

ஏற்புழிக் கோடலென்பதனால், பிறிதோருருபேற்பது ஆறு வதேயாம்.

பிறிதேற்றலு மென்றமையால் தானல்லாப் பிறவுரு பேற் றல் கொள்க.

உதாரணம் : சாத்தனதனை, சாத்தனதனொடு, சாத்த னதற்கு, சாத்தனதனின், சாத்தனதன்கண் என உருபுஉருபேற்ற வாறும், நிலங்கடந்தான், தாய்மூவர், கருப்புவேலி, வரைவீழருவி, சாத்தன்கை, குன்றக்கூகை எனவும்; கடந்தானிலம், இருந்தான் குன்றத்து எனவும் உருபுதொக்கு நின்றவாறுங் கண்டு கொள்க.

---

(உக) இச்சூத்திரத்துப் பிறிது பிறிதேற்றல் இயைபின்றிக் கூறப்பட்டதெனின், உருபுகளின் விரி ஓதப்பட்ட அதிகாரமாதலி னாலே அதன்கண் பிறிதோருருபு பிறிதோருருபை ஏற்றலும் விரி இலக்கணமாதலோடு

மயக்க விலக்கணமுமாதலின் இயைபுடைத்தேயா மென்க. இனி, 'பிறிதுபிறிதேற்றல்' என்பதனை ஆறனுருபு ஏனை உருபேற்குமெனப் பொருளுரைத்துச் சாத்தனதனை ...... என உதா ரணங்காட்டுபவாலெனின், அவ்வாறு வரும் அதுவென்பது உருபு நிலையொழிந்து பொருளாய் நிற்றலானும், சாத்தனதனைக் கொணர்ந் தான் என்புழி இடைநின்ற அதுவென்பது உருபாயிற் சாத்த னைக் கொணர்ந்தான் என்று பொருள்படவேண்டும் ; அவ்வாறு பொருள்படாது (அதனை என) உடைப்பொருளையே காட்டலானும், அஃறிணை ஒருமை அது என்னும் பெயர்க்காகலானும் சாத்தனதனைக் கொணர்ந்தான் என்பது சாத்தன் புத்தகத்தைக் கொணர்ந்தான் என்றாற்போல்வதல்லது உருபு உருபினையேற்றல் என்றல் அமையாதென்க. என்ற சொற்றொடரால் உரையாசிரியர் முதலியோர் கொள் கையைத் தெய்வச்சிலையார் மறுத்தனர். அது பொருந்தாது. என்னை ? சாத்தனதனை என்றவிடத்து சாத்தனதனை என்பது, சாத்த னுடையதனை என்று பொருள்படுதலின், சாத்தனுடையது என் பது ஆறும் வேற்றுமை உடைமைப் பொருளையும், ஐ இரண்டாம்

இறுதியு மிடையு மென்பதனை அதிகாரத்தான் வருவித்து இரண்டிடத்துங் கூட்டி யுரைக்க

சாத்தனதனது எனச் சிறுபான்மை தன்னையுமேற்றல் உரையிற் கோடலென்பதனாற் கொள்க.

பெயரிறுதி நின்ற உருபு தன்பொருளொடு தொடராது பிறிதோருருபையேற்றலும், தாம் நின்று தம்பொருளுணர்த்து தற்பாலன தொக்கு நிற்றலும், இலக்கணமன்மையின், வழு வமைத்தவாறு. (உக)

கoரு. ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான.

**இதன் பொருள்:** ஐகாரவேற்றுமைப்பொருளுங் கண்ணென் வேற்றுமைப்பொருளு மல்லாத பிறபொருண்மேனின்றஉருபு தொடர்மொழியிறுதிக்கட் டொக்குநில்லா என்றவாறு.

இறுதியுமிடையுமென்பது அதிகரிக்க உருபுதொகவருதலு மென்றமையான் வரைவின்றி எல்லாவுருபும் இறுதிக்கண்ணுந் தொகுமென்பது பட்டதனை விலக்கி, இவ்விரு பொருட்கண்ணும் வருவனவே இறுதிக்கட்டொகுவன அல்லன தொகாவென வரை யறுத்தவாறு.

அறங்கறக்கும் என இடைக்கட்டொக்கு நின்ற நான்காவது கறக்குமறம் என இறுதிக்கட்டொக்கு நில்லாமை கண்டுகொள்க. பிறவுமன்ன. (உஉ)

வேற்றுமைப் பொருளையும் தருதலின் ஆறும் வேற்றுமை இரண்டா முருபு முதலியவற்றை ஏற்குமென்றூர். ஆதலின் பிறிது பிறி தேற்றலே விளங்காது சாத்தனதனை யென்பதைச் சாத்தன் அதனை என்று பிரித்துச் சாத்தன் புத்தகத்தைக் கொணர்ந்தான் என்றூற் போல நின்றது எனக் கூறி மறுத்தல் எவ்வாறு பொருந்தும்? ஆறும் வேற்றுமையதிலக்கணம விளங்காமையே இங்ஙனம் மறுத் தற்குக் காரணம் என்க. இதன் விரிவைப் 'பிறிது பிறிதேற்றல்' என்னுந் தலைப்பெயரோடு எம்மாற் 'செந்தமி'ழில் எழுதி வெளிப்ப டுத்தப்பட்ட பொருளுரை பின்னர் அநுபந்தமாகச் சேர்க்கப்படும். அது நோக்கி அறிந்துகொள்க.



கoசு. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.

**இதன் பொருள்:** ஒருதொடர் யாதானுமோர் வேற்றுமைய துருபுகொடுத்துச் சொல்லப்பட்டதாயினும், அவ்வுருபு தன் பொருளான் அத்தொடர்ப்பொருள் செல்லாதவழிப் பொருள் செல்லும் பக்கத்து வேற்றுமையைச் சாரும் என்றவாறு.

பொருள்சொல்லாமையாவது உருபேற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லுந் தம்முளியையாமை. அவ்வேற்றுமையைச் சார்தலாவது அதன்பொருட்டாதல்.

'கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்'

என்றவழி நான்காவதன்பொருளான் அவ்வுருபேற்ற சொல் லும் அவ்வுருபுநோக்கிய சொல்லும் தம்முளியையாமையின், அவற்றை யியைக்கும் ஏழாவதன் பொருட்டாயினவாறு கண்டு

கொள்க.

உருபு தன்பொருளிற் றீர்ந்து பிறவுருபின் பொருட்டாயும் நிற்குமென் உருபுமயக்கங் கூறியவாறாயிற்று.

அஃதேல், அரசர்கட்சார்ந்தான் என்புழியும் இரண்டாவ தன்பொருட்கண் ஏழாவது சென்றதென்றமையான், அதனோ டிதனிடை வேற்றுமையென்னையெனின் :—அரசர்கட்சார்ந்தான் என்புழி, அரசரது சார்தற்கிடமாதலே சாரப்படுதலுமாய் இரு பொருண்மையும் ஒற்றுமைப்பட்டு நிற்றலின், தத்தம்பொருள் வயிற் றம்மொடுசிவணு மாகுபெயர்போல, இடப்பொருண்மைக் குரிய கண்ணெனுருபு அவ்விடப்பொருண்மையோடு ஒற்றுமை யுடைத்தாகிய செயப்படுபொருட்கும் ஆண்டுரித்தேயாம். மணற் கின்ற என்புழி, நான்காவதன் பொருளோடு ஏழாவதன்பொருட் கென்னு மியைபின்மையான், ஒப்பில்வழியாற் பிறிதுபொருள்

---

(உஞ) என்னும் - சிறிதும் " என்னும் பனியாயிரவெல்லாம் வை கினை" [பரி-கூ-ம் பாடல்-அக-ம் அடி] என்பதிலும் அப்பொருளில் என்னும் என்பது வருதல் காண்க. மணற்கின்ற மூனை என்புழி ஈனுநற்றெழிலை மணல் ஏற்பதன்றாகலான் இடமாயிற்று. எனவே மணலின் கண்ணெனத் திரிக்கவேண்டு மென்பதாம்.



சுட்டுமாகுபெயர்போல, அப்பொருட்குரித்தன்றி வந்ததெனப் படும். அன்னபிறவற்றுள்ளும் இவ்வேறுபாடு தெரிந்துணர்க.

தன்பொருளிற் றீர்தல் இலக்கணமன்மையின், இதனை யிலக்கணத்தோடுறழ்ந்து வருவனவற்றோடு வைத்தார். (உரு)

கoஎ. எதிர்மறுத்து மொழியினுந் தத்த மரபிற்
பொருணிலை திரியா வேற்றுமைச் சொல்லே.

**இதன் பொருள்:** விதிமுகத்தாற் கூறாது எதிர்மறுத்துக் கூறினும், தத்தமிலக்கணத்தான் வரும் பொருணிலைமை திரியா வேற்றுமையுருபு என்றவாறு.

**உதாரணம்:** மரத்தைக் குறையான், வேலானெறியான் என வரும்.

என்சொல்லியவாறோவெனின்: — குறையான், எறியான் என்றவழி வினை நிகழாமையின், மரமும் வேலும் செயப்படு பொருளுங் கருவியுமெனப்படாவாயினும், எதிர்மறைவினையும் விதிவினையோடொக்குமென்பது நான்முடிபாகலான் ஆண்டு வந்த உருபுஞ் செயப்படுபொருண் முதலாயினவற்றுமேல் வந்தன வெனப்படுமென வழுவமைத்தவாறு. பிறவுமன்ன. (உச)

கoஅ. கு ஐ ஆனென வரூஉ மிறுதி
அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே.

**இதன் பொருள்:** கு ஐ ஆனென வரூஉ மூன்றுருபும், தொடரிறுதிக்கண்ணின்றவழி, அகரத்தோடு பொருந்தி நிற்றலுமுடைய, செய்யுளுள் என்றவாறு.

**உதாரணம் :** 'கடிகிலே யின்றே யாசிரி யற்க' எனவும், 'காவ லோனக் களிறஞ் சும்மே' 'களிறு மஞ்சுமக் காவ லோன' எனவும், 'புரைதீர் கேள்விப் புலவ ரான' எனவும், 'உள்ளம் போல வுற்றுழி யுதவும்—புள்ளியிற் கலிமா வுடைமை யான' எனவும் வரும்.



குகரமும் ஐகாரமும் ஈறு கெட அகரத்தொடு சிவணலுடைமையான், ஐ ஆன் கு.என முறையிற் கூறாது, கு ஐ என அவற்றை இயைய வைத்தார். இயைய வைக்கின்றவர் ஐகாரம் முன்வைக்கவெனின் :— முறை அதுவாயினுஞ் செய்யுளின்ப நோக்கிக் குகரம் முன்வைத்தாரென்பது.

அஃதேல், இத்திரிபு 'தம்மீறு திரிதல்' (சொல்—உருக) என இடைச்சொற்கோதிய பொதுவிலக்கணத்தாற் பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டாவெனின் :—அப்பொதுவிலக்கணத்தான் எய்துவன. உருபிற்கு மெய்துமேல், பிறிதுபிறிதேற்றலும், 'பிறிதவணிலைய' (சொல்- உருக, லா யடக்குதலான், ஈண்டுக் கூறல் வேண்டாவாம்; அதனால் அன்ன பொதுவிலக்கணம் உருபிற்கெய்தாதென மறக்க. (உரு)

௧௦௯. அ எனப் பிறத்த லஃறிணை மருங்கிற்
குவ்வும் ஐயு மில்லென மொழிப.

**இதன் பொருள் :** அஃறிணைப்பெயர்க்கண் அகரத்தொடு சிவணி ஈறுதிரிதல் குவ்வும் ஐயுமில்லென எய்தியது விலக்கிய

வா று.

அ எனத் திரிதலே அ எனப் பிறந்தலென்றார். (உசு)

கக௦. இதன திதுவிற் றென்னுங் கிளவியு
மதனைக் கொள்ளும் பொருள்வயி னானு
மதனாற் செயற்படற் கொத்த கிளவியு
முறைக்கொண் டெழுந்தபெயர்ச்சொற்கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பி னாக்கமுங்
காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியுந் தீர்ந்துமொழிக் கிளவியு
மன்ன பிறவு நான்க னுருபிற்
றொன்னெறி மரபின தோன்ற லாறே.

---

(உரு) குகரமும் ஐகாரமும் ஈறுகெட வென்றது—அவற்றை யுடைய சொல் ஈறுகெட வென்றபடி. எனவே ஆசிரியற்கு என்பதில் 'உ' கெட அகரம் வரும். காவலோனை என்பதில் 'ஐ' கெட அகரம் வருமென்றபடி.



**இதன் பொருள் :** இதனதிது இத்தன்மைத்தென்னும் ஆறாவதன்பொருண்மையும், ஒன்றனையொன்று கொள்ளுமென்னும் இரண்டாவதன்பொருண்மையும், ஒன்றனொன்று தொழிற்படற் கொக்குமென்னும் மூன்றாவதன்பொருண்மையும், முறைப்பொருண்மையைக்கொண்டு நின்ற பெயர்ச்சொல்லினது ஆறாம்

வேற்றுமைப் பொருண்மையும், நிலத்தை வரைந்து கூறும் பொருண்மையும் பண்பின்கணும் பொருவுமாகிய ஐந்தாவதன் பொருண்மையும், காலத்தின்கணறியப்படும் ஏழாம்வேற்றுமைப் பொருண்மையும், பற்றுவிடுபொருண்மையும் , தீர்துமொழிப் பொருண்மையுமாகிய ஐந்தாவதன்பொருண்மையும், அவைபோல்வன பிறவும், நான்கனுருபாற்றோன் றுதற்கட் டொன்னெறி மரபின என்றவாறு.

**உதாரணம்:** யானைக்குக்கோடு கூரிது எனவும், இவட்குக் கொள்ளுமிவ்வணி எனவும், அவற்குச் செயத்தகு மக்காரியம் எனவும், ஆவிற்குக்கன்று எனவும், கருவூர்க்குக் கிழக்கு எனவும், சாத்தற்கு நெடியன் எனவும், காலைக்கு வரும் எனவும், மனை வாழ்க்கைக்குப் பற்றுவிட்டான் எனவும், ஊர்க்குத் தீர்ந்தான் எனவும், அப்பொருளெல்லாவற்றின்கண்ணும் நான்காமுருபு வந்தவாறு கண்டுகொள்க.

வன்பால் மென்பால் என்பவாகலின் நிலத்தைப் பாலென்றார்.

'சிறப்பே நலனே காதல் வலியோ
டந்நாற் பண்பு நிலைக்கள மென்ப' (பொருள்—உஎக)

என வுவமை நிலைக்களத்தைப் பண்பென்பவாகலின் 'பண்பினுக்கம்' என்றார்.

---

(எ2) உவமை நிலைக்களமென்றது, உவமை பிறக்குமிடமென்றபடி. உவமை பிறக்குமிடம்: சிறப்பு, நலன், காதல்வலி என்பன. (உவமவியல் சூ-ம் ச)

நான்காவது தொடர்மொழிக்கண், பிறவேற்றுமைப் பொருளோடு மயங்குவதைச் சொல்லவந்த ஆசிரியர் அந்நான்காவது ஆறுவதோடு தொகைமொழிக் கண்ணும் மயங்குமாதலின் அதனையும் சுருங்கச் சொல்லல்பற்றி தொடர்மொழிக்கண் மயங்கும் மயக்கத்தோடு வைத்தாரென்க.



இதுவும் வேற்றுமை மயக்கமாதலின் மேற்கூறப்பட்டவற்றோடு வையாது இத்துணையும் போதந்து வைத்ததென்னையெனின் :—அது தொகை விரிப்ப மயங்குமதிகாரம்; இது தொகையல்வழி யானையது கோடு கூரிது என்னுந் தொடர்மொழிப் பொருள் சிதையாமல் யானைக்குக் கோடு கூரிது என

நான்காவது ஆண்டுச்சென்று நின்றதாகலான், அவற்றோடு வையா ராயினரென்பது.

அஃதேல், ஆவின்கன்று எனவும் கருவூர்க்கிழக்கு எனவுந் தொகையாயும் வருதலின், அப்பொருட்கண் நான்காவது வருதல் ஈண்டுக் கூறற்பாற்றன்றெனின் :— அஃதொக்குமன்னாயினும்,

பிறவேற்றுமைக்கண் நான்காவது சேறலொப்புமையான் அவற்றிற்கு வேறோர் சூத்திரஞ் செய்யாது இவற்றோ டொருங்கோதினரென்பது.

அன்னபிறவுமென்றதனான், ஊர்க்கட்சென்றான், ஊர்க்கணுற்றது செய்வான் என்று ஏழாவதன்பொருட்கண்ணும், ஊரிற் சேயன் என்னும் ஐந்தாவதன் பொருட்கண்ணும், ஊர்க்குச் சென்றான், ஊர்க்குற்றது செய்வான்; ஊர்க்குச் சேயன் என நான்காவது வருதல் கொள்க. பிறவுமன்ன. (உஎ)

கக௧. ஏனை யுருபு மன்ன மரபின
மான மிலவே சொன்முறை யான.

இதன் பொருள்: நான்கனுருபல்லாத பிறவுருபுந் தொகை யல்லாத தொடர்மொழிக்கண் ஒன்றன்பொருள் சிதையாமை ஒன்று மயங்குதற்கட்குற்றமில, வழங்குமுறைமையான் என்ற வாறு.

உதாரணம்: நூலது குற்றங்கூறினான் என்னுந் தொடர்மொழிக்கண் நூலைக் குற்றங்கூறினான் எனவும், அவட்குக் குற்றேவல் செய்யும் என்னுந் தொடர்மொழிக்கண் அவளது குற்றேவல் செய்யும் எனவும் வருவன கொள்க.

பிறவுமன்ன. (உ அ) மயங்கியல்]



கக௨.

வினையே செய்வது செயப்படு பொருளே.

நிலனே காலங் கருவி யென்றா
வின்னதற் கிதுபய னாக வென்னு
மன்ன மரபி னிரண்டொடுந்
தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத
னிலையே.

இதன் பொருள்: வினையும், வினைமுதலும், செயப்படு பொருளும், நிலமும், காலமும், கருவியுமாகிய ஆறும், இன்னதற்கு, இது பயனாக என்று சொல்லப்படும் இரண்டொடுந்தொக்குத் தொழிலது முதனிலையெட்டாமென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

ஈண்டேதுப்பொருண்மை கருவிக்க
ணடக்கப்பட்டது.

தொழின்முதனிலை யென்றது தொழிலது காரணத்தை; காரியத்தின் முன்னிற்றலின் முதனிலையாயிற்று. காரணமெனி
னும் காரகமெனினுமொக்கும்.

வனைந்தான் என்றவழி, வனைதற்றொழிலும், வனைந்த கருத்தாவும், வனையப்பட்ட குடமும், வனைதற்கிடமாகிய நிலமும், அத்தொழி னிகழுங்காலமும், அதற்குக் கருவியாகிய திகிரிமுதலாயினவும், வனையப்பட்ட குடத்தைக் கொள்வானும், வனைந்ததனாய பயனுமாகிய எட்டும்பற்றி அத்தொழி னிகழ்ந்தவாறு கண்டுகொள்க.

அஃதேல், தொழிலின் வேறாயது காரகமாகலின், வனைதற்றொழிற்கு அத்தொழிறான் காரகமாமாறென்னையெனின்:— வனைந்தானென்பது வனைதலைச் செய்தானென்னும் பொருட்டாகலின், செய்தற்கு வனைதல் செயப்படு பொருணீர்மைத்தாய்க்

(உக) வனையப்பட்ட குடத்தைக் கொள்வானென்றது இன்னதற்கு என்பதுபடவந்தது. வனைந்ததனாயபயனென்றது, இதுபயன் என்பது படவந்தது. வனைந்தான் என்பது வனைதலைச் செய்தான் என விரியுமிடத்து வனைதலாகிய செயல் செயப்படுபொருளின் தன்மைத்தாய்க் காரகமாயிற்று. எனவே வனைதல் சிறப்புத்தொழிலும், செய்தல் பொதுத்தொழிலுமாம்.





காரகமாமென்பது. அற்றாகலினன்றே கொளலோகொண்டானென்பது இரண்டாம் வேற்றுமைத் தொடராயிற்றென்பது.

இன்னதற்கு, இதுபயனுக என்னும் இரண்டும் அருகி யல்லது வாராமையின், அன்னமரபினிரண்டொடுமெனப் பிரித்துக் கூறினர்.

அஃதேல், செய்வது முதலாகிய முதனிலை வேற்றுமை யோத்தினுட் கூறப்பட்டமையின் இச்சூத்திரம் வேண்டாவெனின் :—அற்றன்று : இரண்டாவதற்கோதிய பொருளெல்லாவற்றையுஞ் செயப்படுபொருளெனத் தொகுத்து, ஏதுவைக் கருவிக்கண்ணும் வினைசெய்யிடத்தைக் காலத்தின்கண்ணும் அடக்கி, ஏழாகச் செய்து, அவற்றொடு ஆண்டுப்பெறப்படாத வினையென்னுமுதனிலை கூட்டி, எட்டென்றாராகலின், இப்பாகுபாடு ஆண்டுப்பெறப்படாமையான், இச்சூத்திரம் வேண்டுமென்பது.

---

கொளலோகொண்டான் என்பது கொள்ளுதலேயோ செய்தான் என விரிதலின் கொண்டான் என்பதிலுள்ள கொள்ளுதல் பொதுத் தொழிலாகிய செய்தல் என்னும் பொருட்டாய் நின்றது. "உண்ணலு முண்ணேன் ; வாழலும் வாழேன்" [கலி—பாலை—உக] என்பனவும் இப்பொருள.

செய்வது முதலிய முதனிலை, வேற்றுமையோத்திற் கூறப்பட்டதென்றதென்னையெனின் ? செய்வது எழுவாயாயும் மூன்றாவதாயும் வினையும் செயப்படுபொருளும் இரண்டாவதாயும், கருவி மூன்றாவதாயும், இன்னதற்கு இதுபயன் நான்கவதாயும் நிலமும் காலமும் ஏழவதாயும் சேர்ந்தன.

இன்னும் வனைந்தவன் கொடுத்த குடம் அவனினின்றும் நீங்குதல் ஐந்தாவதாயும், ஒருவன் அதை ஏற்றுக்கொண்டவழி அஃது அவனுடைமையாதல் ஆறுவதாயும் சேருமாறும் உணர்க.

கருவிக்கண் அடங்குமேதுவும் ஐந்தாவதற்கும் வரும். "ஒருவன் ஒன்றை ஒன்றுனியற்றி ஒருவற்குக் கொடுப்ப, அவன் அதனை அவனினின்றும் தனதாக்கி ஓரிடத்து வைத்தான்" எனத் தெய்வச் சிலையார் கூறிய வாக்கியம் ஈண்டு நோக்கத்தக்கது. வேற்றுமை யுருபுகளின்பொருள் வினைநிகழ்ச்சிக்குக்காரணமாதல்பற்றி அவற்றை இச்சூத்திரத்தாற் றொகுத்துக் கூறினர்.



இதனுற்பயன் 'நிலனும் பொருளுங் காலமும் கருவியும்' (சொல்—உ௩௪) எனவும் 'செயப்படு பொருளைச் செய்தது போல' (சொல்—உ௪௬) எனவும் வினைக்கிலக்கணங் கூறுதலும் பிறவுமாம்.

(உ௯) ௧௧௩. அவைதாம்
வழங்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும்.

இதன் பொருள் : மேற்கூறப்பட்ட

தொழின்முதனிலை தாம் எல்லாத்தொழிற்கும் எட்டும் வருமென்னும் யாப்புறவில்லை ; வழக்கின்கட் சிலதொழிற்கட் குன்றத்தகுவன குன்றி வரும் என்றவாறு.

குன்றத்தகுவனவாவன

செயப்படுபொருளும் ஏற்பதும் பயனுமாம்.

கொடியாடிற்று, வளிவழங்கிற்று என்புழி, செயப்படுபொருளும் ஏற்பதும் பயனுமாகிய முதனிலையில்லையாயினும், ஒழிந்தன வற்றான் ஆடுதலும் வழங்கலுமாகிய தொழினிகழ்ந்தவாறு கண்டு கொள்க.

இதனாற்பயன், எல்லாத்தொழிற்கும் முதனிலையெட்டுங் குன்றாது வருமோ சில தொழிற்குச் சில குன்றிவருமோ வென்னும் ஐயநீங்குதலும், செயப்படுபொருள் குன்றிய வினையை புணர்த்துஞ்சொல் இரண்டாவதனோ டியையாதென்பது பெறுதலுமாம்.

(௩௦)

கககச. முதலிற் கூறுஞ் சினையறி கிளவியுஞ்
சினையிற் கூறு முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரு
மியன்றது மொழிதலு மிருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
யனையமர பினவே யாகுபெயர்க் கிளவி.

(கூ0) கொடி ஆடிற்று என்புழி, ஆடுதல்வினைக்குச் செயப்படு பொருளும், ஆடுதலை ஏற்பதும், ஆடுதலால் வரும் பயனுமாகிய காரணங்களில்லை,



இதன் பொருள்: முதற்சொல் வாய்பாட்டாற் கூறப்படுஞ் சினையறிகிளவியும், சினைச்சொல் வாய்பாட்டாற் கூறப்படு முதலறிகிளவியும், நிலத்துப் பிறந்த பொருண்மேல் அந் நிலப் பெயர் கூறலும், பண்புப்பெயர் அப்பண்புடையதனை யுணர்த்திப் பண்பு கொள் பெயராய் நின்றதூஉம், முதற் காரணப் பெயரான் அக்காரணத்தானியன்ற காரியத்தைச் சொல்லுதலும்,

அன்மொழிப் பொருண்மேனின்ற இரு பெயரொட்டும், செயப் பட்ட பொருண்மேல் அதனைச் செய்தான் பெயரைச் சொல் லுஞ் சொல்லுமென அப்பெற்றிப்பட்ட இலக்கணத்தையுடை யன ஆகுபெயர் என்றவாறு.

உதாரணம்: கடுத்தின்றான், தெங்குதின்றான் என முதற் பெயர் சினைமேலும், இலை நட்டு வாழும், பூ நட்டு வாழும் எனச் சினைப்பெயர் முதன்மேலும், குழிப்பாடி நேரிது என நிலப் பெயர் அந்நிலத்துப்பிறந்த ஆடைமேலும், இம்மணி நீலம் எனப் பண்புப்பெயர் அப்பண்புடையதன் மேலும், இக்குடம் பொன் எனக் காரணப்பெயர் அதனானியன்ற காரியத்தின் மேலும், பொற்றொடி வந்தாள் என இருபெயரொட்டு அன்மொழிப் பொருண்மேலும், இவ்வாடை கோலிகன் எனச் செய்தான்பெயர் செயப்பட்டதன் மேலும், வந்தவாறு கண்டுகொள்க.

அன்மொழித்தொகை எச்சவியலுள் உணர்த்தப்படுதலின் ஈண்டுக் கூறல்வேண்டா வெனின்:—அன்மொழித் தொகை தொகையாதலுடைமையான் ஆண்டுக் கூறினர்; இயற்கைப் பெயர், ஆகுபெயரெனப் பெயர் இரண்டாயடங்கும்வழி ஒரு பெயர்ப்பட்டதென மேலும் வந்தவாறு கண்டுகொள்க. அன் மொழித்தொகை எச்சவியலுளுணர்த்தப்படும்; அதனால் அவ்

(கக) ஒருபெயர்ப்பட்டதென மேலும் வந்தவாறு கண்டுகொள்க என்பது, "ஆகுபெயர்ப்பட்டதன்மேலும் வந்தவாறு கண்டுகொள்க" எனப் பழைய ஏட்டுப் பிரதியை நோக்கி எழுதிய ஒரு கையெழுத்துப் பிரதியிற் காணப்படுகிறது; அதுவே பொருத்தமாம். ஏனெனின்? மேல் வந்தமை காணப்படாமையின்.

அவ்வென்றது, அவை என்னும் பொருட்டு; என்றது அன் மொழித்தொகையை.



வாகுபெயராதலுடைமை பற்றி ஈண்டுக் கூறினர்; எச்சவியலுட் கூறப்பட்டவாயினும் வினையெச்ச முதலாயின வினைச்சொல்லாதலும் இடைச்சொல்லாதலு முடைமையான் அவற்றை வினையியலுள்ளும் இடையியலுள்ளுங் கூறியவாறு போலவென்பது.

தொல்காப்பியனானுங் கபிலனானுஞ் செய்யப்பட்ட நூலைத் தொல்காப்பியங் கபிலமென்றல் வினைமுதலுரைக்குங் கிளவியென்றால் உரையாசிரியரெனின்:—அற்றன்று: ஒரு மொழி யிலக்கணம் ஈண்டுக் கூறாராயினும், வெற்புச் சேர்ப்பு என்னும் பெயரிறுதி இதனையுடையானென்னும் பொருடோன்ற அன்னென்பதோ ரிடைச்சொல் வந்து வெற்பன் சேர்ப்பன் என நின்றாற் போல, தொல்காப்பியன் கபிலன் என்னும் பெயரிறுதி இவனாற் செய்யப்பட்டதென்னும் பொருடோன்ற அம்மென்பதோ ரிடைச்சொல் வந்து அன் கெடத் தொல்காப்பியம் கபிலம் என நின்றனவென்பது ஆசிரியர் கருத்தாம்; அதனான் அவையுதாரணமாதல் உரையாசிரியர் கருத்தன்றென்க.

அனையமரபின வென்றது அவ்வாறியாதானுமோ ரியைபு பற்றி ஒன்றன் பெயர் ஒன்றற்காதலென ஆகுபெயரிலக்கணத் திற்குத் தோற்றுவாய் செய்தவாறு. ஒன்றன் பொருட்கண் ஒன்று சேறலென்னு மொப்புமையான் இவற்றையீண்டுக் கூறி ஞர். அஃதேல் ஆகுபெயர் எழுவாய் வேற்றுமைமயக்கமாதலான் ஈண்டுக் கூறினுரென்றுரால் உரையாசிரிய ரெனின்:—ஆகுபெயர் ஏனைவேற்றுமையு மேற்று நிற்றலானும், எழுவாய் வேற்றுமை யாய் நின்றவழியும் அது பிறிதோர் வேற்றுமைப் பொருட் கட் சென்று மயங்காமையின் வேற்றுமைமயக்கமெனப் படா மையானும் அது போலியுரை யென்க. (௩௧)

---

வினையெச்சம் முதலாயினவென்றது, வினையெச்சமும், எனவெ னெச்சமும், ஒழியிசையெச்சமும், உம்மையெச்சமும் முதலாயின வற்றை. வினையெச்சத்தை வினையியலுள்ளும், எனவெனெச்சம் முதலியவற்றை இடையியலுள்ளுங் கூறியவாறுபோலவென்க. ஈண்டு என்றது வேற்றுமை மயக்கியலுள் என்றபடி. ஆகுபெயர் ஏனைய வேற்றுமையை ஏற்றுநிற்றல்; கடுத்தின்றான் முதலியன. குழிப்பாடி நேரிது என்பது எழுவாய்வேற்றுமை.



கக௫. அவை தாம்
தத்தம் பொருள்வயிற் றம்மொடு
சிவணலு

மொப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலு

மப்பண் பினவே நுவலுங் காலை

வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.

இதன் பொருள். மேற்கூறப்பட்ட ஆகுபெயர் தாங் தத்
தம் பொருளி னீங்காது தம்பொருளின் வேறல்லாத பொரு
ளொடு புணர்தலும், தம்பொருட் கியைபில்லாத பிறிது பொரு
ளைச் சுட்டிநிற்றலுமென இரண்டியல்புடைய வேறுபாடுபோற்றி
யுணரப்படும் என்றவாறு.

கடுவென்னு முதற்பெயர் முதலோடொற்றுமையுடைய சினைமே னிற்றல்
தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலாம்.
குழிப்பாடியென்னுமிடப்பெயர் இடத்தின் வேறாய ஆடைமே

னிற்றல் ஒப்பில் வழியாற் பிறிதுபொருள்
சுட்டலாம். அஃ
தேல், குழிப்பாடியும் ஆடையும் இடமும்
இடத்துநிகழ் பொ
ருளுமாகிய இயைபுடைய வாகலினன்றே அதன்
பெயர் அதற்கா
யிற்று; அதனுன் அஃதொப்பில் வழியாற்
பிறிது பொருள்
சுட்டலாமாறென்னையெனின் :– நன்று
சொன்னய் : அவ்வியை
புடையவேனும், முதலுஞ் சினையும் பண்பும்
பண்புடையது
மாதன் முதலாகிய ஒற்றுமையாகிய
இயைபிலவாகலின், அவை
தம்முள் வேறெனவேபடும் ; அதனுற்
குழிப்பாடியென்பது

---

ஆகுபெயரும் அன்மொழித்தொகையும்
வேறென்பதற்குத்
தெய்வச்சிலையார் காட்டிய காரணத்தை, யாம்
செந்தமிழில் வெளிப்
படுத்திய ஆகுபெயரும் அன்மொழித்தொகையும்
என்னும் பொரு

ஞுரையின்கண் மறுத்துக் கூறிஉள்ளாம்.
அப்பொருளுருரை இந்
நூலுக்கு அனுபந்தமாகத் தரப்படும். அதனைப்படித்து

அறிந்துகொள்க.
(கூஉ) இச்சூத்திரத்துள் 'வேற்றுமை மருங்கிற்
போற்றல் வேண்
டும்' என்பதை வேருகப்பிரித்து ஒரு சூத்திரமாகக்
கொண்டு, இது
விட்டும் விடாத ஆகு பெயரைக் குறித்ததென்று
சிலர் கூறுவர்.
வடமொழி விதிகளைக் கொண்டுவந்து புகுத்தற்குத்
தொல்காப்பியச்சூத்
திரங்களைச் சிதைத்துப் பொருள்கோடல்
பொருந்தாமையிற் சேஞு
மயங்கியல்] எழுத்ததிகாரம
கஎரு

ஒப்பில் வழியாற் பிறிதுபொருள்
சுட்டலேயாமென்பது. ஒற்று மையாகிய
இயைபுள்வழி அது தத்தம்பொருள்வயிற்
றம்மொடு சிவணிற்றென்றும், அவ்வியையின்றி
இடமும் இடத்துநிகழ் பொருளு மாதன்

முதலாகிய இயைபேயாயவழி இஃதொப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டிற்றென்றும், வேறுபடுத்துணரப் படுமென்பார், 'வேற்றுமைமருங்கிற் போற்றல்வேண்டுமென்றார்' என்பது. அஃதேல், இதனைப் பிரித்து ஒரு சூத்திரமாக உரைத் தாரால் உரையாசிரியரெனின்:—அங்ஙனம் பிரிப்பின், தம்மொடு சிவணலும் பிறிதுபொருள் சுட்டலுமாகிய இவற்றது வேறு பாட்டின்கணென்பது இனிது பெறப்படாமையானும், எழுத் தோத்தினுள் 'புள்ளி யீறுதியு முயிரிறு கிளவியும்' (எழு-கரு௯.) என்னுஞ் சூத்திரத்து இங்கிகர்ப்பாதுகாவலைப் பிரியாது ஒன் றாகவே யுரைத்தலானும், அவர்க்கது கருத்தன் றென்க (௯௨)

கக௯. அளவு நிறையு மவற்றொடு கொள்வழி

யுளவென மொழிப வுணர்ந்திசி னோரே.

இதன் பொருள். அளவுப்பெயரும் நிறைப்பெயரும் ஆகு பெயராகக் கொள்ளுமிடமுமுடையவென்று சொல்லுவர் உணர்ந் தோர் என்றவாறு.

பதக்குத் தூணியென்னும் அளவுப்பெயர் இங்கெறபதக்கு, இப்பயறு தூணி எனவும், தொடிதுலாமென்னு நிறைப்பெயர் இப்பொன்றொடி, இவ்வெள்ளி துலாம் எனவும், அளக்கப்பட்ட பொருண்மேலும், நிறுக்கப்பட்ட பொருண்மேலும், ஆகுபெயராய் நின்றவாறு கண்டுகொள்க.

ஒன்று இரண்டென்னுந் தொடக்கத்து எண்ணுப் பெயரும் எண்ணப்பட்ட பொருண்மே னின்றவழி ஆகுபெயரேயாகலின்

---

வரையர் கருத்தே பொருத்தமாம். விட்டும் விடாத ஆகுபெயர் 'கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்' [வே-மய-கச] என்னும் புறனடை யாற் கொள்ளப்படும் என்க.

(கக) ஒன்று இரண்டு முதலியன எண்ணுப் பெயர் எண்ணப்படுபொருளையும் உணர்த்து

மாகலின் ஆகுபெய்யரன்றென்பது



[வேற்றும்

அவற்றையொழித்த தென்னையெனின் :— அவை எண்ணப்படு
பொருட்கு முரியவாகலின், ஆகுபெயரெனப்படா ; அதனுன் அவற்றை யொழித்தா ரென்பது.? (கக)

கக௭. கிளந்த வல்ல
வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர்
கொளலே.

இதன் பொருள்:
சொல்லப்பட்டனவேயன்றிப் பிறவும்
ஆகுபெயருளவேல், அவையெல்லாஞ்
சொல்லப்பட்டவற்ற தியல்பா னுணர்ந்துகொள்க
என்றவாறு.

சொல்லப்பட்டவற்ற தியல்பாவது

யாதானுமோரியைபு பற்றி ஒன்றன்பெயர் ஒன்றன்மேல் வழங்கப்படுதல்.

யாழ் குழல் என்னுங் கருவிப்பெயர் யாழ்கேட்டான், குழல் கேட்டான் என அவற்றுணாகிய ஓசைமேலும் ஆகுபெயராய் நின்றன. யானை பாவை என்னு முவமைப்பெயர் யானை வந்தான், பாவை வந்தாள் என உவமிக்கப்படும் பொருண்மேலும், ஏறு குத்து என்னுந் தொழிற் பெயர் இஃதோரேறு; இஃதோர்குத்து என அத்தொழிலானும் வடுவின்மேலும், வருவனவெல்லாங் கொள்க. பிறவு மன்ன.

இயைபுபற்றி ஒன்றன்பெயர் ஒன்றற்காங்கால் அவ்வியைபு ஓரிலக்கணத்ததன்றி வேறுபட்ட விலக்கணத்தை யுடைத்து; அவ்விலக்கணமெல்லாம் கடைப்பிடித்துணர்க வென்பார், 'வேறு பிறதோன்றினும்' என்றார். (௩௪)

## வேற்றுமை மயங்கியல்

முற்றிற்று.

---

——————— கருத்து. பெயரியல் கசு-ம் சூத்திரத்துள் எண்ணுப்பெயரையும் பொருளைக் குறிக்கும் பெயர்களோடு வைத்து எண்ணினமையாற் றான் ஆசிரியர் எண்ணை விலக்கி ஈண்டு அளவும், நிறையும் என்று ஓதி யிருக்கவேண்டுமென்று கருதியே, சேனாவரையர் எண்ணுப்பெயர் எண்ணப்படும்பொருட்கு முரியவாகலின் ஆகுபெயர் எனப்படா என்றார்.

(ந.சு) ஏறு, கூத்து என்பன நன்னூலார் கூறிய தொழிலாகு பெயருளடங்கும்.

## ௪. விளிமரபு

கக௮. விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்று மியற்கைய
வென்ப.

நிறுத்த முறையானே

விளிவேற்றுமை யுணர்த்திய
வெடுத்துக்கொண்டார்; அதனுன் இவ்வோத்து
விளிமர பென் னும் பெயர்த்தாயிற்று.

**இதன் போருள் :** விளியென்று
சொல்லப்படுவன தம்மை
யேற்கும் பெயரோடு விளங்கத் தோன்று
மியல்பையுடைய வென்று சொல்லுவர் ஆசிரியர்
என்றவாறு.

விளிவேற்றுமை எதிர்முகமாக்குதற்
பொருட்டாதல் பெய ரானே விளங்குதலிற்
கூறாராயினர்.

ஈறுதிரிதலும், ஈற்றயனீடலும், பிறிது
வந்தடைதலும், இயல்பாதலுமென்னும்
வேறுபாடுடைமையான் ' விளியெனப் படுப '
வென்றார்.

கொள்ளும் பெயரோ டெனவே,
கொள்ளாப் பெயருமுள வென்பதாம்.
இயல்புவிளிக்கண் திரியாது நின்ற

பெயரீறே விளியெனப் படுதலின், ஆண்டுந் தெற்றன விளங்கு மென்பார் 'தெளியத் தோன்றும்' என்றார்.
(க)

---

(க) விளிவேற்றுமை எதிர்முகமாக்குதற் பொருளை உடைய தாதல் விளியென்ற பெயரானே விளங்குதலிற் கூறாராயினரென்க. ஏனை வேற்றுமைகளைப்போல இதற்கும் பொருள் கூறாததென்னை யென்று ஆக்ஷேபம் நிகழாவண்ணம் பெயரானே விளங்குதலின் என அதற்குச் சமாதானங் கூறியவாறு.

ஈறுதிரிதல் முதலாக வேறுபாடு பலவாகலின் விளியெனப் படுப என்று பன்மையாற் கூறினார். ஆண்டு என்றது—இயல்பாய பெயரீற்றை.





கககூ. அவ்வே
இவ்வென வறிதற்கு மெய்பெறக் கிளப்ப.

**இதன் பொருள்:** விளி கொள்ளும் பெயரும் கொள்ளாப் பெயரும் இவையென மாணாக்க னுணர்தற்பொருட்டு அவை யிவ் வோத்தினகத்துப் பொருள்படக் கிளக்கப்படும் என்றவாறு.

இது கூறுவா மென்னுந் தந்திரவுத்தி.

அவ்வேயெனக் 'கொள்ளும் பெயரொடு தெளியத் தோன் றும்' (சொல்-ககஅ.) எனப் பெயரா னுணர்த்தப்படுவதாய் நின்ற விளியைச் சுட்டிய பெயரைச் சுட்டுதல் இடருடைத் தெனின்:— விளிவேற்றுமையாவது கொள்ளும் பெயரின் வேறன்றி அவை தாமேயாய் நிற்றலின், அப்பெயரைச் சுட்டவே விளியுஞ் சுட்டப்பட்டனவேயாம்; அதனான் இடரின் றென்பது. இவ்வாறுரையாது அவ்வேயெனச் சுட்டப்பட்டன விளிவேற் றுமையெனின்:— வருஞ் சூத்திரத்தின் அவைதாமெனப் பட் டனவும் விளிவேற்றுமையேயாய் 'மெய்ப்பொருள் சுட்டிய விளி கொள் பெயர்' (சொல்-கஉ௦.) என்பதனோடு இயையாவா மென் பது. விளிகொள்ளும் பெயரும், கொள்ளாப் பெயரும், உயர் திணை விரவுப்பெயர் ஈண்டுயர்திணைப் பெயருள்ளுமடங்குத லும், நுண்ணுணர்வினார்க்கல்லது அறியலாகாமையின், ஏனோரும் அறிதற்கு அவை கிளக்கப்படு மென்பார் 'இவ்வெனவறிதற்கு' என்றார். (உ)

கஉ௦. அவைதாம்

இ உ ஐ ஓ வென்னு மிறுதி
யப்பா லன்கே யுயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே.

(உ) அவ்வென்று சுட்டப்பட்டன விளிகொள் பெயரன்றி விளி வேற்றுமையேயெனின்; வருஞ் சூத்திரத்தில் அவைதாமென்பதுவும் விளிவேற்றுமையென்ற பொருளாகி விளிகொள் பெயரென்றதனோடு இயையாது மாறுபடுமாகலின் அவ்வென்பது ஈண்டு விளிகொள்பெயரைச் சுட்டி நின்றதென்க.



**இதன் பொருள் :** கிளக்கப் படுவனவாகிய பெயர்தாம் இ உ ஐ ஓ என்னு மிறுதியையுடைய அக்கூற்று நான்குபெயரும் உயர்திணைப்பெயருள் விளிகொள்ளும் பெயர் என்றவாறு.

அஃறிணைப்பெயர் ஆகுபெயராய் உயர்திணைக்கண் வந்துழியும், விரவுப் பெயர் உயர்திணைக்கண் வருங்காலும், அவை விளியேற்குமிடத்து உயர்திணைப் பெயரா மென்றற்கு 'உயர்திணை மருங்கின் மெய்ப்பொருள் சுட்டிய' வென்றார்.

**உதாரணம் :** 'சுடர்த்தொடீ கேளாய்' (கலி-௫௧.) எனவும், சாத்தீ எனவும் அவை உயர்திணைப் பெயராய் விளி யேற்றவாறு கண்டு கொள்க.

மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயர் அப்பால் நான் கென்பன எழுவாயும் பயனிலையுமாய் இயைந்து, ஒருசொன்னீர்மையவாய், அவைதாமென்னும் எழுவாய்க்குப் பயனிலையாயின.

அஃதேல், உயர்திணை விரவுப் பெயரைப் பொருள்பற்றி உயர்திணைப் பெயர்க்கண் அடக்கினாரெனின், முன்னர் 'விளம்பிய நெறிய விளிக்குங் காலை' (சொல்-க௩௦.) எனல் வேண்டாவாம் பிறவெனின் :—நன்று சொன்னாய் : 'விளம்பிய நெறிய

விளிக்கும் காலை' என்புழி, விரவுப் பெயரென்றது அஃறிணை

(௩) தொடி அஃறிணைப்பெயர்; உயர்திணைப்பெயராய் விளியேற்றது. தொடியென்பது தொடியுடையாளை உணர்த்தலின் ஆகுபெயர். சாத்தி–பொதுப்பெயர்; உயர்திணைப்பெயராய் விளியேற்றது. விளிகொள்பெயர் எழுவாய்; அப்பாலன்கு பயனில்லை; இவை ஒருங்கியைந்து அவைதாமென்பதற்குப் பயனிலையாம்; அவைதாமென்பது எழுவாயும் விளிகொள்பெயர் அப்பாலன்கு என்பது பயனிலையாயும் வரும் என்பது கருத்து. அஃறிணைவிரவுப்பெயரென்பதற்கு உரையாசிரியர் முதலியோர் உயர்திணையோடு அஃறிணை சென்று விரவும் விரவுப் பெயரெனப் பொருள்கூறி உயர்திணை அஃறிணை என்னும் இரண்டற்கும் பொதுவாய் வரும்பெயரென்பர். சேனாவரையர் விரவுப் பெயருள் உயர்திணை விரவுப்பெயரை உயர்திணைப் பெயரோடு சேர்த்து விளியேற்குமாறு கூறி, அஃறிணை விரவுப்பெயரையே "கிளந்த விறுதி அஃறிணை விரவுப்பெயர்" என்னும் சூத்திரத்தாற் கூறினார் என்பர்.

௪௨௦ தொல்காப்பியம் [விளி

விரவுப் பெயரென அஃறிணைக்கண் வருவனவற்றை விதந்தோதுதலான், உயர்திணைக்கண் வருவன உயர்திணைப் பெயருள் அடங்குமென்பதற்கு

அச்சூத்திரமே கரியாயிற்றென்பது. அல்ல தூஉம், புள்ளியீற்றுயர்திணைப் பெயர்க்கண் அவ்வீற் றுயர்திணை விரவுப் பெயரு மடங்கி விளிகோடலெய்துதலா னன்றே, தாம் நீயிரென்பன விளி கொள்ளாவென எய்தியது விலக்குவா ராயிற்று; அதனானுமடங்குதல் பெறுதுமென்பது. அல்லதூஉம், உயர்திணை யதிகாரத்து முறைப்பெயர் விளியேற்குமாறு கூறின மையானும் பெறப்படும். விரவுப் பெயரை உயர்திணைப் பெய ரோடு மாட்டெறிபவாகலின், மாட்டேற்றான் முறைப் பெயர் ஆகாரமும் ஏகாரமும் பெற்று விளியேற்ற லெய்தாமையின் ஈண்டுக் கூறினரென்றால்

உரையாசிரியரெனின் :—அக்கருத் தினராயின் அஃறிணை யென்னுஞ் சொல்லொழித்துக்

'கிளந்த விறுதி விரவுப் பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை'

(சொல்-கரு௦.) எனவும், இதன் பின்

'முறைப்பெயர் மருங்கி னையெ னிறுதி
யாவொடு வருதற் குரியவு முளவே'

(சொல்-கஉகூ) எனவும், இதன்பின் னகார ளகார வீற் றிருவகை முறைப் பெயரு மடங்கப்

---

உயர்திணைப்பெயரோடு உயர்திணை விரவுப்பெயரையும் பொரு ளொப்புமைபற்றிச் சேர்த்து விதி கூறினரென்பதற்குச் சேனவரையர் காட்டும் காரணம் இரண்டு. ஒன்று முறைப்பெயர் விதியையும் விர வுப்பெயர் விதியையும் உயர்திணை அதிகாரத்துக் கொடுவந்து கூறி னமை. மற்றொன்று மாட்டேற்றுச் சூத்திரத்தில் விரவுப்பெயரென் னது அஃறிணை விரவுப்பெயரென்று ஆசிரியர் கூறினமை.

உயர்திணைப்பெயர்க்கண் ஆகாரமும் ஓகாரமும் பெற்று விளியேற்பனவின்மையின், பின்னர் உயர்திணைப்பெயரோடு விரவுப்பெயரை மாட்டெறியும் மாட்டேற்றால் விரவுப்பெயரின் பிரிவாகிய முறைப்பெயருக்கு ஆகாரமும் ஓகாரமும் பெறுதல் எய்தாமையின் உயர்திணை அதிகாரத்திலே முறைப்பெயரையும் கொண்டுவந்து கூறினு ரென்பது உரையாசிரியர் கருத்து. அது பொருந்தாதென்பதற்குச்

'புள்ளி யிறுதி யேயொடு வருமே'
(சொல்-கருக.)

எனவும் ஓதுவார்மன்ருசிரியர். என்னை? மயங்கக் கூறலென் னுங் குற்றமும் நீங்கிச் சூத்திரமுஞ் சுருங்குமாதலான். அவ்வா ருேதாமையானும்; முறைப் பெயரே யன்றித் தான் நீயிரென் பனவும் ஈண்டுக் கூறப்பட்டமையானும், உரையாசிரியர்க்கு அது கருத்தன் றென்க.
(ரு)

கஉ௬. அவற்றுள்
இ ஈ யாகும் ஐயா யாகும்.

மேற்கூறப்பட்ட நான்கீறும் விளியேற்குமாறு கூறு கின்ருர்.

**இதன் பொருள்:** அவற்றுள் என்பது அந் நான்கீற்றி

ஹுள் என்றவாறு. நம்பி, நம்பீ என இகரம் ஈகாரமாயும் நங்கை, நங்காய் என ஐகாரம் ஆயாயும் ஈறு திரிந்து விளியேற்கும் என்றவாறு. (௪)

கஉ௨. ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்.

இதன் பொருள்: கோ, கோவே எனவும், வேந்து வேந்தே எனவும், ஓகாரமும் உகரமும் ஏகாரம் பெற்று விளி யேற்கும் என்றவாறு.

(௫) கஉ௩. உகரந் தானே குற்றிய லுகரம்.

இதன் பொருள்: மேற்கூறப்பட்ட உகரமாவது குற்றிய லுகரம் என்றவாறு.

---

சேனாவரையர் சொல்லும் காரணங்கள் இரண்டு. ஒன்று; உயர்திணைப் பெயரோடு விரவுப்பெயரை மாட்டெறிந்ததெனின் ஆசிரியர் அஃறிணை என்ற சொல்லை ஒழித்து விரவுப்பெயரென்று கூறியிருப்பாரென் பது. மற்றொன்று; மாட்டேற்றுக்குப்பின்னே

முறைப்பெயர்கள் விளிபெறுதலையும், விரவுப்பெயர்கள் விளி ஏலா என்ற விலக்கை யும் கூறியிருத்தல் வேண்டும் என்பது.



திரு, திருவே எனச் சிறுபான்மை முற்றுகரவீறுமுள வேனும், ஓதிய முறையானே விளியேற்பன குற்றுகரவீறே யாத லின் குற்றியலுகரமென்றார்.

(சூ) கஉச. ஏனை யுயிரே யுயர்திணை மருங்கிற் றாம்விளி கொள்ளா வென்மனார் புலவர்.

இதன் பொருள் :
மேற்கூறப்பட்ட நான்கீறுமல்லா உயிரீறு

உயர்திணைக்கண் விளி கொள்ளாவென்று
சொல்லுவர் புலவர் என்றவாறு.

கொள்வன விவையெனை வரையறுத்

துணர்த்தவே, ஏனைய கொள்ளாவென்ப
துணரப்படும், வரையறைக்குப் பயன் அது
வாகலான்; அதனை னிச்சூத்திரம் வேண்டா
வெனின்:—அஃ தொக்கும்:
வரையறையாற் பெறப்படுவதனையே
ஒருபயனேக்கிக் கூறினர்.
யாதோ பயனெனின்:—ஏனையுயிர் விளி கொள்ளாவென,
மேற்கூறப்பட்ட உயிர் கூறியவாறன்றிப்
பிறவாற்றானும் விளி கொள்வனவு முளவென்ப
துணர்த்துதற்கென்பது.

**உதாரணம்:** கணி, கணியே; கரி, கரியே
என வரும், பிறவுமன்ன.

தாமென்றதனன் ஏனையுயிர்
தம்மியல்பாற் கொள்ளாவாயி
னுஞ் சொல்லுவான் குறிப்புவகையாற்
கொள்வனவுமுளவென்
பதாம். மகவென்பது விளி

பெரு,தாயினுஞ் சொல்லுவான்
குறிப்பான் மகவேயென விளியேற்றவாறு கண்டு கொள்க. (எ)

கஉ௫. அளபெடை மிகூஉ மிகர விறுபெய
ரியற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப.

---

(சூ) ஓதியமுறையானே விளியேற்பனவென்றது, ஏயொடு சிவ ணும் என்று தாம்சொன்ன விதியான் விளியேற்பன என்றபடி.

முற்றியலுகரம் 'திருவேபுகுதக ' என விளியேற்குமாற்றைச் சிந்தாமணி 2121-ஞ் செய்யுளுட் காண்க. இது பிற்கால வழக்குப் போலும்.



கஅரு
இதன் பொருள்: அளபெடை தன்னியல்புமாத்திரையின் மிக்கு நான்கும்

ஐந்தும் மாத்திரை பெற்று நிற்கும் இகரவிற்றுப்பெயர் இ ஈ யாகாது இயல்பாய் விளியேற்குஞ் செயற் கையை யுடையவாம் என்றவாறு.

அளபெடை மிக்கியற்கையவாகுஞ் செயற்கைய வென்னாது 'மிகூஉமிகரவிறுபெயரென' அநுவதித்தாரேனும், மாத்திரை மிக்கியல்பாமென்பது அதனாற் பெறப்படும்.

உதாரணம்: தோழீஇ எனவும், தோழீஇஇ எனவும் வரும்.

இ ஈ யாகாமையின் இயற்கையவாகுமென்றும், மாத்திரை மிகுதலாகிய செயற்கையுடைமையாற் செயற்கைய வென்றுங் கூறினார்.

இகரவிறுபெயரென்பது இகரத்தானிற்ற

பெயரென விரியும். (அ)

கஉகூ. முறைப்பெயர் மருங்கி னையெ
னிறுதி
யாவொடு வருதற் குரியவு முளவே.

இதன் பொருள்:
முறைப்பெயரிடத்து ஐயென்னு முடிபு
ஆயாகாது ஆவொடு வருதற்கு
முரியனவுள என்றவாறு.

உதாரணம்: அன்னை, அன்னா எனவும்;
அத்தை, அத்தா
எனவும் வரும்.

---

(அ) அநுவதித்ததென்றது அளபெடை
மிகூஉ மிகர விறுபெய
ரென்று அனுவதித்துக் கூறியதை. முன்
மிகுமென்று கூறுதிருக்
கக் கூறியது போலவைத்து, அளபெடையில் மிக்க இகரவிறு
பெயர் என்று கூறியதே அனுவாதம். தோழீஇ தொழிலீஇ என்றிருத்
தல்வேண்டும். இச்சூத்திரத்துக்கு
இளம்பூரணர், அளபெடை இகரம்
ஈருயின் இயல்பாய் விளியேற்கும் எனப்

பொருள் கூறித் 'தொழிலீஇ'

என உதாரணங் காட்டி, பெயர் நிலையும் விளி

நிலையும் அதுவே நிற்கு

மாறு எனக் கூறி, ஐந்து மாத்திரை பெறுதலைப் பிறர் ஒன்ருகக் காட்டியுள்ளார்,

கருத்துள்



. . . . . .

உமமையான அனஞய அததாய என ஆயாதலுமுடைய வென்பதாம். உம்மை பிரிந்து நின்றது. (கூ)

கஉஎ. அண்மைச் சொல்லே யியற்கை யாகும்.

இதன் பொருள் : நான்கிற் றண்மைச்சொல்லும் இயற்கை யாய் விளியேற்கும் என்றவாறு.

அண்மைக்கண் விளி கொள்வதனை 'அண்மைச்சொல்' என்றார்.

உதாரணம்: நம்பி வாழி, வேந்து வாழி, நங்கை வாழி, கோ வாழி, என வரும்.

(கo) கஉஅ. னரலள வென்னு மந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே.

உயிரீற் றுயர்திணைப் பெயர் விளியேற்குமா றுணர்த்தி, இனிப் புள்ளியீற் றுயர்திணைப்பெயர் விளியேற்குமா றுணர்த்து கின்றார்.

இதன் பொருள்: புள்ளியீற்றுயர்திணைப் பெயர் னரலள வென்னும் அந்நான்கீற்றவென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

னரலளவென்னுமொற்றை ஈறாகவுடைய சொல்லை னரலள வென்றார்.

(கக) கஉகூ. ஏனைப் புள்ளி யீறுவிளி

கொள்ளா.

**இதன் பொருள் :** அங்காண்குமல்லாத புள்ளியீற்றுப் பெயர் விளி கொள்ளா என்றவாறு.

ஈண்டும் விளிகொள்ளாவென்றதனாற் பயன், கூறப்பட்ட புள்ளியீறு பிறவாற்றான் விளி கொள்வனவுளவென்ப துணர்த்தலாம.

---

(க) உம்மை பிரிந்து நின்ற தென்றது, வருதற்கும் என்பதில் வரவேண்டிய உம்மை, உரியவும் என்பதனோடு பிரிந்து நின்ற தென்றபடி. எனவே பிரித்துக் கூட்டப்படும் என்பது கருத்து.



**உதாரணம் :** பெண்டிர், பெண்டிரோ எனவும், தம்முன், தம்முனா எனவும் வரும். பிறவு மன்ன.

'விளங்குமணிக் கொடும்பூணாய்' (புறம்-கஙo.) என வேனைப் புள்ளி சிறுபான்மை விளியேற்றலுங் கொள்க. (கஉ)

கரு௦. அவற்றுள்

அன்னெ னிறுதி யாவா கும்மே.

**இதன் பொருள் :** அவற்றுள் அன்னென்னும் னகர வீறு ஆவாய் விளியேற்கும் என்றவாறு.

**உதாரணம் :** சோழன், சோழா; சேர்ப்பன் சேர்ப்பா என வரும்.

(கரு)

கருக. அண்மைச் சொல்லிற் ககர மாகும்.

**இதன் பொருள் :** அண்மைவிளிக்கண் அன்னீறு அகரமாம் எனறவாறு.

**உதாரணம் :** துறைவன், துறைவ; ஊரன், ஊர என வரும்.

(கச) கருஉ. ஆனெ னிறுதி யியற்கை யாகும்.

**இதன் பொருள் :** ஆனென்னும் னகரவீறு இயல்பாய் விளியேற்கும் என்றவாறு.

சேரமான், மலையமான்
வாறு நிற்றல் கண்டுகொள்க.

என்பன கூவுதற்கண்ணும் அவ்

(கரு) கநந.

தொழிலிற் கூறு மானெ னிறுதி
யாயா கும்மே விளிவயி னான.

இதன் பொருள்: தொழிலானொருபொருளைச் சொல்லும் ஆனீற்றுப்பெயர் விளிக்கண் ஆயாம் என்றவாறு.

---

(கஉ) ஆய் என்றது, ஆய் என்னும் குறுநிலமன்னனை. இவன் ஒருவள்ளல். இங்கே ஆயென்பது இயல்பு விளி. இது ன, ள, ர, ல அல்லாத ஏனைப்புள்ளி விளி ஏற்றது.





உதாரணம்: வந்தான், வந்தாய்; சென்றான், சென்றாய் என வரும்.

விளியதிகாரமாகலான் விளிவயினானெனல் வேண்டா வெனின்:—சொல்லில்வழி

உய்த்துணர்வதென்று மறுக்க. (ககூ)

கந.ச. பண்புகொள் பெயரு மதனோ ரற்றே.

இதன் பொருள்: ஆனீற்றுப் பண்புகொள்பெயரும் அவ் வீற்றுத் தொழிற்பெயர்போல ஆயாய் விளியேற்கும் என்ற வாறு.

உதாரணம் : கரியான், கரியாய்; செய்யான், செய்யாய் என வரும்.
(கஎ)

கந.ரு. அளபெடைப் பெயரே யளபெடையியல.

இதன் பொருள் : ஆனீற்றளபெடைப்பெயர் இகரவீற்றள பெடைப் பெயரேபோல மூன்று மாத்திரையினீண்டு இயல்பாய் விளியேற்கும் என்றவாறு.

உதாரணம் : உழாஅஅன்,

கிழாஅஅன் என வரும்.

அளபெடை மூன்றுமாத்திரையின் நீண்டிசைத்தலாகிய விகார

---

(கஅ) இச்சூத்திரத்துக்குக் காட்டிய உழாஅன், கிழாஅன் என்பனவற்றிற்குப் பதிலாக, 'அழாஅன், புழாஅன்' என்று உரையாசிரியரைப் பின்பற்றிச் சேனாவரையரும் காட்டியிருக்கலாமோ என்பது ஆராயத்தக்கது. ஏனெனின் ? "ஆவோவாகும் பெயருமா ருளவே - யாயிட னறிதல் செய்யு ளுள்ளே" (பெய. சக) என்னுஞ் சூத்திரத்தில் உழாஅன், கிழாஅன் என்பனவற்றை அன்னீ றென்று சேனாவரையர் கூறுதலின், அன்னீறு என்று கூறியதை இடைச் செருகல் என்னலாம் நச்சினார்க்கினியர் மறுமொழியின். நச்சினார்க்கினியர் மறுக்க முன்னேயே இடைச்செருகிய தென்பாரு முளர். அது உண்மையாயின் உழாஅன், கிழாஅன் என்றே அள பெடைப் பெயருக்குச் சேனாவரையர் உதாரணம்

காட்டினரென்று
கொள்ளலாம்.

அழன், புழன் வேறு. அவை 'அழனே புழனே' என்று ஆசிரி
யரால் எழுத்ததிகாரத்துட் கூறப்பட்டவை.

அழாஅன், புழாஅன் மரபு]



முடைமையான் 'ஆனெ னிறுதி யியற்கை யாகும்'
(சொல்-கங௨) என்புழி அடங்காமையறிக.
(கஅ)

கஙசு. முறைப்பெயர்க் கிளவி யேயொடு
வருமே.

இதன் பொருள்:
னகாரவீற்றுமுறைப்பெயர் ஏகாரம் பெற்று
விளியேற்கும் என்றவாறு.

உதாரணம்: மகன், மகனே;
என வரும்.

மருமகன் மருமகனே
(கக)

கசஎ. தானென் பெயருஞ் சுட்டுமுதற் பெயரும்

யானென் பெயரும் வினாவின் பெயரு

மன்றி யனைத்தும் விளிகோ ளிலவே.

**இதன் பொருள் :** தானென்னும் பெயரும், அவன் இவன் உவனென்னுஞ் சுட்டுமுதற்பெயரும், யானென்னும் பெயரும், யாவனென்னும் வினாப்பெயருமாகிய அவ்வனைத்தும், னகரவீறே யாயினும், விளிகொள்ளா என்றவாறு. (உ०)

கசஅ. ஆரு மருவு மீரொடு சிவணும்.

நிறுத்த முறையானே ரகாரவீறு விளியேற்குமாறுணர்த்து கின்றார்.

**இதன் பொருள் :** ரகாரவீற்றுள் ஆர், அர் என நின்ற இரண்டும் ஈராய் விளியேற்கும் என்றவாறு.

**உதாரணம் :** பார்ப்பார், பார்ப்பீர் கூத்தர்,

கூத்தீர் என வரும்.
(உக)

என்பன உரையாசிரியரால் காட்டப்பட்ட உதாரணங்கள். இவை எப்படி வழக்கில் வந்தனவென்பது ஆராயத்தக்கது. இன்னும் " அழான், புழான் " என விருபெயர்கள் விரவுப் பெயர்களுக்கு உதாரணமாக உரையாசிரியராலும், நச்சினார்க்கினியராலும், காட்டப் பட்டுள்ளன. இவ்வளவெடைப் பெயருக்கு உதாரணமாக இளம் பூரணர் காட்டிய அழாஅன், புழாஅன் என்பனவே இவர்களுக் கெல்லாம் மிந்திய உரையாசிரியராகிய கல்லாடனாராலும் காட்டப் பட்டுள்ளன. க்அஅ



கஙக. தொழிற்பெய ராயி னேகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே.

இதன் பொருள் : மேற்கூறிய இரண்டற்றுத் தொழிற் பெயர்க்கும் ஈரோடு

ஏகாரம் வருதலுங் குற்றமன்று என்றவாறு.

உதாரணம்: வந்தார், வந்தீரே; சென்றார், சென்றீரே என வரும்.

அர் ஈற்றுத்தொழிற்பெயர் வந்தவழிக் கண்டுகொள்க.

ஏகாரம் வருதலும் வழுக்கின்றென்றதனன், ஏகாரம் பெறாது ஈரொடு சிவணலே பெரும்பான்மையென்பதாம் (உஉ)

கசం. பண்புகொள் பெயரு மதனோ ரற்றே.

இதன் பொருள்:

அவ்விரண்டீற்றுப் பண்புகொள்பெயரும், அவ்வீற்றுத் தொழிற்பெயர்போல, ஈரொடு சிவணியும், சிறுபான்மை ஈரோடேகாரம் பெற்றும், விளியேற்கும் என்றவாறு.

உதாரணம்: கரியார், கரியீர், இளையர், இளையீர் எனவும்; கரியீரே, இளையீரே எனவும் வரும். (உ௩)

கசக. அளபெடைப் பெயரே யளபெடை யியல.

இதன் பொருள் : ரகாரவீற் றளபெடைப்பெயர், முற் கூறிய அளபெடைப் பெயரேபோல, மூன்று மாத்திரையின் மிக்கியல்பாய் விளியேற்கும் என்றவாறு.

உதாரணம்: சிறூஅஅர், மகாஅஅஅர் என வரும். (உச)

கசஉ. சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன.

இதன் பொருள்: அவர், இவர், உவர் என வரும் ரகாரவீற் றுச் சுட்டுமுதற்பெயர், னகாரவீற்றுச் சுட்டுமுதற்பெயரேபோல விளிகொள்ளா என்றவாறு. (உரு)

---

(உ௨) தொழிற்பெயர் - வினையாலணையும் பெயர்.

(உ௩) பண்புகொள் பெயர் - பண்பிப்பெயர்.

கசங. நும்மின் றிரிபெயர் வினாவின் பெயரென்
றம்முறை யிரண்டு மவற்றியல் பியலும்.

இதன் பொருள்: நும்மின்றிரிபாகிய நீயிரும் வினாவின் பெயராகிய யாவரும் இரண்டும், மேற்கூறிய சுட்டுப்பெயரே போல, விளியேலா என்றவாறு.

நீயிரென்பதனை நும்மெனத் திரியாது நும்மென்பதனை நீயிரெனத் திரிப்பினும் இழுக்காதென்னுங் கருத்தான் எழுத்தோத்தினுள் நும்மென நிறுத்தித் திரித்தாராகலான், அது பற்றி நீயிரென்பதனை நும்மின்றிரிபெயரென்றார். (உகூ)

கசச. எஞ்சிய விரண்டி னிறுதிப் பெயரே

நின்ற வீற்றய னீட்டம் வேண்டும்.

நிறுத்த முறையானே லகார ளகாரவீற்றுப்பெயர் விளி யேற்குமா றுணர்த்திய வெடுத்துக்கொண்டார்.

**இதன் பொருள்:** உணர்த்தாது நின்ற லகார ளகார மென் னும் இரண்டு புள்ளியை யிறுதியாகவுடைய பெயர் ஈற்றய லெழுத்து நீண்டு விளியேற்கும் என்றவாறு.

**உதாரணம்:** குரிசில் குரிசீல்; மக்கள் மக்காள் என வரும்.
(உஎ)

கசரு. அயனெடி தாயி னியற்கை யாகும்.

**இதன் பொருள்:** ஈற்றயலெழுத்து, நெட்டெழுத்தாயின், இயல்பாய் விளியேற்கும் என்றவாறு.

**உதாரணம்:** பெண்பால், கோமாள் எனவரும்.

(உஅ) கசசு. வினையினும் பண்பினு
நினையத் தோன்றுமாளெ னிறுதி
யாயா கும்மே விளிவயி னான.

(உசு) கருத்தான் நிறுத்தித் திரித்தாராகலின் என விடைக்க,



இதன் பொருள்: வினையின்கண்ணும் பண்பின்கண்ணும் வரும் ஆளீற்றுப்பெயர், இயல்பாகாது, ஆயாய் விளியேற்கும் என்றவாறு.

உதாரணம்: நின்றாள், நின்றாய் எனவும்; கரியாள், கரியாய் எனவும் வரும்.

விளிவயினான வென்பதனை முன்னும் பின்னுந் தருவன வற்றோடு கூட்டுக. (உசு

கசஎ. முறைப்பெயர்க் கிளவி முறைப்பெய ரியல.

இதன் போருள்:
ளகாரவீற்றுமுறைப்பெயர், னகார வீற்று முறைப்பெயர்போல, ஏகாரம்பெற்று விளியேற்கும் என்றவாறு.

உதாரணம்: மகள், மகளே; மருமகள், மருமகளே என வரும்.
(௩௦)

௧௫௮. சுட்டுமுதற் பெயரும் வினவின் பெயரு
முற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.

இதன் போருள் : அவள், இவள், உவளென்னும் ளகார வீற்றுச் சுட்டு முதற்பெயரும், யாவளென்னும் வினைப்பெயரும், மேற்கூறிய சுட்டுமுதற் பெயரும் வினைப்பெயரும்போல, விளி கொள்ளா என்றவாறு.
(௩௧)

கசகூ. அளபெடைப் பெயரே யளபெடை யியல.

**இதன் பொருள் :** லகார ளகார வீற்றளபெடைப்பெயர், மேற்கூறிய அளபெடைப் பெயரே போல, அளபு நீண்டு இயல்பாய் விளியேற்கும் என்றவாறு.

**உதாரணம் :** மாஅஅல், கோஒஒள் என வரும்.

---

(உகூ) வினை - வினையாலணையும் பெயர்.
பண்பு-பண்புகொள் பெயர்; பண்பி.



இவை அளபெடைப் பெயராயின், மால் கோளென அளபெடையின்றி வருவன செய்யுளோக்கி அளபு சுருங்கி வந்தனவாம்; இவை அளபெடைப் பெயரல்லவாயின், அளபெடைப் பெயர் வந்தவழிக் கண்டு கொள்க. (நஉ)

கருo. கிளந்த விறுதி யஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை.

உயர்திணைப்பெயரும் உயர்திணை விரவுப்பெயரும் விளி கொள்ளுமா றுணர்த்தி, இனி யஃறிணைவிரவுப்பெயர் விளிகொள்ளுமா றுணர்த்துகின்றார்.

**இதன் பொருள்:** கிளந்தவிறுதியாவன, உயிரீறு நான்கும் புள்ளியீறு நான்குமாம். அவற்றை யிறுதியாகவுடைய அஃறிணைக்கண் வரும் விரவுப்பெயர் மேற்கூறிய நெறியான் விளி

யேற்கும் என்றவாறு.

**உதாரணம்:** சாத்தி, சாத்தீ; பூண்டு, பூண்டே; தந்தை, தந்தாய் எனவும், சாத்தன், சாத்தா; கூந்தல், கூந்தால்; மக்கள், மக்காள் எனவும் வரும். சாத்தி, பூண்டு, தந்தை, சாத்த என அண்மைவிளியாய் வருவனவுங் கொள்க.

ஓகாரவீறும் ரகாரவீறுமாய் வருவன விரவுப்பெயருளவேற் கொள்க. பிறவுமன்னை. (௩௩)

கருக. புள்ளியு முயிரு மிறுதி யாகிய

வஃறிணை மருங்கி னெல்லாப்

பெயரும்

விளிநிலை பெறாஉங் காலந் தோன்றிற்
றெளிநிலை யுடையவே காரம் வரலே.

**இதன் பொருள் :** புள்ளியீறும் உயிரீறுமாகிய அஃறிணைப் பெயரெல்லாம், விளிகொள்ளுங் காலந் தோன்றின், ஏகாரம் பெறுதலைத் தெற்றெனவுடைய என்றவாறு.

**உதாரணம் :** மரம், மரமே; அணில், நரியே; புலி, புலியே என வரும்.

அணிலே; நரி,



அஃறிணைப்பெயருள் விளிகேட்கும் ஒருசார் விலங்கின் பெயரும், விளிகேளாதனவற்றைக் கேட்பனவாகச் சொல்லுவார் கருதியவாற்றான் 'விளியேற்பனவுமல்லது, ஒழிந்த பெயரெல் லாம் விளியேலாமையின், விளிநிலைபெறாஉங் காலந்தோன்றின்' என்றார். அதனானே சுட்டுப்பெயர் முதலாயின விளியேலாமை யுங் கொள்க.

தெளிநிலைபுடைய வேகாரம் வரலே என வேகாரம் பெற்று விளியேற்றலை யாப்புறுப்பவே, யாப்புறவின்றிச் சிறுபான்மை பிறவாற்றான் விளியேற்பனவுமுள வென்பதாம். அவை 'வருந் தினை வாழியென்னெஞ்சம்' 'கருங்கால்வெண் குருகொன்று கேண்மதி' 'காட்டுச்சாரோடுங் குறுமுயால்' 'ஒண்டூவி நாராய்' என்னுந் தொடக்கத்தன.
(நச)

கருஉ. உளவெனப் பட்ட வெல்லாப் பெயரு
மளபிறந் தனவே விளிக்குங் காலைச்
சேய்மையி னிசைக்கும் வழக்கத் தான.

இதன் பொருள் : உயர்திணைக்கண்ணும் அஃறிணைக் கண்ணும் விளியேற்பனவாகச் சொல்லப்பட்ட எல்லாப் பெயரும், விளிக்குமிடத்து, தத்தமாத்திரையி னிறந்திசைத்தனவாம், சேய்மைக்கணொலிக்கும் வழக்கத்தின்கண் என்றவாறு.

**உதாரணம்:** நம்பீஇ, சாத்தாஅ என வரும்.

அளபெடைமிகூஉ மென்றமையான், அளபெடைப் பெயரொழித்து நின்ற பெயர் கொள்க.

அளபிறந்தனவென்றது, நெட்டெழுத்து அளபெடையாயும், அளபெடை மூன்றுமாத்திரையினிறந்தும், சேய்மைக்குத் தக்கவாறு நீண்டிசைக்கு மென்றவாறு.

---

(கரு) அளபெடை மிகூஉம் என்றமையான் என்பது 'அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்' என்ற சூத்திரத்தை நோக்கியது. ஆண்டு அளபெடை மிகூஉம் என்றமையினுல் அளபெடைப் பெயர் அளபெடுத்தல் பெறுதலின் ஈண்டு அளபெடுத்தல் அதற்குக் கூறவேண்டாமையான் அதனை ஒழித்து, நின்ற பெயர் கொள்க என்றூர். சேய்மைக்குத் தக்கபடி நீண்டும் இசைக்கு மென்றது அண்மைச் சேய்மை, சேய்மை, அதிசேய்மை என்னும் பகுதிக்குத் தக்கபடி நீண்டிசைக்கு மென்றபடி.

சேரமான், மலையமான் என்னுமீற்றயல்
அளபிறந்த வழி
இயல்புவிளியென்னுது ஈற்றயனீண்டதாகக்
கொள்க. அளபிறப் பன எழுத்தாகலின்,
வென்றார்.
ஒற்றுமை நயத்தாற் பெயரளபிறந்தன
(௩௫)

கருங. அம்ம வென்னு மசைச்சொன்
னீட்ட
மம்முறைப் பெயரொடு சிவணு
தாயினும்
விளியொடு கொள்ப தெளியு
மோரே.

இதன் பொருள்: அம்மவென்னும்
அசைச்சொல்வினது நீட்டம்,
விளிகொள்ளும் பெயரொடு தோன்றுது,
இடைச்சொல்
லோடு தோன்றிற்றாயினும், விளியாகக் கொள்வர்
என்றவாறு.

தெளிவோர்

**உதாரணம்:** அம்மா சாத்தா என வரும்.

சாத்தாவென்பதே எதிர்முகமாக்குமாயினும், அம்மா வென் பதும் அவ்வெதிர்முகமாக்குதலே குறித்து நிற்றலின், விளியாகக் கொள்ளப்படுமென்பார் 'விளியொடு கொள்ப' வென்றார். (நஅ) கருச.

தநநு எஎன வவைமுத லாகித்
தன்மை குறித்த னரளவெ
னிறுதியு
மன்ன பிறவும் பெயர்நிலை வரினே
யின்மை வேண்டும் விளியொடு
கொளலே.

**இதன் பொருள்:** த ந நு என்னு முயிர்மெய்யையும் எ என்னுமுயிரையும்

முதலாகவுடையவாய் ஒருவனது கிழமைப் பொருண்மையைக் குறித்து நின்றன ர ள வென்னு மூன்று புள்ளியை யிறுதியாகவுடைய சொல்லும் அவைபோல்வன பிறவுமா கிய பெயர்ச்சொல் வருமாயின், விளியொடு பொருந்துதலில என்றவாறு.

**உதாரணம்:** தமன் தமர் தமள், நமன் நமர் நமள், நுமன் நுமர் நுமள், எமன் எமர் எமள் எனவும்; தம்மான் தம்மார் தம்மாள், நம்மான் நம்மார் நம்மாள், நும்மான் நும்மார் நும்மாள், எம்மான் எம்மார் எம்மாள் எனவும் வரும்.
**25**



அன்னபிறவுமென்றதனுன், மற்றையான், மற்றையார், மற்றையாள்; பிறன், பிறர், பிறள் என வருவன கொள்க.

அஃதேல், இவற்றைத் தத்தமீற்றகத்துணர்த்தாது ஈண்டுக் கூறியதென்னையெனின்:— இவற்றை யீற்றகத் துணர்த்தின் மூன்றுசூத்திரத்தா னுணர்த்தல்வேண்டுதலிற் சூத்திரம் பல்கும்; அதனு னுண்டுணர்த்தாராயினர். அஃதேல், உயர்திணை யதி

காரத்துப் பின் வைக்கவெனின்:—ஆண்டு வைப்பின் 'விளம்பிய நெறிய விளிக்குங் காலை' (சொல்-கடுo.) என்னுமாட்டேற்று இனிது பொருள்கொள்ளாதாம், அதனால் பிறிதிடமின்மையின் ஈண்டு வைத்தாரென்பது. (ந௲எ)

## விளிமரபு முற்றிற்று.

(க௲எ) இச் சூத்திரத்தைக் 'கிளந்த விறுதி' என்னும் மாட்டேற்றுச் சூத்திரத்தின் முன் வைப்பின் இச்சூத்திரம் இடை நின்று விலக்குமாகலின் அஃது இனிது பொருள் கொள்ளாதென்று கருதி ஈண்டு வைத்தாரென்றார்.

# ரு. பெயரியல்

கருரு. எல்லாச் சொல்லும்
பொருள்குறித் தனவே.

நான்குசொல்லும் பொதுவகையானுணர்த்தி, பொதுவிலக் கணமாத லொப்புமையானும் வேற்றுமை பெயரோடியைபுடைமை யானும் பெயரிலக்கணத்திற்கும் பொதுவிலக்கணத்திற்கும் இடை வேற்றுமை யிலக்கண முணர்த்தி, இனிச் சிறப்புவகை யான் நான்கு சொல்லு முணர்த்துவானெடுத்துக்கொண்டு, இவ் வோத்தான் அவற்றின் முதற்கண்ணதாகிய பெயரிலக்கண முணர்த்துகின்றார். அதனா னிது பெயரியலென்னும். பெயர்த் தாயிற்று.

இதன் பொருள்: பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகிய எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே, பொருள் குறியாது நில்லா என்றவாறு.

'ஆயிருதிணையி னிசைக்கும்' (சொல் - க.) என்றதனான் இது பெறப்படுதலின் இச் சூத்திரம் வேண்டாவெனின்:— அற்றன்று: சொல்லிசைக்கும் பொருளாவன

இவ்விரண்டு திணை

யுமே பிறிதில்லையென்பதல்லது, சொல்லெல்லாம் பொருளுணர்த் துதன் மாலையவே உணர்த்தாதனவில்லை யென்னும் யாப்புறவு அதனுற் பெறப்படாமையின், அசைநிலை முதலாயினவும் பொருள்குறித்து நிற்குமென ஐயமறுத்தற்கு இச் சூத்திரம் வேண்டுமென்பது. அசைநிலை முதலாயின பொருளுணர்த்து மாறு மேலே கூறிப்போந்தாம்.

முயற்கோடு, யாமைமயிர்க்கம்பலம் என்பன பொருளுணர்த் தாவாவெனின் :— அவை தொடர்மொழியாகலான் ஈண்டைக் கெய்தாவென்பது. அஃதேல், தொடர்மொழிதான் பொருள்

---

(க) மேல் என்றது கிளவியாக்கத்து க—ம் சூத்திர உரையுள் என்ற படி. எனி அன்மையான் என இயைக்க. இவை கிளவியாக்கத்துட் கூறிய சூத்திரங்களைப் போல வழுக்காத்தலும் வழுக்காத்தற்குபகார முடையனவும் அன்மையான் ஈண்டுக் கூறினர் என்பது கருத்து.



[பெய குறியாது வருமோவெனின் :— வாரா. அவை |மெய்ப்பொருள் குறிப்பனவும் பொய்ப்பொருள் குறிப்பனவுமென இருவகைப் படும். அவற்றுள், பொய்ப்பொருள் குறிப்பனவும் பொரு ளுணர்த்துவனவேயாம். அல்லாக்கால், இல்லோன் றலைவனாக

வருந் தொடர்நிலைச் செய்யுள் பொருளுணர்த்தாமையின், அவை புலவராற் கொள்ளப்படாவென்பது.

அஃதேல், இச் சூத்திரம் முதலாக ஐந்துசூத்திரத்தாற் கூறப்பட்டன பொதுவிலக்கணமாகலான், இவற்றை ஈண்டு வையாது கிளவியாக்கத்துள் வைக்கவெனின்:— இவை பொது விலக்கணமே யெனினும், ஆண்டுக் கூறப்பட்டன வழூஉக் காத்தலும் வழூஉக்காத்தற்கு உபகாரமுடையனவுமன்றே; 'எல் லாச்சொல்லும் பொருள்குறித்தன' என ஐயமகற்றலும் சொற் பொருள் இனைத்துப் பாகுபடுமென்றலும் சொல்லினைத்தென்றலு மென வழூஉக்காத்தலும், வழூஉக்காத்தற் குபகாரமுடையனவு மன்மையான், ஆண்டுணர்த்தாது, பொருள்வேறுபாடுபற்றிச்

சிறப்புவகையான் நான்கு சொல்லு
முணர்த்துங்கால் அவை
யுணர்த்தி யல்லது யுணர்த்தலாகாமையின், அவற்றை யீண்
டுணர்த்திஞரென்பது. பொருள் வேறுபாடுபற்றிச் சொல்
லுணர்த்துமாறு முன்னர்க் காணப்படும். (க)

கருகூ. பொருண்மை தெரிதலுஞ் சொன்மை [தெரிதலுஞ்

சொல்லி ஞகு மென்மனர் புலவர்.

**இதன் போருள் :** தன்னின் வேருகிய பொருளறியப்படு தலும் பொருளறியப்படாது அச்சொற்றனே யறியப்படுதலும் இரண்டுஞ் சொல்லாறு மென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

**உதாரணம் :** சாத்தன், வந்தான், பண்டு

காடு மன், உறு கால் என்பவற்றால் பொருளுணரப்பட்டவாறும், நீயென்கிளவி, செய்தனெச்சம், தஞ்சக்கிளவி, கடியென்கிளவி என்பனவற்றாற் பொருளுணரப்படாது அச் சொற்றாமே யுணரப்பட்டவாறுங் கண்டுகொள்க.



'ஆயிரு திணையி னிசைக்குமன் சொல்லே' 'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே' (சொல்-கருரு.) 'ஈறு பெயர்க் காகு மியற்கைய வென்ப' (சொல்-கூக.) என்புழிச் சொல்லென்னுஞ் சொல்லும் பெயரென்னும் பெயரும் அறியப் படுதற்கட் சொன்மை தெரிதலாம்; ஏனைச்சொல்லும் ஏனைப் பெயரு மறியப்படுதற்கட் பொருண்மை தெரிதலாம். அதனான் ஆண்டுச் சொன்மை தெரிதலும் பொருண்மை தெரிதலும் ஒருங்கு வந்தனவெனப்படும். அல்லாக்கால்,

சொல்லென் னுஞ் சொற்பொருளுணர்த்துதலும் பெயரென்னும் பெயரிறுதி யுருபு வருதலும் பெறப்படாவா மென்பது.

மேலைச் சூத்திரத்தாற் சொற்கள் பொருளுணர்த்து மென் பது பெறப்பட்டமையால், தானும் பிறிதுமெனப் பொருள் இரண்டு வகைப்படுமென அதனது பாகுபாடு உணர்த்தியவாறு.

இதனாற் பயன், சொற் றன்னையுணர நின்றவழியுஞ் சொல் லேயாமென ஐயமறுத்தலாம். (உ)

கருள. தெரிபுவேறு நிலையலுங்
குறிப்பிற் றோன்றலு
மிருபாற் றென்ப பொருண்மை
நிலையே.

---

(உ) அல்லாக்கால் என்றது—ஒருங்கு வந்தன அல்லவாயின்.

என்றபடி. எனவே இரண்டும் வாராது ஒன்றுமாத்திரம் வந்ததென்

றால் என்பது கருத்து. 'ஆயிரு திணையி னிசைக்குமன சொல்லே'

என்பதில் சொல் என்பது தன்னையுணர்த்திச் சொன்மை தெரிதன்

மாத்திரமாய் வந்ததென்றால் (பொருண்மை தெரிதல் இல்லை என்

றால்) ஏனைச்சொற்களாகிய பொருளையுணர்த்துதல் பெறப்படாதாம்.

ஆதலானும், "ஈறு பெயர்க்காகும்" என்பதில் பெயர் என்பது ஏனைப் பெயர்களை மாத்திரமுணர்த்திப் பொருண்மை தெரிதன் மாத்

திரமாய் வந்ததென்றால் (சொன்மை தெரிதல் இல்லை யென்றால் -

பெயர் என்பது தானும் ஒரு பெயர்ச்சொல்எனத் தன்னைஉணர நில்லா

தொழிந்தால்) அப்பெயர் என்ற சொல்லின் பின்னர் உருபு வரு

தல் பெறப்படாது. என்னை? பெயர்ச் சொல்லின் பின்னேயே உருபு

வருமென்பது விதியாதலின். ஆதலானும் இரண்டும் ஒருங்கு வந்தன

வேயாம் என்க. இங்ஙனங் கூறியது பொருண்மை தெரிவன சொன்

மையுந் தெரிய நிற்குமென்பது பெறவைத்தற் கென்க.

இதன் பொருள்: மேற் கூறப்பட்ட பொருண்மை தெரி தல், சொன்மாத்திரத்தான் விளங்கி வேறுநிற்றலுஞ் சொன் மாத்திரத்தாற் றோன்றாது சொல்லொடு கூடிய குறிப்பாற் றோன்றலுமென, இரண்டு கூற்றை யுடைத்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம்: அவன், இவன், உவன்; வந்தான், சென்றான் என்றவழிப் பொருடெரிபு வேறு நின்றன. ஒருவர் வந் தார் என்றவழி ஆண்பால் பெண்பாலென்பதூஉம், சோறுண்ணு நின்றான் கறகறித்து, 'நன்கட்டாய்' என்றவழித் தீங்கட்டாய் என்பதூஉம், குறிப்பாற் றோன்றின. கடுத்தின்றான், தெங்கு தின்றான் எனப் பிறிதின்பெயராற் பிறிதுபொருடோன்றலுங் குறிப்பிற் றோன்றலாம். தின்றானென்னுந் தொழிலொடு முதற் பொருள் இயையாமையின்

அதனோடியையுஞ் சினைப்பொருள் அத்தொடராற்றலாற் பெறப்பட்டமையாற் குறிப்பிற் றோன்ற லாகாதெனின் :— அற்றன்று : அவ் வினையாமை சொல்லுவான் குறிப்புணர்தற் கேதுவாவதல்லது முதற்பெயரைச் சினைப் பொருட்டாக்கு மாற்றலின்றாகலான், அதுவுங் குறிப்பிற் றோன் றலேயாமென்க. பிறவுமன்ன.

'இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து'

(குறள் — அ௭௯)

என்னுந் தொடர்மொழியான்,
நிலைபெற்றபின் க்ளையலுறிற் களைய லுற்றாரை அவர்தாங் கொல்வர் அதனாற் றீயாரை அவர் நிலை பெறுக் காலத்தே களைக என்னும் பொருள் விளங்குதலுங் குறிப்பிற் றோன்றலாம். அணியிலக்கணங் கூறுவார் இன்னோ ரன்னவற்றைப் பிறிதுமொழித லென்பதோரணி யென்ப. (௩)

---

(௩) கடுத்தின்றான் என்றவழி, தின்னுதல் வினை கடுவிற்கியை .

யாமையின் அதற்கு இயையுங் காயென்றுஞ் சினைப்பொருள் அத்தொடராற்றலாற் பெறப்படுதலின் குறிப்பிற் றோன்றலாகாதெனின்? அவ்வியையாமை குறிப்புப் பொருளை உணர்த்தற் கேதுவாவதல்லது முதற்பொருளைச் சினைப்பொரு ளாக்கமாட்டாது. அச் சினைப் பொருள் இயையாமையான் உணர்ந்து ஆக்கப்படும். ஆதலாற் குறிப்பிற் றோன்றலாமென்க. பிறிது மொழிதல்—ஒட்டு என்னுமணி.



௧௧௧ கருஅ. சொல்லெனப் படுப பெயரே வினையென்

றாயிரண் டென்ப வறிந்திசி

னோரே.

இதன் பொருள்: சொல்லாவன பெயர்ச் சொல்லும் வினைச் சொல்லுமென இரண்டென்று சொல்லுவர் அறிந்தோர் என்றவாறு.

பெயர்ச்சொற்கிலக்கணம் வேற்றுமையோத்தினுட் கூறினார்; வினைச்சொற்கிலக்கணம் வினையியலுட் கூறுப.

பிறசொல்லுமுளவாயினும், இவற்றது சிறப்புநோக்கிப் 'பெயரே வினையென் றாயிரண் டென்ப' வென்றார். இவற்றுள்ளும் பொருளது புடைபெயர்ச்சியாகிய தொழில் பற்றாது அப்பொருள்பற்றி வருஞ் சிறப்புடைமையாற் பெயரை முற் கூறினார். (௪)

கருக. இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு
மவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப.

**இதன் பொருள் :** இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயரையும் வினையையுஞ் சார்ந்து தோன்றும் என்றவாறு.

அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்றாரேனும், பெயரையும் வினையையுஞ் சார்ந்து தோன்றும் இவ்விரண்டையும் அவற்றோடு தலைப்பெய்யச் சொல் நான்காமென்பது கருத்தாகக் கொள்க. சார்ந்து தோன்றுமெனவே, அவற்றது சிறப்பின்மை பெறப்படும். வழக்குப்பயிற்சி நோக்கி இடைச்சொல் முற் கூறினார். (ரு)

கசூ௦. அவற்றுள்
பெயரெனப் படுபவை தெரியுங்

காலை

யுயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
மம்மூ வுருபின தோன்ற லாறே.



பொருள் வேறுபாடுபற்றிச் சிறப்பு வகையான் நான்கு சொல்லு முணர்த்துதற்கு உபகாரமுடைய பொது விலக்கண முணர்த்தி, நிறுத்த முறையானே இனிப் பெயர்ச்சொ லுணர்த்து கின்றார்.

இதன் பொருள்: மேற்கூறப்பட்ட நான்கனுள், பெய ரென்று சொல்லப்படுவன, உயர்திணைக்குரியவாய் வருவனவும், அஃறிணைக்குரியவாய் வருவனவும், இரண்டு திணைக்குமொத்த வுரிமையவாய் வருவனவுமென, மூன்று வேறுபாட்டனவாம், தோன்று நெறிக்கண் என்றவாறு.

கசுக. இருதிணைப் பிரிந்த வைம்பாற் கிளவிக்கு
முரியவை யுரிய பெயர்வயி னான.

இதன் பொருள்: இருதிணைப்பிரிந்த ஐம்பாற் கிளவி யாதற்குப் பெயருள் உரியன உரியவாம் என்றவாறு.

அவன், பெண்மகன், சாத்தன் என னகரவீறு ஆடூவிற் கும், மகடூவிற்கும், அஃறிணையாண்பாற்கும் உரித்தாய் வருத லானும், அவள், மக்கள், மகள் என ளகரவீறு மகடூவிற்கும், பல்லோர்க்கும், அஃறிணைப் பெண்பாற்கும் உரித்தாய் வருத லானும், பெண்டாட்டி நம்பி எனவும், ஆடூ மகடூ எனவும் இகர வீறும் ஊகார வீறும் இருபாற்கு முரியவாய் வருதலானும்,

வினைச்சொற்போல இன்னவீறு இன்னபாற் குரித்தெனப் பெயர்ச்சொல் ஈறுபற்றி உணர்தலாகாமையின், 'உரியவை யுரிய'

வென்றார். பிறவுமன்ன.

பல்குமென்றஞ்சி இன்ன பெயர் இன்னபாற் குறித்தெனக் கிளந்தோதாராயினர். அஃதேல், இவற்றது பாற்குரிமை யெற் றாற் பெறுதுமோவெனின் :— உரியவையென்றது வழக்கின்கட் பாலுணர்த்துதற்குரியவாய் வழங்கப்படுவன வென்றவாறன்றே; அதனான் வழக்கு நோக்கிக் கொள்ளப்படுமென்பது.

மற்றும்,

நஞ்சுண்டான் சாம் என்பது ஒருபாற்குரிய சொல் லாயினும், நஞ்சுண்டாள் சாம், நஞ்சுண்டார் சாவர், நஞ்சுண் ரியல்]



டது சாம், நஞ்சுண்டன சாம் என ஏனைப்பாற்கு முரித்தாம் அச்சொல்லென இப்பொருண்மை யுணர்த்துகின்றது இச்சூத் திரமென்றுரால் உரையாசிரியரெனின் :— நஞ்சுண்டல் சாதற்குக்

காரணமென்பான் ஒரு பான்மேல் வைத்து நஞ்சுண்டான்

சாமென்றதல்லது, ஆண்டுத் தோன்றும் ஆண்மையும் ஒருமை

யுஞ் சாதற்குக் காரணமென்னுங் கருத்தினனல்லன்; அதனாற் சொல்லுவான் கருத்தொடுகூடிய பொருளாற்றலாற் சாதல் ஏனைப்

பாற்கு மொக்குமெனச் சேறல் சொல்லிலக்கணத்திற் கூறப்

படாமையான், ஆசிரியர்

'ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்

வருவன தானே வழக்கென மொழிப'

(மரபியல்—உஅ.) என விப்பொருண்மை

பொருளியலிற் கூறினாராகலின், இச்சூத்

திரத்திற்கு அஃதுரையாதல் உரையாசிரியர்

கருத்தன்றென்க. அல்லதூஉம், பார்ப்பான்

கள்ளுண்ணான் என்றவழிக் கள்ளுண்

ணாமை சாதிபற்றிச் செல்வதொன்றாகலின் பார்ப்பனிக்கும் பார்ப் பார்க்கு மல்லது பிறசாதியார்க்கும் அஃறிணைக்குஞ் செல்லாமை

யின், ஐம்பாற்கிளவிக்குமுரியவென்றல்

பொருந்தாமையானும், அவர்க்கது

கருத்தன்மையறிக.
(எ)

கசுஉ. அவ்வழி
அவனிவ னுவனென
வரூஉம் பெயரு
மவளிவ ளுவளென வரூஉம் பெயரு
மவரிவ ருவரென வரூஉம் பெயரும்
யான்யாம் நாமென வரூஉம்
பெயரும்
யாவன் யாவள் யாவ ரென்னு
மாவயின் மூன்றோ டப்பதி னைந்தும்
பாலறி வந்த வுயர்திணைப் பெயரே.

**இதன் பொருள் :** மூவகையாக மேற்சொல்லப்பட்ட பெயருள், அவனென்பது முதலாக யாவரென்பதீறுகச் சொல்லப்

(எ) பொருளாற்றல் என்றது, நஞ்சுண்டல் சாதற்குக் காரணமென்னும் பொருளால் ஏனைப்பால்களும் கொள்ளப்படுவனவன்றி நஞ்சுண்டான் என்னும் சொல்லாற் பெறப்படும் ஆண்மையும் ஒருமையும் பற்றிக் கொள்ளப்படாதென்பது கருத்து.

பட்ட பதினைந்தும் பால்விளங்க நிற்கும்

உயர்திணைப்பெயர் எனறவாறு.

யானென்பது, ஒருவன் ஒருத்தி யென்னும் பகுதி யுணர்த்தா தாயினும், அத்திணை யொருமை யுணர்த்தலிற் பாலறிவந்த பெயராம். அல்லதூஉம், பாலறி வந்தவெனப் பன்மைபற்றிக் கூறினரெனினு மமையும். (அ)

கசுங. ஆண்மை யடுத்த மகனென் கிளவியும்
பெண்மை யடுத்த மகளென் கிளவியும்
பெண்மை யடுத்த விகர விறுதியு
நம்மூர்ந்து வரூஉ மிகரவை காரமு
முறைமை சுட்டா மகனு மகளு
மாந்தர் மக்க ளென்னும் பெயரு
மாடூஉ மகடூஉ வாயிரு பெயருஞ்
சுட்டுமுத லாகிய வன்னு மானு
மவைமுத லாகிய பெண்டென்

கிளவியு

மொப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
யப்பதி னைந்து மவற்றோ ரன்ன.

**இதன் பொருள்:** இப்பெயர் பதினைந்தும் மேற்கூறப் பட்டனபோலப் பாலறிவந்த உயர்திணைப்பெயராம் என்றவாறு.

---

(அ) யான் என்பது ஆண்பால் பெண்பால் உணர்த்தாதாயினும் ஒருமைப்பா லுணர்த்தலின் அதுவும் பாலறிவந்ததேயாம். அன்றி இது முப்பாலுளொன்றை உணர்த்தாதாயினும் ஏனையவெல்லாம் முப் பாலுள் ஒன்றை உணர்த்தலின் அப்பன்மைபற்றி பாலறிவந்த என்று கூறினரெனினு மமையு மென்றபடி.

(ஆ) நம்மூர்ந்து வரூஉ மிகர வைகார மென்றதனால் நம் என்னும் அடியையே நம்பி நங்கை என்னும் இரண்டுங் கொள்ளுமென்பதும், அவை நமக்கு இன்னரென்னும் பொருள்பட வரூஉமென்பதும் பெறப்படும். அவை அவ்வடியவாய் அப்பொரு ளுணர்த்தாவாயின் நம்மூர்ந்து வரூஉ மிகரமும் நம்மூர்ந்து வரூஉ மைகாரமும் எனத் தனித்தனி கூறுவாரென்க.

(தனித்தனி கூறுவாரென்றது முறையே ஆடூஉக்களுள் சிறந்தவன் என்றும் மகடூஉக்களுள் சிறந்தவள் என்



ஆண்மையடுத்த மகனென் கிளவி ஆண்மக னென்பது

ஒற்றுமை நயத்தான் ஆண்மைபுணர்த்துஞ் சொல்லை ஆண்மையென்றார். இது பெண்மையடுத்த வென்புழியு மொக்கும். பெண்மையடுத்த மகளென் கிளவியும் பெண்மையடுத்த இகா விறுதியுமாவன பெண்மகள், பெண்டாட்டி என்பன. நம்மூர்ந்து வரூஉமிகரமும் ஐகாரமுமாவன நம்பி, நங்கை என்பன. நமக் கின்னுரென்னும் பொருள்பட வருதலின் நம்மூர்ந்துவரூஉ மென்றார். அவை நம்மென்பது முதனிலையாக அப்பொருளுணர்த்தாவாயின், நம்மூர்ந்து வரூஉ மிகரமும் நம்மூர்ந்து வரூஉ மைகாரமுமெனப் பிரித்துக் கூறல் வேண்டுமென்பது. இவை யுயர்சொல். முறைமை சுட்டா மகனு மகளுமாவன முறைப் பெயரன்றி மகன் மகளென ஆடூ மகடூ வென்னுந் துணையாய் வருவன. மாந்தர் மக்களென்பன பன்மைப் பெயர். ஆடூ மகடூ வென்பன மேற்சொல்லப்பட்டன. சுட்டு முதலாகிய அன்னும்

ஆணுமாவன அவ்வாளன், இவ்வாளன், உவ்வாளன்; அம்மாட்
டான், இம்மாட்டான், உம்மாட்டான் என்பன. இவற்றுள்
ஆணீறு இக்காலத்துப் பயின்று வாரா. அவை முதலாகிய பெண்
டென் கிளவி இக்காலத்து விழுந்தனபோலும். பெண்டன் கிளவி
யென்று பாடமோதி, அவையாவன அவ்வாட்டி, இவ்வாட்டி,
உவ்வாட்டி என்பாருமுளர். ஒப்பொடு வரூஉங் கிளவியாவன
பொன்னன்னன், பொன்னன்னள் என்னுந் தொடக்கத்தன.
இவை மேலனபோலப் பயின்று வாராமையின், அவற்றோ
டொருங்கு வையாது வேறு கூறினர். (சு)

---

• றும் முறையே பொருடரும் நம்பி நங்கை என்னும் பெயர்களைக்
குறித்து நின்றது போலும்.) இவை என்றது நம்மூர்ந்து வரூஉ மிகர

ஐகாரங்களை, என் தம்பி என்பதை நம்பி என்றும் என் தங்கை என்
பதை நங்கை என்றும் சொல்லுதலின் உயர்சொல் என்றார். நம்பி
என்பதில் நம் என்பதே உயர்சொல். நச்சினார்க்கினியரும் இவற்றை
உயர்சொல்என்பர். பெண்டென்கிளவியெனின் பெண்டென்றசொல்லை
உணர்த்தும். பெண்டன் கிளவியெனின் பெண் என்னும் பொருளை
யுணர்த்துங் கிளவி என விரியும். அவ்வாட்டி யென்னும் உதாரணம்
பெண்பாலைக் குறித்து நின்றது. "பெண்டென் கிளவிக்கு அன்னும்
வரையார்" என்னும் விதிப்படி பெண்டு அன்சாரியை பெற்றது. தெய்
வச்சிலையார் காட்டும் உதாரணங்களை நோக்கும்போது அவரும் இப்
பாடமே கொண்டிருக்க வேண்டுமென்பது பெறப்படும்.



கசுசு. எல்லாரு மென்னும் பெயர்நிலைக் கிளவியு

மெல்லீரு மென்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை யடுத்த மகனென் கிளவியு
மன்ன வியல வென்மனர் புலவர்.

**இதன் பொருள்:** எல்லாரு மெனவும், எல்லீரு மெனவும், பெண் மகனெனவும் வருமூன்றும் மேற்கூறப்பட்டனபோலப் பாலறிவந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

புறத்துப் போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண் மகளை மாரோக்கத்தார் இக்காலத்தும் பெண்மகனென்று வழங்குப.

எல்லாரும் எல்லீரும் என்புழிப் படர்க்கைப் 'பன்மை புணர்த்தும் ஆரும் முன்னிலைப் பன்மை புணர்த்தும் ஈரும் உம்மை யடுத்து வருதலானும், பெண்மகனெனப் பால் திரித லானும், இவற்றை வேறு கூறினர். (கo)

கசுரு. நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெய ருடைப்பெயர் பண்புகொள் [பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே.
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே

கூடிவரு வழக்கி னுடியற் பெயரே
யின்றிவ ரென்னு மெண்ணியற் பெயரோ
டன்றி யனைத்து மவற்றியல் பினவே.

**இதன் பொருள் :** நிலப்பெயர் முதலாகச் சொல்லப்பட்டனவும் மேலனபோலப் பாலறிவந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

*நிலப்பெயர்*—அருவாளன், சோழியன் என்பன. குடிப் பெயர்—மலையமான், சேரமான் என்பன. குழுவின் பெயர்—



 அவையத்தார், அத்தி கோசத்தார் என்பன. வினைப்பெயர்— வருவார், செல்வார் என்பன. தச்சன், கொல்லன் என்பனவு மவை. உடைப்பெயர்—அம்பர்கிழான், பேரூர்கிழான் என்பன. வெற்பன், சேர்ப்பன் என்பனவு மவை. பண்புகொள் பெயர்— கரியான், செய்யான் என்பன. பல்லோர்க்குறித்த முறைநிலைப் பெயர்—தந்தையர், தாயர் என்பன. பல்லோர்க் குறித்த சினை நிலைப்பெயர்—பெருங்காலர், பெருந்தோளர் என்பன. பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயர்—பார்ப்பார், அரசர்,

வணிகர், வேளாளர், ஆயர், வேட்டுவர் என்பன. பல்லோர்க்குறித்த வென்று விசேடித்தலான், இம் மூவகைப் பெயருள் ஒருமைப் பெயர் இரண்டு திணைக்கு முரியவாம். கூடிவரு வழக்கினுடியற் பெயர்—பட்டிபுத்திரர், கங்கைமாத்திரர் என்பன. இவை ஆடல்குறித்திளையார் பகுதிபடக் கூடிய வழி யல்லது வழங்கப் படாமையிற் குழுவின் பெயரின் வேறாயின. அக் குழுவின் பெயர் ஒரு துறைக்க ணுரிமைபூண்ட பல்லோர் மேல் எக்கா லத்தும் நிகழ்வன. இன்றிவரென்னு மெண்ணியற் பெயராவன ஒருவர், இருவர், முப்பத்துமூவர் என்பன. இன்றிவரென்பது இத்துணைய ரென்னும் பொருட்டுப் போலும். எண்ணாகிய வியல்புபற்றிப் பொருளுணர்த்துதலான் 'எண்ணியற் பெயர்' என்றார்.

ஒரு நிமித்தம் பற்றிச் சேறலிற் பல்பெயர் ஒரு பெயராக அடக்கப்பட்டமையான், நிலப்பெயர்

முதலாயினவற்றை வேறு கூறினர். அஃதேல், ஒப்பொடு வருங்கிளவியும் அன்னதாகலின் இவற்றொடு வைக்கற்பாற்றெனின் :—அற்றேனும், வழக்குப் பயிற்சி யின்மையான் அவற்றொடு வைத்தாரென்க. (கக)

---

(கக) அத்தி கோசத்தார் – யானை மேலேற்று மளவான நிதிக் குவையை யுடையோர். (குழூஉவால் வரு பெயர்.) அம்பர் –ஓரூர்.

தந்தை, பெருங்காலன், பார்ப்பான் என்பன முதலிய ஒருமைப் பெயர்கள் இருதிணைக்கும் பொது. ஒரு நிமித்த மென்றது :- நிலம் என்னும் ஒரே காரணம் பற்றி வருதலை. அக்காரணம்பற்றி வரும் பல பெயர் நிலப்பெயரென ஒரு பெயராக அடக்கப்பட்ட தென்க. இது குடி முதலியவற்றிற்கு மொக்கும்.



கசுசு. அன்ன பிறவு முயர்திணை மருங்கிற்
பன்மையு மொருமையும் பாலறி

வந்த

வென்ன பெயரு மக்திணை யவ்வே.

இதன் பொருள்: மேற்சொல்லப்பட்ட பெயர்போல்வன பிறவும், உயர்திணைக்கட் பன்மையும் ஒருமையுமாகிய பாலறி வந்த எல்லாப்பெயரும், உயர்திணைப் பெயராம் என்றவாறு.

பாலறிவந்த வென்னாது, ஒருமைப்பாலுணர்த்துவனவும் அடங்குதற்குப் 'பன்மையு மொருமையும் பால்றிவந்த' வென்றார்.

அன்னபிறவுமாவன—ஏனாதி, காவிதி, எட்டி, வாயிலான், பூயிலான், வண்ணத்தான், சுண்ணத்தான், பிறன், பிறள், பிறர், மற்றையான், மற்றையாள், மற்றையார் என்னுந் தொடக் கத்தன.

(கஉ) கசஎ. அதுவிது வுதுவென வரூஉம் பெயரு

மவைமுத லாகிய வாய்தப் பெயரு
மவை இவை யுவையென வரூஉம்

பெயரு . மவைமுத லாகிய வகரப்
பெயரும்

யா துயா யாவை யென்னும் பெயரு
மாவயின் மூன்றே டப்பதி னைந்தும்
பாலறி வந்த வஃறிணைப் பெயரே.

நிறுத்த முறையானே உயர்திணைப்பெய
ருணர்த்தி, இனி யஃறிணைப்பெய
ருணர்த்துகின்றார்

**இதன் பொருள்:** அது, இது, உதுவென வரூஉம் பெய
ரும், அப்பெயர்க்கு முதலாகிய சுட்டே முதலாக ஆய்தத்தோடு
கூடி அஃது, இஃது, உஃது என வரூஉம் பெயரும், அவை,
இவை, உவையென வரூஉம் பெயரும்,
அச்சுட்டே முதலாக

---

(கஉ) முப்பால் எனின் ஆண், பெண், பலர் என்னும் முப்
பாலையு முணர்த்துமேயன்றித் தன்மை யொருமையை யுணர்த்தாது.
அது பற்றிப் பன்மையு மொருமையு மென்றார்.

அவ், இவ், உவ் என வரூஉம் வகரவீற்றுப்

பெயரும், யாது

யா, யாவை என்னும் வினுப்பெயருமென இப்பதினைந்து பெயரும், பால்விளங்க வரூஉம் அஃறிணைப் பெயராம் என்றவாறு.

சுட்டு முதலாகிய ஆய்தப் பெயரும் அவை முதலாகிய வகரவீற்றுப் பெயரும் அவைய்யல்லதின்மையின், அவ்வாறு கூறினார். (கரு)

கசுஅ. பல்ல பலசில.வென்னும் பெயரு
முள்ள வில்ல வென்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரு
மினைத்தெனக் கிளக்கு மெண்ணுக்குறிப்
மொப்பி ஞகிய பெயர்நிலை யுளப்பட
[பெயரு

வப்பா லொன்பது மவற்றோ
ரன்ன.

இதன் பொருள்: பல்லவென்பது முதலாகக் கூறப்பட்ட ஒன்பது பெயரும் மேற்கூறப்பட்ட அஃறிணைப் பெயர்போலப்

பாலுணர நிற்கும் என்றவாறு.

---

(கக) இரண்டாம் அடியில், அவை—அது, இது, உது என்பன வற்றையும் நான்காம் அடியில் அவை—அவை, இவை, உவை என் பனவற்றையும் சுட்டி வந்தன.

அவை முதலாகிய ஆய்தப்பெயர்:— அது, இது, உது என்னும் அவைக்கு முதலாகவுள்ள சுட்டெழுத்துத் தமக்கு முதலாகவுள்ள ஆய்தத்தோடு கூடிய அஃது, இஃது, உஃது என்னும் பெயர்.

அவை முதலாகிய வகரப் பெயர்:— அவை, இவை, உவை என்னும் அவைக்கு முதலாகிய சுட்டெழுத்துத் தமக்கு முதலாகவுள்ள அவ், இவ், உவ் என்னும் பெயர். அவை முதலாகிய ஆய்தப் பெயர் அது, இது, உதுவென வரூஉம் பெயரின் வேறன்று. அங்ஙனமே அவை முதலாகிய வகரப் பெயரும் அவை இவை உவையென வரூஉம் பெயரின் வேறன்று. சிறிதே உருவ வேற்றுமையன்றிப் பொருள் வேற்றுமையின்று என்றபடி. இங்ஙனமாதலின் " அவையல்ல தின்மையின் " எனப்பட்டது. அவையல்லதின்மையின் என்பதற்கு அது இது உது என வரூஉம் பெயரும், அவை இவை உவை என வரூஉம் பெயருமாகிய அவையல்லது வேறுகாமையின் என்பது பொருள்.

பல்ல, பல, சில, உள்ள, இல்ல வென்னும் ஐந்து பெய ரும் தம்மை யுணர்த்திநின்றன. அல்லன பொருளுணர்த்தி நின்றன.

வினைப்பெயர்க்கிளவியாவன வருவது, செல்வது என்பன; பண்புகொள்பெயராவன கரியது, செய்யது என்பன ; இனைத் தெனக்கிளக்கு மெண்ணுக்குறிப் பெயர் ஒன்று, பத்து, நூறு என எண்பற்றி எண்ணப்படும் பொருண்மேனின்றன. ஒப்பி னாகிய பெயர்நிலையாவன பொன்னன்னது, பொன்னன்னவை என்பன.

முன்னையவைபோலப் பல்ல முதலாயின வழக்கின்கட் பயின்று வாராமையின், வேறு கூறினர். பல சில வென்பன பயின்றவாயினும், பல்ல இல்ல

உள்ளவென்பனவற்ரோடு ஒப்
புமையுடையவாகலின், இவற்ரோடு கூறினர்.
(கச)

கசுகூ. கள்ளொடு சிவணு
மவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி
சொற்கே.

**இதன் பொருள் :** கள்ளென்னுமீற்ரோடு பொருந்தும் அஃறிணையியற்பெயர் கள்ளீற்ரோடு பொருந்துதற்கட் பலவறிசொல்லாம் என்றவாறு.

அஃறிணை யியற்பெயராவன ஆ, நாய், குதிரை, கழுதை, தெங்கு, பலா, மலை, கடல் என்னுந் தொடக்கத்துச் சாதிப் பெயர். ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலின் இயற்பெயரென்ருர். இவை கள்ளென்னு மீற்றவாய், ஆக்கள், குதிரைகள் என நின்றவழிப் பன்மை விளக்கலிற் பலவறி சொல்லாயினவாறு கண்டு கொள்க.

(கச) வினைப்பெயர் — வினையாலணையும் பெயர். இங்கே ஒன்று முதலியவற்றையும் பொருளைக் குறிப்பனவாக ஆசிரியர் கூறினமை யின் "அளவும் நிறையும்" என்னும் ஆகுபெயர்ச் சூத்திரத்து எண் ணையும் உடனெண்ணாது ஆசிரியர் விலக்கினரென்று சேனாவரையர் கூறுதல் பொருத்தமானதே.



அஃறிணையியற்பெயரெனவே, பாலறிபெயரேயன்றி அஃறிணைப் பொதுப்பெயருமுளவென்பது பெற்றாம்.

பாற்குரிமை சுட்டாது அஃறிணைக்குரிமை சுட்டிய, 'அவ் வியற்பெயர்' என்றார்.

(கரு)

கள0. அன்ன பிறவு மஃறிணை மருங்கிற்
பன்மையு மொருமையும் பாலறி வந்த
வென்ன பெயரு மத்திணை யவ்வே.

இதன் பொருள்: மேற்கூறப்பட்ட பெயர்போல்வன பிறவும், அஃறிணைக்கட் பன்மையும் ஒருமையுமாகிய பால் விளங்க வந்த எல்லாப்பெயரும் அத்திணைக்குரிய என்றவாறு.

அன்னபிறவு மென்றதனாற் கொள்ளப்படுவன பிறிது, பிற; மற்றையது, மற்றையன; பல்லவை, சில்லவை; உள்ளது, இல்லது; உள்ளன, இல்லன என்னுந் தொடக்கத்தன. (கசு)

களக. தெரிநிலை யுடைய வஃறிணை
யியற்பெய
ரொருமையும் பன்மையும்
வினையொடு வரினே.

**இதன் பொருள் :** கள்ளொடு சிவணாத அஃறிணை யியற் பெயர் ஒருமையும் பன்மையும் விளங்கு நிலையுடைய, அதற் கேற்ற வினையொடு தொடர்ந்தவழி என்றவாறு.

**உதாரணம் :** ஆ வந்தது, ஆ வந்தன; குதிரை வந்தது, குதிரை வந்தன என வினையாற் பால் விளங்கியவாறு கண்டு கொள்க.

---

(கரு) அஃறிணையிற் பாலறி பெயர்களை முற்கூறிப் பின்னர் இயற்பெயர் என்றதனாலே இயற்பெயர்கள் பாலறியப்படாதனவாய் அவ்விருபாற்கும் பொதுவாமென்பது பெற்றாமென்பார் ' அஃறிணை இயற் பெயரெனவே பாலறி பெயரேயன்றி அஃறிணைப் பொதுப் பெயருமுள ' வென்பது பெற்றாமென்றார்.

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயர் என்றதனால் கள்ளொடு சிவணுமுன் பாலைச் சுட்டாது திணையை மாத்திரஞ் சுட்டி நின்றதென் பது பெறப்படுமாகலின், பாற்குரிமை சுட்டாது திணைமைக்குரிமை சுட்டிய அவ்வியற் பெயர் என்றார் என்பது என்று கூறினார் என்க.

இஃது அஃறிணைப்பெயரிலக்கணமாயினும், பொதுப்பெயர் வினையொடுவந்து பால் விளங்குத லொப்புமை நோக்கி ஈண்டு வைத்தாரென்பது. அஃதேல், கள்ளொடு சிவணு மென்பதனை யும் ஈண்டு வைக்கவெனின் :—இயற்பெயர் முன்ன ராரைக்கிளவி போலக் கள்ளென்பது அஃறிணை யியற்பெயர்க்கு ஈறாய் ஒன்று பட்டு நிற்றலின், வினையானன்றிப் பெயர்தாமே பன்மை யுணர்த்தியவாம்; அதனால் அதனைப் பாலறிவந்த பெயருணர்த்து மதிகாரத்து வைத்தார். (கஎ)

கஎஉ. இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமையிற்
திரிபுவேறு படூஉ மெல்லாப் பெயரு
நினையுங் காலைத் தத்த மரபின்
வினையோ டல்லது பாறெரி பிலவே.

இதன் பொருள் : இருதிணைச் சொல்லாதற்கு மொத்த உரிமையவாதலின் உயர்திணைக்கட் சென்றுழி உயர்திணைப் பெய ராயும் அஃறிணைக்கட் சென்றுழி அஃறிணைப்பெயராயும் வேறு படும் விரவுப்பெயரெல்லாம், ஆராயுங்கால், தத்தமரபின் வினையோடியைந்தல்லது, திணை விளங்க நில்லா என்றவாறு.

வினையோடல்லதெனவே, திணைக்கேற்றவாற்றான் ஈறுவேறு படாது ஓரீற்றவாய் நிற்றலின், பெயர்தாமே நின்று தத்தமரபி னென்றதனாற் பொதுவினையொடு வந்து திணை விளக்கா வென் பது பெறப்படும்.

இனி அவை தத்தமரபின் வினையொடு பால்விளக்குமாறு:— சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது; முடவன் வந்தான், முட வன் வந்தது என வந்தவாறு கண்டுகொள்க.

---

(கஎ) 'கள்ளொடு சிவணும்' என்றது பெயரியல் கரு-ம் சூத்

திரத்தை. கள்ளொடு சிவணும் அஃறிணைப் பெயர்கள், தாமே பாலுணர்த்தும். அதனன் அவற்றைப் பெயரதிகாரத்து வைத்தார். கள்ளொடு சிவணுதன், தாமே பாலுணர்த்தா; வினையானே உணரப் படும். அதனன் அதனை ஈண்டு வைத்தார் என்றபடி.

(கஅ) வினையோடல்லதென்ற வாக்கியத்துள், நின்று என்பது நின்றும் என்றும், வந்து என்பது வந்தும் என்றும், இருப்பதே



தத்தமரபின் வினையாவன உயர்திணைக்கும் அஃறிணைக்கு முரிய பதினேரீற்றுப் படர்க்கைவினை.

எல்லாப்பெயருமென்பதனை ஆறு போயினரெல்லாருங் கூறை கோட்பட்டார் என்பது போலக் கொள்க.

இரு திணைக்கும் பொதுவாகிய சொல், வினையாற் பொதுமை நீங்கி ஒருதிணைச்சொல்லாமென்பது கருத்தாகலின், ஈண்டுப் பாலெனப்பட்டது திணையேயாம்.

'சிறப்புடைப்பொருளைத் தானினிது கிளத்தல்' என்பதனால் தத்தமரபின் வினையோடல்லது பாறெரிபிலவென்றோரேனும், சாத்தனொருவன், சாத்தனொன்று எனத் தத்தமரபிற் பெயரொடு வந்து பால்விளக்குதலுங் கொள்க. (கஅ)

களஙு. நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியி
னுயர்திணை யொருமை தோன்றலு
முரித்தே
யன்ன மரபின் வினைவயி னான.

இதன் பொருள்: நிகழ்காலம்பற்றி வரும் பலர்வரை கிளவியான் உயர்திணை யொருமைப்பாறோன்றுதலு முரித்து, அவ் வொருமைப்பாறோன்றுதற்கேற்ற வினையிடத்து

என்றவாறு.

பலர்வரை கிளவியென்றது செய்புமென்னு முற்றுச்சொல்லை.

உதாரணம்: சாத்தன் யாழெழூஉம்,

சாத்தி சாந்தரைக் கும் என்றவழி

யாழெழூஉதலுஞ் சாந்தரைத்தலுமாகிய வினை அஃறிணைக்கேலாது ஒருவற்கும் ஒருத்திக்கு

மேற்றலின், உயர் திணையொருமைப்பால் விளங்கியவாறு கண்டு கொள்க.

---

பொருத்தமாகும். எல்லாப் பெயரு மென்பதனைக் கூறைகோட்பட் டார் என்பது போலக் கொள்க என்றது, எல்லாப்பெயரும் தத்த மரபின் வினையால் பால் விளங்கு மென்றாரேனும் இப் பொதுப் பெயருள் முன்னிலைப் பெயர்க்குத் தத்தம் மரபின் வினையில்லாமையி னாலே அதனாற் பால் விளங்காமையின் அப்பெயரையொழித்து ஏனைப்பெயர்களே வினையாற் பால் விளங்குதலின் அவற்றையே கொள்க என்றபடி,

நிகழூஉநின்ற தொழிலையுணர்த்துஞ்

சொல்லை ஒற்றுமை

நயத்தான் நிகழூஉநின்ற பலர்வரைகிளவி

யென்றார். நிகழூஉ

நின்றவென்றது நிகழாநின்றவென்றவாறு.

நடத்தல் கிடத்தன் முதலாகிய
பிறதொழில்பற்றி வரும் பலர்வரைகிளவியான்
உயர்திணை யொருமை தோன்றுமையின், '
அன்னமரபின் வினைவயினான' வென்றார்.

தோன்றலு முரித்தென்னும் எதிர்மறை
யும்மையான், அன்னமரபின் வினைக்கட்
டோன்றுமையு முரித்தென்றது,
பலர்வரை கிளவியாற் றோன்றுமையு முரித்தென்று கொள்க.

அஃதேல் யாழெழூஉதலுஞ்
சாந்தரைத்தலுமுதலாகிய தொழில்

வேறுபாடுபற்றி வருமுன்னிலை வினையானும்
வியங்கோளானும் இருவகை யெச்சத்தானு
மெல்லாம் உயர்திணைப்பா றேன்றுதலாற்

பலர்வரை கிளவியினென வரைந்துகூறல் பொருந்தாதெனின் :— அற்றன்று : 'முன்னஞ் சேர்த்தி முறையி னுணர்தல்' (சொல்-கககூ.) என முன்னிலைப்பெயராற் பாலுணரு

---

(கக) நிகழூஉ நின்ற பலர்வரை கிளவி யென்றது நிகழுகின்ற தொழிலை உணர்த்தும் பலர்வரை கிளவியை என்றபடி. நிகழ் காலத், தொழிலுக்கும் அச்சொற்குமுள்ள ஒற்றுமை நயத்தால் நிகழூஉ நின்ற கிளவியென்றார். எழுப்புதல் அரைத்தல் முதலிய வினைகள் அஃறிணைக்கேலாமையின் அன்ன மரபின் வினையென்றார். எனவே நடந்தல் கிடத்தல் முதலிய வினைகள் இரண்டற்கும் பொது வாதலின் அவற்றால் உயர்திணைப்பால் தோன்றுதென்றபடி. தோன்றலும் என்றதிலுள்ள உம்மையை அன்னமரபின் வினையொடு கூட்டாது பலர் வரைகிளவியாற் றோன்றுமையு முரித்தென்று கூட்டிக் கொள்க என்றபடி.

முன்னிலைப் பெயர் பாலுணர்த்துதல் பின்னர் 'முன்னஞ் சேர்த்தி முறையி னுணர்தல்' என்ற நகூ-ம் சூத்திரத்தாற் கூறப்படுதலினால் ஈண்டுக் கூறவேண்டுவதில்லை. (நீ வந்தாய்

என்றவழி நீ எனச் சுட்
டிய பொருள் உயர்திணையோ அஃறிணையோ
வென்பது சொல்லு
வான் குறிப்பா னறியப்படுமென மேற்
கூறப்படுதலின் ஈண்டு
எழுப்புதன் முதலிய சிறப்பு வினையான்
அறியப்படுமெனக் கூறல்

வேண்டாமையின் முன்னிலை வினையைக் கூறுதொழிந்தார் என்பது
கருத்து.) சாத்தன் யாழெழுஉக என்புழி வியங்கோள் உயர்திணை



மாறு முன்னுணர்த்தப்படுதலானும், அன்னமரபின் வினைபற்றி வரும் வியங்கோள் ஏவற்பொருண்மைத்தாகலின் ஏயதுணர்ந்து செய்புமுயர்திணை சுட்டியல்லது பெரும்பான்மையும் வாராமை யான் ஆண்டன்னமரபின் வினையாற் பாலுணர்தல் ஒருதலையன் றாகலானும், பெயரெச்சத்திற்கு முடிவாகிய பெயரும் வினையெச்ச முஞ் சிறுபான்மை பொதுவினைகொண்டவழியல்லது தத்தமரபின் வினை கொண்டவழி அவ்வினையே பால் விளக்கலான் ஆண்டெச்சம் பால் விளக்கல் வேண்டாமையானும், அவை யொழித்துப் பலர் வரை கிளவியே விதந்து கூறினர். இருவகை யெச்சத்தானும் வியங்கோளானுஞ் சிறுபான்மை உயர்திணைப்பாறேன்றல் ஒன் றென முடித்தலென்பதனுற் கொள்க.

நிகழ்காலத்துப் பிறசொல்லை நீக்குதற்குப் 'பலர்வரைகிளவி' யென்றார்.

பன்மைவிரவுப்பெயரை நீக்குதற்கு ‘நிகழூஉநின்ற’ வென்றார்.

மேல் விரவுப்பெயர் தத்தமரபின் வினையோடல்லது பாலறிபிலவென்றார்; இனி அவற்றானன்றிப் பொதுவினையானும் பாலறிய நிற்குமென்பது உணர்த்தியவாறு. அஃதேல், சாத்தன் புற்றின்னும், சாத்தி கன்றீனும், எனச் செய்யுமென்னுஞ் சொல்லான் அஃறிணைப்பாலுந் தோன்றுதலின், அது கூறு

---

சுட்டி யல்லது பெரும் பான்மையும் வாராமையின் எழுப்புதல் வினையாற் பாலுணர்த்தல் வேண்டாமையானும் யாழ் எழுப்பிய சாத்தன் வந்தான் என்னும் பெயரெச்சத்துள் வந்தான் என்பதே உயர்திணைப்பாலைக் காட்டுதலின் ஆங்கு எழுப்புதல் பால்காட்ட வேண்டாமையானும், யாழெழுப்பி வந்தான் என்னும் வினையெச்சத்துள் வந்தானென்பதே பால் காட்டுதலின் ஆண்டும் எழுப்புதல் பால் காட்டவேண்டாமையானும் அவை யொழித்துப் பலர்வரை கிளவியே கூறினரென்க.

நிகழ்காலத்துப் பிறசொல்லை நீக்குதற்கென்றது, நிகழ்கால எழுத்துப்பெற்று வருபவைகளை. பன்மை விரவுப்பெயரென்றது கஅஉ-ம் சூத்திரத்திற் கூறும் யானை முதலிய பெயர்களை,



ராயிற் றென்னையெனின்:—எழூஉதலும் அரைத்தலும் அஃறிணைக்கென்னும் இயைபில்லாதவாறுபோலப் புற்றின்றல் உயர்திணைக்கு எவ்வாற்றானு மியைபின்றெனப்படாமையானும், கன்றீனும் என்புழி ஈனுமென்னும் வினையானன்றிக் கன்றென்னுஞ்

சார்பான் அஃறிணைப்பாறேன்றுதலானும், ஒருமை வினையான் ஒருவழி அஃறிணைப்பாறேன்றினும் அது சிறுபான்மையாகலானும், கூறுராயினு ரென்பது. (கக)

களச. இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
யெல்லா நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய வல்ல பிறவு மாஅங்
கன்னவை தோன்றி னவற்றொடுங் கொளலே.

விரவுப்பெயர் பாறெரிய நிற்குமா றுணர்த்தி, இனி அவை தம்மை யுணர்த்துவா னெடுத்துக் கொண்டார்.

**இதன் பொருள்:** இயற்பெயர் முதலாக நீ யென்பதீறாக எடுத்துச் சொல்லப்பட்டனவல்லாத அன்னபிறவும் ஆண்டு வருமாயிற் சொல்லப்பட்டவற்றொடுங் கூட்டுக என்றவாறு.

இயற்பெயராவன சாத்தன் கொற்றன் என வழங்குதற் பயத்தவாய் நிமித்தமின்றிப் பொருளேபற்றி வரும் இடுபெயர். இயற்பெயரெனினும் விரவுப்பெயரெனினு மொக்குமாயின், அவற்றுள் ஒரு சாரனவற்றிற்கு அப்பெயர் கொடுத்த தென்னை யெனின்:—அவற்றது சிறப்புநோக்கி அப்பெயர் கொடுத்தார்; பாணியுந் தாளமும் ஒருபொருளவாயினும் இசை நூலார் தாளத்துள் ஒருசாரனவற்றிற்குப் பாணி யென்னும் பெயர் கொடுத்தாற்போல வென்பது.

சினைப்பெயராவன பெருங்காலன், முடவன் என அச்சினையுடைமையாகிய நிமித்தம்பற்றி முதன்மேல் வரும் பெயர்.

---

என்னுமியையின்மை — சிறிது மியையின்மை. ஒருமை வினையான் ஒருவழி அஃறிணைப்பாலேன்றினுமென்றது, குரைக்கும் கறக்கும் முதலிய வினைகளை. உ-ம்:] சாத்தன் குரைக்கும். சாத்தி கறக்கும்.



சினைமுதற்பெயராவன சித்தலைச்சாத்தன், கொடும்புறமருதி எனச் சினைப்பெயரோடு தொடர்ந்துவரு முதற்பெயர். சாத்தன், மருதியென்னு முதற்பெயர் சினைப்பெயரொடு தொடர்ந்தல்லது பொருளுணர்த்தாமையிற் சினைமுதற் பெயராயின.

முறைப்பெயராவன தந்தைதாயென முறைபற்றி முறையுடைப் பொருண்மேல் வருவன. முறையாவது பிறவியான் ஒருவனோ டொருவற்கு வருமியைபு. அல்லன வைந்துந் தம்மை யுணர்த்தி நின்றவாகலான் தாமென்பது முதலாகிய சொல்லேயாம்.

பிறவுமென்றதனான், மக, குழவி போல்வன கொள்க. இவற்றை உயர்திணைப் பெயரென்றாரால் உரையாசிரியரெனின் :— மரபியலுள்

'மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பு
மவையு மன்ன வப்பா லான' (மரபியல்-கச.)

எனவும்,

'குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை'
(மரபியல்-கக.)

எனவும், அவை அஃறிணைக்காதல் கூறி,

> 'குழவியு மகவு மாயிரண் டல்லவை
> கிழவ வல்ல மக்கட் கண்ணே.' (மரபியல்-௨௧.)

என வுயர்திணைக்கு மோதிவைத்தாராகலின், அவை விரவுப் பெயரேயாம்; அதனான் அது போலியுரை யென்க.

ஒரு நிமித்தத்தான் இரண்டுதிணைப் பொருளு முணர்த்துதலின் விரவுப்பெயர் பொருடோறு நிமித்தவேறுபாடுடைய பலபொரு ளொருசொலன்மை யறிக. (௨௦)

---

(௨௦) நிமித்தம்—காரணம். அல்லன ஐந்தென்றது, தாம் முதலாகிய சொற்களை. அவை சொல்லாகிய தம்மை உணர்த்தி நின்றனவாதலான் அவ்வச் சொல்லே கொள்ளப்படுமென்பது கருத்து. ஒரு நிமித்தமென்றது – இயற்பெயராதன் முதலிய ஒரு காரணத்தானிரண்டு திணைப்பொருளையு முணர்த்துதலை. வெவ்வேறு காரண முடைய பலபொரு ளொருசொல்லின் இது வேறுளனவுணர்க. வாரணம்



௧௭௫. அவற்றுள்
நான்கே யியற்பெயர் நான்கே சினைப்பெயர்

நான்கென மொழிமனர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி யிரண்டா கும்மே
யேனைப் பெயரே தத்த மரபின.

**இதன் பொருள்:** மேற்கூறிய விரவுப் பெயருள் இயற் பெயருஞ் சினைப்பெயருஞ் சினைமுதற்பெயரும் ஓரொன்று நந் நான்காம்; முறைப்பெயர் இரண்டாம்; ஒழிந்தன ஐந்து பெய ருந் தத்தமிலக்கணத்தனவாம் என்றவாறு.

தத்தமிலக்கணத்தன வென்றது பொது விலக்கணத்தன வல்ல சிறப்பிலக்கணத்தனவேயா மென்றவாறு. எனவே, அவை ஓரொன்றாகி நிற்கு மென்றவாறும். ஈண்டுத் தத்தமென்பது, அஃறிணையெனப் பொதுமை சுட்டாது, ஓரொன்றாய் நின்ற பெய ரைச் சுட்டி நின்றது.
தனிப்பெயரைந்தும் விரிப்பெயர் பதி ஞன்குமாகப் பத்தொன்பதென்றவாறும்.

கூறப்பட்ட பெயரது பாகுபாடாகிய ஒரு

பொருணுதலுதல் பற்றி ஒரு சூத்திரமாயிற்று. நான்காய் விரிதலும் இரண்டாய்
விரிதலுந் தாமேயாதலுமாகிய பொருள் வேற்றுமையான் மூன்று
சூத்திரமெனினு மமையும்.
(உக)

---

என்னுஞ் சொல் கோழியும் சங்கும் யானையும் எனப் பல பொருளை
யுணர்த்துமாயினும் ஒவ்வொன்றையும் வெவ்வேறுகாரணத்தானுணர்த்
தும். விரவுப்பெயர் இரண்டுதிணைப் பொருளையும் ஒரேகாரணத்தா
னுணர்த்து மென்றபடி. இரண்டு திணைப்பொருளும் சாத்தன் என்ற
பெயரைப் பெறுதற்குக் காரணம் வெவ்வேறன்று; இயற்பெயராத
லாகிய ஒன்று என்றபடி. மூடவன் என்ற சொல்லின் மூடமே
இரண்டு திணைப்பெயர்கட்கும் காரணமாம்.

(உக) தத்தமிலக்கணத்தவென்றது, ஒவ்வொன்றும் தன்தன் இலக்கணத்தை உடையவாய் நடக்குமன்றி எல்லாம் ஒரு நிகரவாய இலக்கணம் உடையவல்ல என்றபடி. அந்நிகரன என்றது,

ஒன்று போல ஒன்று இலக்கணம் பெறுவதன்று என்றபடி.

ரியல்]                    சொல்லதிகாரம்
உகள

களசு. அவைதாம
பெண்மை யியற்பெய
ராண்மை யியற்பெயர்
பன்மை யியற்பெய ரொருமை
யியற்பெயரென்
றந்நான் கென்ப வியற்பெயர்
நிலையே.

களஎ. பெண்மைச் சினைப்பெய
ராண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெய
ரொருமைச்சினைப்
[பெயரென்
றந்நான் கென்ப் சினைப்பெயர்
நிலையே.

கஎஅ. பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
யாண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
யொருமை சுட்டிய சினைமுதற் பெயரென்
றந்நான் கென்ப சினைமுதற் பெயரே.

கஎகூ. பெண்மை முறைப்பெய ராண்மை முறைப் [பெயரென்
றாயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே.

இயற்பெயர் முதலிய நான்கன் விரியாகிய பதினான்கும் இவையென வுணர்த்தியவாறு.

இவற்றிற்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

இயற்பெயர் முதன்மூன்றும் ஒரொன்று நான்காய் விரித லும், முறைப்பெயர்

இரண்டாதலும், மேலைச் சூத்திரத்தாற் பெறப்பட்டமையான் அந்நான்கும் இரண்டுமாவன இவையென் பது .இச்சூத்திரங்கட்குக் கருத்தாகக் கொள்க. இவ்வாறிடர்ப் படாது தொகைச்சொற்களைப் பயனிலையாகக் கொள்ளவே, இச்சூத்திரங்களான் அவை யின்னவென்றலும் இத்துணையவென் றலும் பெறப்படுமாகலின், மேலைச் சூத்திரம் வேண்டா வெனின் :—அற்றன்று ; இவற்றுண் விரவுப்பெயர் பத்தொன்ப தென்னும் வரையறை பெறப்படாமையானும், வகுத்துக்கூறல் தந்திரவுத்தியாகலானும், அது வேண்டுமென்பது.



(உஉ-உடு)



கஅ௦. பெண்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருத்திக்கு மொன்றிய நிலையே.

மேற்கூறிய பதினன்கு பெயரும் இருதிணையும் பற்றிப் பாலுணர்த்திய வெடுத்துக்கொண்டார். அவை பெண்மைப்பெயர் நான்கும், ஆண்மைப்பெயர் நான்கும், பன்மைப்பெயர் மூன்றும், ஒருமைப்பெயர் மூன்றுமாம்.

**இதன் பொருள் :** பெண்மைபற்றி வரும் நான்குபெயரும், அஃறிணைப்பெண் ணொன்றற்கும் உயர்திணை யொருத்திக்கும் உரிய என்றவாறு.

அந்நான்குமாவன : பெண்மை யியற்பெயரும், பெண்மைச் சினைப்பெயரும், பெண்மைச் சினைமுதற்பெயரும், பெண்மை முறைப்பெயருமேயாம்.

**உதாரணம் :** சாத்தி வந்தது, சாத்தி வந்தாள் எனவும், முடத்தி வந்தது, முடத்தி வந்தாள் எனவும், முடக்கொற்றி வந்தது, முடக்கொற்றி வந்தாள் எனவும், தாய் வந்தது, தாய் வந்தாள் எனவும், அவை முறையானே அஃறிணைப்பெண்மைக்கும், உயர்திணைப் பெண்மைக்கும், உரியவாய் வந்தவாறு கண்டுகொள்க. முடமென்பது சினையது விகாரமாகலிற் சினையாயிற்று.

ஒன்றற்குமெனப் பொதுப்படக் கூறினரேனும், பெண்மை சுட்டிய பெயரென்றமையான் அஃறிணைப்பெண்ணொன்றேயாம். இஃது 'ஆண்மை சுட்டிய வெல்லாப் பெயரும்' (சொல்-கஅக.) என்புழியு மொக்கும்.

ஒன்றிய நிலையுடையவற்றை 'ஒன்றிய நிலை' யென்றார். (உகூ)

---

(உகூ) ஒன்றற்குமெனப் பொதுப்படக் கூறினரேனும் என்றது,—ஒன்றற்கு என அஃறிணை ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவாய சொல்லாற் கூறியதை. அஃது ஈண்டு ஆணையொழித்துப் பெண்ணையே காட்டுதல் பெண்மை சுட்டிய பெயரென்றதனாற் பெறப்படுமென்பது.

கஅக. ஆண்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருவற்கு மொன்றிய நிலையே.

இதன் பொருள்: ஆண்மை பற்றி வரும் நான்குபெயரும், அஃறிணையா ஞென்றற்கும், உயர்திணை யொருவனுக்கும் உரிய என்றவாறு.

அந்நான்குமாவன: ஆண்மை யியற்பெயரும், ஆண்மைச் சினைப்பெயரும், ஆண்மைச் சினைமுதற்பெயரும், ஆண்மை முறைப்பெயருமேயாம்.

உதாரணம்: சாத்தன் வந்தது, சாத்தன் வந்தான் எனவும்; முடவன் வந்தது, முடவன் வந்தான் எனவும்; முடக்கொற்றன் வந்தது, முடக்கொற்றன் வந்தான் எனவும்; தந்தை வந்தது, தந்தை வந்தான் எனவும் அவை முறையானே அஃறிணையா ஞென்றற்கும், உயர்திணையாண்பாற்கும் உரியவாய் வந்தவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன. (உஎ)

கஅஉ. பன்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றே பலவே யொருவ ரென்னு
மென்றிப் பாற்கு மோரன் னவ்வே.

இதன் பொருள்: பன்மை சுட்டி வரு மூன்று பெயரும், அஃறிணையொருமையும் அத்திணைப்பன்மையும் உயர்திணை யொரு

மையுமெனச் சொல்லப்பட்ட மூன்றுபாற்கும் உரிய என்ற வாறு.

அம்மூன்றுமாவன: பன்மையியற்பெயரும், பன்மைச் சினைப்பெயரும், பன்மைச் சினைமுதற்பெயருமாம்.

**உதாரணம்:** யானை வந்தது, யானை வந்தன, யானை வந்தான், யானை வந்தாள் எனவும்; நெடுங்கழுத்தல் வந்தது, நெடுங்கழுத்தல் வந்தன, நெடுங் கழுத்தல் வந்தான், நெடுங்கழுத்தல் வந்தாள் எனவும்; பெருங்கால் யானை வந்தது, பெருங்கால் யானை வந்தன, பெருங்கால் யானை வந்தான், பெருங்கால் யானை வந்தாள் எனவும் அவை முறையானே அஃறிணையொருமைக்கும்,



அத்திணைப் பன்மைக்கும், உயர்திணை யொருமைக்கும் உரியவாய் வந்தவாறு கண்டுகொள்க.

பன்மைக்கேயன்றி ஒருமைக்கு முரியவாய் வருவனவற்றைப் பன்மைப்பெயரென்ற தென்னையெனின்:—நன்று சொன்ணய்; பெண்மைப்பெயர் முதலாயினவும் பிறபெயரா லுணர்த்தப் படாத பெண்மை முதலாயினவற்றையு

முணர்த்தலானன்றே
அப்பெயரவாயின. என்னை? பெண்மை
முதலாயின பிறபெயரா
லுணர்த்தப்படுமாயின் அப்பெண்மை
முதலாயினவற்றான் அப்
பெயர் வரைந்து சுட்டலாகாமையின்.
பன்மைப்பெயர், ஒருமை
யுணர்த்துமாயினும்,
பிறவாற்றானுணர்த்தப்படாத பன்மையை
ஒருகாலுணர்த்தலின் அப்பன்மையான்
அவை வரைந்து சுட்
டப்படுதலின் அப்பெயரவாயின. அற்றேனும்,
பன்மை சுட்டிய

---

(உஅ) இங்குப் பெண்மைப்பெய
ரென்றது – உயர்திணைப் பெண்
மைப் பெயரையே யன்றி அஃறிணைப்
பெண்மைப் பெயரையும்
உணர்த்தி நிற்கும் பெயரை. இப் பெண்மைப்
பெயர்கள் உயர்
திணைப் பெண்மையே யன்றி, அஃறிணைப்
பெண்மையையும் உணர்த்
தல்போல ஏனைப் பெண்பாற் பெயர்கள்
அஃறிணைப் பெண்மையை

யும் உணர்த்தமாட்டா. அதுபற்றியே பிறபெயராலுணர்த்தப்படாத

பெண்மை என்ருர். பிறபெயரால் உணர்த்தப்படுமாயின் பெண்மை

முதலாயினவற்ருல் அவ் விரவுப்பெயர்கள் வரைந்து சுட்டப்பட

மாட்டா என்க. அவள், நங்கை முதலிய பெண்பாற் பெயர்கள்

அஃறிணைப் பெண்மையை யுணர்த்தாமை காண்க. எனவே இவை

அஃறிணைப் பெண்மை முதலியவற்றையு முணர்த்தலாற் தன்னுடையை

பின்மை நீக்கிய விசேடண மடுத்து நின்றனவாம். ஆண்மைப் பெயர்

முதலியனவு மன்ன. பெண்மைப் பெயர் என்பதில் பெண்மை என்ற

விசேடணம் ஆண்மைப்பெயரினீக்குதற்கு வந்த பிறிதினியைபு நீக்கிய

விசேடணமன்று; ஏனைப் பெயர்கள் இருதிணைப் பெண்மையையும்

உணர்த்துதற்குரியவல்ல; இவையே இருதிணைப் பெண்மையையு

முணர்த்துதற்குரியவென வரைந்து சுட்டிநின்ற தென்றபடி. வரை

தல் – எல்லைப்படுத்தல் = உரிமையாக்கல்.

பிறவாற்ருலுணர்த்தப்படாத பன்மை என்றது, பிறசொற்களின்
வழியால் உணர்த்தப்படாத பன்மை என்றபடி. அப்பன்மையை இவை ஒருதர முணர்த்துதலினல் அப்பன்மையால் இவை வரைந்து சுட்டப்படும். எனவே பன்மைப் பெயரென்பது தன்னேடியை பின்மை நீக்கிய விசேடணமடுத்து நின்றதென்பது பெறப்படும்.



**உஉக** பெயரென்றமையாற் பன்மையே புணர்த்தல் வேண்டுமெனின்:—, அற்றன்று:
இயைபின்மை நீக்கலும் பிறிதினியைபு நீக்கலுமென விசேடித்தல் இருவகைத்து. வெண்குடைப் பெருவிறல் என்ற வழிச் செங்குடை முதலியவற்ருேடு இயைபு நீக்காது வெண் குடையோடு இயைபின்மை மாத்திரை நீக்கி வெண்குடையா னென்பது பட நிற்றலின் அஃதியைபின்மை நீக்கலாம். கருங் குவளை என்றவழிச் செம்மை முதலாயினவற்ருேடு இயைபு நீக்கலின், இது பிறிதினியைபு நீக்கலாம். பன்மை சுட்டிய
பெயரென்பது, வெண்குடைப் பெருவிறல் என்பதுபோல, ஒருமை

யியைபு நீக்காது பன்மை சுட்டுதலோடு இயைபின்மை மாத் திரை நீக்கிப் பன்மை சுட்டுமென்பது பட நின்றது. அதனன் விசேடிக்குங்காற் பிறிதினியைபு நீக்கல் ஒருதலையன்றென்க. அஃறிணையொருமையும் அத்திணைப்பன்மையும் உயர்திணை யொருமையுமாகிய பலவற்றையும் உணர்த்தலாற் பன்மைசுட்டிய பெயரென்பாரு முளர். அஃதுரையாசிரியர் கருத்தன்மை அவ் வுரையான் விளங்கும்.

---

கருங்குவளை முதலியன பிறிதினியைபு நீக்குவன. வெண்குடைப் பெருவிறல் முதலியன தன்னேடியையின்மை நீக்கிய விசேடணம். வெண்குடைப் பெருவிறல் என்புழி வெண்குடையொடுதான் அவ னியைபுடையனென்பதை அவ்விசேடண முணர்த்தித் தன்னேடியை யின்மை நீக்கிய விசேடணமாய் நின்றதன்றி ஏனைக்குடையினியைபை நீக்க வந்ததன்று. ஏனைக்குடைகள் அவனுக்கு உளவாயினும் உளவாக லாம்; இலவாயினும் இலவாகலாம். அது போலவே வ பன்மைப் பெயர் என்புழியும் பன்மையொடுதான் அப்பெயர் இயைபுடைய தென்பதை அவ்விசேடண முணர்த்தித் தன்னேடியையின்மை நீக்கிய

விசேடணமாய் நின்றதன்றி, ஒருமை முதலியவற்றி னியைபை நீக்க வந்ததன்று. ஆதலின் அஃது ஒருமையோடுமியையலாம். ஆயினும் பன்மையொடுதான் அஃது இயைபுடையதென்றபடி.

பெண்மைப் பெயர், ஆண்மைப் பெயர், ஒருமைப் பெயர் என் பன; பெண்மையை உணர்த்துதற்குரிய பெயர், ஆண் மை யை உணர்த்துதற்குரிய பெயர், ஒருமையை உணர்த்துதற்குரிய பெ ய ர் என்ற பொருளில் வருமாறு கூறி, பன்மைப்பெயர் என்பதை மாத்தி ரம் பல பாலையு முணர்த்துதற்குரிய பெயர் என்ற பொருளில் ஆசிரி யர் கூறினர் என்றல் பொருந்தாமையின் பல பாலையுமுணர்த்துதலாற் பன்மைப் பெயர் என்று கூறிச் சேனாவரையரை மறுப்பார் கருத்



என்றிப்பாற்கு மென்னுமும்மை, இம்மூன்று பாற்கு மென்பது பட நிற்றலின், முற்றும்மை. (உஅ)

கஅந. ஒருமை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றற்கு மொருவர்க்கு மொன்றிய நிலையே.

இதன் பொருள்: ஒருமை சுட்டி வரு மூன்று பெயரும்,

அஃறிணை யொருமைக்கும், உயர்திணை யொருமைக்கும் உரிய என்றவாறு.

அம்மூன்றுமாவன: ஒருமையியற்பெயரும், ஒருமைச்சினைப் பெயரும், ஒருமைச்சினைமுதற்பெயருமாம்.

**உதாரணம்:** கோதை வந்தது, கோதை வந்தான், கோதை வந்தாள் எனவும்; செவியிலி வந்தது, செவியிலி வந்தான், செவியிலி வந்தாள் எனவும்; கொடும்புறமருதி வந்தது, கொடும்புற மருதி வந்தான், கொடும்புறமருதி வந்தாள் எனவும் அவை முறையானே அஃறிணையொருமைக்கும், உயர்திணையொருமைக்கும் வந்தவாறு கண்டுகொள்க.

பெண்மைப் பெயரும் ஆண்மைப் பெயரும் ஒருமை யுணர்த்துமாயினும், இவை பெண்மை ஆண்மையென்னும் வேறுபா டுணர்த்தாது ஒருமையுணர்த்தலான், இவற்றை ஒருமைப்பெய ரென்றார். (உகூ)

---

துப் பொருந்தாதென்க. நன்னூலிற் கூறும் பன்மைப்பெயர் வேறு. அஃது உயர்திணைப் பன்மைக்கும் அஃறிணைப் பன்மைக்கும் பொது வாய் வரும். என்றிப்பாற்கும் என்னும் உம்மை எச்சமன்று, முற்றும்மை என்றபடி. இப்பால்—ஒன்று, பல, ஒருவர்.

(உக) உசு—ம் உஎ—ம் சூத்திரங்களிற் கூறிய ஆண்மைப் பெயரும், பெண்மைப் பெயரும் முறையே உயர்திணை ஆணொருமையையும் அஃறிணை ஆணொருமையையும் உயர்திணைப் பெண்மையொருமையும் அஃறிணைப் பெண்மையொருமையும் உணர்த்துகின்றனவன்றோ? இவற்றை ஒருமைப்பெயரென்ற தென்னையெனின், இருதிணையினும் ஆண்மை, பெண்மைப் பகுப்பை உணர்த்தலின் அவற்றை ஆண்மைப்பெயர் பெண்மைப்பெயரென்றும், இவை இருதிணையி



கஅச. தாமென் கிளவி பன்மைக் குரித்தே.

*தத்தமரபினவெனப்பட்ட பெயர் பாற்குரியவாய் வருமாறுணர்த்துகின்றார்.*

**இதன் பொருள் :** *தாமென்னும் பெயர் இருதிணைக்கண்ணும் பன்மைப்பாற்குரித்து என்றவாறு.*

**உதாரணம் :** *தாம் வந்தார், தாம் வந்தன என வரும்.* (ருo)

கஅரு. தானென் கிளவி யொருமைக் குரித்தே.

**இதன் பொருள் :** *தானென்னும் பெயர் இருதிணைக்கண்ணும் ஒருமைப்பாற்குரித்து என்றவாறு.*

**உதாரணம் :** *தான் வந்தான், தான் வந்தாள், தான் வந்தது என் வரும்.* (ருக)

கஅசு. எல்லா மென்னும் பெயர்நிலைக் கிளவி
பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே.

**இதன் பொருள் :** எல்லாமென்னும் பெயர் இரண்டு திணைக் கண்ணும் பன்மை குறித்து வரும் என்றவாறு.

வழியென்றது இடம். பொருள் சொன்னிகழ்தற்கிடமாக லிற் பல்பொருளைப் 'பல்வழி' என்றார்.

**உதாரணம் :** எல்லாம் வந்தேம், எல்லாம் வந்தீர், எல்லாம் வந்தார், எல்லாம் வந்தன என வரும்.

---

னும் ஆண்மை பெண்மையென்னும் வேறுபாட்டை உணர்த்தாது, ஒருமை என்ற பகுப்பை மாத்திரம் உணர்த்தலின் ஒருமைப் பெயர் என்றுங் கூறினர் என்பது கருத்து. கோதை வந்தது என்பது ஆண் பெண் என்ற பகுப்பின்றி அஃறிணை ஒருமை என்ற பகுப்பை மாத்திரமும், கோதை வந்தான் கோதை வந்தாள் என்பன ஆண் பெண் என்ற பகுப்பை உணர்த்தாது இரண்டும் உயர்திணையொருமை என்ற பகுப்பை மாத்திரமும் உணர்த்தி நின்றன என்றபடி.

(௯௨) பின் விலக்கலின் எல்லாம் வந்தார், எல்லாம் வந்திலர் என்பன இங்கே காட்டவேண்டியதில்லை. அடுத்த சூத்திரத்தில் வருமென்றதனாற் காட்டினுமமையும்.

எல்லாமென்னும் பெயர் இரண்டு திணைக்கண்ணும் பன்மை குறித்து வருமென்றது பல்வழியென்றது, மேனியெல்லாம் பசலை யாயிற்று என ஒரு பொருளின் பலவிடங் குறித்து நிற்றலு முடைத்தென்பதூஉம் கோடற்குப் போலும். அஃது எஞ்சாப் பொருட்டாய் வருவதோ ருரிச்சொலென்பாருமுளர். (௩௨)

## க௲எ. தன்னு ளுறுத்த பன்மைக் கல்ல துயர்திணை மருங்கி னாக்க மில்லை.

**இதன் பொருள் :** எல்லாமென்னுஞ்சொல், உயர்திணைக்காங் கால், தன்மைப்பன்மைக்கல்லது முன்னிலைப்பன்மைக்கும் படர்க் கைப் பன்மைக்கும் ஆகாது என்றவாறு.

'நெறிதா ழிருங்கூந்த னின்பெண்டி ரெல்லாம்' எனப் படர்க்கைக்கண்ணும் வந்ததாலெனின் :—எழுத்ததிகாரத்துள் 'உயர்திணை யாயி னம்மிடை வருமே' (எழு-௧௯௦.) எனத் தன்மைக்கேற்ற சாரியை கூறினமையானும், ஈண்டு நியமித்த லானும், அஃதிடவழுவமைதியா மென்பது.

தன்மைச்சொல் அஃறிணைக்கின்மையின், எல்லா மென்பது பொதுமையிற் பிரிந்து தன்னுளுறுத்த பன்மைக்கண் வந்துழி உயர்திணையீற்றுப்பெய ரெனப்படினும்; இருதிணைப்பன்மையு முணர்த்துதற் கேற்றுப் பொதுப்பிரியாது நின்றவழி விரவுப் பெயராதற் கிழுக்கின்மை யறிக.

எல்லாப் பார்ப்பாரும் எல்லாச் சான்றூரும் எனப் படர்க்கைக் கண் வருதலும் கோடற்குத் தன்னுளுறுத்த பன்மைக் காங்கால் உயர்திணை மருங்கி னல்லதாகாதென மொழிமாற்றி யுரைத்தாரால் உரையாசிரியரெனின்:—படர்க்கைக்கண் வருதல்

மேனி எல்லாம் பசலை என்புழி எல்லாம் என்பது மேனியின் பலவிடத்தைக் குறித்து நின்றது. அம்மேனியெல்லாம் என்பதினுள்ள எல்லாம் என்பதை உரிச்சொல்லாகக் கொள்வாருமுளர்.

(கக) பொதுமையிற் பிரிந்து என்றது இருதிணைக்கும் பொது வாய் நிற்குந் தன்மையிற் பிரிந்து என்றபடி.



இடவழுவமைதியென்றவழிப்படு

மிழுக்கின்மையானும், 'தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி' (சொல்-சஉ.) எனவும், 'யான் யாம் நாமென வரூஉம் பெயர்' (சொல்-கசுஉ.) எனவும் பிறண்டுமோதியவற்றால், தன்மைச்சொல் அஃறிணைக்கின்மை பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டாமையானும், எழுத் ததிகாரத்துள் 'உயர்திணை யாயி னம்மிடை வருமே' எனத் தன்மைக்குரிய சாரியையே கூறலானும், அது

போலியுரை யென்க.

ஈண்டு ஆக்கம் பெருக்கம்.
பெருக்கமில்லையெனவே, சிறு பான்மை ஏனையிடத்திற்கு முரித்தாமென்பாருமுளர். (௩௩)

௧௮௮. நீயிர் நீயென வரூஉங் கிளவி
பாறெரி பிலவே யுடன்மொழிப் பொருள.

**இதன் பொருள் :** நீயிர் நீயென்னு மிரண்டு பெயர்ச் சொல்லும் திணைப்பகுதி தெரிய நில்லா; இருதிணையு முடன் றோன்றும் பொருள என்றவாறு.

உடன்மொழிப் பொருள வென்றது, இருதிணைப் பொரு ளூம் ஒருங்குவரத் தோன்று மென்றவாறு. பிரித்தொருதிணை விளக்கா வென்றவாறு.

**உதாரணம் :** நீயிர் வந்தீர், நீ வந்தாய்

என இருதிணைக் கும் பொதுவாய் நின்றவாறு கண்டு கொள்க.

இருதிணைக்குமுரிய பெயரெல்லாந் தத்தமரபின் வினை யொடு வந்து திணை விளக்குமன்றே; இவற்றிற்கு அன்ன வினையின்மையின் ஒருவாற்றானுந் திணை விளக்காமையின், 'பாறெரி பிலவே யுடன்மொழிப் பொருள' வென்றார். (௩௪)

---

(௩௩) பொதுமையிற் பிரிந்து உயர்திணைக்கண் வந்துழி, தன்மை யிடத்திற்கே உரியதாகும்; ஏனையிடத்திற்கு வராது என்பது இச்சூத் திரக் கருத்து. எனவே பொதுமையிற் பிரியாது நின்றவழி இரு திணைக்கும் பொதுவாகும் என்பது கருத்து.

கஅசு. அவற்றுள்
நீயென் கிளவி யொருமைக் குரித்தே.

இதன் போருள் : மேற்சொல்லப்பட்ட இரண்டு பெயருள் நீயென்னும் பெயர் ஒருமைக்குரித்து என்றவாறு.

ஒருமையாவது, ஒருவன், ஒருத்தி, ஒன்றென்பனவற்றிற் கெல்லாம் பொதுவாகிய ஒருமை.

உதாரணம் : நீ வந்தாய் என வந்தவாறுகண்டுகொள்க. (கரு)

கசுo.

ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே.

இதன் போருள் : நீயிரென்னும் பெயர்

பன்மைக் குரித்து

என்றவாறு.

பன்மையாவது பல்லோர்க்கும் பலவற்றிற்கும்

பொதுவா

கிய பன்மை.

உதாரணம் : நீயிர் வந்தீர் என வந்தவாறு கண்டுகொள்க.

'எல்லாம் நீயிர் நீ' (சொல்-களச.) எனவோதியவாறன்றி, ஒருமை பன்மையென்னும் முறைபற்றி ஈண்டு நீ யென்பதனை முற்கூறினார். அன்றி, முந்துமொழிந்ததன்றலைதடுமாற்றமென்னுந் தந்திரவுத்தி யெனினுமமையும்.

நீயிர் நீயென இருதிணையைம்பாலுள் ஒன்றனை வரைந் துணர்த்தாவாயினும், ஒருமை பன்மையென்னும் பொருள் வேறுபாடுடையவென வரையறைப்படுவழி, வரையறுத்த வாறு. (௩௬)

கசஉக. ஒருவ ரென்னும் பெயர்நிலைக் கிளவி
யிருபாற்கு முரித்தே தெரியுங் காலை.

இதன் பொருள்: மேல் இன்றிவரென்னு மெண்ணியற் பெயரென்றோதப்பட்டவற்றுள், ஒருவரென்னும் பெயர்ச்சொல், உயர்திணை முப்பாலுள் ஒருபால் விளக்காது, ஒருவன் ஒருத்தி யென்னும் இருபாற்கும் பொதுவாய் நிற்கும் என்றவாறு.



உதாரணம்: ஒருவர் வந்தார் எனப் பொதுவாய் நின்றவாறு கண்டுகொள்க.

இருபாற்குமெனப் பொதுப்படக் கூறினாரேனும், ஒருவ ரென்னும் ஒருமைப்பெயரா னுணர்த்தப்படுதற்கேற்பன ஒரு வன் ஒருத்தியென்பனவேயாகலான், அவையே கொள்ளப்படும்.

உயர்திணை யொருமைப்பால் இரண்டென்றறியப்பட்டமை யான், இருபாற்குமுரித்தென்னுமும்மை முற்றும்மை. உயர்திணைப் பெயராயினும், பாலுணர்த்தாமையும் முன்னத்தா னுணர்த்தலும் இதற்குமொக்கு மாகலின், ஈண்டுக் கூறினாரென் பது.

(கஎ)

கக௨. தன்மை சுட்டிற் பன்மைக் கேற்கும்.

இதன் பொருள்: ஒருவரென்னும் பெயரதியல்பு கருதின் அஃது ஒருமைப் பெயராயினும், பல்லோரறியுஞ் சொல்லொடு

தொடர்தற்கேற்கும் என்றவாறு.

**உதாரணம் :** ஒருவர் வந்தார்.

ஒருவர்வர் என வரும்.

ஒருமைப்பெயர் பன்மை கொள்ளாதாயினும், இது வழு வமைதி யிலக்கணமென்ப தறிவித்தற்குத் தன்மை சுட்டி னென்றார்.

(௩அ)

## ௧௬௩. இன்ன பெயரே யிவையெனல் வேண்டின் முன்னஞ் சேர்த்தி முறையி னுணர்தல்.

**இதன் பொருள் :** நீயிர் நீ ஒருவரென்பனவற்றை இன்ன பாற்பெயரென் றறியலுறின், சொல்லுவான் குறிப்பொடு கூட்டி முறையானுணர்க எனறவாறு.

---

(௩எ) பலர்பாற் பெயரை ஒருவர் என்னும் ஒருமைப் பெயர் உணர்த்தமாட்டாமையின் ஒருமையில் வரும் ஒருவனையும் ஒருத்தியையுமே உணர்த்து மென்பதாம்.

(௩அ) தன்மை சுட்டின் என்றார், சொல்லிலுள்ள விகுதியைக் குறிக்கின் பன்மைக் கேற்கும் என்பது தோன்ற. எனவே பொருளை நோக்கின் ஒருமை குறிக்குமென்றபடி. தன்மை - சொற்றன்மை.

ஒருசாத்தன், ஒருவனானும் ஒருத்தியானும் பலரானும் ஒன்றானும் பலவானுந் தன்னுழைச் சென்றவழி, 'நீ வந்தாய், நீயிர் வந்தீர்' என்னுமன்றே; ஆண்டது கேட்டான் இவனின்ன பால் கருதிக் கூறினான் என்ப துணரும். இனி 'ஒருவ ரொருவரைச் சார்ந்தொழுகலாற்றின்' என்றவழிச் சொல்லுவா னொடு கேட்டான் இவனொருமை குறித்தானென விளங்கும். பிறவுமன்ன.

இனி இடமுங் காலமும் பற்றிப் பால் விளங்கும் வழியும் அறிந்து கொள்க.

ஏகாரம் தேற்றேகாரம்.

முறையினுணர்தலென்பது பாதுகாவல். (ருக)

ருகசு. மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி
மகடூஉ வியற்கை தொழில்வயி
னான.

இனி யொருசா ருயர்திணைப் பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும்

எஞ்சி நின்ற இலக்கணங் கூறுகின்றார்.

**இதன் பொருள்:** மகடூஉப்பொருண்மைக்கண் பாறிரிந்து வரும் பெண்மகனென்னும் பெயர், வினைகொள்ளுமிடத்து, மகடூஉவிற்குரிய வினைகொள்ளும் என்றவாறு.

**உதாரணம்:** பெண்மகன் வந்தாள் என வரும்.

*பொருண்மைபற்றி மகடூஉவினை கொள்ளுமோ ஈறுபற்றி ஆடூஉவினை கொள்ளுமோ என்று ஐயுற்றார்க்கு ஐயமகற்றியவாறு.*

*'சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்' என்பதனுல் தொழில்வயினுனவென்றுராகலின், சிறப்பில்லாப் பெயர்வயினும் பெண்மகனிவள் என மகடூஉவியற்கையாமென்பதாம்.* (௬௦)

(௧௧) நீ வந்தாய், நீயிர் வந்தீர், என்பன முன்னிலைப் பெயர்க்கும், ஒருவர் ஒருவரை என்பது ஒருவர் என்னும் பெயர்க்கும் பாலுணர்த்துமாற்றிற்கு உதாரணமாகக் காட்டப்பட்டன. இரண்டும் சொல்லுவான் குறிப்பாற் பாலுணரப்படும் என்றபடி. சொல்வானெடு - சொல்லுவானுல். ஒருமை குறித்து என்பது ஆடூஉ ஒருமை குறித்து என ஏனையோருரைகளுட் காணப்படுகின்றது. அங்ஙனம் இதன்கண்ணுமிருப்பது நலமே.



௨௨௧ ௧௬. ஆவோ வாகும் பெயருமா

ருளவே

யாயிட னறிதல் செய்யு ளுள்ளே.

இதன் பொருள்: ஆகாரம் ஓகாரமாய்த் திரியும் பெயர்களு முள; அத்திரியுமிட மறிக செய்யுளுள் என்றவாறு. உதாரணம்:

'வில்லோன் காலன கழலே தொடியோண்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே (யாரியர்'
கயிறுடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்)
வேய்பயில் பழுவ முன்னி யோரே'

(குறுந்—எ) எனவும்,

'கழனி நல்லூர் மகிழ்நர்க் கென்னிழை
நெகிழப் பருவரல் செப்பா தோயே'

(நற்றிணை—எ௦)

எனவும் ஆகாரம் ஓகாரமாய்த் திரிந்தவாறு கண்டுகொள்க.

ஆன், ஆள், ஆர், ஆய் என்னுமீற்றவாகிய

பெயரல்லது சேரமான், மலையமான் என்னுந் தொடக்கத்தன அவ்வாறு திரியாமையின், 'ஆயிடனறிதல்' என்றார். உழாஅன், கிழாஅன் என்பனவோவெனின் :—அவை அன்னீற்றுப் பெயர் ஒரு மொழிப் புணர்ச்சியான் அவ்வாறு நின்றனவென்பது. ஆனீறாய வழி, உழவோன், கிழவோன் எனத் திரியுமாறறிக. (சுக)

கஅசு. இறைச்சிப் பொருள்வயிற் செய்யுளுட் கிளக்கு

மியற்பெயர்க் கிளவி யுயர்திணை சுட்டா

நிலத்துவழி மருங்கிற் றோன்றலான.

---

(சுக) ஒருமொழிப் புணர்ச்சி என்றது விகுதிப் புணர்ச்சியை. விளிமரபினர்கள் இவற்றை ஆனீற்றுக்கு உதாரணமாகக் காட்டிய சேனாவரையர் இங்கே அன்னீறு என்று கூறுகின்றார். இதனை நச்சினார்க்கினியர் 'அளபெடுத்தால் ஆ, ஓவாகா' என்று மறுத்த லின் இடைச்செருகலெனக் கூறல் முடியாது. ஆயினும் நச்சினார்க் கினியருக்கு முன் யாராயினும்

செருகிபிருக்கலாம்,



[பொய

இதன் பொருள்: செய்யுளுட் கருப்பொருண்மேற் கிளக்கப்படும் இருதிணைக்குமுரிய பெயர் உயர்திணையுணர்த்தா: அவ்வவ் நிலத்துவழி அஃறிணைப் பொருளவாய் வழங்கப்பட்டு வருதலான் என்றவாறு.

உதாரணம்:

'கடுவன் முதுமகன் கல்லா மூலற்கு
வதுவை யயர்ந்த வன்பறழ்க் குமரி'

என்புழி, கடுவன், மூலன், குமரியென்பன அஃறிணைப் பொருளவாயல்லது நிலத்துவழி மருங்கிற்றோன்றாமையின், உயர்திணை சுட்டாதவாறு கண்டுகொள்க.

நிலமாவது, முல்லை குறிஞ்சி மருதநெய்தலென்பன.

அஃதேல், இவை உயர்திணையுணர்த்தாவாயின் அஃறி

ணைப் பெயரேயாம்; ஆகவே, இச்சூத்திரம் வேண்டா பிற வெனின்:—அற்றன்று: கடுவன் மூலனென்பன அன்னீறு ஆண்மையுணர்த்துமன்றே; அஃறிணைப்பெயர் அவ்வீற்றான் அப் பொருளுணர்த்தாமையின், அவை விரவுப் பெயரேயாமென்பது. அலவன், கள்வனென்பனவோ வெனின்:— அவை சாதிப்பெய ரெனப்படுவதல்லது ஆண்மைப் பெயரெனப்படாவென்க. குமரி யென்பது, வடமொழிச்சிதைவாய் வடமொழிப் பொருளே உணர்த்தலின், விரவுப்பெயரேயாம்.

(சஉ)

கசஎ. திணையொடு பழகிய பெயரலங் கடையே.

இதன் பொருள்:

கருப்பொருளுணர்த்தும் விரவுப்பெயர் உயர்திணை சுட்டாது அஃறிணை சுட்டுவது, அவ்வத்திணைக்குரிய வாய் வழங்கப்பட்டு வரும் பெயரல்லாத விடத்து என்றவாறு.

---

(சஉ) கடுவன், மூலன் என்பன ஈறுபற்றி உயர்திணைக்குரிய பெயராயினும் அஃது அஃறிணைப் பெயராயே

வழக்குமென்றபடி.
அலவன் கள்வன் என்பன னகரவீறுயினும் சாதிப் பெயராய்
நண்டையே உணர்த்தலின் ஆண்மைப் பெயராகா.
குமாரீ என்னும்
வடமொழி குமரி என மருவிற்று. அதுவும் அம்மொழிக்குரிய உயர்
திணைப் பொருளையே உணர்த்தலின் உயர் திணைக்
குரித்தாதல் பெறப்
படலின் இருதிணைக்கும் பொதுவாகும்.
ஆயினும் ஈண்டு உயர்
திணையை யுணர்த்தாது என்றபடி.



எனவே, திணைக்குரியவாய் வழங்கப்பட்டுவரும் பெயர் இருதிணையுஞ் சுட்டிவரு மென்பதாம்.

திணையொடு பழகிய விரவுப் பெயராவன காளை, விடலை யென்னுந், தொடக்கத்தன.

உதாரணம் : 'செருமிகு முன்பிற் கூர்வேற் காளை' எனவும், 'திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே' (அகம்- கஅரு.) எனவும், உயர்திணை சுட்டி வந்தவாறு கண்டுகொள்க. இவை உயர்திணைப் பொருளன்றோவெனின் :—ஒருத்தையும் காளை விடலை யென்பவாகலின், விரவுப்பெயரெனவே படுமென் பது.

கடுவன், மூலன், குமரியென்பனவும்

கருப்பொருளுணர்த் தலிற் றிணையொடு பழகிய பெயராம் பிறவெனின் :—அற்றன்று :

விலங்கும் புள்ளுமுதலாகிய பொருள்வழி யெல்லாம் அவற்றிற் குரிய பெயர் சொல்வதல்லது, பொருளுண்டாயினும், இந்நிலத்து இப்பொருள் இப்பெயரால் வழங்கப்படா வென்னும் வரையறை யில்லை. தலைமக்கள் எந்நிலத்து முளராயினும், பாலைநிலத்துக்

காளை மீளியென்னும் பெயர் செல்லா மருதநிலத்து; மருத நிலத்து மகிழ்நன் ஊரனென்னும் பெயர் செல்லா பாலைநிலத்து.

அதனாற் பொருள்வகையானன்றி பெயர் தங் திணைக்குரிமை பூண்டு நிற்றலின், அவற்றைத் திணையொடு பழகிய பெயரென்றா ரென்பது. (சஙு)

## பெயரியல் முற்றிற்று.

---

(சங) திணையொடு பழகிய பெயரென்றது அவ்வத் திணைக்குரிய மக்கட்பெயரை. ஒரு நிலத்து மக்கட்பெயர் ஒரு நிலத்து மக்கட் பெயராற் கூறப்படாமையின் பழகிய என்றார்.

## சா. வினையியல்

ககஅ. வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.

நிறுத்த முறையானே வினைச்சொல்லாமா றுணர்த்திய வெடுத்துக்கொண்டார். அதனானிவ்வோத்து வினையியலென்னும் பெயர்த்தாயிற்று.

இதன் பொருள்: வினையென்று சொல்லப்படுவது வேற்றுமையொடு பொருந்தாது ஆராயுங்காற் காலத்தொடு புலப்படும் என்றவாறு.

ஈண்டு வேற்றுமையென்றது உருபை.

உதாரணம்: உண்டான், கரியன் என வேற்றுமை கொள்ளாது காலமொடு தோன்றியவாறு கண்டுகொள்க.

வேற்றுமை கொள்ளாதென்னுது காலமொடு தோன்றுமெனின் தொழினிலையொட்டுந் தொழிற்பெயரும் வினைச்சொல்லாவான் செல்லுமாகலானும், காலமொடு தோன்றுமென்னுது வேற்றுமை கொள்ளாதெனின் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் வினைச்சொல்லெனப்படுமாகலானும், அவ்விருதிறமு நீக்குதற்கு 'வேற்றுமை கொள்ளாது காலமொடு தோன்றும்' என்றார்.

வினைச்சொல்லுள் வெளிப்படக் காலம் விளக்காதனவுமுள. அவையும் ஆராயுங்காற் காலமுடைய வென்றற்கு, 'நினையுங்காலை' என்றார். அவை யிவையென்பது முன்னர்ச் சூத்திரத்தாற் பெறப்படும்.

---

(க) தொழினிலையொட்டுந் தொழிற்பெயரென்றது வினையாலணையும் பெயரை. ஒட்டும் - ஒக்கும். (வேற் - கூ-ம் சூத்திரநோக்குக.) தொழிற்பெயரும் என்பதிலுள்ள உம்மை எச்சமன்றி எண்ணன்று. வெளிப்பட விளக்காதன - குறிப்புவினை.

உணர்த்தப்படும் வினைச்சொற்கெல்லாம் பொதுவிலக்கண முணர்த்தியவாறு.
(க)

௩௯௯. காலந் தாமே மூன்றென மொழிப.

இதன் பொருள் : மேற்சொற்றுவாய் செய்யப்பட்ட காலம் மூன்றென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

தாமென்பது கட்டுரைச் சுவைபட நின்றது.
(உ)

௨௦. இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றா
வம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளு
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே.

இதன் பொருள் : இறப்பும், நிகழ்வும், எதிர்வும் என்று சொல்லப்படும் அம் மூன்றுகாலமுங் குறிப்புவினையொடும் பொருந் தும் மெய்ந்நிலைமையையுடைய, வினைச்சொல்லானவை தோன்று நெறிக்கண் என்றவாறு.

எனவே, காலமூன்ருவன இறப்பும் நிகழ்வும் எதிர்வு மென்பதூஉம், வெளிப்படக் காலம் விளக்காதன குறிப்புவினை யென்பதூஉம், பெற்ரும்.

---

உணர்த்தப்படும் வினைச்சொற்கெல்லாம் பொதுவிலக்கணம் என்றது — உயர்திணைவினையும் அஃறிணைவினையும் பொதுவினையும் என்று பகுத்து உணர்த்தப்படும் வினைச்சொற்கெல்லாம் பொதுவிலக்கண மென்றவாறு. பொதுவினைகள் திணைபால் முதலிய வுணர்த்தா வாயினும் காலமுணர்த்தலும், வேற்றுமை கொள்ளாமையுமாகிய இப் பொதுவிலக்கணத்துள் அடங்குமாதலின் பொது இலக்கண மென்ருர். வினைச்சொற்களின் வகையாகிய உயர்திணை வினைச்

சொற்கும் அஃறிணை வினைச்சொற்கும் பொது வினைச்சொற்கும் உரிய இலக்கணங்களைப் பின் தனித்தனி உணர்த்தலின் அவை அவற்றிற்குச் சிறப்பிலக்கணங்கள் எனப்படும். மூவகை வினைச்சொற்கும் பொது என்பதே கருத்தாதல் சு-ம் சூத்திரத்துப் பொதுவகையாற் கூறிய வினைச்சொல்லைச் சிறப்புவகையானுணர்த்திய வெடுத்துக் கொண்டார் எனச் சேனாவரையர் கூறுமாற்றானறியப்படும்.

(உ) கட்டுரைச் சுவையென்றது – செய்யுளாக யாக்கப்பட்ட வாக்கியச் சுவையை. உ ந சு





**உதாரணம் :** உண்டான், உண்ணாநின்றான், உண்பான் என வரும்.

இறப்பாவது தொழிலது கழிவு. நிகழ்வாவது தொழில் தொடங்கப்பட்டு முற்றுப்பெறாத நிலைமை. எதிர்வாவது தொழில் பிறவாமை. தொழிலாவது பொருளினது புடை பெயர்ச்சியாக

வின், அஃதொருகணநிற்பதல்லது இரண்டுகணநில்லாமையின், நிகழ்ச்சியென்பதொன்று அதற்கில்லையாயினும், உண்டல் நின்றலெனப் பஃறொழிற்றொகுதியை ஒருதொழிலாகக் கோடலின், உண்ணாநின்றான், வாராநின்றான் என நிகழ்ச்சியு முடைத்தாயிற்றென்பது.

வினைக்குறிப்புக் காலமொடு தோன்றுங்கால், பண்டுகரியன், இதுபொழுது கரியன் என இறந்தகாலமும், நிகழ்காலமும் முறையானே பற்றி வருதலும், நாளைக்கரியனும் என எதிர் காலத்து ஆக்கமொடு வருதலும் அறிக.

மெய்ந்நிலையுடைய வென்றது, விளங்கித் தோன்றுவாயினும் காலம் வினைக்குறிப்பொடு கோடல் மெய்ம்மையென வலியுறுத்த வாறு. (௩)

௨௦௪. குறிப்பினும் வினையினு நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொ லெல்லா
முயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
மம்மூ வுருபின தோன்ற லாறே.

பொதுவகையாற் கூறிய வினைச்சொல்லை சிறப்புவகையா

னுணர்த்திய வெடுத்துக்கொண்டார்.

(கூ) பல்தொழிற் றொகுதியை ஒரு தொழிலாகக் கோடலின் என்றது – உண்கின்றான் என்புழி உண்ணுதலாகிய தொழில் பலதரம் நிகழ்தலின் கழிவதும் எதிர்வதுமாய் நிகழும் அத்தொழிற் றொகுதியை உண்ணுதலாகிய ஒரு தொழிலாகவே கொள்ளுதலின் என்றபடி. உண்ணுந் தொழிலென்றது வாயை அசைத்து உண்ணுதலை. உண்ணலாகிய ஒரு தொழிலே அத்தொழிலின் தொடக்கம் முதல் முடிவு வரையும் நிகழ்வதாகலின் நிகழ்காலமுங் கொள்ளப்படுமென்பது கருத்து. ஏனையவுமன்ன.



**இதன் பொருள்:** குறிப்புப் பொருண்மைக்கண்ணுந் தொழிற் பொருண்மைக்கண்ணுந் தோன்றிக் காலத்தொடு வரும் எல்லா வினைச்சொல்லும், உயர்திணைக் குரியனவும் அஃறிணைக் குரியனவும் இரண்டு திணைக்கும் ஒப்பவுரியனவுமென, மூன்று கூற்றனவாம், தோன்று நெறிக்கண் என்றவாறு.

கரியன், செய்யன் என்புழித் தொழின்மை தெற்றென விளங்காது குறித்துக் கொள்ளப்படுதலிற் குறிப்பென்றார்.

**உதாரணம்:** உண்டான், கரியன்; சென்றது, செய்யது; வந்தனை, வெளியை என வரும்.

'குறிப்பொடுங் கொள்ளும்' (சொல்-உ௦.) என மேற் குறிப்பினைப்புபட்டு நிற்றலிற் 'குறிப்பினும் வினையினும்' என்றார்.

முன் ஈறுபற்றி உணர்த்தப்படும் வினைச்சொற்களை இஃ திறந்தகாலத்திற்குரித்து, இது நிகழ்காலத்திற்குரித்து, இஃ தெதிர்காலத்திற்குரித்து என வழக்கு நோக்கி, உணர்ந்து கொள்க வென்பது விளக்கிய, 'காலமொடு வரூஉம்' என்றார்.

வினைச்சொற் கால முணர்த்துங்காற் சிலநெறிப்பாடுடைய வென்பது விளக்கிய, 'நெறிப்படத் தோன்றி' என்றார். நெறிப் பாடாவது அவ்வீற்றுமிசை நிற்கும் எழுத்து வேறுபாடு. அவை

---

(அ) வினையினுங் குறிப்பினும் எனத் தெரிநிலைவினையை முற் கூறுது குறிப்பை முற்கூறியதற்குக் காரணம் முதற்சூத்திரத்துக் குறிப்பொடும் எனக் குறிப்பு இயைபுபட்டு நிற்றலான் என்றபடி. சிறப்புவகை யென்றது—உயர்திணைவினை, அஃறிணைவினை, பொது வினை எனப் பகுத்து வைத்து உணர்த்தலே.

ஈற்றுமிசை நிற்கு மெழுத்து வேறுபாடென்றது – விகுதிக்குமேல் நிற்கும் எழுத்துக்களின் வேறுபாட்டை. அவையே காலங் காட்டு வன. நன்னூலார் போல இவர் காலங்காட்டுமெழுத்துக்களை இடை நிலை என்று வழங்காது, விகுதிமேல் நிற்கும் எழுத்துக்களென்று வழங்குவர்.

முன் ஈறுபற்றி உணர்த்தப்படும் வினைச்சொற்களை, இஃது இறந்தகாலத்திற்கு உரித்து இஃது நிகழ்காலத்திற்குரித்து இஃது எதி

முற்றவுணர்த்தலாகாவாயினும், அவ்வீறுணர்த்தும் வழிச் சிறிய சொல்லுதும்.

(௧)

௨௦௨. அவைதாம்
அம்மா மெம்மே மென்னுங் கிளவியு
மும்மொடு வரூஉங் கடதற வென்னு
மந்நாற் கிளவியொ டாயெண் கிளவியும்
பன்மை யுரைக்குந் தன்மைச் சொல்லே.

நிறுத்த முறையானே உயர்திணை வினையாமாறுணர்த்துகின்றார். அவைதாம் இருவகைய; தன்மை வினையும் படர்க்கைவினையு மெனை. தன்மைவினையும் இருவகைத்து ; பன்மைத் தன்மையும் ஒருமைத் தன்மையுமெனை. தனித்தன்மையும் உளப்பாட்டுத் தன்மையுமெனினு மமையும். இச்சூத்திரத்தாற் பன்மைத் தன்மை யுணர்த்துகின்றார்.

இதன் பொருள் : மேன் மூவகையவெனப்பட்ட வினைச் சொற்றும், அம் ஆம் எம் ஏம் என்னுமீற்றவாகிய சொல்லும், உம் மொடு வரூஉங் கடதறவாகிய கும்மும் டும்மும் தும்மும் றும் மும் என்னுமீற்றவாகிய சொல்லுமெனு, அவ்வெட்டும் பன்மை யுணர்த்துந் தன்மைச் சொல்லாம் என்றவாறு.

---

காலத்திற்குரித்து என வழக்குநோக்கி உணர்ந்து கொள்க என்பது விளக்கிய 'காலமொடு வரூஉம்' என்றூர் என்று சேனுவரையர் கூறி யது அவசியமா? என்று சிலர் விஞ நிகழ்த்துவர். வரையறுத்த வற்றைப் பின்னும் வரையறுத்தற்குப் பயன் பிறிதொன்று பெறு தற்கேயாமெனச் சேனுவரையர் (விளி—எ—ம் சூ.) கூறுவதை நோக் கின், இஃதும் அவசியமென்பது பெறப்படும். பெற்றதன் பெயர்த் துரை நியமப்பொருட்டு என்பது கொண்டு நச்சிஞர்க்கினியர் வலி

யுறுத்தற்குக் கூறினரென்று கொள்வது பொருந்தாது. என்னை?

க-ம் சூத்திரத்தில் 'காலமொடு தோன்றும்' என்று கூறிய பின்

னும் ௬-ம் சூத்திரத்தில் குறிப்பிற்குக் காலம் உண்டென்று கூறலே

வரையறுத்தற்பயனைக் காட்டும். அதன் மேலும் கூறியதற்குப் பயன்

பிறிதொன்று பெறுதலே எனக் கூறியதே பொருத்தமாகுமாதலின்.

(ரு) பன்மைத் தன்மையை உளப்பாட்டுத் தன்மையை யென்

றும் ஒருமைத் தன்மையைத் தனித்தன்மை யென்றும் உரைப்பினு

மமையும்.



தனக்கு ஒருமையல்ல தின்மையிற் றன்மைப்பன்மையாவது தன்னொடு பிறரை உளப்படுத்தேயாம். அவ்வுளப்படுத்தன் மூவகைப்படும்; முன்னின்றாரை

உளப்படுத்தலும், படர்க்கை யாரை உளப்படுத்தலும், அவ்விருவரையும் ஒருங்குளப்படுத் தலுமெனா.

அம் ஆம் என்பன முன்னின்றாரை உளப்படுக்கும்; தமராயவழிப் படர்க்கையாரையும் உளப்படுக்கும். எம் ஏம் என்பன படர்க்கையாரை உளப்படுக்கும். உம்மொடு வரூஉங் கடதற அவ்விருவரையும் ஒருங்குளப்படுத்தலுந் தனித்தனி யுளப்படுத் தலு முடைய.

ஈண்டும் அவைதாமென்பதற்கு முடிபு 'அவைதாம் இ உ ஐ ஓ' (சொல் - கஉ௦.) என்புழி உரைத்தாங் குரைக்க.

அம், ஆம், எம், ஏம் என்பன மூன்று காலமும் பற்றி வரும். உம்மொடு வரூஉங் கடதற எதிர்காலம் பற்றி வரும்.

முன்னின்ற நான்கீறும் இறந்தகாலம் பற்றி வருங்கால், அம்மும் எம்முங் கடதறவென்னு நான்கன்முன் அன்பெற்று

வரும். ஏம் அன் பெற்றும் பெறாதும் வரும். ஆம் அன் பெறாது வரும்.

உதாரணம் : நக்கனம் நக்கனெம், உண்டனம் உண்டனெம், உரைத்தனம் உரைத்தனெம், தின்றனம் தின்றனெம் எனவும்; நக்கனேம் நக்கேம், உண்டனேம் உண்டேம், உரைத்தனேம் உரைத்தேம், தின்றனேம் தின்றேம் எனவும்; நக்காம் உண்டாம், உரைத்தாம் தின்றாம் எனவும் வரும்.

அந்நான்கீறும் ஏனை யெழுத்தின்முன் ஙகாரமும் ழகாரமு மொழித்து இன்பெற்று வரும்.

உதாரணம் : அஞ்சினம், அஞ்சினம்; அஞ்சினெம், அஞ்சினேம்; உரிஞினம் உரிஞினம்; உரிஞினெம், உரிஞினேம் என வரும். பிறவெழுத்தோடு மொட்டிக்கொள்க. கலக்கினம், உரு அ

தொல்காப்பியம் [வினை

தெருட்டினம் என்னுந் தொடக்கத்தன குற்றுகரவீருகலான் அதுவும் ஏனையெழுத்தேயாம்.

இனி அவை நிகழ்காலம் பற்றி வருங்கால், நில், கின்று என்பனவற்றோடு வரும். நில்லென்பது லகாரம் னகாரமாய றகாரம் பெற்று நிற்கும்.

உதாரணம்: உண்ணாநின்றனம், உண்கின்றனம்; உண்ணாநின்றாம், உண்கின்றாம்; உண்ணாநின்றனெம், உண்கின்றனெம்; உண்ணாநின்றேம், உண்கின்றேம்; உண்ணாநின்றனேம், உண்கின்றனேம் என வரும். ஈண்டு அன்பெற்ற விகற்பம் இறந்த காலத்திற் கூறியவாறே கொள்க.

உண்ணாகிடந்தனம், உண்ணாவிருந்தனம் எனக் கிட இரு என்பனவுஞ் சிறுபான்மை நிகழ்காலத்து வரும்.

நிகழ்காலத்திற்கு உரித்தென்ற நில்லென்பது, உண்ணா நிற்கும், உண்ணாநிற்பல் என வெதிர்காலத்தும் வந்ததா லெனின்:—அற்றன்று: 'பண்டொரு நாள் இச்சோலைக்கண் விளை யாடா நின்றேன் அங்கோரத்தொரு தோன்றல் வந்தான்' என்ற

வழி, அஃதிறந்தகாலத்து நிகழ்வுபற்றி வந்தாற்போல ஆண்டெதிர்காலத்து நிகழ்வுபற்றி வருதலான், ஆண்டும் அது நிகழ்காலத்திற் றீர்ந்தின் றென்க.

அவை எதிர்காலம்பற்றி வருங்காற் பகரமும் வகரமும் பெற்று வரும். வகரமேற்புழிக் குகரமும் உகரமும் அடுத்து நிற்கும்.

---

தன்மை யென்பது ஒருவனாகிய தன்னையே உணர்த்தலின் ஒருவனாகிய தனக்கு ஒருமை அல்லது இல்லாமையின் என்றார். எனவே தன்மைப் பன்மையெல்லாம் உளப்பாடென்பது கருத்து. ஏனைய எழுத்தென்றது மேல் உதாரணத்துக் காட்டிய, க, ட, த, ற அல்லாதவற்றை. உண்ணாநின்றனம், உண்ணாகிடந்தனம், உண்ணாஇருந்தனம் என்பவற்றை நன்னூலுரைகாரர் ஆநின்று, ஆகிடந்து, ஆவிருந்து எனப் பிரிப்பர். சேனாவரையர் ஆவைச் சாரியை என்று கருதினர்போலும்.

உதாரணம்: உரைப்பம், செல்வம்; உண்குவம், உரிஞுவம் என வரும். ஒழிந்த வீற்றோடு மொட்டிக்கொள்க. பாடுகம், செல்கம் என ஏற்புழிச் சிறுபான்மை ககரவொற்றுப் பெறுதலுங் கொள்க.

உம்மொடு வரூஉங் கடதற—உண்கும், உண்டும், வருதும், சேறும் என வரும். உரிஞுதும், திருமுதும் என ஏற்புழி உகரம் பெற்று வரும்.

கும்மீறு, வினைகொண்டு முடிதலின், ஒழிந்த உம்மீற்றின் வேறெனவே படும். டதற வென்பன, எதிர்காலத்திற்குரிய எழுத்தன்மையால், பாலுணர்த்தும் இடைச்சொற்கு உறுப்பாய் வந்தன வெனவே படும். அவற்றை உறுப்பாகவுடைய ஈறு மூன்றும்; அதனுன் உம்மென ஓரீறாக வடக்கலாகாமையின், அந்நாற் கிளவியொ டென்றார். (ரு)

உ௦௬. கடதற வென்னு
மந்நான் கூர்ந்த குன்றிய
லுகரமோ
டென்னே னல்லென வரூஉ
மேழுந்
தன்வினை யுரைக்குந் தன்மைச்

சொல்லே.

இதன் பொருள்: கடதறவென்னு நான்கு மெய்யை யூர்ந்து வருங் குற்றிய லுகரத்தை ஈறாகவுடைய சொல்லும்,

இடைச்சொற்கு உறுப்பெழுத் தென்றது, உம்மூர்ந்த ட, த, ற என்னு மெழுத்துக்களை. அவை டும், தும், றும் என்னும் விகுதி இடைச் சொற்களுக்கு உறுப்பாய் நிற்றலின் அவ்வாறு கூறப்பட்டது. டும், தும், றும் என்னும் இவற்றுள் டும் இறந்தகாலமும், ஏனைய இறந்த காலமும் எதிர்காலமும் உணர்த்துமென்பது நன்னூலார் கருத்து. பதவியல் கஅ-ம் சூத்திரம் நோக்குக. கடதறக்கள் முதனிலையை யடுத்து வருங்கால் இறப்பும் ஈற்றினை அடுத்து வருங்கால் எதிர்வும் உணர்த்தும் என்றது கருதத்தக்கது. நக்கனம் உண்டனம் என்பன போல முதனிலையை அடுத்து வருங்கால் இறப்பும், உண்கும் உண்டும் என ஈற்றினை அடுத்து வருங்கால் எதிர்வும் உணர்த்தும் என்பது

அதன் கருத்து. பாடுகம், செல்கம் என்புழிக் ககர ஒற்று எதிர் காலங் காட்டிற்று.



என் ஏன் அல்லென்னு மீற்றவாகிய சொல்லுமென அவ்வேழும், ஒருமையுணர்த்துந் தன்மைச் சொல்லாம் என்றவாறு.

குற்றுகர நான்கும், அல்லும், எதிர்காலம்பற்றி வரும். குற்றுகரம், காலவெழுத்துப் பெறுங்கால், உம்மீற்றோடொக் கும். அல்லீறு பகரமும் வகரமும் பெற்று வரும். என் ஏன் என்பன மூன்று காலமும் பற்றி வரும்.

**உதாரணம்:** உண்கு, உண்டு, வருது, சேறு எனவும்; உரிஞ்கு, திருமுகு எனவும்; உண்டனென், உண்ணாநின்றனென், உண்குவென் எனவும்; உண்டேன், உண்ணாநின்றேன், உண்பேன் எனவும்; உண்பல், வருவல் எனவும் வரும்.

காலவெழுத்தடுத்தற்கண் எம்மீற்றோடு என்னீறும், ஏமீற்றோடு ஏனீறு மொக்கும். ஆண்டுக் கூறிய விகற்பமெல்லாம் அறிந்தொட்டிக்கொள்க.

குற்றியலுகரமென ஒன்றாகாது நான்காதற்கு முன்னுரைத் தாங் குரைக்க.

எதிர்காலம்பற்றி வழக்குப்பயிற்சியு மில்லாக் குற்றுகரத்தை, அங்ஙனம் வரும் அல்லோடு பின் வையாது, மூன்றுகாலமும் பற்றிப் பயின்று வரும் என் ஏன் என்பனவற்றின் முன் உம் மீற்றோடியைய வைத்தது, செய்கென்பது போலச் செய்குமென் பதூஉங் காண்கும் வந்தேம், என வினைகொண்டு முடியுமென்ப தறிவித்தற்கெனக் கொள்க. (௬)

(௬) குற்றுகரமென்றது - குகரம் முதலிய நான்கீற்றையும். கால எழுத்தென்றது - கால எழுத்தோடு பெறுஞ் சாரியையை. என் ஈறு எம்மீற்றையும் ஏன் ஈறு ஏமீற்றையும் ஒக்கும் என்றது ரு-ம் சூத்திர உரையுட் கூறியவாறு இறந்தகாலத்து வருங்கால், க, ட, த, ற முன் அன் பெற்றும் பெறாதும் வருதலையும், ஏனை எழுத்தின் முன் இன் பெற்று வருதலையும், ஏனைய காலத்தும் அச்சூத்திர உரையுட் கூறியவாறே பெறுதலையும். ஆண்டு கூறிய விகற்பமென்றது அச்சூத்திரத்துக் கூறியபடி கால எழுத்துப்பெறும் வேறுபாடுகளை. வழக்குப் பயிற்சியுமில்லா என்புதிலுள்ள உம்மை செய்யுட் பயிற்சியுமில்லா என்பதைக் காட்டுதலின் இரண்டினும் அருகி வரும் என்பது கருத்து. உம்மீற்றோ டியைய வைத்தென்றது - முதற்சூத்திரத்துக் கூறிய கும் முதலிய ஈறுகளோடியைய இச் சூத்திரத்து முன் வைத்தமையை,

உசுக உ0ச. அவற்றுள்

செய்கென் கிளவி வினையொடு முடியினு

மவ்விய றிரியா தென்மனார் புலவர்.

இதன் பொருள்: மேற்கூறப்பட்ட ஒருமைத் தன்மை வினையேழனுள், செய்கென்னுஞ்சொல் வினையொடு முடியுமாயி னும், முற்றுச்சொல்லாதலிற் றிரியாது என்றவாறு.

உதாரணம்:

காண்கு வந்தேன் என வரும்.

செய்கென் கிளவி யவ்விய றிரியா தெனவே, 'பெயர்த்தனென்

முயங்கயான்' (குறள் - அச.) எனவும், 'தங்கினை சென்மோ' எனவும், 'மோயின ளுயிர்த்த காலை' (அக - ரு.) எனவும் ஏனை முற்றுச்சொல் வினைகொள்ளுங்கால் அவ்வியறிரியு மென்பதாம். அவை திரிந்தவழி வினையெச்சமாதல் 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (சொல் - சுருஎ.) என்புழிப் பெறப்படும்.

இருசாரனவும் பெயர்கொள்ளாது வினை கொண்டவழிச் செய்கென்கிளவி திரியாதென்றும் ஏனைய திரியுமென்றுங் கூறிய கருத்தென்னையெனின்:—நன்று சொன்னாய்: காண்கு வந்தேன் என்றவழிச் செய்கென்கிளவி வினையெச்சமாய்த் திரிந்ததாயிற் செய்தெனெச்சமாதற் கேலாமையின், செயவெனெச்சமாய்த் திரிந்ததெனல் வேண்டும். வேண்டவே, செயவெனெச்சத்திற்குரிய வினைமுதல் வினையும் பிறவினையும் அது கொள்வான் செல்லும்; வினைமுதல் வினையல்லது கொள்ளாமையிற் செயவெனெச்சமாய்த் திரிந்ததென்றல் பொருந்தாது. பிறிதாறின்மையின், முற்றுச் சொல்லாய் நின்றதெனவே படும். அதனான் அவ்வியறிரியாதென்று ரென்பது. அல்லதூஉம், செய்கென்கிளவி சிறுபான்மையல்லது

---

(எ) இருசாரனவுமென்றது—வினையொடு முடியினு முற்றாகும் செய்கென்கிளவியும் வினையொடு முடியினு முற்றாகாத ஏனையவற்றையும்.

செய்தெனெச்சமாய்த்
திரிந்ததெனற் கேலாமைக்குக் காரணம்— எதிர்காலங்
காட்டல். பெயர்த்தனென் என்பது முதலியன
இறந்த காலங் காட்டலின்
31
செய்தெனெச்சமாய்த் திரிதற் கேற்புடைத்தாம்,



பெயர்கொள்ளாமையின், பெரும்பான்மையாகிய
வினைகோடல்

அதற்கியல்பேயாம்; ஆகவே, அது திரிந்து வினை கொள்ளு
மெனல் வேண்டாவாம்; அதனுலும் முற்றாய் நின்று வினை
கொண்டதென்றலே முறைமையென்றுணர்க.

'முற்றுச் சொற்கும் வினையொடு முடியினு
முற்றுச்சொ லென்னு முறைமையி னிறவா'
என்ருர் பிறருமெனக் கொள்க.

'பெயர்த்தனென்முயங்க' என்னுந்

தொடக்கத்தன இறந்த காலமுணர்த்தலிற் செய்தெனெச்சமாதற் கேற்புடைமையான், அவற்றைத் திரிபென்றார்.

முன்னர் 'எத்திறத் தானும் பெயர்முடி பினவே' என்பதனாற் பெயரொடு முடிதலெய்துவதனை விலக்கியவாறு. (எ)

௨௦௫. அன் ஆன் அள் ஆ ளென்னு நான்கு
மொருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

தன்மைவினைபுணர்த்தி, இனி யுயர்திணைப் படர்க்கை வினை புணர்த்துகின்றார்.

இதன் பொருள்: அன், ஆன், அள், ஆள், என்னு மீற்றையுடைய நான்குசொல்லும் உயர்திணை யொருமைபுணர்த்தும் படர்க்கைச்சொல்லாம் என்றவாறு.

இவை நான்கீறும் மூன்றுகாலமும்பற்றி வரும்.

உதாரணம்: உண்டனன், உண்ணாநின்றனன், உண்பன் எனவும்; உண்டான், உண்ணாநின்றான், உண்பான் எனவும்; உண்டனள், உண்ணாநின்றனள், உண்பள் எனவும்; உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் எனவும் வரும்.

---

என்றபடி. ஏனையவும் அன்ன. முற்றுச்சொற்கும் என்பதற்கு முற்றுச்சொல்லாகிய கும் எனப் பொருள்கொள்க. பெயரொடு முடியுமென

விதித்த விதியை இதனான் விலக்கி வினையொடும் முடியும் என்றபடி. யியல்]



காலத்துக்கேற்ற எழுத்துப்பெறுங்கால், அன்னும் அள்ளும் அம்மீற்றோடும், ஆனும் ஆளும் ஆமீற்றோடுமொக்கும். அவ் வேறுபாடெல்லாமறிந் தொட்டிக்கொள்க. (அ)

உ௦சு. அர் ஆர் பஎன வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச்
சொல்லே.

இதன் பொருள்: அர் ஆர் ப

என்னுமீற்றையுடையவாய் வருமூன்று சொல்லும் பல்லோரையுணர்த்தும் படர்க்கைச் சொல்லாம் என்றவாறு.

ரகாரவீறு இரண்டும் மூன்றுகாலமும் பற்றி வரும்; பகாரம் எதிர்காலம்பற்றி வரும்.

உதாரணம்: உண்டனர், உண்ணாநின்றனர், உண்பர் எனவும்; உண்டார், உண்ணாநின்றார், உண்பார் எனவும்; உண்ப எனவும் வரும்.

அன்னீற்றிற்குரிய காலவெழுத்து அர் ஈற்றிற்கும், ஆனீற்றிற்குரிய காலவெழுத்து ஆரீற்றிற்கு முரிய.

பகரம் உகரம்பெற்றும் பெறாதும், உரினுப. உண்ப என வரும். வருகுப எனச் சிறுபான்மை குகாரமும் பெறும். இவ் வேறுபாடு எற்புழியறிந்தொட்டிக்கொள்க. (கூ) உ௦எ.

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை

காலக் கிளவியொடு முடியு மென்ப.

இதன் பொருள்: முன்னையனவேயன்றி மாரீற்றுச்சொல் லும் பல்லோர்படர்க்கையை யுணர்த்தும்; அஃது அவைபோலப் பெயர்கொள்ளாது வினைகொண்டு முடியும் என்றவாறு.

பகரத்திற்குரிய காலவெழுத்து மாரைக் கிளவிக்குமொக்கும்.

---

(அ) காலத்திற்கு ஏற்ற எழுத்துப் பெறுங்கால் அன்னும், அள் ளும் அம் ஈற்றெடும், ஆனும், ஆளும், ஆம் ஈற்றெடும் ஒத்தலே ரு-ம் சூத்திரம் நோக்கி உணர்ந்துகொள்க.



உதாரணம்: எள்ளுமார் வந்தார், கொண்மார் வந்தார் என வரும். குகரம் வந்தவழிக் கண்டுகொள்க.

மாரைக்கிளவி வினையோடல்லது பெயரோடு முடியாமை யின், எச்சமாய்த் திரிந்து வினைகொண்டதெனப்படாமை யறிக.

அஃதேல்,

' பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மா ரெவரே '
(புறம்—௩௭௫)

எனவும்,

' காமம் படரட வருந்திய
நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே '
(நற்—௬௪)

எனவும் மாரீற்றுச்சொற் பெயர் கொண்டு வந்தனவாலெனின் :— அவை பாடுவார் காண்பார் என்னும் ஆரீற்று முற்றுச்சொல்லின் எதிர்மறையாய் ஒரு மொழிப்புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றன. மாரீறாயின், அவை படாதொழிவார், காணுதொழிவார் என ஏவற்பொருண்மை யுணர்த்துமாறில்லை யென்க. (௬௦)

(௬௦) பாடன்மார் காணன்மார் என்பன பாடாதொழிவாராக காணுதொழிவாராக என வியங்கோளாக வரும் என்பதும், அவற்றிற்கு உடன்பாடாகிய பாடுவார் காணுவார் என்பனவும். பாடுவாராக

காணுவாராக என வியங்கோளாக வரும்மென்பதும் சேனுவரையர்
கருத்தென்பது மாரீருயின் அவை ஏவற் பொருண்மை உணர்த்துமா றில்லை என்பதனை னுணரக்கிடக்கின்றது. இக்கருத்தினை நச்சினர்க் கினியர் உரைநோக்கியுந் தெளிந்துகொள்க.

மாரீற்றைப்பற்றி, இலக்கண விளக்க நூலார் கூறியதாவது:—

இனி, வினையொடுமுடியுமென்ற மாரீற்றுச்சொல்லை, " பீடின்றுபெரு கிய திருவிற்—பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே", "படரட வருந் திய—நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே" எனப் பெயரோடு
முடிந்ததாலெனின், இவை பாடுக காண்க என்னும் வியங்கோட்கு எதிர் மறையாய்ப் பாடாதொழிக, காணுதொழிக என ஏவற்பொருளவாய் நின்றன மாரீறல்லவென்க. அல்லதூஉம் பாடுவார், காண்பார் என் பன சில வியங்கோள் முற்றெனக்கொண்டு அவற்றிற்கு எதிர்மறை யாய்ப் பாடாதொழிவார், காணுதொழிவார் என ஏவற்பொருளவாய் நின்றன என்றலுமொன்று. அன்றி மாரீருயின் ஏவற்பொருண் மையை உணர்த்துமாறில்லை என்க. ஏவல் என்றது வியங்கோளை,

உ0அ. பன்மையு மொருமையும் பாலறி வந்த
வந்நா லைந்து மூன்றுதலை யிட்ட
முன்னுறக் கிளந்த வுயர்திணை யவ்வே.

இதன் பொருள்: பன்மையும் ஒருமையுமாகிய பாலுணர வந்த இருபத்துமூன்றீற்று வினைச்சொல்லும் முன்னுறக் கிளக் கப்பட்ட உயர்திணையுடையன என்றவாறு.

ஈண்டுக் கூறிய படர்க்கைவினையே கிளவியாக்கத்துட் கூறப் பட்டன, அவை வேறல்லவென்பார், முன்னுறக் கிளந்தவென் றூர். அதனாற் பயன், அன் ஆன் அள் ஆளென்பன ஆண்பால்

பெண்பாலுணர்த்துதல் ஈண்டுப் பெறுதலும், னஃகானொற்று முதலாயின படர்க்கைவினைக்கீறாய் நின்று பாலுணர்த்துதல் ஆண்டுப் பெறுதலுமாம். அஃதேல், முற்றுப்பெற ஓரிடத்துக் கூறவமையும் ஈரிடத்துக் கூறிப் பயந்ததென்னையெனின் :— பாலுணர்த்தும் இடைச்சொற்பற்றி உயர்திணைப்படர்க்கை வினை யுணர்த்துதல் ஈண்டுக் கூறியதனாற் பயன் ; ஆண்டுக் கூறியதனாற் பயன் வழுக்காத்தற்கு இவற்றைத் தொகுத்திலக்கண வழக் குணர்த்துதலாமென்க. பெயரியனோக்கிப் 'பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்' என்றாற்போல, வினையியனோக்கி 'வினையிற் றோன்றும் பாலறி கிளவியு—மயங்கல் கூடா' என வமையும், ஆண் டுக் கூறல்வேண்டாவெனின் :— அற்றன்று : இருதிணை யைம்பாற் சொல்லுணர்த்தாக்கால், திணை பால்பற்றி வழுவற்கவெனவும் வழீஇயமைகவெனவும் வழுக்காத்த சூத்திரங்களெல்லாவற்றானும் பொருளினிது விளங்காமையானும் வினையுள்ளுந் திரிபின்றிப்

---

(கக) படர்க்கைப்பெயரீறு திரிபின்றிப் பாலுணர்த்தாமையைப் பெயரியல் எ-ம் சூத்திர உரை

நோக்குக.

வேறல்ல என்றதனாற் பயன் என்னெனின்? ஆண்டுக் கூறிய பாலை ஈண்டுப் பெறுதலும்; ஈண்டுக் கூறிய இடத்தை ஆண்டுப் பெறுதலுமாம்.

அன், ஆன், இர், ஈர் முதலியவற்றில் முதலிலுள்ள அ, ஆ, இ, ஈ முதலியன இடங்குறித்து வந்தனவென்று ஒருவாறு கூறலாமென்பது சிலர் கருத்து. இது பொருத்தமே என்பது எமக்குங் கருத்தே யாம.



பால் விளக்குதற் சிறப்புடையன படர்க்கைவினையேயாகலானும், அவற்றைப் பிரித்து ஆண்டுக் கூறினாரென்பது. படர்க்கைப் பெயரீறுந் திரிபின்றிப் பாலுணர்த்தாமையின், இலக்கணவெழுத்தோடு கூறாது, எதிரது நோக்கிக் கொள்ள வைத்தாரென்க.

மூன்று தலையிட்ட வந்நாலைந்துமாவன இவையென இனிது 'விளங்கப் பன்மையு மொருமையும் பாலறி வந்த' என்றார்.

இதனாற் பயன், உயர்திணைவினை மூன்றுதலையிட்ட நாலைந் தென்னும் வரையறை. (கக)

உ0கூ. அவற்றுள்

பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே.

**இதன் பொருள்:** கூறப்பட்ட இருபத்துமூன்று சொற்களுள், பன்மையுணர்த்துந் தன்மைச்சொல் எண்ணியலும் வழி அஃறிணையையுளப்படுத்துத் திரிவனவுள என்றவாறு.

**உதாரணம்:** 'யானுமென் னெஃகமுஞ் சாறும்' என வரும்.

தன்மைப்பன்மை வினைச்சொல், உயர்திணை வினையாகலின், உயர்திணையே உளப்படுத்தற்பாலன; அஃறிணையை உளப்படுத்தல் வழுவாயினும் அமைகவென்பார், திரிபவையுளவென்றார். அதனான் இச்சூத்திரத்தை 'முன்னுறக் கிளந்த வுயர்திணை யவ்வே' (சொல்—உ0அ) என்னுஞ் சூத்திரத்தின் பின் வைத்தார்.

திரியுமென்னாது திரிபவையுளவென்றதனான், எல்லாந் திரியா சிலவே திரிவன வென்பதாம். (கஉ)

உகc. யாஅ ரென்னும் வினாவின் கிளவி
யத்திணை மருங்கின் முப்பாற்கு
முரித்தே.

இதன் பொருள்: யாரென்னும் வினைப்பொருளை புணர்த்துஞ்சொல் உயர்திணைமருங்கின் முப்பாற்குமுரித்து என்றவாறு.

(சஉ) முன்வைப்பின் 'உயர்திணைய' என்பதனோடு மாறுபடுமாதலின் பின்வைத்தார் என்றபடி. [யியல்]



உதாரணம்: அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும்.

'ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெங்

கோதைகூட் டுண்ணிய

தான்யார்மன்—போதெல்லாந்

தாதொடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்

றூதொடு வாராத வண்டு'

என்புழி, வண்டுதான் யார் என யாரென்பது அஃறிணைக்கண்ணும் வந்ததாலெனின்:—அது திணைவழுவமைதியெனப்படும்.

இது வினைக்குறிப்பாயினும், பல்லோர் படக்கையுணர்த்தும் ஆரீற்றின் மூன்றுபா லுணர்த்தும் வேறுபாடுடைமையின், அவற்றொடு வையாது ஈண்டு வைத்தார்.

செய்பு ளின்பநோக்கி அளபெழுந்து

நின்றது. வினையின்கிளவியென

அதன்பொரு ளுணர்த்தியவாறு. (க௫)

உகக. பாலறி மரபி னம்மூ வீற்று
மாவோ வாகுஞ் செய்யு ளுள்ளே.

**இதன் பொருள்:** பால் விளங்க வருமியல்பையுடைய அம்மூன்றீற்றின்கண்ணும் ஆகாரம் ஓகாரமாகுஞ் செய்யுளிடத்து என்றவாறு.

பாலறிமரபினென்றதனல், பாலுணர்த்துதற்கண் திரிபுடைய ஆமீறு விலக்குண்ணும். மார் சிறுவழக்கிற்றாகலானும், மாகாரம் ஓகாரமாதற்கேலாமையானும், அம்மூவீறுவன ஆன் ஆள் ஆர் என்பனவேயாம்.

---

(க௫) அதன் பொருளென்றது, யார் என்றதன் பொருளை என்றபடி.

(கச) பாலுணர்த்துதற்கண் திரிபுடையதென்றதை க௨௰ம் சூத்திர அகலவுரையிற் பார்க்க. யானும் என் குதிரையும் செல்வாம் எனின், ஆம் விகுதி அஃறிணையை உளப்படுத்தி அப்பாலையுங் காட்டித்திரியும் என்றபடி.

உதாரணம்: 'வினவிநிற்றந்தோனே' 'நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே' (அகம்-உ௪அ.) 'பாசிலை, வாடா வள்ளியங் காடிறந் தோரே' (குறுந்-உகக.) என ஆகாரம் ஓகாரமாய்த் திரிந்தவாறு கண்டு கொள்க.

வந்தோம், சென்றோம் என வழக்கினுள் வருவனவோ வெனின்:— அவை ஏமீற்றின் சிதைவென மறுக்க. (க௪)

உகஉ.

ஆவென் கிளவியு மவற்றொடு கொள்ளும்.

இதன்பொருள்: முன்னிலையீற்றுள், ஆவென்னுமீறு மேற் கூறப்பட்டன போல ஆகாரம் ஓகாரமாஞ் செய்யுளுள் என்றவாறு.

உதாரணம்: 'வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப'

(அகம்-அ௦.) என வரும்.

கூறப்பட்ட நான்கீற்றுத்

தொழிற்பெயரும் ஆகாரம் ஓகார

மாதல் பெயரியலுட் கொள்ளப்படும்.

ஆயென்கிளவி ஆவோவாவது பெரும்பான்மையும் உயர் திணைக்கண் வந்தவழி யென்பதறிவித்தற்கு, முன்னிலை யதி காரத்துக் கூறாது ஈண்டுக் கூறினர்.

அவற்றொடு கொள்ளுமென்றது அவற்றோ டொக்குமென்ற வாறு. (கரு)

உகரு. அதுச்செல் வேற்றுமை யுடைமை யானுங்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானு
மொப்பி னானும் பண்பி னானுமென்
றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்.

இதன் பொருள்: ஆறும்வேற்றுமையது உடைமைப்பொருட் கண்ணும், ஏழாம்வேற்றுமையது நிலப்பொருட்கண்ணும், ஒப் பின் கண்ணும், பண்பின்கண்ணுமென அப்பகுதிக் காலங் குறிப் பாற் றோன்றும் என்றவாறு.

(கரு) கூறப்பட்ட நான்கு ஈறென்றது, ஆன், ஆள், ஆர், ஆய் என்பவற்றை, தொழிற்பெயர்—வினையாலணையும் பெயர்.



அப் பகுதிக் காலமாவது அப்

பொருட்பகுதிபற்றி வருஞ் சொல்லகத்துக் காலமாம்.

அப்பகுதிக் காலங் குறிப்பாற் றோன்றுமெனவே, அப்பொருள் பற்றி வினைக்குறிப்பு வருமென்றவாறும்.

உடையானது உடைமைத்தன்மையேயன்றி உடைப்பொருளும் உடைமையெனப் படுதலின், உடைமையானு மென்பதற்கு உடைப்பொருட்கண்ணுமெனவு முரைக்க. உரைக்கவே, உடைப் பொருட்கண் வருங்கால், உடைப்பொருட் சொல்லாகிய முதனிலை பற்றி வருதலும் பெறப்படும். கருமையனென்பது உடைமைப்பொருளாயடங்கலின், பண்பினும் என்புழிக் கரியனென இன்ன னென்பதுபட வருதலே கொள்க. வாளாது உடைமையானும் என்றவழி 'அன்மையின்' (சொல்–உகச) என்பதுபோல அவ்வொருவாய்பாடேபற்றி நிற்கும். இதனை இஃதுடைத்தென்பது பட வரும் எல்லா வாய்பாடுந் தழுவுதற்கு அதுச்சொல் வேற் றுமை யுடைமையானு மென்றார்.

'கண்ணென் வேற்றுமை நிலத்தி ஞனு'
மென்பதற்கும் ஈதொக்கும். ஆயின், இஃதிரண்

(கசு) சாத்தன் கச்சை உடையன் என்புழிக்
கச்சை உடைமை

யாகிய உடைமைத்தன்மையும் உடைமை எனப்படும். சாத்தனுடைய கச்சு என்புழி உடைப்பொருளாய் நிற்கும் கச்சும் உடைமை எனப்படும். இவ்விரண்டனுள் ஈண்டு உடைமை
எனப்பட்டது உடைப் பொருளாய்நிற்குங் கச்சு
முதலியன. ஆதலின் உடைமையானும் என்ப தற்கு
உடைப்பொருட்கண்ணும் என உரைக்க என்பது
கருத்து. அவ் வுடைப்பொருட் சொல்லாகிய
முதனிலைபற்றி வரும் என்றது, கச்சு என்னும்
உடைப்பொருட்சொல்லே பகுதியாக அதன்வழிக்
கச்சினன் எனக் குறிப்பு வினைமுற்றுப் பிறக்கும்
என்றபடி. ஏனையவு மன்ன.
உடைப்பொருட்கண்ணுமெனவுமுரைக்க என்பதில்
உம்மை இல்லாமலிருப்பதே பொருத்தம்.

இன்னன் என வருதல்—கருநிறத்தன் என
வருதல். வாளா உடைமையின் என்றால் அவ்வொரு
வாய்பாடேபற்றி வரும் உடையன் என்ற குறிப்பு
வினைமுற்று ஒன்றே கொள்ளப்படும். அவ்
வொன்றே கொள்ளாது, ஆறும்வேற்றுமை
உடைப்பொருள்பற்றி வரும் வாய்பாடு பலவும்
கோடற்கு, அதுச்சொல் வேற்றுமையுடைமை யானு

மென்று ரென்க. ஈண்டு உடைமை என்றது
உடைப்பொ ருளை என்றபடி. நிலத்தினும்
என்பதற்கும் ஈதொக்கும் என்றது,



டாம் வேற்றுமைப் பொருளாமெனின் :—ஆண்டுடைமை உருபு நோக்கிய சொல்லாய் வருவதல்லது இரண்டாம் வேற்றுமைப் பொருளெனப்படாது. என்னை? அது செயப்படு பொருண்மைத் தாகலின். அதனான் உடைமை ஆறுவதன்பொருளெனவே படு மென்பது.

உதாரணம் : கச்சினன் கழலினன் எனவும், இல்லத்தன் புறத்தன் எனவும், பொன்னன்னன் புலிபோல்வன் எனவும், கரியன் செய்யன் எனவும் வரும்.

கச்சினன், இல்லத்தான் எனப் பெயருங் குறிப்பாற் காலம் விளக்கலின், அப்பாற் காலங்குறிப்பொடு தோன்றுமென்றதனான் வினைக்குறிப்பென்பது பெறுமாறென்னையெனின் :—'தொழினிலை யொட்டு மொன்றலங் கடை' (சொல்—எ0) எனத் தொழிற்பெய ரல்லன காலந்தோன்ற வென்றமையால், கச்சினன் இல்லத்தா

னென்பன காலம் விளக்காமையின், குறிப்பாற் காலம் விளக்குவன

வினைக்குறிப்பாதல் பெறுதும். அல்லதூஉம், வினைக்குறிப்பும் காலந்தோன்றுதலை இலக்கணமாகவுடைய வினைச்சொல்லே யாதலின், தெற்றென விளக்காவாயினுங் காலமுடையவெனவே படும். பெயர்க்கு அன்னதோ ரிலக்கணமின்மையின், காலந் தெற்றென விளக்குவனவுளவேற் கொள்வதல்லது, காலம் விளக் காத பெயருங் காலமுடையவென உய்த்துணருமாறில்லை.

---

வாளா நிலத்தினனும் என்ருல் நிலம் என்னும் ஒரு வாய்பாடே கொள் ளப்படும். இடப்பொருள்பற்றிவரும் எல்லா வாய்பாடும் கொள்ளுதற்கு கண்ணென் வேற்றுமை நிலத்தினனுமென்ருர் என்றபடி. நிலம்—இடம்.

கச்சினன் என்றவிடத்து கச்சையுடையன் என விரிவுழி, உடை யன் என்பது ஐ யொடு வருதலின் இரண்டாம் வேற்றுமைப் பொரு ளன்ருேவெனின்? அற்றன்று; அது செயப்படுபொருள் குறியாது உருபுநோக்கிய சொல்லாய் வந்தவென்க. உருபு நோக்கிய சொல் லென்றது வருமொழியை. உடைமை ஆருவதெனவே, சாத்தன் கச்சினன் என்பதைச் சாத்தன் கச்சினையுடையன் என விரிக்குங் கால் உடைமை சாத்தனேடியைந்து ஆருவதாகும் என்றபடி. அங் ஙனம் ஆருவதாதலைக் கச்சினன் என்புழி, அன் விகுதியாற் குறிக் கப்படும் சாத்தனை முன்வைத்துச் சாத்தனுடைய கச்சு என மாறிக் கூறிக் காண்க.

அதனானுங் குறிப்பாற் காலமுணர்த்துவன வினைக்குறிப்பே யென்பது பெறப்படுமென்க.

தன்னினமுடித்த லென்பதனான், ஐயாட்டையன், துணங்கையன் எனச் சிறுபான்மை காலமும் வினைசெய்யிடமும் பற்றி வருவனவுங் கொள்க.

(கக)

உகச. அன்மையி னின்மையி னுண்மையின் வன்மையி னன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளு மென்ன கிளவியுங் குறிப்பே காலம்.

இதன் பொருள்: அன்மை இன்மை உண்மை வன்மை யென்னும் பொருள்பற்றி வருவனவும், அவைபோல்வன பிறவும், குறிப்புப்பொருண்மையோடு பொருந்தும் எல்லாச்சொல்லுங் காலங் குறிப்பா னுணரப்படும் என்றவாறு.

காலங் குறிப்பா லுணரப்படுமெனவே,

இவையும் வினைக்

குறிப்பா மென்றவாறு.

உதாரணம்: அல்லன், அல்லள், அல்லர்

எனவும்; இலன்,

இலள், இலர் எனவும்; உளன், உளள், உளர்

எனவும்; வல்லன்,

. . . . . . .

வலலள, வலலா எனவும வரும.

பொதுப்படக் கூறியவதனன்,

பொருளிலன், பொருளிலள்,

பொருளிலர் என உடைமைக்கு

மறுதலையாகிய இன்மையுங்

கொள்ளப்படும்.

---

ஐயாட்டையன் காலம்பற்றி வந்தது.

துணங்கையன் வினைசெய்

யிடம்பற்றி வந்தது. துணங்கைக்கூத்து

ஆடுமிடத்தன் என்பது

பொருள்.

(கஎ) இன்மை உண்மைக்கு மறுதலையும், உடைமைக்கு மறுதலையும் என இருவகைப்படும். ஆதலின், 'பொதுப்படக் கூறிய தனன்' என்றார்.

உ-ம்: உண்மைக்கு மறுதலை : சாத்தனிலன்.

உடமைக்கு மறுதலை : சாத்தன் பொருளிலன்.

சாத்தன் உண்மைப்பொருள்; அவனுக்குப் பொருள் உடைமையாகும்,



இவை ஒரு வாய்பாட்டேற்றிப் பிறத்தலின், வேறு கூறினார். பண்போடு இவற்றிடை வேற்றுமையென்னையெனின்:— இன்மை, பொருட்கு மறுதலையாகலின், பொருளின்கட்

கிடக்கும் பண்பெனப்படாது.
அன்மையும் உண்மையும் பண்பிற்குமொத் தலிற்
பண்பெனப்படா. என்னை? குணத்திற்குக்
குணமின்மை யின். வன்மை—ஆற்றல்; அதுவுங்
குணத்திற்கும் உண்டாகலிற் குணமெனப்படாது
ஊறெனின், அது பண்பாயடங்கும். அதனாற்
பொருட்கட் கிடந்து தனக்கோர் குணமின்றித்
தொழிலின்
வேறாய குணத்தின் அன்மை முதலாயின வேறெனப்படும். பண்
பெனினுங் குணமெனினு மொக்கும். இக் கருத்தேபற்றியன்றே,
ஆசிரியர் இன்மையும் உண்மையு முணர்த்துஞ்
சொற்களை முடிப்பாராயிற்றென்பது.

---

சாத்தன் இலன் என்புழி இன்மை சாத்தனாகிய பொருளினது
இன்மையை உணர்த்தி நிற்றலின் இன்மை பொருட்கு
மறுதலையென்றார். இன்மை பொருளினது இன்மையை
(அபாவத்தை) உணர்த்தலின் பொருளின்கட்
கிடக்கும் பண்பெனப்படாது. அன்மையும், உண்மை
யும் பண்பிற்குமொத்தலிற் பண்பெனப்படா என்றது—அன்மை
உண்மைகள் பொருளின் அன்மை உண்மைகளை உணர்த்தி வருதலே
யன்றிக் கருமை வெண்மையன்று, வெண்மை உண்டு எனப் பண்பின்
அன்மை உண்மைகளை உணர்த்தியும் வருதலின் குறிப்பு வினைமுற்
றன்றிப் பண்பாகா. பண்பாகா என்றது என்னை
எனின்? குணத் திற்குக் குணமில்லை; ஆதலால்
என்க,

வன்மை—ஆற்றல்; அதுவும் குணத்திற்கும் உண்டாதலிற் குணமெனப்படாது என்றது சாத்தன் வல்லன் எனப் பொருட்குளதாயதுபோல, அறிவு வல்லது எனக் குணத்திற்கும் வன்மை உளதாதலின் குணமெனப்படாது. என்னை? குணத்திற்குக் குணமின்மையின் என்றபடி.

ஊறு—பரிசம், அது பண்பாயடங்குமென்றது—நிலம் வலிது என்புழி நிலத்திற்கு வன்மையாகிய . பரிசம் குணமாதலின் அது பண்பாயடங்கும் என்றபடி.

பொருட்கட் கிடந்து தனக்கோர் குணமின்றித் தொழிலின் வேறுயது குணம் என்றது குணமாவது பொருளின்கண் உளதாய்த் தனக்கொரு குணமின்றித் தொழிலின் வேறுயது என்றபடி. பொருட்கன்றிக் குணத்திற்குக் குணமில்லை யென்பது தருக்கநூற் றுணிபாதலிற் தனக்கொரு குணமின்றி யென்றார்.

இன்மையும் உண்மையும் என்னுஞ் சொற்களை முடித்தலை, எழு—சஙo-ம் கஉஉ-ம் சூத்திரங்களை நோக்கி உணர்க.



என்னகிளவியுமென்றது அன்னபிறவுமெனப்பட்டவற் றையேயாகக் கொள்க.

குறிப்பேகாலம் என்றவழிக் குறிப்பென்றது குறிக்கப் படுவதனை.

அன்னபிறவுமென்றதனுன், நல்லன், நல்லள், நல்லர்; தீயன் தீயள், தீயர்; உடையன், உடையள், உடையர் என வித்தொடக் கத்தனவெல்லாங் கொள்க. (கஎ)

உகரு.

பன்மையு மொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வருஉங்
காலக் கிளவி யுயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

இதன் பொருள்: பன்மையும் ஒருமையுமாகிய பால் விளக்கிக்

குறிப்புப்பொருண்மையுடையவாய்
வரும் வினைச்சொல், மேல்வரு முயர்திணைக்கட்
கூறிய தெரிநிலைவினையோடொக்கும் என்றவாறு.

தெரிநிலைவினையோடொத்தலாவது,

உயர்திணைத் தெரிநிலை
வினைக்கோதிய ஈற்றுள் தமக்கேற்பனவற்றோடு வினைக்குறிப்பு வந்தவழி, அவ்வவ்வீற்றான் அவ்வப்பாலும் இடமும் விளக்கலாம்.

மேல் வினைக்குறிப்பு இன்னபொருள்பற்றி வருமென்றதல்லது இன்னவீற்றான் இன்னபால் விளக்குமென்றிலர்; அதனான் அஃ தீண்டுக் கூறினர்.

---

குணம் திரவியந் தோன்றிய பிற்கணத்துத் தோன்றுமென்பது தருக்கநூன் முடிபு. நன்மை தீமை உடைமை என்பன ஒருபொருளில், அப்பொருளைக்கண்ட பிற்கணத்தில், (அஃதாவது இரண்டாங் கணத்தில்) தோன்றுவன அல்ல. ஆதலின் அவைகள் பண்பெனப்படா.

கருமையன் என்புழிக் கருமைபோல, நன்மை
தீமை உடைமை என நில்லாது, கரியன் என்பதுபோல்
நல்லன் தீயன் உடையன்
என்றிங்ஙனம் வந்தமையின் அதுச்சொல் வேற்றுமை உடைமையும் ஆகா.

கூறப்பட்ட பொருட்கண் வந்தனவாயினும், இல்லை, இல், இன்றி என்பன பால் விளக்காமையின், அவற்றை நீக்குதற்குப்

'பன்மையு மொருமையும் பாலறி வந்த' வென்றார்.

ஒருபொருட்கட் பலவாய்பாடும் ஒருபொருட்கண் ஒருவாய் பாடும் பற்றி வரும் இருதிறமும் எஞ்சாமற் றழுவுதற்கு,

'அன்னமரபின்' என்றார்.

தன்மையும் படர்க்கையும் உணர்த்துந் தெரிநிலைவினை யீற்றுட் குறிப்புவினைக்கேற்பன :—அம், ஆம், எம், ஏம், என், ஏன் என்னுந் தன்மையீறும், அன், ஆன், அள், ஆள், அர், ஆர்,

என்னும் படர்க்கையீறும் எனப்

பன்னிரண்டாம்.

உதாரணம் : கரியம், கரியாம், கரியெம், கரியேம், கரியென், கரியேன் எனவும்; கரியன், கரியான், கரியள், கரியாள், கரியர், கரியார் எனவும் அவ்வவ்வீறு அவ்வவ்விடமும் பாலும் விளக்கியவாறு கண்டுகொள்க. ஒழிந்த பொருட்கண்ணு மொட்டிக்கொள்க.

ஆன், ஆள், ஆர் என்பன

நிலப்பொருண்மைக்கண் அல்லது. பிறபொருட்கட் பயின்று வாரா.

இன்னும், மேலைக் கிளவியொடு வேறுபாடிலவென்றதனுன் வந்தனன் எனத் தெரிநிலைவினை தொழின்மை மேற்படத் தொழிலுடைப்பொருள் கீழ்ப்பட முற்ருய் நின்றுணர்த்தியவாறுபோல, உடையன் எனக் குறிப்பு வினையும் உடைமைமேற்பட உடையான் கீழ்ப்பட முற்ருய் நின்றுணர்த்துதலுங் கொள்க. வந்தான், உடையான் எனப் பெயராயவழித் தொழிலுடைப் பொருளும் உடையானும் மேற்பட்டுத் தோன்றுமாறறிக. இஃது

---

(கஅ) ஒரு பொருட்கட் பலவாய்பாடு—அதுச்சொல் வேற்றுமை உடைமையானும் என்பது போல்வன. ஒரு பொருட்கண் ஒருவாய்பாடு—அன்மை முதலாயின. நிலப்பொருண்மை என்றது—கண்ணென் வேற்றுமை நிலத்தினுனு மென்றதை.

மேற்படல்–பொருள் சிறத்தல். கீழ்ப்படல்–பொருள் சிறவாமை. பெயர்–வினையாலணையும் பெயர். வந்தான் உடையான் என்பன முற்ருயவழிப் பகுதியிற் பொருள் சிறந்துநிற்கும். வினையாலணையும்



'அஃறிணை மருங்கின் — மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே' (சொல்-௨௨௧.)

என்பதற்கு மொக்கும். (கஅ)

உகக௬. அ ஆ வஎன வரூஉ மிறுதி
யப்பான் மூன்றே பலவற்றுப்
படர்க்கை.

உயர்திணைவினை யுணர்த்தி, இனி
யஃறிணைவினை யுணர்த்து கின்றார்.

இதன் பொருள்: அகரமும்
ஆகாரமும் வகரவுயிர் மெய்யு மாகிய ஈற்றையுடைய
அக்கூற்று மூன்றும் அஃறிணைப் பன்
மைப்படர்க்கையாம் என்றவாறு.

அகரம் மூன்றுகாலமும்பற்றி வரும்.
ஆகாரம்; எதிர்மறை வினையாய் மூன்றுகாலத்திற்கும்
உரித்தாயினும், எதிர்காலத்துப் பயின்று வரும்.
அகரம், இறந்தகாலம் பற்றி வருங்கால், கடதற
வென்னு நான்கன்முன், அன் பெற்றும்,
பெறாதும் வரும். ஏனை யெழுத்தின்முன் ரகார
ழகார வெழுத்து இன் பெற்று வரும்.

யகரத்தின்முன் சிறுபான்மை இன்னேயன்றி அன்பெற்றும் பெறுதும் வரும்.

நிகழ்காலத்தின்கண் நில், கின்றென்பனவற் ரேடு அன்பெற்றும் பெறுதும் வரும்.
எதிர்காலத்தின்கண் பகர வகரத்தோடு அன் பெற்றும் பெறுதும் வரும்.

உதாரணம்: தொக்கன தொக்க, உண்டன

உண்ட, வந்தன வந்த, சென்றன சென்ற எனவும்; அஞ்சின எனவும்; போயின போயன போய எனவும்; உண்ணுநின்றன உண்ணு நின்ற, உண்கின்றன உண்கின்ற எனவும்; உண்பன உண்ப, வருவன வருவ எனவும் வரும்.

உரிஞுவன உரிஞுவ என உகரத்தோடு ஏனையெழுத்துப்பேறும் ஏற்றவழிக் கொள்க.

---

பெயராயின் விகுதியிற் பொருள் சிறந்துநிற்கும். பொருள் சிறந்து நிற்குமிடத்தை எடுத்தும் அயலெழுத்தை நலிந்தும் ஏனையெழுத்துக் களைப் படுத்துங் கூறுக என்பர் சிவஞானமுனிவர். சேனவரையர் வினைமுற்றி னீற்றைப் படுத்துக்கூறப் பெயராகும் என்பர். ஆதலின் இஃது ஆராயத்தக்கது.

(கக) இங்கே உண்குவ என்பதில் வ

விகுதியென்று கூறும் ஆசிரியர் உண்குவம் என்பதில்
வம் விகுதியென்று கூறுமையின் உ



ப, செல்வ என்னுந் தொடக்கத்தன. அகரவீறுதலும்
தலுமுடைய வென்பது இளவியாக்கத்துட் கூறினும்.

ஆகாரம் காலவெழுத்துப் பெறுது, உண்ணு, தின்ணு என
வரும். வகரம், உண்குவ, தின்குவ என வெதிர்காலத்திற் குரித்
தாய்க் குகரமடுத்தும், ஓடுவ, பாடுவ எனக் குகரமடாதும்
வரும். உரினுவ, திருமுவ என உகரம் பெறுதலும் ஏற்றவழிக்
கொள்க. ஒழிந்தவெழுத்தோடும் ஒட்டிக் கொள்க. (கக)

உகள. ஒன்றன் படர்க்கை தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

**இதன் பொருள் :** ஒன்றனையுணர்த்தும் படர்க்கைவினையா
வது, தறடவென்பனவற்றை ஊர்ந்து நின்ற குற்றியலுகரத்தை
ஈறுகவுடைய சொல்லாம் என்றவாறு.

தகரவுகரம் மூன்றுகாலத்திற்குமுரித்து. றகரவுகரம் இறந்த காலத்திற்குரித்து. டகரவுகரம் மூன்றுகாலத்திற்குமுரிய வினைக் குறிப்பிற்கல்லது வாராது. அஃதேல், வினைக்குறிப்புக் கூறும் வழிக் கூறாது ஈண்டுக் கூறியதென்னையெனின்:— 'அஃறிணை மருங்கின் மேலைக்கிளவியொடு வேறுபாடிலவே' (சொல்-உஉக.) என வினைக்குறிப்புப் பாலுணர்த்துமாறு தெரிநிலைவினையோடு மாட்டெறியப் படுமாகலின், டகரமூர்ந்த குற்றியலுகரம் தெரி நிலைவினைக் கேறாகாமையின், மாட்டேற்று வகையாற் பாலுணர்த் துதல் பெறப்படாதாம்; அதனால் ஈண்டு வைத்தார்.

---

அ எனவும் பிரிக்கலாம் என்பது அவர் கருத்துப்போலும். ஏனை எழுத் துப் பேறு என்றது அன்னை. உரினவன என்பது உகரமும் அன் னும் பெறுதல் காண்க. ஒழிந்த எழுத்தென்றது முதனிலையீற்றெழுத் துள் இங்கே எடுத்துக்காட்டியன ஒழிந்தவற்றை.

(உ0) டகரமூர்ந்த குற்றியலுகரம் தெரிநிலைவினைக் கேறாகாமை யின் மாட்டேற்று வகையாற் பாலுணர்த்துதல் பெறப்படாதாம்; அதனா லீண்டுவைத்தாரென்றது — 'பன்மையும் ஒருமையும் பாலறி வந்த' என்னும் உசு-ம் சூத்திரத்தால் ஒருமையீறு இவை, பன்மை யீறு இவையென விதந்து கூறிய தெரிநிலைவினை விகுதிகளே குறிப்பு வினையினும் வருதலின் அவைபோலக் குறிப்பு வினைக்கும் ஒருமை



உதா

தகரவுகரம், இறந்தகாலத்து வருங்கால், புக்கது, உண்டது, வந்தது, சென்றது,

போயது, உரிஞியது எனக் கடதறவும்
யகாமுமாகிய உயிர்மெய்ப்பின் வரும்.
போனது என னகர உயிர்மெய்ப்பின் வருவதோ
வெனின் :—அது சான்ஞோர் செய் யுளுள்
வாராமையின், அது சிதைவெனப்படும்.
நிகழ்காலத்தின் கண், நடவாநின்றது,
நடக்கின்றது; உண்ணுநின்றது, உண் கின்றது
என, நில், கின்றென்பனவற்ேறாடு அகரம்
பெற்று வரும். எதிர்காலத்தின்கண், உண்பது,
செல்வது எனப் பகர வகரம் பெற்று வரும்.
றகரவுகரம், புக்கன்று, உண்டன்று,
வந்தன்று, சென்றன்று எனக்
கடதறவென்பனவற்றின்முன் அன்பெற்று
வரும். கூயின்று, கூயிற்று; போயின்று,
போயிற்று என வினையெழுத்
தின்முன் இன் பெற்று வரும். ஆண்டு இன்னின் னகரந் திரிந்
தும் திரியாதும் வருதல் கொள்க. வந்தின் றென்பதோ
வெனின் :—அஃது எதிர்மறுத்தலை
யுணர்த்துதற்கு வந்த இல்லி னது லகரம்
னகரமாய்த் திரிந்த எதிர்மறைவினையென மறுக்க.
அஃ தெதிர்மறையாதல், வந்தில,
வந்திலன், வந்திலள், வந்திலர் என வரும் வினைப்

பாற்சொல்லா னறிக.

டகரவுகரம் குண்டுகட்டு, குறுந்தாட்டு, என வரும். (உ௦)

உகஅ. பன்மையு மொருமையும் பாலறி வந்த வம்மூ விரண்டு மஃறிணை யவ்வே.

இதன் பொருள் : பன்மையும் ஒருமையுமாகிய பாலறிய வந்த அவ்வாறீற்றுச்சொல்லும் அஃறிணையனவாம் என்றவாறு.

பன்மையு மொருமையும் பாலறிவந்தவென்பதற்கு முன் னுரைத்தாங் குரைக்க.

---

பன்மை கொள்கவென மாட்டெறிகின்றவர் டுகரத்தையும் அஃறிணைக் குறிப்பு வினைச் சூத்திரத்துட் கூறிவிட்டுப் பின் மாட்டெறிந்தால், டுகரம் தெரிநிலை வினைக்கின்மையின், டுகரம் ஒருமைப்பாலுணர்த்துமோ, பன்மைப்பாலுணர்த்துமோ என ஐயம் வருமாதலின் அக் குறிப்பு வினைச் சூத்திரத்தோடு வையாது, அஃறிணைத் தெரிநிலை வினை முற்று ஒருமைப்பா லுணர்த்துமிச் சூத்திரத்தோடு

வைத்தாரென்பது கருத்து. போனது—போயினது என்பதன் சிதைவு. போயின்று எனத் திரியாதும் போயிற்று எனத் திரிந்தும் வந்தது என்க.
33



இதனாற் பயன், அஃறிணைச்சொல் ஆறே பிறிதில்லையென வரையறுத்தலெனக் கொள்க. (உக)

உகக. அத்திணை மருங்கி னிருபாற் கிளவிக்கு
மொக்கு மென்ப வெவனென் வினவே.

இதன் பொருள்: எவனென்னும் வினைச்சொல் மேற் கூறப் பட்ட அஃறிணை யிரண்டுபாற்கும் உரித்தென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

**உதாரணம் :** அஃதெவன், அவையெவன் என வரும். னகரவீறுய் இரண்டுபாற்கும் பொதுவாய் வருதலின், இதனை வேறு கூறினர். அஃதேல் நுமக்கிவன் எவனும் என வுயர் திணைக்கண்ணும் வருமாலெனின் :—ஆண்டு அது முறைபற்றி நிற்றலின், அஃறிணைக்கண் வந்ததெனவே படுமென்பது. அஃதேல், நுமக்கிவனென்னமுறையனும் என்பதல்லது என்ன முறை யாம் என்பது பொருந்தாதெனின் :—என்னமுறை என்பது ஆண்டு முறைமேனில்லாது ஒற்றுமை நயத்தான் முறையுடை யான்மேனிற்றலின், அமையுமென்க. எவனென்பதோர்பெயரும் உண்டு ; அஃதிக்காலத்து என்னென்றும் என்னையென்றும் நிற்கும். ஈண்டுக் கூறப்பட்டது வினைக்குறிப்புமுற்றென்க. (உஉ)

உஉ௦. இன்றில வுடைய வென்னுங் கிளவியு
மன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்

பண்புகொள் கிளவியு முளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியு
மொப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
யப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்.

---

(உக) அஃறிணைச்சொல் ஆறேயென்பது, விகுதி ஆறுதலைக் குறித்தது.

(உஉ) 'எவன்' என்பது குறிப்புவினைக்கண் எவ்வியல்பினது என்னும் பொருள்பட வந்து காலமுணர்த்தும். வினைப்பெயராயும் வரும் என்று சேனாவரையர் முதலியோர் கூறுவதன்றிப் பரிமேலழகரும், 'கற்றதனாலாய பயனென்கொல்' என்புழி எவன் என்னும் வினைப்பெயர் என் என மரீஇயிற்று என்று கூறுதல் காண்க.

இதன் பொருள்: இன்று, இலவென்பன முதலாகிய பத்தும் வினைக்குறிப்புச் சொல்லாம் என்றவாறு.

அவற்றுள், இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல, உள என்பன தம்மையுணர்த்தி நின்றன. அல்லன பொருளுணர்த்தி நின்றன.

உதாரணம்: இன்று, இல, கோடுடைத்து, கோடுடைய, அதுவன்று, அவையல்ல, உள என வரும். ஈண்டும், கோடின்று, கோடில என உடைமைக்கு மறுதலையாய இன்மைபற்றி வருவனவுங் கொள்க.

உடையவென்பது முதலாயவற்றைச் செய்யுளின்ப நோக்கி, மயக்கங் கூறினார்.

அவ்வேழனையும் பொருள்பற்றியோதாராயினர்; கிளந்தோதியவழியுஞ் சூத்திரஞ் சுருங்குமாகலானென்பது.

உளதென்பது பெருவழக்கிற்றன்மையின், உளவென்பதே கூறினார். அது தன்னினமுடித்தலென்பதனாற் கொள்ளப்படும்.

பண்புகொள்கிளவி—கரிது, கரிய; செய்யது, செய்ய என வரும்.

பண்பினாகிய சினைமுதற்கிளவி—நெடுஞ்செவித்து, நெடுஞ்செவிய என வரும். பண்படுத்த சினைபற்றியல்லது அவ்வினைக் குறிப்பு நில்லாமையின், பண்பினாகியவெனப் பண்பை முதனிலை

யாகக் கூறினர். பெருந்தோளன் என உயர்திணைக்கண்ணும் பண்படுத்துவருதல் ஒன்றெனமுடித்த லென்பதனாற் கொள்க. வேற்றுமைப்பொருள்பற்றி வருங்கால், பிறிதின்கிழமையும் உறுப்பின்கிழமையல்லாத தற்கிழமையும் ஏழாம்வேற்றுமைப் பொருண்மையும் பற்றி அஃறிணைவினைக்குறிப்புப் பயின்று வாராமையின் சினைக்கிழமையே கூறினர். அப்பொருள்பற்றிப் பயிலாதுவருவன

(௨௩) பொருள்பற்றி என்றது — 'அதுச்சொல் வேற்றுமை உடைமையானும்' என்பதுபோல பொருள்பற்றியோதுதலை. கிளந்து ஓதல்—இன்னதென எடுத்துக்கூறல். அப்பொருள் என்றது பிறிதின் கிழமையும், தற்கிழமையும், ஏழாம் வேற்றுமைப் பொருண்மையும் என்னு மூன்றையும்.



உரையிற் கோடலென்பதனாற் கொள்ளப்படும். 'சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்' என்பதனாற் கொள்ளினு மமையும்.

'அறிந்த மாக்கட் டாகுக தில்ல
மெல்விரன் மந்தி குறைகூறுஞ் செம்மற்றே'

எனவும்;

'அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே' (புறம்—௧௭௩) எனவும் வரும். 'வடாது' 'தெனாது' (புறம்—௬) என்பனவும் ஏழாம் வேற்றுமைப் பொருண்மைக்கண் வந்த வினைக்குறிப்பு; பெயருமாம்.

ஒப்பொடு வரூஉங் கிளவி—பொன்னன்னது, பொன்னன்ன என வரும். ஒப்பொடு வருதலாவது பொருள்பற்றி வருதல். வழக்குப்பயிற்சி நோக்கிப் பத்தெனவரையறுத்தவாறு. (உ௬)

உஉக. பன்மையு மொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி யஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

**இதன் பொருள்:** பன்மையும் ஒருமையுமாகிய பால் விளக்கிக் குறிப்புப் பொருள்பற்றி வரும் வினைச்சொல் மேற் கூறப்பட்ட அஃறிணை வினையோடொக்கும் என்றவாறு.

வாய்பாடுபற்றியும் பொருள்பற்றியும் கூறிய இருவகையும் எஞ்சாமற் றழுவுதற்கு 'அன்னமரபின்' என்றார்.

ஒத்தலாவது, அஃறிணை வினைக்கோதிய ஈற்றுட் பொருந் துவன வினைக்குறிப்பின்கண் வருங்காலும், அவ்வவ்வீற்றான் அவ்வவ் விடமுங் காலமும் விளக்குதல்.

---

மாக்கட்டு—பிறிதின் கிழமைப் பொருள்பற்றி வந்தது. செம்மற்று—பண்புத் தற்கிழமைபற்றி வந்தது. அணித்து, சேய்த்து ஏழாம் வேற் றுமைப் பொருண்மை பற்றி வந்தன. பொருள்பற்றி வருதல்—ஒப்புப் பொருள் பற்றி வருதல்.

(உச) வாய்பாடுபற்றி வருவன—' இன்று, இல ' என்பனபோல வருவன. பொருள்பற்றிவருவன—' அதுச்சொல் வேற்றுமையுடைமை

பொருந்துவனவாவன ஆகாரமும் வகாரமுமொழித்துக் குற்றுகர மூன்றும் அகாரமுமாம். அவற்றுட் டகாரமூர்ந்த குற்றுகரம் 'ஒன்றன் படர்க்கை' (சொல்—உகஎ) என்புழிக் கூறுத லான், ஒழிந்தமூன்றும் ஈண்டுக்கொள்ளப்படும். அவை அப்பால் விளக்குதல் மேற்காட்டப்பட்டனவற்றுட் கண்டுகொள்க. (உச)

உஉஉ. முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
யின்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த வென்னு
மம்முறை நின்ற வாயெண் கிளவியும்
திரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி
யிருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய.

**இதன் பொருள்:** முன்னிலை முதலாகச் செய்தவென்ப தீறாகக் கூறிய முறையானின்ற எட்டுச்சொல்லும், பொதுமையிற் பிரிந்து ஒருகால் உயர்திணையுணர்த்தியும், ஒருகால் அஃறிணை யுணர்த்தியும், வேறுபடுந்தொழிலையுடையவாய், இருதிணைச் சொல்லாதற்கும் ஒத்தவுரிமைய என்றவாறு.

முன்னிலை வினைச்சொல்லாவது எதிர்முகமாய் நின்றான் தொழிலுணர்த்துவது.

வியங்கோள் ஏவற்பொருட்டாய் வருவது. வாழ்த்துதன் முதலாகிய பிறபொருளுமுடைத்தாகலின், இக்குறி மிகுதிநோக்கிச் சென்ற குறியென வுணர்க.

வினையெஞ்சுகிளவி வினையை யொழிபாகவுடைய வினை.

இன்மை செப்பல் இல்லை, இல் என்பன.
வேறென்பது தன்னை யுணர்த்தி நின்றது.

யானும்' என்பதுபோல வருவன. ஒழிந்த மூன்றுவன—டுகர மொழிந்த குற்றுகர மிரண்டும் அகரமும்.

(உரு) இக்குறி என்றது—வியங்கோள் என்ற பெயரை. வினையை ஒழிபாகவுடைய வினையென்றது—வினைச்சொல்லைத் தனக்குமுடிக்குஞ் சொல்லாகவுடைய வினைச்சொல் என்றபடி. தன்னை உணர்த்தி நிற்றல்—சொல்லாகிய தன்னை உணர்த்திநிற்றல்.



செய்ம்மனவென்பது மனவீற்று முற்றாய் எதிர்காலமுணர்த்தும். செய்புமென்பது முற்றும் எச்சமுமாகிய இருநிலைமையு முடைத்தாய் உம்மீற்றான் நிகழ்காலமுணர்த்தும். செய்தவென் பது அகரவீற்றெச்சமாய் இறந்தகாலமுணர்த்தும்.

செய்ம்மன முதலாகிய மூன்றுவாய்பாட்டானும், அவ்வீற்ற வாய்க்

காலமுணர்த்தும் உண்மன, உண்ணும், உண்ட என்னுந் தொடக்கத்தன வெல்லாந் தழுவப்பட்டன. அவற்றான் அவை தழுவப்பட்டவாறென்னையெனின்:—எல்லாத்தொழிலுஞ் செய்தல் வேறுபாடாகலின், பொதுவாகிய செய்தல் எல்லாத்தொழிலையும் அகப்படுத்து நிற்கும்; அதனான் அவற்றான் அவை தழுவப்படு மென்க. அவை பொதுவுஞ் சிறப்புமல்லவேல், என் செய்யா நின்றான் என்று வினயவழி, உண்ணா நின்றான் எனச் செப்புதல் இயையாதாமென்க. இது செய்து செய்பு என்பனவற்றிற்கு மொக்கும்.

அஃதேல், சிலவற்றை ஈற்றானுணர்த்திச் சிலவற்றை வாய்பாட்டானுணர்த்திய தென்னையெனின் :—அம்மீறும் அன்னீறும் ஐயீறும் முதலாகிய சொற்கள் காலப்பன்மையான் வரும் வாய் பாட்டுப் பன்மையாற் சூத்திரம் பெருகுமென்றஞ்சி, அவற்றை ஈற்றானுணர்த்திக் காலவேறுபாடு இலேசாற்கொள்ள வைத்தார். காலப்பன்மையில்லனவற்றை வாய்பாட்டானு

முணர்த்துப, ஈற்றானு முணர்த்துப.

முற்றுதலும்

பலவாய்பாட்டாற் பயின்றுவருதலு முடைமை யான், முன்னிலைவினையை முன் வைத்தார். ஏவற்பொருண்மை முன்னிலைவினைக்கண்ணு முண்மையிற் பொருளியையபுடைத்தாக

எல்லாத்தொழிலும் செய்தல் வேறுபாடென்றது, தொழிலெல் லாம் செய்தலின் வேறுபாடே என்பதாம். எனவே நடத்தல் வருதல் முதலிய தொழில்களெல்லாம் செய்தலின் வேறுபாடென்பது கருத்து. சிலவற்றை ஈற்றானுணர்த்தியதென்றது, அம்மீறு முதலியன வாய் பாட்டானுணர்த்தப்புகின் இறப்பு—நிகழ்வு—எதிர்வு என்னும் கால வேறுபாட்டால் பல வாய்பாடுகளாய் விரியும். அதனாற் சூத்திரம் பெருகும். அதுபற்றி ஈற்றானுணர்த்தினாரென்பது. இலேசு என்றது ௨௨ம் சூத்திரத்து, 'தோன்றிவரும் வினைச்சொல்' என்னாது 'கால



லானும், இடங்குறித்து முற்றாய் வருத லொப்புமையானும்,

அதன்பின் வியங்கோள் வைத்தார். அதன்பின், முற்றுதலொப்பு மையான் இன்மைசெப்பல் வேறெனகிளவி செய்ம்மன வென் பனவற்றை வைத்தன் முறைமையாயினும், முற்றின்கண் வினை யெச்ச முண்மையானும், ஈற்றுப்பன்மையொடு பயின்று வருத லானும், வினையெச்சம் வைத்தார். இன்மைபற்றி வரும் வினை யெச்சமு முண்மையான், அதனோடியைய இன்மைசெப்பல் வைத்தார். வினைக்குறிப்பாத லொப்புமையானும், செய்ம்மன விற் பயிற்சியுடைமையானும், அதன்பின் வேறெனகிளவி வைத்தார்; முற்றுதலொப்புமையான், அதன்பின் செய்ம்மன வைத்தார். முற்றுநிலைமையுமுடைத்தாகலின், அதன்பின் செய்புமென்பது வைத்தார். பெயரெச்சமாதலொப்புமையான், அதன்பின் செய்த வென்பது வைத்தார். இவ்வாறியைபுபற்றி வைத்தமையான், 'அம்முறை நின்ற' வென்றார்.

திரிபு வேறுபடூஉஞ் செய்தியவாகி யெனவே, வேறு வேறுணர்த்தினல்லது ஒரு சொற் சொல்லுதற்கண் இருதிணையு முணர்த்தாமை பெறுதும். (உரு)

உஉ௩. அவற்றுள்
முன்னிலைக் கிளவி
இ ஐ ஆயென வரூஉ மூன்று
மொப்பத் தோன்று மொருவர்க்கு மொன்றற்
[கும்.

**இதன் பொருள் :** கூறப்பட்ட விரவுவினைகளுள், முன்னி லைச்சொல், இகரவீறும் ஐகாரவீறும் ஆயீறுமாகிய மூன்றும் ஒருவற்கும் ஒருத்திக்கும் ஒன்றற்கும் ஒப்பச்செல்லும் என்ற

வாறு.

மொடு வருஉம்' என்று கூறிய இலேசானென்றபடி. இடங்குறித்து வருதல்—முன்னிலைபோலத் தானும் இடங்குறித்து வருதல். ஈற்றுப் பன்மையொடு பயிறலாவது, பலவீற்றோடு பயிறல். செய்து, செய்பு என ஈறு பலவாதல் நோக்குக.



முன்னிலைக்கிளவி யென்பதற்கு முடிபு 'அவைதாம் அம்மா மெம்மேம்' (சொல்-உ0உ) என்புழி 'அவைதாம்' என்பதற் குரைத்தாங் குரைக்க.

இகரம் கடற வூர்ந்து எதிர்காலம் பற்றி வரும். ஐகாரம் அம் மீற்றிற்குரிய எழுத்துப் பெற்றும், ஆயீறு ஆமீற்றிற்குரிய எழுத்துப் பெற்றும், மூன்றுகாலமும் பற்றி வரும்.

உதாரணம் : உரைத்தி, உண்டி, தின்றி

எனவும்; உண் டனே, உண்ணாநின்றனே, உண்பை எனவும்; உண்டாய், உண்ணா நின்றாய், உண்பாய் எனவும் வரும். ஒழிந்தவெழுத்தோடு மொட்டிக்கொள்க. 'ஐயசிறிதென்னேயூக்கி' (குறிஞ்சிக்கலி-க.) என இகரம் சிறுபான்மை ககரம் பெற்று வரும்.

உண், தின், நட, கிட என்னுந் தொடக்கத்து முன்னிலை ஒருமை பெறுமாறென்னே யெனின்:—அவை ஆயீறுதல் எச்ச வியலுட் பெறப்படு மென்க. (உசு)

உஉச. இர் ஈர் மின்னென வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினுஞ்
சொல்லோ ரனைய வென்மனர் புலவர்.

இதன் பொருள்: இர், ஈர், மின்னென்னும் ஈற்றை யுடைய மூன்றுசொல்லும், பல்லோர்கண்ணும் பலவற்றின்

கண்ணுஞ் சொல்லுதற்கண், ஒத்தவுரிமைய என்றவாறு.

இர் ஈறு அர் ஈற்றிற்குரிய எழுத்துப் பெற்றும், ஈரீறு ஆரீற்றிற்குரிய எழுத்துப் பெற்றும், மூன்றுகாலமும் பற்றி வரும். மின்னீறு பிறவெழுத்துப் பெறாது, ஏற்றவழி உகரம் பெற்று, எதிர்காலம் பற்றி வரும்.

---

(உகூ) ஊக்கி—ஊக்குவாய். ககர ஒற்று—எதிர்காலங் காட்டி வந்தது. நட, வா முதலியன முன்னிலை ஏவல். அவை ஆய்விகுதி குன்றி நின்றனவாதலின் அதற்குரிய ஒருமை உணர்த்தி நின்றன என்றபடி. உண்ணாய் வாராய் என ஒருமை உணர்த்தல் காண்க.



உதாரணம்: உண்டனிர், உண்ணுநின்றனிர், உண்குவிர் எனவும்; உண்டீர்,

உண்ணுநின்றீர், உண்குவீர் எனவும்; உண் மின், தின்மின், உரிஞுமின் எனவும் வரும். ஒழிந்த வெழுத் தோடு மொட்டிக் கொள்க.

முன்னிலைவினைக்குறிப்பு, உயர்திணைவினைக்குறிப்பிற் கோதிய பொருள்பற்றி ஐகாரமும் ஆயும் இருவும் ஈருமென்னு நான்கீற் றவாய், கழலினை, நாட்டை, பொன்னன்னை கரியை எனவும்; கழலினாய், நாட்டாய், பொன்னன்னாய், கரியாய் எனவும்; கழ லினிர், நாட்டினிர், பொன்னன்னிர், கரியிர் எனவும்; கழலினீர், நாட்டினீர், பொன்னன்னீர், கரியீர் எனவும் வரும். ஒழிந்த பொருளோடு மொட்டிக் கொள்க. போறி என இகரவீற்று வினைக்குறிப்பு முண்டாலெனின்:— போன்றனன், போன்றான் என்பனபோல வந்து தெரிநிலை வினையாய் நின்றதென மறுக்க.

அஃறிணை வினைக்குறிப்பும் உயர்திணை வினைக்குறிப்பிற் கோதிய பொருள்பற்றி வருதலின், அவற்றையெடுத்தோதிற் றென்னையெனின்:— அன்மை முதலாயின

பொருள் பற்றி வந் தனவெனக் கிளந்தோதலாஞ் சுருக்கத்தனவாகையானும், சினை முதற்கிளவி பண்புமடுத்து வருதல் உயர்திணை யதிகாரத்துப் பெறப்படாமையானும், அவற்றையோதுவார் வினைப்பொருளு முடனோதினர்.

---

(உஎ) போறி என்பது சேறி என்பதுபோல நின்ற தெரிநிலை வினைமுற்று. பொருள்பற்றியோதல் வேறு, கிளந்தோதல் வேறு. ஆதலால் இவ்வாக்கியம் அன்மை முதலாயினபொருள்பற்றி வந்தன கிளந்தோதலாஞ் சுருக்கத்தனவாகையானும் என்றிருத்தல் வேண்டும். முதலாயின பொருள்பற்றி வந்தன என்பது முதலாய பொருள்பற்றி வந்தன எனப் பொருள் கொள்ளப்படும். இங்ஙனம் பொருள்பட எழுதுவது சேனாவரையர் வழக்காதலை 'இயற்சொற்றிரிசொல் முத லாயின செய்யுளதிகாரத்து' என்னும் (எச்—சூ—ருஎ) வாக்கியத்தானு மறிக. எனவே இவ்வாக்கியப்போக்கு அறியாமையால் என என்பது பின் சேர்க்கப்பட்டது. சுருக்கத்தனவன்மையானும் என்ற பாடம்

பொருத்தமில்லை. ஏனெனின்? அது சுருக்கம்பற்றிச் சூத்திரஞ்செய்தார் என்பதற்குக் காரணமாகாமையின், சுருக்கத்தனவாகையானுமென்ற பாடமே பொருத்தமென்பதை, வினை உகூ-ம் சூத்திர உரையுள் வரும்
34



முன்னிலை வினைக்குறிப்புப் பலவாதலானும், எடுத்தோதா வழிப் படுவதோர் குறைபாடின்மையானும், இவற்றை யுய்த்துணர வைத்தா ரென்பது. அல்லது, எடுத்தோத்தில்வழி உய்த்துணர்வதெனினு மமையும்.

முன்னிலைவினையிற்றான் எதிர்காலம்பற்றி வரும் இகரத்தையும் மின்னையும் முதலும் இறுதியும் வைத்து, மூன்று காலமும்பற்றி வரும் நான்கிற்றையுந் தம்முளியைய இடை வைத்தார். அல்லது, பொருண்மை கருதாது சூத்திர யாப்பிற் கேற்ப வைத்தா ரெனினு மமையும். (உஎ)

உ௨௫. எஞ்சிய கிளவி யிடத்தொடு சிவணி
ஐம்பாற்கு முரிய தோன்ற லாறே.

இதன் பொருள்: முன்னிலை வினையொழித்து ஒழிந்த ஏழுவினைச்சொல்லும் மூன்றிடத்திற்கும் ஐந்துபாற்குமுரிய, தத்தம் பொருட்கண் தோன்றுமிடத்து என்றவாறு.

இவ்வாறு பொதுவகையான் எல்லாவிடத்தோடும் எல்லாப் பாற்கும் உரியவாதலெய்தினவெனினும், முன்னர் விலக்கப்படுவன வொழித்து ஒழிந்த விடமும் பாலும் பற்றி வருமாறு ஈண்டுக் காட்டப்படும்.

உதாரணம்: அவன் செல்க, அவள் செல்க, அவர் செல்க, அது செல்க, அவை செல்க எனவும்; உழுது வந்தேன், உழுது வந்தேம், உழுது வந்தாய், உழுது வந்தீர்,

உழுது வந்தான், உழுது வந்தாள், உழுது வந்தார், உழுதுவந்தது, உழுது வந்தன எனவும்; யானில்லை, யாமில்லை, நீயில்லை, நீயிரில்லை, அவனில்லை, அவளில்லை, அவரில்லை, அதுவில்லை, அவை

"அவ்வேழனையும் பொருள்பற்றி யோதாராயினர், இளங்கோதிய வழியுஞ் சூத்திரஞ் சுருங்குமாகலான்" என்பதனுமறிக. அவற்றை—அஃறிணை வினைக்குறிப்பை. இவற்றை—முன்னிலை வினைமுற்றை. பொருண்மை கருதாதென்றது—காலப் பொருண்மை கருதாதென்றபடி.

(உஅ) முன்னர் என்பது—பின்வரும் விலக்குச் சூத்திரங்களை; அவை உகூ—ம் கூ0—ம் சூத்திரங்கள்.



**உகூஎ** யில்லை எனவும்; யான் வேறு, யாம் வேறு, நீ வேறு, நீயிர் வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு, அவை வேறு எனவும்; யானுண்மன, யாமுண்மன, நீயுண்மன, நீயிருண்மன, அவனுண்மன, அவளுண்மன, அவருண்மன, அதுவுண்மன, அவையுண்மன எனவும்; யானுண் ணுமேண், யாமுண் ணுமேண், நீயுண் ணுமேண், நீயிருண் ணுமேண், அவ னுண் ணுமேண், அவளுண் ணுமேண், அவருண் ணுமேண், அது வுண் ணுமேண், அவையுண் ணுமேண் எனவும்;

அவன் வரும், அவள் வரும், அது வரும், அவை வரும் எனவும்; யானுண்ட வூண், யாமுண்டவூண், நீயுண்டவூண், நீயிருண்டவூண், அவ னுண்டவூண், அவளுண்டவூண், அவருண்டவூண், அதுவுண்ட வூண், அவையுண்டவூண் எனவும் வரும். (உஅ)

உஉசு. அவற்றுள்
முன்னிலை தன்மை யாயீ
ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி.

இதன் பொருள்: மேல் 'எஞ்சியகிளவி' (சொல்—உஉரு) எனப்பட்ட ஏழனுள், வியங்கோட்கிளவி, முன்னிலையும் தன்மையு மாகிய இரண்டிடத்தோடு நிலைபெறாதாம் என்றவாறு.

ஆயீரிடத்தொடு கொள்ளாதென்னாது மன்னாதாகு மென்ற தனான், அவ்விடத்தொடு சிறுபான்மை வருதல் கொள்க. மன்னுதல் பெரும்பான்மையும் நிகழ்தல்.

சிறுபான்மை வருவன, நீ வாழ்க என்னும் வாழ்த்துதற்பொருண்மைக்கண்ணும், யானு நின்னொடுடனுறைக என்னும் வேண்டிக்கோடற்பொருண்மைக் கண்ணும் வருவனவாம். 'கடாவுக பாகநின் கால்வ னெடுந்தேர்' என்பதும் வேண்டிக்கோடற் பொருண்மைக்கண் வந்ததாம்.

தன்மைக்கண் ஏவலில்லை. முன்னிலைக்கண் ஏவல் வருவ துண்டேற் கண்டு கொள்க.

---

(உ௯) ஏவலில்லை என்றது—ஏவற்பொருளில் வரும் வியங்கோ ளில்லை என்றபடி. எனவே வாழ்த்துதற் பொருண்மைக்கண்ணும் வேண்டிக் கோடற்பொருட்கண்ணும், முன்னிலைதன்மைகளில் வியங் கோள் வருமென்றபடி.



அஃதேல், வியங்கோளீறு கூறாராயிற் றென்னையெனின்:— எழுத்தோத்தினுள் 'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்' (எழு—உ௧௦) என் அகரவீற்றுள் எடுத்தலாற் பொருந்திய மெய்யூர்ந்து அகரவீறாய் வருதலும், 'செப்பும் வினாவும் வழாஅ

லோம்பல்' (சொல்—கக) எனவும், 'சொல்வரைந் தறியப் பிரித் தனர் காட்டல்' (சொல்—சகூக) எனவும், 'மறைக்குங் காலை மரீஇய தொராஅல்' (சொல்—சசங) எனவும், உடம்பொடு புணர்த்தலான் அல்லீருய் வருதலும், ஆலீருய் வருதலும் பெறு தலின், வியங்கோளீறுங் கூறினரெனவே படும். பிறவு முளவேற் கொள்க. (உகூ)

உஉஎ. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
யவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச்
செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா.

**இதன் பொருள் :** பல்லோர்படர்க்கையும் முன்னிலையும் தன்மையுமாகிய அவ்வயின்மூன்றும், நிகழ்காலத்து வருஞ் செய்யு மென்னுஞ் சொல்லோடு, பொருந்தா என்றவாறு,

அவ்வயினென்றது, இடமும் பாலுமாகிய எஞ்சிய கிளவிக் குரிய பொருட்கண் என்றவாறு.

நிகழுங்காலத்துச் செய்யுமென்னுங் கிளவியொடென அதனுற் ரோன்றுங் கால முணர்த்தியவாறு.

இவையிரண்டு சூத்திரமும் பொதுவகையா னெய்தியன வற்றை விலக்கி நின்றன. (௩௦)

உஉஅ. செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
வவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி.

எடுத்தலால்—எடுத்துச்சொல்லுதலால். பொருந்திய மெய்யூர்ந்து வரும் அகர மெய்யென்றது, க—ய முதலியவற்றை.

(௧௦) பொதுவகையா னெய்தியதென்றது, உ௮-ம் சூத்திரத்து மூவிடத்திற்கும் ஐம்பாற்கும் உரிய என்று பொதுவாக விதித்தலான் எய்தியதை.



பொதுவகையா னெய்தியவற்றுள், வியங்கோட் கிளவிக்குஞ் செய்புமென்னுங் கிளவிக்கும் எய்தாதன விலக்கி, இனி நிறுத்த முறையான் வினையெச்சத்தினது பாகுபாடுணர்த்துகின்றார்.

**இதன் பொருள் :** செய்தென்பது முதலாகச் சொல்லப் பட்ட ஒன்பதும் வினையெச்சமாம் என்றவாறு.

அவ்வகையொன்பது மென்றது இறுதி நின்ற இடைச் சொல்லான் வேறுபட்ட ஒன்பதுமென்றவாறு. அவ்விடைச்சொல் லாவன உகரமும், ஊகாரமும், புகரமும் எனவும், இயரும், இயவும், இன்னும், அகரமும், குகரமுமாம்.

'செய்கென் கிளவி வினையொடு முடியினும்' (சொல்-உ௦௪) எனவும், 'செய்யா யென்னு முன்னிலை வினைச்சொல்' (சொல்-௪௫௦) எனவும், இறுதியிடைச்சொ லேற்றவாற்றாற் பிரித்துணர வாய்பா டோதினாற்போல, ஏற்றவாற்றான் இறுதியிடைச் சொற் பிரிந்துணர்ந்துகொள்ள ஈண்டும் வாய்பாடுபற்றி யோதினர்.

உகரம் கடதறவூர்ந்து இயல்பாயும், ஏனையெழுத்தூர்ந்து இகரமாய்த் திரிந்தும், நெடிலீற்று முதனிலைமுன்னர் யகரம் வரத் தான் கெட்டும், இறந்தகாலம்பற்றி வரும் இவ்வுகரவீறு இகரமாதலும், யகரம் வரக் கெடுதலும் 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (சொல்-சுடுஎ) என்பதனாற் பெறப்படும்.

**உதாரணம் :** நக்கு, உண்டு, வந்து, சென்று எனவும்; எஞ்சி, உரிஞி, ஓடி எனவும்; ஆய், போய், எனவும் வரும். சினைஇ, உரைஇ, இரீஇ, உடீஇ, பராஅய், தூஉய், தாஅய் என்பனவோவெனின் :—அவை செய்யுண்முடிபென்க. ஆகி, போகி, ஓடி, மலர்த்தி, ஆற்றி என்புழி, முதனிலைக் குற்றுகரவீறுதலின், ஏனையெழுத்தாத லறிக.

---

(கக) இறுதியிடைச்சொல் - விகுதி. பிரித்துணர்தல் - விகுதியாகப் பிரித்தறிதல்.



| வினை

கடதறவென்பன குற்றுகரத்தோடு

வருமிடமும் தனிமெய்

யாய் வருமிடமுந் தெரிந் துணர்க.

அஃதேல், ஆய் என்பதனை யகரவீறென்றும், ஓடியென்பதனை இகரவீறென்றும் கொள்ளாது, உகரவீறென்றதென்னையெனின் :— நன்றுசொன்னாய் : இகரவிறுதி இடைச்சொல்லாயின், இறுதி இடைச்சொல் எல்லாத்தொழிலும் பற்றி வருதலிற் செலவு வர வென்பனவற்றோடும் வரல் வேண்டும். இனிச் செய்தெனச்சத் துகரமும் இறுதியிடைச்சொல்லாதலின் ஆகுதல் ஓடுதலென்னுந் தொழில் பற்றியும் வரல்வேண்டும். செலவு வரவுபற்றி இகரம் வாராமையானும், ஆகுதல் ஓடுதல்பற்றி உகரம் வாராமையானும், இறுதியிடைச்சொல் இகரமேயாக உகரமேயாக ஒன்றாவ தல்லது இரண்டெனப்படாதாம். உகரம் ஒன்றாய் நின்று கடதறவூர்ந்த விதிவினைக்கட் பயின்று வருதலானும், எதிர்மறையெச்சமெல்லாம் பெரும்பான்மையும் உகரவீறாயல்லது வாராமையானும், உகரம் இயல்பாக இகரம் அதன் றிரிபென்றலே முறைமை யென்க.

யகரவீற்றிற்கும் இஃதொக்கும்.

ஊகாரம் உண்ணூவந்தான், தின்னூவந்தான் எனப் பின் வருந் தொழிற்கு இடையின்றி முன்வருந் தொழின்மேல் இறந்த காலம்பற்றி வரும் அஃது உண்ணா என ஆகாரமாயும் வரும்.

பகரவுகரம் நகுபு வந்தான் என நிகழ்காலம்பற்றி வரும். நகா நின்று வந்தான் என்றவாறு. ஈண்டு நிகழ்காலமென்றது முடிக்குஞ்சொல்லா லுணரப்படுந் தொழிலோடு உடனிகழ்தல்.

குற்றுகரத்தோடு வருமிடம் – ஆகி, போகி என்புழி ஆகு, போகு என்னும் குற்றுகரத்தோடு வருதல்போலுமிடம். தனிமெய் யாய் வருமிடம், நக்கு உண்டு என்பனவற்றில் ககர, டகரங்க ளாய் வருதல்போலுமிடம். வரவு முதலிய முதனிலையோடு இகரம் வராது; ஆகு முதலியவற்றோடு உகரம் வராது; ஆதலால், யாதானு மொன்று ஈறு எனப்படும். உகரம் பெரும்பாலும் வருதலால் அதுவே ஈறுகும். அதுவே ஆகு முதலியவற்றோடு திரிந்து வருமெனப்பட்டது. இகரம் பயின்று வராமையின் நீக்கப்படும். ஏனெனின் பயின்று வந்த ஒன்றே மற்றை வாய்பாடுகளோடுந் திரிந்து வந்ததெனக் கொள்ள வேண்டுமாதலின். இடையீடு - தடை. தின்னுவந்தான் என்பது தின்றவுடன் வந்தான் என உடன்வருதலைக் காட்டுமென் றபடி. உடனிகழ்தல் - நகுதலும் வருதலும் கூடநிகழ்தல், எனவே



உரிஞுபு என உகரமும், கற்குபு எனக் குகரமும் ஏற்ற வழிப் பெறுதல் கொள்க.

எனவென்பது

கடதறவூர்ந்து இறந்தகாலம்பற்றி முடிக்குஞ் சொல்லா லுணர்த்தப்படுந் தொழிற்குத் தன் முதனிலைத்தொழில் காரணமென்பது பட வரும்.

**உதாரணம் :** சோலைபுக்கென வெப்பநீங்கிற்று; உண்டெனப் பசிகெட்டது; உரைத்தென உணர்ந்தான்; மருந்து தின்றெனப் பிணி நீங்கிற்று என வரும், எஞ்சியென எனவும், உரிஞியென எனவும், ஏனையெழுத்தோடும் வருமாறறிந் தொட்டிக்கொள்க.

இயர், இய என்பன, எதிர்காலம்பற்றி, உண்ணியர், தின் னியர்; உண்ணிய, தின்னிய என வரும். போகியர், போகிய என ஏற்றவழிக் ககரம்பெற்று வருதலுங் கொள்க.

இன் எதிர்காலம்பற்றிக் காரணப்பொருட்டாய் வரும்.

**உதாரணம் :** மழைபெய்யிற் குளநிறையும்; மெய்யுணரின் வீடெளிதாம் என வரும். நடப்பின், உரைப்பின் என ஏற்றவழிப் பகரம் பெற்று வருதலுங் கொள்க.

அகரம், மழை பெய்யக் குள நிறைந்தது; ஞாயிறு பட வந் தான்; உண்ண வந்தான் என மூன்றுகாலமும் பற்றி வரும். உரைப்ப, உரைக்க என ஏற்றவழிப் பகரமுங் ககரமும் பெறுதல் கொள்க.

குகரம் உணற்கு வந்தான்; தினற்கு வந்தான் என வெதிர் காலம் பற்றி வரும்.

புகரமும் குகரமும் உகரத்தின்கண்ணும், எனவும் இயவும் அகரத்தின்கண்ணும்,

அடங்குமெனின் :—ஆரீற்றின் மார் அடங்காமைக்கு உரைத்தாங் குரைக்க.

---

வரும் பொழுதே நகுதலைச் செய்துகொண்டு வந்தான் என்றபடி. இறந்தகாலம் பற்றி வருதல் என்றது. சோலைபுக்கானுக அதனுல் வெப்பம் நீங்கிற்று எனப் பொருள் படுமிடத்துப் புக்கென என்பது இறந்தகாலத்து வருதலே.

செயற்கென்னும் வினையெச்சம்
நான்கனுருபேற்றுநின்ற
தொழிற்பெயரின் வேறுதல்
கிளவியாக்கத்துட் கூறினும்.

திரியாது நிற்கும் ஊகாரமும், புகாமும், எனவும், இயரும், இயவுமென்னும் ஐந்திற்றுவினையெச்சமும் வழக்கினுள் இக் காலத்து வாராவாயினும், சான்றோர் செய்யுளுள் அவற்றது வாய் பாட்டு வேற்றுமையெல்லாங் கண்டுகொள்க. (௩௧)

உ௨௯. பின்முன் கால்கடை வழியிடத் தென்னு
மன்ன மரபிற் காலங் கண்ணிய
வென்ன
கிளவியு மவற்றியல் பினவே.

இதன் பொருள்: பின்னும், முன்னும், காலும், கடையும், வழியும், இடத்தும் என்னுமீற்றவாய் வருவனவும் அவைபோலக் காலங்கண்ணி வருவன பிறவும், வினையெச்சமாம் என்றவாறு.

உதாரணம்: நீயிர் பொய் கூறியபின் மெய் கூறுவார் யார் எனவும், நீ யிவ்வாறு கூறுகின்றபின் உரைப்பதுண்டோ எனவும் பின் இறப்பும் நிகழ்வும் பற்றியும், மருந்து தின்னுமுன் நோய் தீர்ந்தது என முன் இறந்தகாலம்பற்றியும் 'வலனாக வினையென்று வணங்கிநாம் விடுத்தக்கால்' எனவும், 'அகன்றவர் திறத்தினி நாடுங்கால்' எனவும், காலீறு மூன்றுகாலமும் பற்றியும், 'தொடர் கூரத் தூவாமை வந்தக் கடை' எனக் கடையீறு இறந்தகாலம் பற்றியும், உரைத்தவழி, உரைக்கும்வழி, உரைத்தவிடத்து, உரைக்குமிடத்து என வழியென்னுமீறும் இடத்தென்னுமீறும் மூன்றுகாலமும் பற்றியும் வரும். கால், வழி, இடத்தென்பன வற்றின் நிகழ்காலத்து வாய்பாடு எதிர்காலத்திற்கு மேற்ற லறிக.

கூதிர் போயபின் வந்தான் எனவும், நின்றவிடத்து நின்றான் எனவும், பின் முதலாயின பெயரெச்சத்தோடும் வந்தவழி,

---

(கூ.உ) கூதிர் போயபின் வந்தான், உண்டவிடத்து நின்றான் என்பவற்றிலுள்ள பின், இடம் என்பன பெயர். பின் - பிற்காலம். செய்து முதலியன போல வாய்பாடுபற்றி ஓதலாகாமையின் என்

இறப்பு முதலாகிய காலங் கண்ணுமையின், அவற்றை நீக்குதற்குக் 'காலங்கண்ணிய' வென்றார்.

காலவேறுபாட்டான் வரும் வாய்பாட்டுப் பன்மையெல்லாம் ஒரு வாய்பாட்டாற் றழுவலாகாமையின், இவற்றை ஈறுபற்றி யோதினர்.

அன்ன மரபிற் காலங் கண்ணிய

வென்ன கிளவியு மென்றதனான், உண்பாக்கு, வேபாக்கு என வரும் பாக்கீறும், உண் பான் வருவான் என்னும் ஆனீறும் 'நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே' (குறிஞ்சிக்கலி-௩) என்னும் உம்மீறும், 'அற்ற லளவறிந் துண்க' (குறள்-௯௪௩) என்னும் ஆலீறும், எதிர் மறை பற்றிக் 'கூறாமற் குறித்ததன் மேற்செல்லும்' (கலி-௧)
என வரும் மல்லீறும், 'கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்' (குறள்-௭0௧) என்னும் மகர வைகாரவீறுங் கொள்க.

என்னகிளவியு மென்றதனுன், இன்றி, அன்றி, அல்லது, அல்லால் என வருங் குறிப்புவினையெச்சமுங் கொள்க. பிறவு மன்ன. (௩௨)

உ௩௦. அவற்றுள்

முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின.

இதன் பொருள்: மேற்சொல்லப்பட்ட பதினைந்து வினை யெச்சத்துள், முதற்கணின்ற செய்து, செய்யூ, செய்பு என்னு மூன்றும், தம்வினை முதல்வினையான் முடியும் என்றவாறு.

உதாரணம்: உண்டு வந்தான், உண்ணூ வந்தான், உண்குபு வந்தான் எனவும்; கற்று வல்லனாயினான், கல்லூ வல்லனாயினான், கற்குபு வல்லனாயினான் எனவும் வரும்.

'உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய

யாஅவிரி நிழற் றுஞ்சும்' (குறுந்—உ௩உ) எனச் செய்தெனெச்சம் வினைமுதல்

நது - ஒரு வாய்பாட்டினுள் கால வேறுபாட்டால் வரும் பல வாய்பாடுகளும் அடக்கமுடியாமையின் என்றபடி.

35



வினையல்லா வினையான் முடிந்ததாலெனின் :—அது 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (சொல்—௪௫௭) என்புழிப் பெறப்படும்.

இது முன்னர்

'வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பு
நினையத் தோன்றிய முடிபா கும்மே'

(சொல்—௪௩உ)

எனப் பொதுவகையான் முடிவனவற்றை எதிரது நோக்கி இவை மூன்றும் வினைமுதன் முடிபினவென நியமித்தவாறு. அஃதேல், இதனையும் ஆண்டே கூறுகவெனின் :—ஆண்டுச் செய்து செய்யூச் செய்பு என்னு மூன்றுமெனக் கிளந்தோதுவதல்லது, முதனிலை மூன்றுமெனத் தொகுத்தோதலாகாமையானும், ஈண்டு இயைபுடைத்தாகலானும், ஆண்டுக்கூறாது ஈண்டுக்கூறினரென்பது. (௩௩)

௨௬௧. அம்முக் கிளவியுஞ் சினைவினை தோன்றிற்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோ ரனைய வென்மனார் புலவர்.

**இதன் பொருள் :** வினைமுதன் முடிபினவாகிய அம் மூன்றுசொல்லும், சினைவினை நின்று சினைவினையோடு முடியாது முதல்வினையோடு முடியினும், வினையானொருதன்மைய என்ற வாறு.

வினையானொருதன்மைய வென்றது, முதல்வினையோடு முடியினும் முதலொடு சினைக்கொற்றுமையுண்மையாற் பிறவினை கொண்டனவாகா, வினைமுதல்வினை கொண்டனவேயாமென்றவாறு.

**உதாரணம் :** கையிற்று வீழ்ந்தான், கையிறா வீழ்ந்தான், கையிறுபு வீழ்ந்தான் என வரும்.

'உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய' என்புழிப் போலக் கையிற்றென்னுஞ் செய்தெனெச்சம் கையிறவெனச்

(௬௬) முதற் சூத்திரத்தில் செய்து முதலிய வாய்பாடு ஓதினமையின் அவற்றை முதனிலை மூன்றும் என்று தொகுத்துச் சொல்லலாமென்றபடி.

செயவெனெச்சப் பொருட்டாய்
நின்றமை தனவமையும், இச்சூத் திரம்
வேண்டாவெனின் :—அற்றன்று : வினைமுதல்வினை
கொள்
ளாதவழியன்றே அது பிறபொருட்டாயது ; வினைமுதல்வினை
கொண்டு தன்பொருளே புணர்த்துவதனைப்
பிறபொருண்மே
னின்றமை தென்றல் பொருந்தாமையான், அது
கடாவன்றென்க.(௩௪)

உ௩௨. ஏனை யெச்சம் வினைமுத லானு
மான்வந் தியையும் வினைநிலை
யானும்
தாமியன் மருங்கின் முடியு மென்ப.

இதன் பொருள் : முதனிலை

மூன்றுமல்லாத பிறவினை யெச்சம், வினைமுதல் வினையானும், ஆண்டு வந்து பொருந்தும் பிறவினையானும், வரையறையின்றித் தாமியலுமாற்றான் முடியும் என்றவாறு.

உதாரணம்: மழை பெய்தெனப் புகழ் பெற்றது, மழை பெய்தென மரங்குழைத்தது எனவும்; மழைபெய்யியரெழுந்தது, மழைபெய்யியர் பலி கொடுத்தார் எனவும்; மழைபெய்யிய முழங்கும், மழைபெய்யிய வான் பழிச்சுதும் எனவும்; மழைபெய்யிற் புகழ்பெறும், மழைபெய்யிற் குளநிறையும் எனவும்; மழைபெய்யப் புகழ்பெற்றது, மழைபெய்ய மரங்குழைத்தது எனவும்; மழைபெய்தற்கு முழங்கும், மழைபெய்தற்குக் கடவுள் வாழ்த்துதும் எனவும்; இறந்தபின்னிளமை வாராது, கணவன் இனி துண்டபின் காதலி முகமலர்ந்தது எனவும் அவை வினைமுதல் வினையும் பிறவினையுங் கொண்டவாறு கண்டுகொள்க. அல்லனவும் இருவகை வினையுங் கோடல் வழக்கினுட் கண்டுகொள்க.

வரையறையின்றி இருவகை

வினையுங்கோடலின் 'வினையுங் குறிப்பு—நினையத் தோன்றிய முடிபாகும்மே' (சொல்-சஙஉ) என்னும் பொதுவிதியான் முடிவனவற்றை ஈண்டுக் கூறல்

---

(ஙச) அது என்றது உண்டு என்னு மெச்சத்தை. பிறபொருட் டாய தென்றது - செயவெனெச்சப்பொருளாயதை. உண்டு என்பது செயவெனெச்சப் பொருளதென்பது சேனாவரையர்க்குக் கருத்தின் றேனும், ஈண்டுப் பிறர்கருத்தையே எடுத்து வினாவிடுத்தனரென்க.



வேண்டாவெனின் :—வினையெச்சங்களுள் ஒருசாரன வினைமுதல்

வினை கொள்ளுமென்றதனான், ஏனையெச்சம் பிறவினையே கொள் ளுமோ இருவகை வினையுங் கொள்ளுமோ என்றையமாம் :

அஃதனுன் ஐயநீங்க இவ்வாறு கூறல்வேண்டுமென்பது.

அஃதேல், வினையொடு முடிதல் ஈண்டுக் கூறப்பட்டமையின் எச்சவியலுள் 'குறிப்பு முடிபாகும்' என வமையும், வினையு மெனல் வேண்டாவெனின்:—குறிப்புமென்னுமும்மையாற் றழுவப்படுவது சேய்த்தாகலிற் றெற்றென விளக்காமையானும், வினை முதலென்பது பெயர்க்கும் வினைக்கும் பொதுவாகலானும், வினையு மெனல் வேண்டுமென்பது. (௩௫)

௨௩௩. பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினு
முன்னது முடிய முடியுமன் பொருளே.

**இதன் பொருள்:** ஒரு வாய்பாட்டானும் மற்றப் பல வாய்பாட்டானும் வினையெஞ்சுகிளவி அச் சொற்கண்முறையான் முடியாது அடுக்கிவரினும், முன்னின்றவெச்சம் முடிய ஏனையவும் பொருண் முடிந்தனவாம்

என்றவாறு.

உதாரணம் : உண்டு தின்றோடிப் பாடி வந்தான் எனவும்; உண்டு பருகூத் தின்குபு வந்தான் எனவும் வரும்.

முன்னது முடிய முடிபுமென்றூராயினும், உண்டு தின்று மழை பெய்யக் குளநிறையும் என்றவழி, முன்னதன்றொழிலான் ஏனைய முடியாமையின், பன்முறையான் அடுக்குங்கான் முன்னதன்றொழிலான் முடிதற்கேற்பனவே கொள்க.

---

(கடு) இங்கே, தெரிநிலை வினையொடு முடிதல் கூறப்பட்டமையின், எச்சவியலிற் குறிப்பொடு முடிதலைமாத்திரம் சொல்லவமையுமெனின்? இவ்வியலிற் சொன்ன வினையை, ஆண்டுச் சொல்லும் 'குறிப்பும்' என்னும் உம்மையாற் றழுவல் சேய்த்து ஆதலின் அமையாது என்றபடி.



சொன்முறை முடியாமையாவது தம்மொடு தாமும் பிற சொல்லு முடியாமை.

உண்டு வந்தான்; தின்று வந்தான் எனச் சொற்றோறும் வினை யியைதன் மரபு. அங்ஙனமில்லாது தம்முளியைபில்லன அடுக்கி வந்து இறுதி வினையெச்சத்திற்கு முடிபாகிய சொல் லான் எல்லாம் முடியினும் இழுக்காதென அமைத்தவாறு.

வினையெச்சம் பன்முறையானு மடுக்கி ஒருசொல்லான் முடியு மெனவே, பெயரெச்சம் ஒருமுறையா னடுக்கி ஒருசொல்லான் முடியுமென்பதாம்.

'நெல்லரியுமிருந்தொழுவர்' (புறம்—உச) என்னும் **புறத்** தொகைப் பாட்டினுள் 'தென்கடற் றிரைமிசைப் பாயுந்து' எனவும், 'தண்குரவைச்சீர் தூங்குந்து' எனவும், 'எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து' எனவும், 'முந்நீர்ப்பாயும்' எனவும் செய்யுமென்னும் பெயரெச்சமடுக்கி 'ஓம்பா வீகை மாவே ளெவ்வி புனலம் புதவின் மிழலை' என்னும் ஒருபொருள்கொண்டு முடிந்த வாறு கண்டுகொள்க. ஆங்குத் 'தாங்கா வுறையு ணல்லூர் கெழீஇய'

என்னும் பெயரெச்சம் இடைநிலையாய் வந்தது. பிறவுமன்ன.
(௩௬)

௨௩௭. நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட
வவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய
செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே.

---

(௩௭) தம்மொடு தாமும் பிற சொல்லும் முடியாமை என்றது— செய்து என்னும் வாய்பாட்டுச் சொல் அடுத்து வரும் செய்தென் னும் வாய்பாட்டுச் சொற்களோடும், செய்பு முதலிய வாய்பாட்டுச் சொற்களோடும் முடியாமையை. முடியுமாயின் அடுக்கெனப்படா என்றபடி. எனவே ஈற்றுவினையொடு தனித்தனி முடியுமன்றி, உண்கு என்பது பருகூ என்பதனோடும், அது தின்குபு என்பதனோ டும் முடியாதென்றபடி. ஒரு முறையானடுக்கல் - ஒருவாய்பாட்டா னடுக்கல், பன்முறையானடுக்கல் - பலவாய்பாட்டானடுக்கல்.

[வினை

வினையெச்ச முணர்த்தி,

கின்றார்.

இனிப் பெயரெச்ச முணர்த்து

இதன் பொருள்: செய்யும், செய்த என்னுஞ் சொற்கள், தொழின்முதனிலை யெட்டனுள் இன்னதற்கு இது பயனாக என்னும் இரண்டொழித்து ஏனை யாறுபொருட்கும் ஒத்த வுரிமைய என்றவாறு.

இவற்றிற் கொத்தவுரிமைய வெனவே, ஒழிந்த விரண்டற்

கும் இவற்றோ டொப்ப வுரியவாகா, சிறுபான்மை யுரியவென்ற வாறும்.

உதாரணம்: வாழுமில், கற்குநூல், துயிலுங்காலம், வனை

யுங்கோல், ஓதும் பார்ப்பான்,
உண்ணுமூண் எனச் செய்யுமென்
னும் பெயரெச்சத்து உம்மீறு
காலவெழுத்துப்பெறாது ஆறு
பொருட்கு முரித்தாய் வந்தவாறு.
புக்கவில், உண்ட சோறு,
வந்த நாள், வென்ற வேல், ஆடிய
கூத்தன், போயின போக்கு
எனச் செய்தவென்னும் பெயரெச்சத்
திறுதியகரம் கெடாதறவும்
யகர
னகரமும் ஊர்ந்து அப்பொருட்குரித்தாய் வந்தவாறு. நோய்
தீருமருந்து, நோய் தீர்ந்த மருந்து என்னு
மேதுப்பொருண்மை
கருவிக்கணடங்கும். அரசன் ஆ
கொடுக்கும் பார்ப்பான், ஆ
கொடுத்த பார்ப்பான் எனவும்; ஆடை
யொலிக்குங்கூலி, ஆடை
யொலித்த கூலி எனவும்; ஏனை
யிரண்டற்குஞ் சிறுபான்மை
யுரியவாய் வந்தவாறு.

எல்லைப்பொருள்

பஃறொழில்பற்றி வருஞ் சிறப்பின்றாகலிற்
றொழின் முதலொடு கூறாது 'இன்மை
யுடைமை நாற்றந் தீர்தல்'
(சொல்—எ அ) என்னும் பொருண்மையாற்
றழீஇக்கொண்டா

---

(கஎ) ஒழிந்த இரண்டு—இன்னதற்கு
இது பயன் என்பன.
ஆ கொடுக்கும் பார்ப்பான் என்பதில்
பார்ப்பான் கோடற் பொருளா
தலின், இன்னதற்கு என்பது பட நின்றது.
ஆடை ஒலிக்குங் கூலி
என்பதில், கூலி ஒலித்தலால் வந்த பயனாதலின்
இது பயன் என்பது
பட நின்றது.

ராகலின், பழமுதிருங்கோடு,
பழமுதிர்ந்தகோடு எனச் சிறு
பான்மை எல்லைப்பொருட் குரியவாதலுங்
கொள்க.
'நின்முகங்காணு மருந்தினே
னென்னுமால்' (குறிஞ்சிக்கலி-
உச) என்புழிக் காட்சியை
மருந்தென்றுணுதலின், காணு மருந் தென்பது
வினைப்பெயர் கொண்டதாம். 'பொச்சாவாக்
கருவி
யாற் போற்றிச்செயின்' (குறள்–ருஙஎ)
என்புழிப் பொச்சா
வாக் கருவியென்பதுமது. 'ஆறுசென்ற வியர்'
என்புழி வியர்
ஆறுசேறலான் வந்த காரியமாகலின், செயப்படு
பொருட்கணடங்
கும். நூற்ற நூலானியன்ற கலிங்கமும்
ஒற்றுமை நயத்தால்
நூற்ற கலிங்கமெனப்படும். 'நூலாக்
கலிங்கம் வாலரைக்
கொளீஇ' (பதிற்றுப்பத்து உ-ம் பத்து கஉ)
எனப் பெயரெச்

சத்தி னெதிர்மறை பொருட்பெயர் கொண்டு
நின்றதாம். பிறவுங்
கூறப்பட்ட பொருட்க
ணடங்குமாறறிந்தடக்கிக்கொள்க. உண்
டான் சாத்தன், மெழுகிற்றுத் திண்ணை
என்புழி உண்டான்
மெழுகிற்று என்னு முற்றுச்சொல்
வினைமுதலுஞ் செயப்படு
பொருளுமாகிய பொருட்குரியவாமாறுபோல,
இவ்விருவகைப்
பெயரெச்சமும்
நிலமுதலாகிய பொருட்குரியவாமென அவற்றது
அறுபொருட்கு முரிமை உணர்த்தியவாறு.
முடிவு எச்சவியலுட்
பெறப்படும்.
பொருளைக் கிளவி என்றார்.

---

எல்லை என்றது,—நீக்கத்தை. அதனைத்
தீர்த்தல் என்பதனாற்
றழுவிக்கொண்டார் என்றபடி. எல்லை
நீக்கத்துளடங்கும். பழம்
உதிருங்கோடு என்பதை நீக்கம் என்றது,
கோட்டினின்றும், பழ

முதிர்ந்து அதலின் வேறுதலே.

உதிர்தற்குக் கோடு எல்லையாயும் நிற்றலின் நீக்கத்தை எல்லை யென்றூர்.

வினைப்பெயரென்றது–செல்வது முதலிய ஆறனுள் வரும் வினைப் பெயரை. வினை–செயல். உண்ணுமூண் என்பதில் உண்ணல்–செயல், காணுமருந்து–காணுதலாகிய மருந்து, என்றது காணுதலேயே ஈண்டு மருந்தென்றூராகலின் காணுதலைத்தான் மருந்தென்று கூறியதாயிற்று. ஆகவே காணுதல் தொழிற்பெயராகலின் மருந்துந் தொழிற்பெயராயிற்று. அதுபற்றித் தொழிற்பெயர் கொண்டதென்றூர். ஏனையவு மன்ன.



நில முதலாயினவற்றைப் பெயரெச்சப் பொருளென்னுது முடிக்குஞ் சொல்லெனின், அவ்வறுபொருட்கு மென்னுது அவ் வறு பெயர்க்கு மென்றேேதுவார். ஓதவே, 'பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே' (சொல்–சஙஙு) என்னுஞ் சூத்திரம் வேண் டாவாம்; அதனுன் இவை பொருளென்றலே யுரை.

அம் ஆமென்பன முதலாக அகரமீறாகக் கிடந்த இறுதி யிடைச்சொற்குக் கூறப்பட்ட காலவெழுத்துச் சிறிய சிதைந்து வரினும், சிறுபான்மை பிறவெழுத்துப் பெறினும், நுண்ணுணர் வுடையோர் வழக்கு நோக்கி யுணர்ந்துகொள்க. (௩௭)

உ௩௫. அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்று
முரித்தே.

**இதன் பொருள்:** நிலமுதலாகிய பொருளோடு வருங்கால் செய்யுமென்னுஞ் சொல், விலக்கப்பட்ட பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை யென்னும் மூவகைக்கும், உரித்தாம் என்ற வாறு.

உரித்தாய் வருமாறு 'எஞ்சிய கிளவி' (சொல்—உஉ௫) என்னுஞ் சூத்திரத்திற் காட்டினும்.

அவற்ரொடு

வருவழியெனச் செய்புமென்னுஞ் சொல் அப் பொருண்மைக் குரித்தாயும் உரித்தன்றியும் வரும் இருநிலைமை யும் உடைத்தென்பது பெறுதும்.

அவற்ரோடு வரு நிலைமை பெயரெஞ்சு கிளவியாம் ; அவற்ரோடு வாரா நிலைமை முற்றுச் சொல்லாம். அஃதேல், அது முற்றுச் சொல்லாதற்கண்ணும்

---

நூற்றகலிங்கம் நூலாதகலிங்கம் இரண்டும் செயப்படுபொருள் கொண்டன. இச்சூத்திரத்தாற் பெயரெச்சப்பொருள் சொன்னதன்றி முடிபு சொன்னதன்று என்பது கருத்து. கால எழுத்து—காலங்காட்டு மெழுத்து.

(௧.அ) 'அவற்ரோடு வருவழி என' என்பதை 'அவற்ரோடு வருவழி எனவே' எனத் திருத்துக. அவற்ரோடு என்றது—நிலன் முதலிய ஆறனோடும் என்றபடி.

பெயரெஞ்சு கிளவியாதற்கண்ணும்

வேற்றுமை யென்னை யெனின் :—வினைமுற்றிற்கும் வினையெச்சத்திற்கும் வேற்றுமை யாவதே ஈண்டும் வேற்றுமையாமென்க. முற்றுச் சொல்லிற்கும் எச்சத்திற்கும் வேற்றுமை யாதெனின் :—பிறிதோர் சொல்லோ டியையாது தாமே தொடாதற்கேற்கும் வினைச்சொல் முற்றும்; பிறிதோர் சொற்பற்றி யல்லது நிற்றலாற்ரு வினைச்சொல் எச்ச மாம்; இது தம்முள் வேற்றுமை யென்க. அஃதேல், உண்டா னென்பது சாத்தனென்னும் பெயரவாவி யன்றே நிற்பது, தாமே தொடாமென்றது என்னையெனின் :—அற்றன்று : உண்டான் சாத்தன் என்றவழி, எத்தையென்னும் அவாய்நிலைக்கண் சோற்றையென்பது வந்தியைந்தாற்போல, உண்டான் என்றவழி யாரென்னும் அவாய்நிலைக்கண் சாத்தனென்பது வந்தியைவ தல் லது, அப்பெயர்பற்றியல்லது

நிற்றலாற்ரு நிலைமைத்தன்று அச் சொல்லென்பது இவ்வேற்றுமை விளங்க ஆசிரியர் முற்றுச் சொல்லென்றும், எச்சமென்றும், அவற்றிற்குப் பெயர் கொடுத் தார்.
(௩அ)

உ௩௯. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியு
மெதிர்மறுத்து மொழியினும்
பொருணிலை திரியா.

இதன் பொருள்: பெயரெச்சமும் வினையெச்சமும், செய் தற்பொருளவன்றி அச்செய்தற்பொருண்மை எதிர்மறுத்துச் சொல்லினும், அவ்வெச்சப்பொருண்மையிற் றிரியா என்றவாறு.

பொருணிலையாவது தம்மெச்சமாகிய பெயரையும் வினையையுங்கொண்டல்லது அமையாத நிலைமை. என்சொல்லியவாரோ வெனின்:—செய்யும் செய்த எனவும், செய்து செய்யூ செய்பு எனவும் பெயரெச்சமும் வினையெச்சமும் விதிவாய்பாட்டா

ஞேதப்பட்டமையான், ஆண்டுச் செய்யா, செய்யாது என்னு மெதிர்மறை வாய்பாடு அடங்காமையின், அவை எச்சமாதல் பெறப்பட்டின்று. அதனல் அவையும் அவ்வெச்சப்பொருண்மை யிற் றிரியாது பெயரும் வினையுங்கொள்ளுமெனை எய்தாததெய்து வித்தவாறு.

36



உதாரணம்: உண்ணுவில்லம், உண்ணுச்சோறு, உண்ணுக் காலம், வனையாக்கோல், ஓதாப்பார்ப்பான், உண்ணுவூண் எனவும்; உண்ணுது வந்தான், உண்ணுமைக்குப்போயினுன் எனவும் வரும்.

உண்ணு என்பது உண்ணும், உண்ட என்னுமிரண்டற்கும் எதிர்மறையாம். உண்ணுத என்பதுமது. உண்ணுது என்பது உண்டு, உண்ணூ, உண்குபு என்பனவற்றிற் கெதிர்மறை. உண்ணுமைக்கு என்பது, உண்ணியர், உண்ணிய, உணற்கு என்பன வற்றிற்கும், உண்ண எனச் செயற்கென்பது படவரும் செயவெனெச்சத்திற்கும் எதிர்மறையாம். உண்ணுமை, உண்ணுமல் என்பனவுந்தாம் அதற்கு எதிர்மறையாம். பிறவும் எதிர்மறை வாய்பாடுளவேற் கொள்க.

உண்டிலன், உண்ணாநின்றிலன், உண்ணலன், உண்ணான் என முற்றுச்சொல்லும் எதிர்மறுத்து நிற்குமாகலின், பொருணிலை திரியாதென அதற்கோதாராயிற் றென்னையெனின் :— விதிவினைக்கும் எதிர்மறைவினைக்கும் பொதுவாக ஈறுபற்றி ஓதிய தல்லது விதிப் பொருளவாகிய வாய்பாடுபற்றி ஓதாமையின், ஆண்டுக் கட்டுரையில்லை யென்க. (௩௧)

---

(௩௧) விதிப்பொருளவாகிய வாய்பாட்டா னோதப்பட்டதென்றது—ஈறுபற்றி ஓதாது செய்து முதலிய உடன்பாட்டுப் பொருளவாகிய வாய்பாட்டாற் சொல்லியதென்றபடி. அவையுமென்றது—அவ்வெதிர் மறையை.

ஈறுபற்றி ஓதியதென்றது—அன், ஆன் முதலிய ஈறுபற்றி ஓதியது என்றபடி. ஈறுபற்றி ஓதினமையான் உண்டான், உண்ணான் என விதியு மெதிர்மறையும் நிலைதிரியாமை அவ்வீறுகளையுடைய சொற்களா னுணர்ந்துகொள்ளலாமாதலின், பொருணிலை திரியா தென்று சொல்லவேண்டாமென்றபடி. எனவே விதி வாய்பாடுபற்றிச் சொன்னமையின் இவற்றிற்கு எதிர்மறை வாய்பாடும் ஓதல் வேண்டு மென்பது கருத்து.

ஆண்டு ஈறுபற்றி ஓதியதல்லது ஈண்டுப்போல வாய்பாடுபற்றி ஓதாமையின் ஆண்டுக் கட்டுரை இல்லை என்றபடி. கட்டுரை—ஆக்ஷேபம், பேச்சு.

விதிப்பொருள்—நியமப்பொருள்—உடன்பாட்டுப்பொருள்.

அவ்வெச்சம்—செய்தென் வாய்பாட்டு வினையெச்சம். சேனாவரை யர் எதிர்மறை வினைகளுக்கு வினை நிகழ்ச்சியில்லை என்று கூறலின்

உ௬எ. தத்த மெச்சமொடு
சிவணுங் குறிப்பி
னெச்சொல் லாயினு மிடைநிலை
வரையார்.

இதன் பொருள் : தத்தமெச்சமாகிய வினையோடும் பெய ரோடும் இயையுங் குறிப்பையுடைய எச்சொல்லாயினும், இவ் வெச்சத்திற்கும் அவற்றான் முடிவனவாகிய தமக்கும், இடை நிற்றல் வரையார் என்றவாறு.

உதாரணம் : உழுது சாத்தன் வந்தான், உழுதேரொடு வந்தான் எனவும்; கொல்லுங் காட்டுள் யானை, கொன்ற காட் டுள் யானை எனவும் வரும்.

சிவணுங்குறிப்பின் வரையாரெனவே, சிவணாக்குறிப்பின் வரைப வென்பதாம். சிவணாக்குறிப்பினவாவன, ஒருதலையாக

எச்சத்தோ டியைந்து நில்லாது நின்ற சொல்லொடுந் தாமே யியைந்து கவர்பொருட்படுவன. உண்டு விருந்தொடு வந்தான்; 'வல்ல மெறிந்த நல்லிளங் கோசர்தந்தை மல்லல் யானைப் பெரு வழுதி' என்றவழி விருந்தொடுண்டென வினையெச்சத்தோடு மியைதலிற் பொருள் கவர்க்கும்; வல்லமெறிதல் நல்லிளங் கோசர்க்கும் ஏற்குமாகலின் ஆண்டும் பொருள் கவர்க்கும்; அன்ன சிவணுக் குறிப்பினவாம்.

எச்சொல்லாயினு மென்றதனான், உழுதோடிவந்தான், கவ ளங்கொள்ளாக் களித்த யானை என எச்சமும் இடைநிலையாதல் கொள்க.

சாத்தன் உண்டு வந்தான், அறத்தை யரசன் விரும்பினன், உண்டான் வந்த சாத்தன் என வினைத்தொடர்க்கண்ணும் பிற சொல் இடைநிற்ற லொக்குமாயினும், எச்சத்தொடர்க்கு இடை நிற்பனவற்றின்கண் ஆராய்ச்சியுடைமையாற் கூறினர். (௪௦)

---

எதிர்மறையெல்லாம் வினை நிகழ்ச்சியில்லாதவற்றை உள்ளதுபோலக்

கூறுவதொரு இலக்கணமென்க.

(சo) இடைநிலை என்பதை இடைப்பிறவரல் என்பர் நன்னூலார். உஅசு



உகூஅ. அவற்றுள்
செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை யுகர
மவ்விட னறித லென்மனார் புலவர்.

**இதன் பொருள்:** மேற்சொல்லப்பட்ட எச்சங்களுட் செய்யு மென்னும் பெயரெச்சத்திற்கு ஈற்றுமிசை நின்ற உகரந் தன்னா னூரப்பட்ட மெய்யொடுங்கெடுமிட மறிக என்றவாறு.

கெடுமிடமறிக வென்றது, அவ்வீற்றுமிசையுகரம் யாண்டுங் கெடாது வரையறுக்கவும்படாது சான்றோர் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் வந்தவழிக் கண்டுகொள்க வென்றவாறு.

**உதாரணம்:** வாவும்புரவி, போகும்புழை என்பன ஈற்று மிசையுகரம் மெய்யொடுங்கெட, வாம்புரவி, போம்புழை என நின்றன. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

செய்யுமென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு ஈற்றுமிசையுகர மெய்யொடுங் கெடுமெனவே, செய்யுமென்னு முற்றுச்சொற்கு ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெடும், மெய்யொழித்துங் கெடு மென்பதாம்.

**உதாரணம்:** 'அம்ப லூரு மவனொடு மொழிமே' (குறு- நிக) 'சார னாடவென் ஞேழியுங் கலுழ்மே' எனவரும். பிறவு மன்ன. (சுக)

உ௲கூ. செய்தெ னெச்சத் திறந்த கால
மெய்திட னுடைத்தே வாராக் காலம்.

**இதன் பொருள்:** செய்தென்னும் வினையெச்சத்தினது இறந்தகாலம் வாராக்காலத்தை எய்துமிடமுடைத்து என்றவாறு.

ஈண்டுச் செய்தெனெச்சத்திறந்தகால மென்றது முடிபாய் வரும் வினைச்சொல்லா னுணர்த்தப்படுந் தொழிற்கு அவ்வெச் சத்தா னுணர்த்தப்படுந் தொழில் முன் நிகழ்தலே. அது வாராக் கால மெய்துதலாவது, அம் முன்னிகழ்வு சிதையாமல் அவ் வெச்சம் எதிர்காலத்து வருதல்.



**உதாரணம் :** *நீயுண்டு வருவாய், உழுது வருவாய் எனச் செய்தெனெச்சம் பொருள் சிதையாமல் எதிர்காலத்து வந்தவாறு கண்டுகொள்க.*

*'எய்திட னுடைத்தே வாராக் காலம்'*

*என்றதனுன், உண்டு வந்தான், உழுது வந்தான் என அவ்வெச்சம் இறந்தகாலத்து வருதல் இலக்கணமென்பதாம்.*

*இறந்தகாலத்துச்சொல் எதிர்காலத்து*

வந்ததாயினும் அமைகவெனக் காலவழு

வமைத்தவாறு. (சஉ) உசം.

மூன்நிலைக் காலமுந் தோன்று மியற்கை

யெம்முறைச் சொல்லு நிகழுங்

காலத்து

மெய்ந்நிலைப்பொதுச்சொற்கிளத்தல்வேண்டும்.

இதன் பொருள்: மூன்றுகாலத்தும் உளதாம் இயல்பை யுடைய எல்லாப்பொருளையும் நிகழ்காலத்துப் பொருணிலைமை யுடைய செய்யுமென்னுஞ் சொல்லாற் கிளக்க என்றவாறு.

முன்னிலைக்காலமுந்தோன்று மியற்கையெம்முறைப்பொருளு மாவன மலையது நிலையும் ஞாயிறு திங்களதியக்கமு முதலாயின. அவற்றை இறந்தகாலச்சொல்லானும், எதிர்காலச்சொல்லானும், ஏனை நிகழ்காலச்சொல்லானும் சொல்லாது, இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் அகப்படுத்து மூன்று காலத்திற்கும் பொது வாய் நிற்குஞ் செய்யுமென்னுஞ்சொல்லாற் சொல்லுக என்றவாறு.

பொதுச்சொற் கிளத்தல்வேண்டு மெனவே, முற்றானும் பெயரெச்சத்தானுங் கிளக்க வென்பதாம்.

உதாரணம்: மலை நிற்கும், ஞாயிறியங்கும் திங்களியங்கும் எனவும்; 'வெங்கதிர்க் கனலியொடு மதிவலந் திரிதருந் தண் கடல் வையத்து' எனவும் வரும்.

---

(சஉ) முடிபாய் வரும் வினைச்சொல்லா னுணர்த்தப்படும் தொழிற்கு, எச்சத்தா னுணர்த்தப்படுந் தொழில் முன்னிகழ்தல் என்றது,— உண்டு வருவாய் என்புழி வருதற்கு உண்ணுதல் முன்னிகழ்தலை; என்றது வருதல் எதிர்வில் நிகழ்வதாகக் கூறினமையின் உண்ணு தலும் எதிர்காலத்து நிகழ்வது என்பது பெறப்படுமாயினும் வரு தற்குமுன்னே உண்ணுதல் நிகழுமாதலின் இறந்தகாலமே உணர்த்தும் என்றபடி·



நிகழ்காலச் சொல்லாயினும் ஒருகாற் பொதுவாகலுடைமை யாற் 'பொதுச்சொல்' என்றார்.

நிகழ்காலச்சொல் இறந்தகாலமும் எதிர்காலமு முணர்த்துதல் வழுவாயினும் அமைகவென அமைத்தவாறு. (சஙு)

உசக. வாராக் காலத்து நிகழுங் காலத்து
மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள வென்மனார் புலவர்.

**இதன் பொருள்:** எதிர்காலத்தும் நிகழ்காலத்தும் ஒருபடியாக வரும் வினைச்சொற்பொருண்மை இறந்தகாலத்தாற் சொல்லுதல் விரைவு பொருளையுடைய என்றவாறு.

சோறு பாணித்தவழி உண்ணுதிருந்தானைப் போகல் வேண்டுங் குறையுடையானொருவன் இன்னுமுண்டிலையோ என்றவழி, உண்டேன் போந்தேன் என்னும்; உண்ணுநின்றுனும் உண்டேன் போந்தேன் என்னும்; ஆண்டு எதிர்காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும் உரிய பொருளை விரைவுபற்றி இறந்தகாலத்தாற் கூறியவாறு கண்டுகொள்க.

தொழில் இறந்தனவல்லவேனும், சொல்லுவான் கருத்துவகையான் இறந்தனவாகச் சொல்லப்படுதலின், 'குறிப்பொடு கிளத்தல்' என்றார்.

எதிர்காலத்துப் பொருண்மையைக் கிளத்தலும், நிகழ்காலத்துப் பொருண்மையைக் கிளத்தலும் என இரண்டாகலான்

'விரைந்தபொருள' வென்றார்.

இதுவும் காலவழுவமைதி. (சச)

(சங) பொதுவாதல்—மூன்றுகாலத்துக்கும் பொதுவாதல். செய்யும் என்னும் முற்றுனும் செய்யும் என்னும் பெயரெச்சத்தானும் கூறுக என்றபடி.

(சச) பாணித்தல்—தாமதித்தல். இறந்தன—முடிந்தன. இரண்டா கலான் பொருள எனப் பன்மை ஈற்றூற் கூறினு ரென்றபடி.



உசஉ. மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
யப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா குமே.

இதன் பொருள் : மிக்கதன்கண் நிகழும் வினைச்சொல்லை நோக்கித் திரிபின்றிப் பயக்கும்

அம் மிக்கதனது பண்பைக் குறித்து வரும் வினைமுதற்சொல், சுட்டிச் சொல்லப்படுவதோர் வினைமுதலில்லாதவிடத்து,
நிகழ்காலத்தான் யாப்புறுத்த பொருளை யுடைத்தாம் என்றவாறு.

முயற்சியும் தெய்வமுமாகிய காரணங்களுட் . டெய்வஞ் சிறந்தமையான், அதற்குக் காரணமாகிய தவஞ்செய்தல் தாயைக் கோறன் முதலாகிய தொழிலை 'மிக்கது' என்றார். தெய்வமாய இருவினை மிக்கதன்கண் வினைச்சொல்லாவன, தவஞ்செய்தான், தாயைக் கொன்றான் என்னுந் தொடக்கத்தன. அப்பண்பு குறித்த வினைமுதற்கிளவியாவன, சுவர்க்கம் புகும், நிரையம் புகும் என் பன. யாவன் றாயைக் கொன்றான் அவனிரயம் புகும் எனவும்; ஒருவன் றவஞ்செய்யிற் சுவர்க்கம் புகும், தாயைக் கொல்லி னிர யம் புகும் எனவும் மிக்கதன் வினைச்சொ லோக்கி அம் மிக்கதன் றிரிபில் பண்பு குறித்த வினைமுதற்கிளவி நிகழ்காலத்தான் வந்தவாறு கண்டுகொள்க.

அப்பண்பு குறித்தவென்பதற்கு மிக்கதாகிய இருவினைப் பயனுறுதல் அவ்வினைமுதற் கியல்பென்பது குறித்தவென்று உரைப்பினு மமையும்.

---

(சுரு) குறை—காரியம் ; என்றது இன்றியமையாத காரியத்தை. மிக்கது—பயனுக்குரிய காரணங்களுள் சிறந்தது என்றது தெய்வத்தை தெய்வம்—ஊழ். தெய்வமாய இருவினை மிக்கது—தெய்வமாய இருவினையாய்ச் சிறந்தது. அதன்கண்வரும் வினையென்றது—செய்தான், கொன்றான் முதலியவற்றை. அப்பண்பு—அத்தொழிலின் பயன் ; என்றது—தவஞ்செய்தலும் தாயைக்கோறலும் ஆகிய தொழிலின் பயன் என்றது—முறையே சுவர்க்கம் புகுதலும், நரகம் புகுதலும் என்றபடி. சுட்டிக் குறித்த கிளவியென விசைக்க. பண்பென்றார்; முயற்சிக்கு

பொதுவகையாகக் கூறாது ஒருவற் சுட்டியவழி, அவன் றவஞ் செய்து சுவர்க்கம் புக்கான், புகுவன் என வினைக்காலத்தாற் சொல்லப்படுதலின், அவ்வாறு ஒருவற்சுட்டுதலை நீக்குதற்கு, வினைமுதற்கிளவியாயினுஞ் செய்வதில்வழி யென்றார். செய்வ தென்பது செய்கையை யென்பாரு முளர்.

வினைச்சொலென்றாரேனும், தவஞ்செய்தான் சுவர்க்கம் புகும், தாயைக் கொன்றா னிரயம் புகும் என வினைப்பெயராய் வருதலுங் கொள்க.

தவஞ்செய்யிற் சுவர்க்கம் புகுவன் என எதிர்காலத்தாற் சொல்லப்படுவதனை நிகழ்காலத்தாற் சொல்லுதல் வழுவாயினும்

அமைகவென வழுவமைத்தவாறு.

அஃதேல், 'இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை' (சொல்–உசுரு) என்புழி இது தெளிவாயடங்குமெனின் :—அற்றன்று : இயற்கையுந் தெளிவும் சிறந்த காரணமாகிய தெய்வத்தானாக பிறிதொன்றானாக திரிதலுடைய, இது திரிபின்றாகலானும், இறந்தகாலத்தாற் சொல்லப்படாமையானும், ஆண் டடங்காதென்பது. இதனது திரிபின்மையும் அவற்றது திரிபுடைமையும் விளக்குதற்கன்றே, ஆசிரியர் 'மிக்கதன் மருங்கின்' என்றும் 'இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை' என்றும் ஓதுவாராயிற்றென்பது. (சரு)

---

அதன் பயன் குணமாதல்பற்றி. வினைமுதற்சொல்–வினைமுதற்குப் பயனிலையாய் வருஞ் சொல். வினைமுதற்குரிய சொல் எனினும் அமையும். திரிபில்பண்பு–நியதியான பயன். எனவே நிச்சயமாக அடைவதென்றபடி. இனி, அப்பண்பு குறித்த என்பதற்கு (மிக்கதாகிய இருவினைப்பயனுறுதல்) அவ்வினைமுதற் கியல்பென்பது குறித்த என்று உரைப்பினு மமையு மென்றபடி. வினைப்பெயர்-வினையாலணையும் பெயர்.

செய்வது–வினைமுதல். செய்கை–செய்தல். (செய்வதென்பது என்றது செய்வதென்றது என இருத்தல்வேண்டும்.) இது என்றது–மிக்கதன் திரிபின் பண்பை. அவற்றது என்றது இயற்கையையுந் தெளிவையும். இது 'புகும்' என நிகழ்வாற் சொல்லப்படுவதன்றிப் புகுந்தார் என இறந்தகாலத்தாற் சொல்லப்படாதென்றபடி.

உ௪௩. இதுசெயல் வேண்டு மென்னுங் கிளவி
யிருவயி னிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும்.

இதன் பொருள்: இது செயல்வேண்டுமென்பது பட வருஞ்சொல், தன்பாலானும் பிறன்பாலானுமென ஈரிடத்தும் நிலைபெறும் பொருண்மையையுடைத்தாம் என்றவாறு.

தானென்றது செயலது வினைமுதலை.

ஓதல்வேண்டும் என்றவழி வேண்டுமென்பது ஓதற்கு வினை முதலாயினாற்கும் அவனோதலை விரும்புந் தந்தைக்கும் ஏற்றவாறு கண்டுகொள்க.

இதனான் ஒருசார்வினைச்சொற் பொருள்படும் வேறுபா டுணர்த்தினார்; உணர்த்தாக்காற் றெற்றென விளங்காமையி னென்பது. (௪௩)

உ௪௪. வன்புற வருஉம் வினாவுடை வினைச்சொ
லெதிர்மறுத் துணர்த்துதற் குரிமையு முடைத்தே.

இதன் பொருள்: துணிந்து திட்பமெய்துதற்கு வரும் வினாவையுடைய வினைச்சொல் வினைநிகழ்வுணர்த்தாது எதிர்மறுத் துணர்த்துதற்கு உரித்தாதலுமுடைத்து என்றவாறு.

வினாவாவன ஆ, ஏ, ஓ என்பன.

(சசு) தான் என்றதனைத் தன் எனத் திருத்துக. செயல்—ஓதுஞ் செயல். அதன் வினைமுதல்—ஓதுபவன். சாத்தன் ஓதல் வேண்டுமென் புழிச் சாத்தன் ஓதலை விரும்புவானெனத் தன்பாலினும் சாத்தனு டைய ஓதலைத் தந்தை வேண்டுமெனப் பிறன்பாலினும் வந்தமை காண்க.

பால்—பக்கம்.

(சஎ) திட்பம்—திடம். எதிர்மறைப் பொருளுணர்த்தியது வினு வெழுத்தன்று. அது எதிர்மறையைத் திடப்படுத்தியது. எனவே வைதேன் என்பதே எதிர்மறைப்பொருளை ஓசை வேற்





| வினை

கதத்தானாகு களியானாகு ஒருவன் தெருளாது ஒருவனை வைதான்; அவன்தெருண்டக்கால், வையப்பட்டான் நீ யென்னை வைதாய் என்றவழித் தான் வைதவை யுணராமையான் வைதேனே யென்னும்; ஆண்டவ் வினவொடு வந்த வினைச்சொல் வைதிலே னென்னும் எதிர்மறைப்பொருள் பட

வந்தவாறு கண்டுகொள்க. வினாவொடு வந்தவழி எதிர்மறைப்பொருள் படுமா றென்னையெனின்:— சொல்லுவான் குறிப்புவகையான் எதிர் மறைப்பொரு ளுணர்த்திற்றென்க. எதிர்மறைப் பொருளுணர்த்திற்று ஆண் டேகாரமாகலின், வினைச்சொல் எதிர்மறுத்துணர்த் துதற் குரிமையுமுடைத்தென்றல் நிரம்பாதெனின்:— எதிர் மறையாயின பயன்றருவது வினாவுடைவினைச்சொ லென்றுராகலின், அஃதெதிர்மறுத்தல் யாண்டையதென மறுக்க.

வினைநிகழ் வுணர்த்தற்பாலது. வினையது நிகழாமை யுணர்த் துதல் வழுவாயினும் அமைகவென வினைச்சொற்பற்றி மரபுவழு வமைத்தவாறு.

(சஎ) உ௪௫.

வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
யிறப்பினு நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்று
மியற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை.

இதன் பொருள்: எதிர்காலத்துக்குரிய வினைச்சொற் பொருண்மை, இயற்கையாதலும் தெளியப்படுதலும் சொல்லு மிடத்து, இறந்தகாலச் சொல்லானும் நிகழ்காலச் சொல்லானும்

விளங்கத் தோன்றும் என்றவாறு.

இயற்கையென்பது பெற்றி முதலாயினவற்றானுணரப் படுவது. தெளிவு நூற்றெளிவான் வருவது.

---

றுமையான் உணர்த்துமென்றபடி. இடைச்சொற்குத் தனித்துப் பொருளில்லையென்பது சேனாவரையர்க்குக் கருத்தாகலின் இங்ஙனம் ...றி ஞர். இதனை இடையியல் உ-ம் சூத்திரத்தில் கூறிய 'கூரியதோர் வாண்மன்' என்பதனுரை நோக்கித் தெளிக. எதிர்மறையாயின பயன் தருவது வினாவுடை வினைச்சொல் என வினைச்சொன் மேலேற்றிக் கூறினமையின் எதிர்மறைப் பொருளைத் தனிய வினாத்தராது; அது பற்றிச் சொல்லுவான் குறிப்பால் எதிர்மறை பெறப்படுமென்றார். அஃது—அவ் வினாவெழுத்து.

(சஅ) பெற்றி—இயல்பு; சுபாவம்.



ஒருகாட்டின்கட் போவார் கூறைகோட்படுதல் ஒரு தலையாகக் கண்டு இஃதியற்கையென்று துணிந்தான், கூறைகோட் படாமுன்னும், இக் காட்டுட் போகிற் கூறைகோட்பட்டான், கூறைகோட்படும் என்னும். எறும்பு முட்டை கொண்டு தெற்றியேறின் மழை பெய்தல் நூலாற்

றெளிந்தான், அவை

முட்டைகொண்டு தெற்றி யேறியவழி, மழை பெய்யாமுன்னும், மழைபெய்தது, மழை பெய்யும் என்னும். ஆண்டு எதிர்காலத்திற் குரிய பொருள் இறந்தகாலத்தானும் நிகழ்காலத்தானும் தோன்றியவாறு கண்டு கொள்க.

இது காலவழு வமைத்தவாறு.

(சஅ)

உசகூ. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும்
வழக்கியன் மரபே.

இதன் பொருள்: செயப்படுபொருளைச் செய்த வினை முதல்போலத் தொழிற்படச் சொல்லுதலும் வழக்கின்கண் இயலு மரபு என்றவாறு.

வழக்கியன் மரபெனவே, இலக்கணமன்றென்றவாறும்.

உதாரணம்: திண்ணை மெழுகிற்று, கலங் கழீஇயிற்று என வரும்.

திண்ணை மெழுகப்பட்டது, கலங் கழுவப்பட்டது என்று மன்னுகற்பாலது, அவ் வாய்பாடன்றி வினைமுதல் வாய்பட்டான் வருதலும் வழக்கினுண்மையான் அமைகவென வினைச்சொற் பற்றி மரபு வழூ வமைத்தவாறு.

---

(சகூ) திண்ணைமெழுகப்பட்டது என்றவழி மெழுகப்பட்டது திண்ணையாதலின் அது செயப்படுபொருளாம். திண்ணை மெழுகிற்று என்னின் மெழுகுதல் வினை திண்ணையின்வினையாம். இங்கே திண்ணை யாகிய செயப்படுபொருள் மெழுகுதலைச் செய்த வினைமுதல்போலக் கிளக்கப்பட்டவாறறிக. இங்ஙனமன்றிச் செயப்படுபொருளைக் கருத்தாவாகவே வைத்து அரிசி தானே யட்டது என்புழி தானே அட்டது என அடுதலாகிய தொழிலை அரிசியின் வினையாகக் கூறலும் தொழிற்படக் கிளத்தலேயாம் என்றபடி. முன்னது செயப்படுபொருளைச் செய்ததன் வாய்பாட்டாற் கிளக்கப்பட்டது; பின்னது செயப்படு

செயப்படுபொருளை வினைமுதல் வாய்பாட்டாற் கிளத்தலே யன்றி, எளிதினடப்படுதலே நோக்கி அரிசிதானேயட்டது எனச் செயப்படுபொருளை வினைமுதலின் றொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபென்றற்கு, 'தொழிற்படக் கிளத்தலும்' என்றார். இதைக் கரும கருத்த னென்ப. (சகூ)

உசஎ. இறப்பே யெதிர்வே யாயிரு காலமுஞ்
சிறப்பத் தோன்று மயங்குமொழிக் கிளவி.

இதன் பொருள்: இறப்பும் எதிர்வுமாகிய இரண்டுகாலமும் மயங்குமொழிப் பொருளாய் விளங்கத் தோன்றும் என்றவாறு.

**உதாரணம்:** இவர் பண்டு இப் பொழிலகத்து விளையாடுவர்; நாளை அவன் வாளொடு வெகுண்டு வந்தான் பின், நீ யென்

செய்குவை என வரும்.

அவ்விரண்டு காலமும் மயங்கு மொழிப் பொருளாய்த் தோன்றுமெனவே, அவற்றை யுணர்த்துஞ்சொன் மயங்குமென்ற வாறும். அவை பெயரும் வினையுமாய் மயங்குதலின்றி மயங்கு வினைச்சொற் கிளவி யென்னாது பொதுப்பட 'மயங்குமொழிக் கிளவி' என்றார்.

தோன்றுமென்பது பெயரெச்சமெனினு

மிழுக்காது.

பண்டு விளையாடினர் என்றும் நாளை வருவன்

என்றுமன்றே

கூறற்பாலது; அவ்வாறன்றித் தம்முண் மயங்கக் கூறினு மமைக வெனக் காலவழு வமைத்தவாறு. (ரு௦)

---

பொருளைச் செய்ததாகவே கூறியதென வேறுபாடறிக. மெழுகிற்று என்றதை மெழுகப்பட்டதென மாற்றலாம். அட்டது என்பதை அடப் பட்டதென மாற்றமுடியாது. ஆதலால் அரிசி தானே யட்டது என்பது செயப்படுபொருளை வினைமுதலாகக் கூறப்பட்டது என்க. கரும கருத்தன்—செயப்படுபொருள் கருத்தாவாகக் கூறப்படுவது.

(ரு௦) தோன்றும் என்பது பெயரெச்சமெனினு மிழுக்காது என்றதனன், தோன்றும் மொழிக்கிளவி தம்முள் மயங்கும் என்றும் மாற்றியும் கொள்ளலாம் என்பது கருத்தாகும்;

உ௪அ. ஏனைக் காலமு மயங்குதல் வரையார்.

**இதன் பொருள்:** இறப்பும் எதிர்வுமேயன்றி நிகழ்கால மும் அவற்றொடு மயங்கும் என்றவாறு.

**உதாரணம்:** இவள் பண்டு இப்பொழிலகத்து விளையாடும் எனவும், நாளை வரும் எனவும் வரும்.

சிறப்பத்தோன்று மெனவும், மயங்குதல் வரையாரெனவும் கூறினர்; இறப்பும் எதிர்வும் மயங்குதல் பயின்று வருதலானும், அத்துணை நிகழ்காலமயக்கம் பயின்று வாராமையானு மென்க.

மூன்றுகாலமுந் தம்முண் மயங்குமென்றாரேனும், ஏற்புழி யல்லது மயங்காமை கொள்க. ஏற்புழிக் கொள்ளவே, வந்தானை வருமென்றலும் வருவானை வந்தானென்றலுமென இவை முதலா யினவெல்லாம் வழுவென்பதாம் பிறவுமன்ன. (ருக)

விளையியல் முற்றிற்று.

# எ. இடையியல்

உ௪௯.

இடையெனப் படுப பெயரொடும் வினையொடு
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே.

நிறுத்த முறையானே இடைச்சொலுணர்த்திய வெடுத்துக் கொண்டார். அதனான் இவ்வோத்து இடையியலென்னும் பெயர்த்தாயிற்று. மொழிக்கு முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பான்மையும் இடைவருதலின் இடைச்சொல்லாயிற்று.

**இதன் பொருள் :** இடைச்சொல் என்று சொல்லப்படுவன பெயரொடும் வினையொடும் வழக்குப்பெற் றியலும்; தாமாக நடக்கு மியல்பில என்றவாறு.

'இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு
மவற்றுவழி மருங்கிற் றோன்றும்'

(சொல்-கருக.)

என்றதனான் இடைச்சொற் பெயரும் வினையுஞ் சார்ந்து வருதல் பெறப்பட்டமையால், பெயரொடும் வினையொடு நடைபெற் றியலுந் தமக்கியல்பில வென்றது, ஈண்டுப் பெயரும் வினையுமுணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றை வெளிப்படுப்ப தல்லது தமக்கெனப் பொருளுடையவல்ல வென்றவாறும்.

(க) ஈண்டு இடைச்சொல் பெயரொடும் வினையொடும் சார்ந்து வருமென்றது, பெயர்ப் பொருளையும் வினைப் பொருளையும் சார்ந்து அப்பொருளை வெளிப்படுத்தி வருவதை. அங்ஙனம் பொருள்கொள்ளுவ தென்னெனின்—முன் (பெயர்-ரு) இடைச்சொற் கிளவியும் உரிச் சொற் கிளவியும் அவற்றுவழி மருங்கிற்றோன்றி வருமென்றமையின். இனி ஒருரை என்பதன் விளக்கம் வருமாறு: பெயரியலிலே 'சொல்லெனப் படுவ பெயரே வினையென், றாயிரண் டென்ப வறிந் திசி னோரே' (பெயர்-ச.) என்னுஞ் சூத்திரத்துள் சொல் பெயரும் வினையுமென்று இரண்டெனக் கூறிப் பின் 'இடைச்சொற் கிளவியும் உரிச்சொற்கிளவியும்அவற்றுவழி மருங்கிற்றோன்றுமென்ப'(பெயர்-ரு) என்னுஞ் சூத்திரத்தானே இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயரை யும் வினையையும் சார்ந்து தோன்றும் என்றதனானே இடையும் உரி யும் சிறப்பிலாச் சொற்களென்பதும், அவற்றோடு இவையுஞ் சேர்ந்து நான்காமென்பதும் பெறப்பட்டதன்றி இடைச்சொல் பெயரையும் வினையையும் சார்ந்து பிறக்குமென்பது அச் சூத்திரத்தாற் பெறப்



உதாரணம்: 'அதுகொ றோழி காமநோயே' (குறு-ரு.) எனவும், 'வருகதில் லம்மவெஞ் சேரி சேர' (அகம்-உஎசு.) எனவும், பெயரும் வினையுஞ் சார்ந்து அப்பொருளை வெளிப் படுத்தவாறு கண்டுகொள்க.

சார்ந்து வருதல் உரிச்சொற்கு மொத்தலின், தமக்கெனப் பொருளின்மை இடைச்சொற்குச் சிறப்பிலக்கணமாம். தமக்கியல் பிலவே யென்றது, சார்ந்தல்லது வாராவென வலியுறுத்தவாறு.

பெயரொடும் வினையொடு நடைபெற்றியலுந் தமக்கியல்பில வெனப் பொதுப்படக் கூறியவதனல், சாரப்படுஞ் சொல்லின் வேருய் வருதலேயன்றி, உண்டனன், உண்டான் எனவும்;

என்மனர், என்றிசினேர்

எனவும் அருங்குறைத்து எனவும் அவற் றிற் குறுப்பாய் வருதலுங் கொள்க.

இனி ஒருரை:—'இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும் அவற்றுவழி மருங்கிற் ரேன்றும்' என்பதற்கு, சார்ந்து வருதலான் இடைச்சொல்லும் உரிச்சொல்லுஞ் சிறப்பில இவை யுட்படச் சொன்ஞன்காமென்பது கருத்தாகலின், இடைச் சொற் பெயரும் வினையுஞ் சார்ந்து வருமென்னும் வேறுபாடு

---

படாது. என்னெனின் பெயரைச் சார்ந் திடைச்சொல்லும் வினையைச் சார்ந்து உரிச்சொல்லும் தோன்றுமென நிரனிறையாகப் பொருள் கொண்டாலும் இடையும் உரியும் சிறப்பில வாதலும் சொல் நான் காதலும் பெறப்படுதலான். ஆதலின் இடைச்சொல் பெயரும் வினை

யும் சார்ந்து தோன்றுமென இச்சூத்திரத்தாற் கூறவேண்டுமெனக் கொண்டு பெயர்ச் சொல்லையும் வினைச்சொல்லையும் இடைச்சொல் சார்ந்து தோன்றுமெனப் பொருள் கூறுவாருமுளர் என்றபடி.

முதலுரையின் கருத்து இடைச்சொல் பெயர்ப்பொருளையும் வினைப் பொருளையுஞ் சார்ந்து அப்பொருளை வெளிப்படுத்து மென்பது. பின் னுரையின் கருத்து பெயர் வினைகளைச் சார்ந்து வருமென்பது.

இனிச் சிலர் இடைச்சொல் பெயர் வினைகளைச் சார்ந்து நின்றன்

றித் தனித்து நின்று பொருள் விளக்காதென்று கொள்கின்ற பொருள், "பெயரொடும் வினையொடும் நடைபெற்றியலும்" எனப் பொதுப்படக் கூறியவதனால் சாரப்படும் சொல்லின் வேறாய் வருதலே யன்றி, உண்டனன், உண்டான் என்வும், என்மனூர் என்றிசி உககா

தொல்காப்பியம் [இடை

அதனாற் பெறப்படாது. என்னை ? இடைச்சொற் பெயர் சார்ந் தும் உரிச்சொல் வினை சார்ந்தும் வரினும் அவற்றது சிறப் பின்மையுஞ் சொன் னன்காதலும் உணர்த்துதல் சிதையா

தாகலான். அதனுன் இடைச்சொற் பெயரும் வினையுஞ் சார்ந்து வருமென்பது இச் சூத்திரத்தாற் கூறல்வேண்டு மென்ப. அவ் வுரை யுரைப்பார் 'பெயரினும் வினையினு மெய் தடுமாறி (சொல்-உகூ.) என்பதற்கும் பெயரும் வினையுஞ் சார்ந்தென்று பொருளுரைப்ப. (க)

உருω. அவைதாம்
புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயி
னுருபா குநவு
மசைநிலைக் கிளவி யாகி வருநவு
மிசைநிறைக் கிளவி யாகி
வருநவுந்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவு
மொப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்
றப்பண் பினவே நுவலுங்
காலை.

---

ஞோர் எனவும், அருங்குரைத்து எனவும் அவற்றிற் குறுப்பாய் வருதலுங் கொள்க" என்று சேனுவரையர் கூறியதனுற் பெறப்படு மென்க. இங்ஙனஞ் சேனுவரையர் கூறியதனுல் இடைச் சொற்கள் பெயர்வினைகளைச் சார்ந்துநின்று அவற்றின் பொருளை வெளிப்படுத்

துவ தல்லது தமக்கெனப் பொருளுடையவல்ல என்பது இரண்டு விதமாகும்: ஒன்று, தனக்கெனப் பொருளின்றிப் பெயர் வினைக ளுணர்த்தும் பொருளைச் சார்ந்துநின்று அப்பொருளை வெளிப்படுப் பது. ஒன்று, பெயர் வினைகளைப் போலத் தனியே நின்று பொரு ளுணர்த்தாது அவற்றைச் சார்ந்துநின்று தானும் பொருளுணர்த் துவது. பண்டு காடுமன் என்பதில் பண்டு காடு என்பதே எடுத்த லோசையால் ஆக்கப்பொருளை யுணர்த்த அப்பொருளை மன் என் பது வெளிப்படுத்தி நின்றது என்பது ஒருவகை. உண்டான் என்பதில் ஆன் என்னும் விகுதி யிடைச்சொல் உண் என்னும் பகுதியைச் சார்ந்துநின்று தான் ஆண்பாற்பொருளை உணர்த்தி அப்பகுதியும் ஆண்பாற்குரிய வினைப்பொருளில் வந்தமையை யுணர்த்தி நின்றது ஒருவகை. ஆன் விகுதி தனித்துநின்று ஆண்பாற் பொருள் தரா தென்க. பிறவுமன்ன.



**இதன் பொருள்:** மேற்சொல்லப்பட்ட இடைச்சொற்கள் தாம், இரண்டுசொற் புணருமிடத்து அப் . பொருணிலைக் குதவு வனவும், வினைச்சொல்லை முடிக்குமிடத்துக் காலப் பொருளவாய் வருவனவும், செயப்படுபொருண் முதலாகிய வேற்றுமைப் பொருட்கண் உருபென்னுங் குறியவாய் வருவனவும், பொரு ளுடையவன்றிச் சார்த்திச் சொல்லப்படுந் துணையாய் வருவன வும், வேறு பொருளுணர்த்தாது இசை நிறைத்தலே பொருளாக வருவனவும் தத்தங்குறிப்பாற் பொருளுணர்த்துவனவும், ஒப்புமை தோன்றுதவழி அவ்வொப்புமைப்பொருள் பயப்பனவு மெனக் கூறப்பட்ட ஏழியல்பையுடைய, சொல்லுமிடத்து என்றவாறு.

புணரியனிலை புணரியலது நிலை. ஆண்டுப் பொருணிலைக்குத் வுதலாவது, எல்லாவற்றையும் என்புழி வற்றுச் சாரியை நிலை மொழிப்பொருள் அஃறிணைப் பொருளென்பது பட வருதலும், எல்லா நம்மையும் என்புழி நம்முச் சாரியை அப்பொருள் தன் மைப்பன்மையென்பது பட வருதலுமாம். அல்லனவும் தாஞ் சார்ந்து வரும் மொழிப் பொருட்கு உபகாரமுடையவாய் வருமா றோர்ந்து கொள்ளப்படும். அல்லாக்கால், சாரியை மொழியாகா வென்பது.

வினைச்சொல் ஒரு சொல்லாயினும் முதனிலையும் இறுதிநிலை யும் இடைச் சொல்லுமாகப் பிரித்துச் செய்கை செய்து காட்டப் படுதலின், 'வினைசெயன் மருங்கின்' என்றார். அம் முடிபுணர்த்தா மைக்குக் காரணம் 'புணரிய னிலையிடை யுணரத் தோன்றா' என்புழிச் சொல்லப்பட்டது. அவற்றுள் ஒரு சாரன பாலுணர்த் தாமையானும், எல்லாங் காலமுணர்த்துதலானும், 'காலமொடு வருநவும்' என்றார்.

வேற்றுமைப் பொருளவாய் வருவன பிறசொல்லுமுளவாக வின், அவற்றை நீக்குதற்கு உருபாகுநவுமென்றார். பிற சொல் லாவன 'கண்ணகன் ஞாலம்' 'ஊர்க்கா னிவந்த பொதும்பர்'

---

(உ) பாலொடு வருநவுமென்று விதவாதது வினையினொரு சாரன பாலுணர்த்தாமை பற்றியும் காலமொடு வருநவுமென்று விதந்தது எல்லாந் காலமொடு வருதல் பற்றியுமென்க. பாலுணர்த்தாவினைகள் தன்மை, முன்னிலை, வியங்கோள், வேறு, இல்லை, உண்டு, பெயரெச் சம், வினையெச்சம் முதலியன.

(குறிஞ்சிக்கலி-உ௦.) என ஏழாம் வேற்றுமைப் பொருட்கண் வருங் கண் கால் முதலாயினவும், 'அனையை யாகன் மாறே' (புறம்-ச.) 'சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே' 'இயல்புழிக் கோலோச்சு மன்னவன்' (குறள்-உஉ) என மூன்றாம் வேற்றுமைப் பொருட்கண் வரும் மாறு உளி என்பனவும், அன்ன பிறவு மாம். அஃதேல், வேற்றுமை உருபுமென் றோதுவார்; ஓதவே, இவை நீங்குமெனின்:—அஃதொக்கும். அவைதம்மையும் தழீஇக் கோடற்கு 'வேற்றுமைப் பொருள்வயின்' என்றார். அவை வருங்கால் நிலைமொழி யுருபிற்கேற்ற செய்கை ஏற்புழிப் பெறு தலுமுடைமையின், 'உருபாகுநவும்' என்றார். இஃது இரு பொருளுணர்த்தலான் இருதொடராகக் கொள்க

அசைத்தல் சார்த்துதல்.
பொருளுணர்த்தாது பெயரொடும்
வினையொடுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு
நிற்றலின், அசைநிலை
யாயிற்று. அவை அந்தின் முதலாயின. '
புகழ்ந்திகு மல்லரோ
பெரிதே' 'உரைத்திசினோரே' எனச் சார்ந்த
மொழியை வேறு
படுத்து நிற்றலின், அசைநிலைச் சொல்லாயின
என்பாருமுளர்.

செய்யுட்கண் இசைநிறைத்து
நிற்றலின், இசைநிறை
யாயின.
குறிப்புச் சொல்லுவான் கண்ணதாயினும்
அவன் குறித்த
பொருளைத் தாங்குறித்து நிற்றலின், தத்தங்
குறிப்பினென்றார்.
சொல்லுவான் குறித்த பொருளைத் தாம்
விளக்குமெனவே,
' கூரியதோர்
வாள்' என மன்னுனன்றி ஓசைவேறுபட்டான் ஒரு
காற் றிட்பமின்றென்னுந் தொடக்கத்து

றலும்பெறப்படும். பொருட்கும் பொருளைப் புலனாகவுடைய உணர்

இருதொடராகக் கொள்க என்றமையான் வேற்றுமைப்

பொருள்வயின் உருபென்னும் பெயர்க்குரியவாய் வருவனவாகிய

அவ்வுருபுகளும் எனவும், வேற்றுமைப் பொருள் வயின் உரு

பாகி வருவன பிற சொற்களுமெனவும் பொருள் கொள்க என்ற

படி. உருபாகிவருவன பிற சொற்களைச் சொல்லுருபென்ப.

ஓசை வேறுபாடென்றது. எடுத்தல் படுத்தல் முதலியவற்றை. கூரிய

தோர் வாள் என்புழி எடுத்த லோசையாலேயே வாளின் திட்ப

மின்மை முதலிய ஒழியிசைப் பொருள் தோன்றிவிடும். அதனை

வெளிப்படுத்த மன் வந்ததென்பது கருத்து. புகழ்ந்திகு மல்லரோ—.

விற்கும் ஒற்றுமை கருதிப் பொருளுணர்வைப் பொருளென்றார். 'மிகுதி செய்யும் பொருள' (சொல்—உகக) என்பது முதலாயின வற்றிற்கும் ஈதொக்கும்.

ஒக்குமென்னும் சொல்லன்றே ஒப்புமை புணர்த்துவது; அச்சொல் ஆண்டின்மையான் ஒப்புமை தோன்றாமையான், ஒப்பில் வழியாலென்றார்; உவமையொடு பொருட்கு ஒப்பில்லை யென்றாரல்லரென்பது. ஒக்குமென்னுஞ்சொல்லை ஒப்பென்றாரென் பாருமுளர். ஒப்பில்வழியாற் பொருள்செய்குநவாவன, அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப என்பன முதலாகப் பொருளதிகாரத்துக் கூறப்பட்ட முப்பத்தாறனுள் ஒக்குமென்ப தொழிய ஏனையவாம்.

சாரியையும், வேற்றுமையுருபும், உவமவுருபும் குறிப்பாற் பொருளுணர்த்துமாயினும், புணர்ச்சிக்கண் உபகாரப்படுதலும் வேற்றுமைத்தொகைக்கும் உவமத்தொகைக்கும் அவ்வுருபுபற்றி இலக்கணங் கூறுதலும் முதலாகிய பயனோக்கி, இவற்றை வேறு கூறினார்.

இடைச்சொ லேழனுள்ளும் முதனின்ற மூன்றும் மேலே புணர்த்தப்பட்டமையான் முன் வைத்தார். ஒப்பில்வழியாற் பொருள் செய்குந முன்ன ருணர்த்தப்படுதலின் இறுதிக்கண் வைத்தார். ஒழிந்த மூன்றும் இவ்வோத்தின்கண் உணர்த்தப்படு தலின் இடை வைத்தார். (உ)

---

இகும் அசைநிலை, உரைத்திசினோர்—இசின் அசைநிலை. இவைபுகழ்ந்தா ரல்லரோ உரைத்தார் என்னுஞ் சொல்லொடு சேர்ந்து அவற்றை வேறுபடுத்தி நிற்றலின் அசைநிலை என்பாருமுளர். அசைத்தல் சார்த்

துதல். வேறுபடுத்தலுமாம். பொருள் செய்குந—பொருளுணர்ச்சியைச் செய்குந என்றபடி. ஒப்பில் வழி என்பதற்கு—ஒப்புப் பொருளுணர்த்தும் ஒக்கும் என்னுஞ்சொல் இல்லாதவிடத்து என்பது கருத்து. சாரியை முதலிய மூன்றையும் குறிப்புளடக்காது வேறுகூறியது, சாரியை புணர்ச்சிக்கண் உபகாரப்படுதலும் வேற்றுமையுருபும் உவமஉருபும்பற்றி தொகைக்கு இலக்கணங் கூறுதலு முதலாகிய பயன் நோக்கி என்க. தொகையிலக்கணம் எச்சவியலிற் கூறப்படும். முதனின்ற மூன்றும் என்றது—சாரியையும் காலங்காட்டுவனவும் உருபாகுநவும் என்னும் மூன்றையும், ஒழிந்த மூன்று, அசைநிலையும் இசை நிறையும் தத்தம் குறிப்பிற் பொருள் செய்குநவும். முன்னர் என்றது—பொருளதிகாரத்து உவம இயலில் என்றபடி.



௨௫௧. அவைதாம்

முன்னும் பின்னு மொழியடுத்து வருதலுந்
தம்மீறு திரிதலும் பிறிதவ ணிலையலு
மன்னவை யெல்லா முரிய வென்ப.

**இதன் பொருள்:** மேற்சொல்லப்பட்ட இடைச்சொல், இடை வருதலேயன்றி, தம்மாற் சாரப்படுஞ்சொற்கு முன்னும் பின்னும் வருதலும், தம்மீறு வேறுபட்டு வருதலும், பிறிதோரிடைச்சொல் ஓரிடைச்சொன்முன் வருதலுமாகிய அத்தன்மையவெல்லாம் உரிய என்றவாறு.

**உதாரணம்:** 'அதுமன்' எனவும், 'கேண்மியா' (புறம்—கசஅ) எனவும், சாரப்படுமொழியை முன்னடுத்து வந்தன. 'கொன்னூர்' (குறுந்—கஙஅ) எனவும், 'ஒஒவினிதே' எனவும்,

பின்னடுத்து வந்தன. 'உடனுயிர் போருக தில்ல' (குறுங்—நிஎ) என ஈறு திரிந்து வந்தது. 'வருகதில் லம்ம வெம்சேரி சேர' (அகம்—உஎகூ) என்பது பிறிதவ ணின்றது.

அவைதாமெனப் பொதுவகையா னோக்கினரேனும், இவ் விலக்கணம் இவ்வோத்தின்கண் உணர்த்தப்படும் அசைநிலை முதலாகிய மூன்றற்குமெனக் கொள்க.

அன்னவையெல்லா மென்றதனுன், 'மன்னைச்சொல்' (சொல்—உருஉ) 'கொன்னைச்சொல்' (சொல்—உருச) எனத் தம்மை யுணர நின்றவழி ஈறு திரிதலும், 'னகாரை முன்னர்' என எழுத்துச் சாரியை ஈறு திரிதலுங் கொள்க. (ந)

உருஉ. கழிவே யாக்க மொழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

இவ்வோத்தின்க ணுணர்த்தப்படும் மூவகையிடைச்சொல் லுள், தத்தங் குறிப்பாற் பொருள் செய்குந பொருளுணர்த்

(ந) மன்—மன்னை எனவும், கொன்—கொன்னை எனவும் திரிந்தன.
தம்மை உணர நின்ற வழி என்றது—சொல்லாகிய தம்மை உணர நின்ற வழி என்றபடி.



துதற் சிறப்புப் பரப்புடைமையான் அதனை முன்னுணர்த்து கின்றார்.

**இதன் பொருள் :** கழிவு குறித்து நிற்பதும், ஆக்கங் குறித்து நிற்பதும், ஒழியிசைப் பொருண்மை குறித்து நிற்பது மென மன்னைச்சொன் மூன்றும் என்றவாறு.

**உதாரணம் :** 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே' (புறம்—உ௩௫) என்புழி மன்னைச்சொல் இனி அது கழிந்ததென் னும் பொருள் குறித்து நின்றது. 'பண்டு காடும னின்று கயல் பிறழும் வயலாயிற்று' என்புழி அஃதாக்கங் குறித்து நின்றது. 'கூரியதோர் வாண்மன்' என்புழித் திட்பமின்றென்றானும் இலக்கணமின் றென்றானும் எச்சமாய் ஒழிந்த சொற்பொருண்மை நோக்கி நின்றது. (௪)

உ௫௩. விழைவே கால மொழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.

**இதன் பொருள் :** விழைவு குறித்து நிற்பதும், காலங் குறித்து நிற்பதும், ஆண்டொழிந்து நின்ற சொற்பொருளை நோக்கி நிற்பதுமெனத் தில்லைச்சொன் மூன்றும் என்றவாறு.

**உதாரணம் :**

'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே' (குறுந்—௧௪)

என அவளைப் பெறுதற்க ணுளதாகிய விழைவின்கண் வந்தது. 'பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே' எனப் பெற்றகாலத் தறிக வெனக் காலங்குறித்து நின்றது. 'வருகதில் லம்மவெஞ் சேரி சேர' (அகம்—உ௭௬) என வந்தக்கால் இன்னது செய்வலென் னும் ஒழியிசைப்பொரு ணோக்கிற்று. (௫)

---

(௪) கூரியதோர் வாள்மன் என்புழி இப்பொழுது வலிமை இன் றென்றாயினும் வாளுக்குரிய இலக்கணமின்றென்றாயினும் பொருள்

படும், இலக்கணம் - கூர்மை.

(ரு) வருகதில்லம்ம எம்சேரிசேர—ஒழியிசை. எம்சேரிக்கு ஊரன் வருக; வந்தால் அவனை இன்னது செய்வல் என்னும் ஒழியிசைப் பொருள் தந்து நின்றது. இன்னது செய்வல் என்றுள் பரத்தை. இன்



உருச. அச்சம் பயமிலி காலம் பெருமையென்
றப்பா னன்கே கொன்னைச் சொல்லே.

இதன் பொருள்: அச்சப்பொருளதும், பயமின்மைப் பொருளதும், காலப்பொருளதும், பெருமைப்பொருளதுமெனக் கொன்னைச்சொல் நான்காம் என்றவாறு.

உதாரணம்:

'கொன்முனை யிரவூர் போலச்
சிலவாகுக நீதுஞ்சு நாளே'

(குறுந்—கக)

என்புழி அஞ்சி வாழுமூர் எனவும்,

'கொன்னே கழிந்தன் றிளமை'

(நாலடி—ருரு) என்புழிப் பயமின்றிக் கழிந்தது எனவும்,

'கொன்வரல் வாடை
நினதெனக் கொண்டேனே'

என்புழிக் காதலர் நீங்கிய காலமறிந்து வந்த வாடை எனவும்,

'கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே'

(குறுந்—கஅ)

என்புழிப் பேரூர் துஞ்சினும் எனவும், கொன்னைச்சொல் நான்கு பொருளும் பட வந்தவாறு கண்டு கொள்க. (சு)

உருரு. எச்சம் சிறப்பே யைய மெதிர்மறை
முற்றே யெண்ணே தெரிநிலை யாக்கமென்
றப்பா லெட்டே யும்மைச் சொல்லே.

**இதன் பொருள்:** எச்சங்குறிப்பது முதலாக ஆக்கங் குறிப்பதீருக உம்மைச்சொல் எட்டாம் என்றவாறு.

---

னது செய்வல் என்றது, துறைகேழூரன் எம் சேரி சேர வருக. வந்தால் அவனைப் பெருங்களிறு போலத் தோள் கந்தாகக் கூந்தலிற் பிணித்து அவன் மார்பைக் கடிகொள்ளுவே னென்றமையை. அகம்—உஎசு-ஞ் செய்யுள்நோக்குக. இக்காலத்தும் கலாசாலைமாணவர்களுள் ஒருமாணுக்கன் ஒரு மாணுக்கனை அடித்தால் அடிபட்ட மாணவன் அடித்தவனை நோக்கி நீ எங்கள் வீட்டிற்கு வாவென்று சொல்வது வழக்கு. வந்தால் நான் உன்னை நன்கு அடிப்பேன் என்பதே அவன் கருத்தாம். அதுபோலவே இதுவுமென்பது.

**உதாரணம் :** சாத்தனும் வந்தான் என்னுமும்மை கொற்றனும் வந்தானென்னும் எச்சங்குறித்து நிற்றலின், எச்சவும்மை. கொற்றனும் வந்தான் என்பதூஉம், இறந்த சாத்தன் வரவாகிய எச்சங்குறித்து நிற்றலின், எச்சவும்மை. 'குறவரு மருளுங் குன்றத்துப் படினே' (மலை—௨௭௫) என்பது குன்றத்து மயங்காதியங்குதற்கண் குறவர் சிறந்தமையாற் சிறப்பும்மை.

'ஒன்று இரப்பான்போ லெளிவந்துஞ் சொல்லுமுலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போ
னல்லார்கட் டோன்று மடக்கமு முடைய
னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடையன்' (கலி—௪௭)

என்புழி இன்னனென்று துணியாமைக்கண் வருதலின் ஐயவும்மை. சாத்தன் வருதற்கு முரியன் என்பது, வாராமைக்கு முரிய னென்னும் எதிர்மறையை ஒழிபாகவுடைத்தாய் நிற்றலின், எதிர்மறைபும்மை. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் என எஞ்சாப் பொருட்டாகலான் முற்றும்மை. 'நிலனு நீருந் தீயும் வளியு மாகாயமுமெனப் பூதமைந்து' என்புழி எண்ணுதற்கண் வருதலின் எண்ணும்மை. இருநில மடிதோய்தலிற் றிருமகளு மல்லள் அரமகளுமல்லள் இவள் யாராகும் என்றவழித் தெரிதற் பொருட்கண் வருதலிற் றெரிநிலைபும்மை. திருமகளோ அரமகளோ

(எ) சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என்று கூறியக் கால், சாத்தனும் வந்தான் என்புழி உம்மை பின்வந்த கொற்றன் வரவைத் தழுவுதலால் எதிரது தழீஇய எச்சம். கொற்றனும் வந் தான் என்புழி உம்மை முன்வந்த சாத்தன் வரவைத் தழுவி நிற் லின் இறந்தது தழீஇய எச்சம். இறந்த—கழிந்த=முன்வந்த. கொற்ற னும் வந்தான் சாத்தனும் வரும் என்று நிகழ்காலத்தானும் எஞ்சு பொருட்கிளவி வருமென்பது உரையாசிரியர் கருத்து. 'உம்மையெச் சம்... தன்வினை யொன்றிய முடிபாகும்மே' என்று ஆசிரியர் கூறிய தல்லது காலங்குறியாமையான் நிகழ்காலத்தானும் தன்வினை வரலா மென்பது உரையாசிரியர் கருத்தாம் அதுவும் பொருத்தமேயாயினும் அவ்வக்காலத்தான் தன்வினை வருதலே சிறப்பென்பது சேனவ ரையர் கருத்து. என்னையெனின்? 'தன்மேற் செஞ்சொல் வருஉங் காலை....முறைநிலையான' (எச்ச–சக) என்று ஆசிரியர் கூறலின்.



என்னுது அவரை நீக்குதலின், ஐயவும்மையின் வேறாத லறிக. ஆக்கவும்மை வந்தவழிக் கண்டு கொள்க. உரையாசிரியர் நெடிய னும் வலியனுமாயினன் என்புழி உம்மை ஆக்கங் குறித்து நிற்றலின் ஆக்கவும்மை யென்றார். 'செப்பே வழீஇயினும் வரை நிலை யின்றே' (சொல்–கரு) என்னுமும்மை, வழுவை யிலக்கண மாக்கிக்கோடல் குறித்து நின்றமையின், ஆக்கவும்மை யென்பாரு முளர். (எ)

உருசு. பிரிநிலை வினவே யெதிர்மறை
யொழியிசை தெரிநிலைக் கிளவி
சிறப்பொடு தொகைஇ
யிருமூன் றென்ப வோகா ரம்மே.

**இதன் பொருள் :** பிரிநிலைப்
பொருட்டாவது முதலாக ஓகாரம்
அறுவகைப்படும் என்றவாறு.

**உதாரணம் :** 'யானோ தேறே னவர்பொய்
வழங்கலரே'
(குறுங்-உக) என்பது தேறுவார் பிறரிற் பிரித்தலிற் பிரிநிலை யெச்சமாயிற்று. சாத்தனுண்டானோ என்பது வினவோகாரம்.

யானோ கொள்வேன் என்பது, கொள்ளேனென்னு மெதிர்மறை குறித்து நிற்றலின், எதிர்மறை யோகாரமாம். கொளலோ கொண்டான் என்பது, கொண்டுய்யப் போயினு னல்லவென்பது முதலாய ஒழியிசை நோக்கி நிற்றலின், ஒழியிசையோகாரம். திருமகளோவல்லள் அரமகளோவல்லள் இவள் யார் ? என்றவழித் தெரிதற்கண் வருதலிற் றெரிநிலையோகாரம். ஓஒபெரியன் என்பது பெருமைமிகுதியுணர்த்தலிற் சிறப்போகாரம். (அ)

உருஎ. தேற்றம் வினவே பிரிநிலை யெண்ணே

யீற்றசை யிவ்வைந் தேகா ரம்மே.

இதன் பொருள் : தேற்றேகார முதலாக ஏகாரமைந்து என்றவாறு.

உதாரணம் : உண்டோ மறுமை எனத் தெளிவின்கண் வருதலிற் றேற்றேகாரம். நீயே கொண்டாய் என வினைப் பொருளுணர்த்தலின் வினாவேகாரம். அவருளிவனே கள்வன் எனப்



பிரித்தலிற் பிரிநிலையேகாரம். நிலனே நீரே தீயே வளியே என் எண்ணுதற்கண் வருதலின் எண்ணேகாரம். 'கடல்போற் றோன்றல காடிறந் தோரே' (அகம்–க) என்பது செய்யுளிறுதிக்கண் வருதலின் ஈற்றசையேகாரம். 'வாடா வள்ளியங் காடிறந் தோரே' (குறுந்–உக) எனச் செய்யுளிடையும் வருதலின் ஈற்றசையென்பது மிகுதி நோக்கிச் சென்ற குறி. இஃது தசைநிலையாயினும் ஏகார வேறுபாடாகலின் ஈண்டுக் கூறினார். (க)

உருஅ. வினையே குறிப்பே யிசையே

பண்பே

யெண்ணே பெயரோ டவ்வறு
கிளவியுங்

கண்ணிய நிலைத்தே யெனவென்
கிளவி.

**இதன் பொருள்:** வினை முதலாகிய ஆறு பொருண்மையுங் குறித்து வரும் எனவென்னு மிடைச்சொல் என்றவாறு.

**உதாரணம்:** 'மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய் (புறம்—கசங) என வினைப்பொருண்மையும், 'துண்ணெனத் துடித்தது மனம்' எனக் குறிப்புப்பொருண்மையும், ஒல்லென் வொலித்தது என இசைப்பொருண்மையும், வெள்ளென விளர்த்தது எனப் பண்புப்பொருண்மையும், நிலனென நீரெனத் தீயென வளியென என எண்ணுப்பொருண்மையும், 'அழுக்காறென

வொருபாவி' (குறள்—கஉஅ) எனப் பெயர்ப்பொருண்மையுங் குறித்து என வென்னுஞ் சொல் வந்தவாறு கண்டுகொள்க. (கo)

உருக. என்றென் கிளவியு மதனோ ரற்றே.

இதன் பொருள்: என்றென்னு மிடைச்சொல்லும் என வென்பதுபோல அவ் வாறுபொருளுங் குறித்து வரும் என்ற வாறு.

உதாரணம்: 'நரைவரு மென்றெண்ணி (நாலடி.—கக) என் வும், 'விண்ணென்று விசைத்தது' எனவும், 'ஒல்லென்றொலிக்கு மொலிபுன லூரற்கு' (ஐந்திணை ஐம்பது—உஅ) எனவும், பச்

சென்று பசுத்தது எனவும், நிலனென்று நீரென்று தீயென்று எனவும், பாரியென்றொருவனுளன் எனவும் வரும். (கக)

[இடை உ௬௦. விழைவின்
றில்லை தன்னிடத் தியலும்.

இதன் பொருள் : 'அப்பான்மூன்றே தில்லைச்சொல்' என்று சொல்லப்பட்ட மூன்றனுள், விழைவின்கண் வருந் தில்லை தன்மைக்க ணல்லது வாராது என்றவாறு.

தன்மைக்கண் வருதல்

மேற்காட்டப்பட்டனவற்றுள்ளும் பிறூண்டுங் கண்டு கொள்க. இடம் வரையறுத்தோதாமையின், விழைவின் றில்லை தன்மைக்கண் வருதலும் மேலே பெறப்பட்டதனைப் பின்னுங் கூறினார், ஏனையிடத்து வாராதென்று நியமித் தற்கென்பது. (கஉ)

உ௬௧. தெளிவி னேயுஞ் சிறப்பி னோவு
மளபி னெடுத்த விசைய வென்ப.

இதன் பொருள் : தெளிவின்கண் வரும் ஏகாரமுஞ் சிறப் பின்கண் வரும் ஓகாரமும்

அளபான் மிக்க இசையை யுடைய வென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

அளபெடையாய் வருதல்
மேற்காட்டப்பட்டனவற்றுள்ளும் பிறண்டுங் கண்டு கொள்க.
(கங)

உசுஉ. மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை
யப்பா லிரண்டென மொழிமனார் புலவர்.

**இதன் பொருள் :** மற்றென்னுஞ்சொல் வினைமாற்றும் அசைநிலையுமென இரண்டாம் என்றவாறு.

**உதாரணம் :** 'மற்றறிவா நல்வினை யாமிளையம்' (நாலடி— கக) என்றவழி அறஞ்செய்தல் பின்னறிவாமென அக்காலத்து வினைமாற்றுதலான் மற்றென்பது

வினைமாற்றின்கண் வந்தது. 'அது மற்றவலங்கொள்ளாது நொதுமற்கலுழும்' (குறுந்-கஉ) என அசைநிலையாய் வந்தது. கட்டுரையிடையும் மற்றோ என அசை நிலையாய் வரும். (கச)

(கச) கட்டுரை - வார்த்தை. (பேச்சு)



உசுரு. எற்றென் கிளவி யிறந்த பொருட்டே.

**இதன் பொருள்:** எற்றென்னுஞ் சொல் இறந்த பொருண்மைத்து என்றவாறு.

**உதாரணம்:** 'எற்றென் னுடம்பி னெழில்நலம்' என்பது என்னல மிறந்ததென்னும் பொருட்பட நின்றது. 'எற்றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன்' என்பதூஉம் இதுபொழுது துணிவில்லாருட் டுணிவில்லாதேன் யான் என்று துணிவிறந்த தென்பது பட நின்றது. (கடு)

உசுச. மற்றைய தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை யொழிய வினங்குறித் தன்றே.

**இதன் பொருள்:** மற்றையதெனப் பெயர்க்கு முதனிலையாய் வரும் மற்றையென்னும் ஐகாரவீற்றிடைச்சொல் சுட்டப்

பட்டதனை ஒழித்து, அதனினங்குறித்து நிற்கும் என்றவாறு

ஆடை கொணர்ந்தவழி அவ்வாடை வேண்டாதான் மற்றை யது கொணு வென்னும். அஃது அச்சுட்டிய வாடையொழித்து அதற்கினமாகிய பிறவாடை குறித்து நின்றவாறு கண்டு கொள்க.

பெரும்பான்மையும் முதனிலையாய் நின்றல்லது அவ்விடைச் சொற் பொருள் விளக்காமையின், 'மற்றைய தென்னுங் கிளவி' என்றார். சிறுபான்மை மற்றையாடை எனத் தானேயும் வரும். மற்றையஃது, மற்றையவன் என்னுந் தொடக்கத்தனவும் அவ் விடைச்சொன் முதனிலையாய பெயர். (கசு)

உசுரு. மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.

இதன் பொருள்: மன்றவென்னுஞ்சொல், தெளிவ பொருண்மையை புணர்த்தும் என்றவாறு.

---

(கசு) மற்றையது என்பது போன்ற பெயர்களுக்கு முதனிலை யாய் நின்று மற்றை என்பது பொருள் விளக்குதலின் மற்றை யென்றது மற்றையது எனக் கூறினரென்பது கருத்து. முதனிலை—பகுதி. மற்றை என்பதே சொல் என்றபடி.



உதாரணம்:

'கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே'

(நற்றிணை—கூச)

என வரும். மடவையே யென்றவாறும்.

(கஎ) உசசு. தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே.

'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' (புறம்—எங) எனத் தஞ்சக்கிளவி அரசுகொடுத்த லெளிதென எண்மைப்பொருளுணர்த்தியவாறு கண்டு கொள்க. (கஅ)

உசஎ. அந்தி லாங்க வசைநிலைக் கிளவியென் றாயிரண் டாகு மியற்கைத் தென்ப.

இதன் பொருள்: அந்திலென்னுஞ்சொல், ஆங்கென்னும் இடப்பொருளுணர்த்துவதும் அசைநிலையுமென இரண்டாம் என்றவாறு.

உதாரணம்: 'வருமே—சேயிழை யந்திற் கொழுநற் காணிய' (குறுந்—உகூங) என்புழி ஆங்கு வருமென்றவாறும். 'அந்திற் கச்சினன் கழலினன்' (அகம்—எசு) என வாளாதே அசைத்து நின்றது. (கக)

உசஅ. கொல்லே ஐயம்.

குற்றிகொல்லோ மகன்கொல்லோ எனக் கொல் ஐயத்துக் கண் வந்தவாறு. (உ௦)

உசுக. எல்லே யிலக்கம்.

எல்லென்பது உரிச்சொனீர்மைத்தாயினும், ஆசிரியர் இடைச்சொல்லாக ஓதினமையான், இடைச்சொல்லென்று கோடும்

'எல்வளை' (புறம்—உசு) என எல்லென்பது இலங்குதற்கண் வந்தவாறு. (உக)

(உக) 'எல்லேவிளக்கம்' எனப் பாடங்கொள்வாருமுளர். எல்—இலக்கம் என்று தானே பொருடரலின் உரிச்சொன்னீர்மைத்தாயினும் என்று சேனாவரையர் கூறினமையால் தஞ்சக்கிளவி முதலியன சார்ந்துநின்று தான் எளிது முதலிய பொருள்களை உணர்த்துமென்ப துணரப்படும், தஞ்சக்கிளவியும் தானே பொருள்உணர்த்துமென்பார் கொள்கை ஆராயத்தக்கது.



உஎ0. இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே.

இதன் பொருள்: இயற்பெயர் முன்னர் வரும் ஆரென்னு மிடைச்சொற் பலர்றிசொல்லான்

முடியும் என்றவாறு.

ஈண்டியற்பெயரென்றது இருதிணைக்கும் அஃறிணையிரு பாற்கு முரிய பெயரை.

உதாரணம்: பெருஞ் சேந்தனர் வந்தார், முடவனர் வந் தார், முடத்தாமக் கண்ணியார் வந்தார், தந்தையார் வந்தார் எனவும்; நரியார் வந்தார் எனவும் வரும்.

தாம், தான், எல்லாம், நீயிர், நீ என்னும் ஐந்துமொழித்து அல்லா வியற்பெய ரெல்லாவற்று முன்னரும் அஃறிணை யியற் பெய ரெல்லாவற்று முன்னரும் ஆரைக்கிளவி வருதலின், பெரும்பான்மை குறித்து 'இயற்பெயர் முன்னர்' என்றார்.

நம்பியார் வந்தார், நங்கையார் வந்தார் எனச் சிறுபான்மை
உயர்திணைப் பெயர் முன்னர் வருதல் ஒன்றெனை முடித்த லென்
பதனாற் கொள்க.

ஆரைக்கிளவி கள்ளென்பதுபோல ஒற்றுமைப்பட்டுப் பெய ரீறாய் நிற்றலின், ஆரைக்கிளவி பலரறி சொல்லான் முடியுமென்

றது அதனை யீருகவுடைய பெயர்
பலாறிசொல்லான் முடிபு
மென்றவாறும்.

---

(உஉ) ஒருமைக்கிளவி யென்றது, முடவனார் என்பதில் முடவன் என்பதை. இவன் என்பதை இவர் என்று கூறுதல் முதலியன ஒருமைசிதைந்து உயர்த்தற்கண் வந்தன. முடவனார் முதலியன ஒருமை சிதையாமல் உயர்த்தற்பொருட்கண் ஆரைக்கிளவி பெற்று வந்தன. ஆதலால் வேறு கூறப்பட்டன என்பது சேனவரையர் கருத்து. அது பொருத்தமாம். தாம் வந்தார் தொண்டனார் என்றவிடத்துச் சேன வரையர்கருதிய உயர்சொற்கிளவி தொண்டனார் என்பதன்று; தாம்என் பதாம். அது தான் என்னும் ஒருமைக்கிளவியே ஒருமை சிதைந்து தாம் என உயர்த்தற்கண் வந்தது என்றபடி. எனவே தொண்டன் என்பது

இச்சூத்திரத்தால் ஆர் பெற்று ஒருமை சிதையாமல் வந்தது என்றபடி.

^ -·'வச்சிலேயாரும் ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவியும்—ஒன் ௬௧௦

'பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே' என ஆரைக் கிளவியதியல் புணர்த்தவே, அஃது உயர்த்தற் பொருட்டாதலும், திணைவழுவும் பால்வழுவும் அமைத்தலும் பெற்றும்.

ஒருமைப்பெயர் முன்னர் ஒருமை சிதையாமல் ஆரைக்கிளவி வந்து பலரறிசொல்லான் முடிதலின், ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியின் வேறுத லறிக. (உஉ)

## உஎக. அசைநிலைக் கிளவி யாகுவழி யறிதல்.

**இதன் பொருள் :** ஆரைக்கிளவி அசைநிலையாமிடமறிக என்றவாறு.

**உதாரணம் :** 'பெயரி ஞகிய தொகையுமா ருளவே' (சொல்—கூஎ) எனவும், 'எல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே' (எழுத்து—கூக) எனவும் வரும்.

ஆகுவழியறித லென்றதனால்,
அசைநிலையாங்கால் உம்மை முன்னரும் உம்மீற்று
வினைமுன்னரு மல்லது வாராமை யறிக.
சிறுபான்மை பிறவண்டு வருமேனுங் கொள்க.
(உங)

உஎஉ.
ஏயுங் குரையு மிசைநிறை யசைநிலை
யாயிரண் டாகு மியற்கைய வென்ப.

இதன் பொருள்: ஏயென்னு
மிடைச்சொல்லும் குரை யென்னு
மிடைச்சொல்லும் இசை நிறையும்
அசைநிலையுமென ஒரோன்றிரண்டாம் என்றவாறு.

---

றனைச் கூறும் பன்மைக்கிளவியும் ' இயற்பெயர்
முன்னர் ... வினை யொடு முடிமே ' என்புழி
யடங்காதோவெனின், ஆண்டு நம்பி நங்கை
சாத்தன் என்னும் பெயர்தானே பால் காட்டுதலான்
அதன்மேல் ஓர் இடைச்சொல்லாயிற்று. ஈண்டுப்
பன்மைச்சொற்றானே ஒருமைக்கு வருதலின்
அடங்காதாயிற்று என்று கிளவியாக்கத்து
உஎ-ம் சூத்திர உரையுட் கூறுதல் காண்க.

(உ௬) தொகையுமார் என்பதில் ஆர் உம்மை முன்வந்தது. செல்லுமார் என்பதில் ஆர் உம்மீற்றுவினை முன்வந்தது.



உதாரணம் : 'ஏஎயிஃதொத்த

னெனப்பொருள் கேட்டை காண்' (கலி—௬௧) என்பது இசைநிறை. ஏஎயென் சொல்லுக என்பது அசைநிலை. 'அளிதோ

தானே யதுபெறலருங் குரைத்தே' (புறம்—௫) என்பது இசைநிறை. 'பல்குரைத்

துன்பங்கள் சென்று படும்' (குறள்—௧௦௪௫) என்பது அசைநிலை.

தொடர்மொழி முதற்கட் பிரிந்துநின்றல்லது

பெரும்பான்மை யும் ஏகாரம் இசைநிறையும் அசைநிலையு மாகாமையின், சார்ந்த மொழியோடு ஒன்றுபட் டிசைத்து இடையும் இறுதியும் நிற்குந் தேற்றேகார முதலாயினவற்றோடு ஒருங்கு கூறாது வேறு கூறினார்.

அஃதேல், இதனை நிரனிறைப் பொருட்டாகக்கொண்டு ஏ இசைநிறை குறை அசைநிலை யென்றுரால் உரையாசிரியரெனின்:- அற்றன்று: மற்று அந்தில் என்பனபோலப் பொருள் வகையான் வேறுபடுவனவற்றை இரண்டா மென்பதல்லது, சொல்வகையான் இரண்டாகிய சொல்லை இரண்டா மென்றதனுன் ஓர் பயனின்மை யின், அவர்க்கது கருத்தன் றென்க, அல்லதூஉம், ஒரு சொல்லே இசைநிறையும் அசைநிலையுமாக லுடைமையான் அவற்றை யுடன் கூறினு ரென்னுக்கால் இசைநிறையும் அசைநிலையும் ஒருங்கு மயங்கக்கூறலாமாகலானும், அவர்க்கது கருத்தன்மை யுணர்க.(உச)

உஎரு. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

**இதன் பொருள்:** மாவென்னு மிடைச்சொல் வியங்கோளைச் சார்ந்து அசைநிலையாய் வரும் என்றவாறு.

**உதாரணம்:** 'புற்கை யுண்கமா கொற்கை யோனே' என வரும்.
(உரு)

(௨௪) ஒரு சொல்லே என்றது—ஏயுங் குரையுமாகிய இரு சொல்லுள்ளும் ஒருசொல்லே என்றபடி. அவை இருபொருளுந் தருதலினாலே அவற்றை உடன் கூறினரென்று சொல்லாதவிடத்து, ஏ இசைநிறை குரை அசைநிலை என்று ஏயொடு இசைநிறையையும் குரையொடு அசைநிலையையும் ஒருங்கு சேரக் கூறலாம் என்ற படி. அங்ஙனம் கூறுமையால் அது பொருந்தாதென்க, அவற்றை என்றது—ஏயும் குரையும் ஆகிய அவ்விரண்டையும்.

(௨௫) உண்க—வியங்கோள்.



௨௭௪. மியாயிக மோமதி யிகுஞ்சின் னென்னு
மாவயி னாறு முன்னிலை யசைச்சொல்.

**இதன் பொருள்:** மியா முதலாகிய ஆறும் முன்னிலை மொழியைச் சார்ந்து வரும் அசைச்சொல்லாம் என்றவாறு.

**உதாரணம்:** கேண்மியா சென்மியா எனவும், 'கண்பனி யான்றிக வென்றி தோழி' எனவும், 'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' (குறு—௨) எனவும், 'உரைமதி வாழியோ வலவ' எனவும், 'மெல்லம் புலம்ப கண்டிகும்' எனவும், 'காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்' (அகம்—௭) எனவும் வரும். (௨௬)

உஎரு. அவற்றுள்

இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடுந்
தகுநிலை யுடைய வென்மனார் புலவர்.

**இதன் பொருள்:** மேற்கூறப்பட்ட ஆறனுள், இகுமுஞ் சின்னும் படர்க்கைச்சொல்லோடுந் தன்மைச்சொல்லோடும் பொருந்து நிலையுடையவென எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தவாறு.

**உதாரணம்:** 'கண்டிகு மல்லமோ' (ஐங்குறு-கஉக) எனவும், 'கண்ணும் படுமோ வென்றிசின் யானே' (நற்-௯௬) எனவும், தன்மைக்கண் வந்தன. 'புகழ்ந்திகு மல்லரோ பெரிதே' எனவும், 'யாரஃ தறிந்திசி னோரே' (குறு-கஅ) எனவும் படர்க்கைக்கண் வந்தன. (உஎ)

உஎ௬. அம்மகேட் பிக்கும்.

**இதன் பொருள்:** அம்மவென்னு மிடைச்சொல் ஒருவனை ஒருவன் ஒன்று கேளென்று சொல்லுதற்கண் வரும் என்றவாறு.

**உதாரணம்:** 'அம்ம வாழி தோழி' (ஐங்-௬க) என வரும்.

மியா இக முதலாகிய அசைநிலை ஒரு பொருளுணர்த்தாவாயினும் முன்னிலைக்கணல்லது வாராமையான் அவ்விட முணர்விக்குமாறுபோல, அம்மவென்பதூஉம் ஒரு பொருளுணர்த்தாதாயினும் ஒன்றனைக் கேட்பிக்குமிடத்தல்லது வாராமையான் அப்பொரு ளுணர்விக்குமென்பது விளக்கிய, கேட்பிக்குமென்றார். (உஅ)

(உஅ) அப்பொருள்—கேள் என்ற பொருள்.

உளஎ. ஆங்க வுரையசை.

இதன் பொருள்: ஆங்கவென்னுமிடைச்சொல் கட்டுரைக்கண் அசைநிலையாய் வரும் என்றவாறு.

உதாரணம்: 'ஆங்கக்குயிலு மயிலுங்காட்டி' என வரும். (உ௬)

உளஅ. ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்.

இதன் பொருள்: ஒப்புமையுணர்த்தாத போலிச்சொல்லும் ஆங்கவென்பதுபோல உரையசையாம் என்றவாறு.

உதாரணம்: மங்கலமென்பதோரூருண்டு போலும் என வரும்.

போலும் போல்வது என்னுந் தொடக்கத்துப் பல வாய்பாடுந் தழுவுதற்குப் போலியென்றார். 'நெருப்பழற் சேர்ந்தக்கா னெய் போல்வதூஉம், (நாலடி—௧௨௪) என்பதுமது.

அசைநிலையும் பொருள் குறித்தல்லது நில்லாமையின் 'அப்பொருட்டாகும்' என்றார். (௩௦)

உளக. யாகா
பிறபிறக் கரோபோ மாதென வரூஉ

மாயேழ் சொல்லு மசைநிலைக் கிளவி.

இதன் பொருள்: யா முதலாகிய ஏழிடைச்சொல்லும் அசைநிலையாம் என்றவாறு.

உதாரணம்: யா பன்னிருவர் மாணாக்கருள ரகத்தியனார்க்கு எனவும், 'புறகிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா' எனவும், 'தான் பிறவரிசை யறிதலிற் றன்னுந்தூக்கி' (புறம்—கசஂ) எனவும், 'அதுபிறக்கு' எனவும், 'நோதக விருங்குயி லாலுமரோ' (கலி-நஙு) எனவும், 'பிரியின் வாழா தென்போ தெய்ய' எனவும், 'விளிந்தன்று மாதவர் தெளிந்தவென் னெஞ்சே' (நற்றிணை—கஎஅ) எனவும் வரும்.
40



இடம் வரையறுமையின் இவை மூன்றிடத்திற்குமுரிய.

ஆங்கவும் ஒப்பில்போலியும் உரைதொடங்குற்றக் கண்ணும் ஆதரமில்வழியும் வருதலின் வேறு கூறினர். (நக)

உஅ௦. ஆக வாக லென்ப தென்னு
மாவயின் மூன்றும் பிரிவி லசைநிலை.

இதன் பொருள்: ஆக, ஆகல் என்பது என்னு மூன் றிடைச்சொல்லும், அசைநிலையாங்கால், இரட்டித்து நிற்கும் என்றவாறு.

பிரிவிலசைநிலையெனவே, தனித்து நின்று அசைநிலையாகா வென்பதாம்.

ஒருவன் யானின்னேன் என்றானும், நீயின்னை என்றானும், அவனின்னன் என்றானும் கூறியவழிக் கேட்டான் ஆக ஆக, ஆகல் ஆகல் என்னும்; இவை உடம்படாமைக்கண்ணும் ஆதர மில்வழியும் வரும். ஒருவனொன்றுரைப்பக் கேட்டான் என்பது என்பது என்னும்; அது நன்குரைத்தற்கண்ணும் இழித்தற் கண்ணும் வரும். பிறாண்டு வரினும் வழக்கு நோக்கி புணர்ந்து கொள்க. (கஉ)

உஅக. ஈரள பிசைக்கு மிறுதியி லுயிரே
யாயிய னிலையுங் காலத் தானு
மளபெடை நிலையுங் காலத் தானு
மளபெடை யின்றித் தான்வருங்
காலையு
முளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பி னிசையா னெறிப்படத் தோன்றும்.

இதன் பொருள்: இரண்டுமாத்திரையை யுடைத்தாய மொழிக்கீருகா தெனப்பட்ட ஔகாரம், பிரிவிலசைநிலையென

(கூக) நிரனிறையாகக் கொள்க.
ஆதரம்—விருப்பம்.
(கூஉ) நீ கள்வன் என்ருல் ஆக ஆக எனின், அவை உடன் படாமையையாதல் விருப்பமின்மையையாதல் உணர்த்துமென்றபடி.



மேற்கூறப்பட்டனபோல் இரட்டித்துநிற்குமிடத்தும், இரட்டியாது அளபெடையாய் நிற்குமிடத்தும், அளபெடையின்றித் தான் வருமிடத்தும், பொருள் வேறுபடுதலுள; அப்பொருள் வேறுபாடு சொல்வான் குறிப்பிற்குத் தகுமோசை வேறுபாட்டாற் புலப்படும் என்றவாறு.

பொருள் வேறுபாடாவன வ்ழக்கு நோக்கச் சிறப்பும் மாறு பாடுமாம்.

உதாரணம்: ஔஔவொருவன் றவஞ்செய்தவாறு என்ற வழிச் சிறப்புத் தோன்றும். ஒருதொழில் செய்வானை ஔஔ வினிச்சாலும் என்றவழி மாறுபாடு தோன்றும். ஔஉவொருவ னிரவலர்க் கீந்தவாறு. ஔஉவினி வெகுளல் எனவும்; ஔவவன் முயலுமாறு, ஔவினித்தட்டுப்புடையல் எனவும்; அளபெடுத் தும் அளபெடாதும் வந்தவழியும், அப்பொருடோன்றியவாறு கண்டுகொள்க. இதனை இக்காலத்து ஓகாரமாக வழங்குப. பிற பொருள்படுமாயினும் அறிந்துகொள்க.

ஈரளபிசைக்கு மென்றே மொழியின் நெட்டெழுத்தெல்லா வற்று மேலும், இறுதியிலுயிரென்றே மொழியின் எகரவொகரத்துமேலுஞ் சேறலான், 'ஈரளபிசைக்கு மிறுதியிலுயிர்' என்றார்.

இது தத்தங் குறிப்பிற் பொருள் செய்வதாயினும் அடுக்கி வருதலுடைமையான் ஈண்டு வைத்தார். (கக)

உஅஉ. நன்றீற் றேயு மன்றீற் றேயு
மந்தீற் றோவு மன்னீற் றோவு
மன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்.

---

(கக) ஒள அடுக்கும், அளபெடையும், அளபெடாமையுமாகிய மூன்றிடத்தும் சிறப்பும், மாறுபாடுமாகிய இரண்டு பொருளிலும் வருமென்பது கருத்து.

மாறுபாடு—மாறுபடுதல்; ஒழிக என்னும் பொருளில் வருதல்; இறுதியில் உயிர்—இறுதியில் வராத உயிர். எ ஒ ஒள என்பன. எழுத்ததிகாரம் மொழிமரபு நோக்குக.



நன்றீற்றேயும் அன்றீற்றேயுமாவன நன்றே அன்றே

என்பன. அந்நீற்றோவும் அன்னீற்றோவுமாவன அந்தோ அன்னோ என்பன. நன்றின தீற்றின்கண் ஏயென விரியும். இவ்விரிவு. ஏனையவற்றிற்கு மொக்கும். நன்றீற்றேயென்பதனான் 'நம்மூர்ந்து வரூஉ மிகர வைகாரமும்' (சொல்—கஉஅ) என்புழிப் போலச் சொன்முழுவதுங் கொள்ளப்படும். ஒழிந்தனவுமன்ன.

குறிப்பொடுகொள்ளுமென்றது, மேலதுபோல இவையுங்

குறிப்போசையாற் பொருளுணர்த்து

மென்றவாறு.

ஒருவன் ஒன்றுரைத்தவழி அதற்கு மேவாதான் நன்றே நன்றே, அன்றேயன்றே என அடுக்கலும் வரும்; அவை மேவாமைக்குறிப்பு விளக்கும். அவனன்றே யிதுசெய்வான் என அடுக்காது நின்றவழி, அன்றீற்றேவுக்குத் தெளிவு முதலாகிய பிறபொருளும் படும். ஏனையிரண்டும் அடுக்கியும் அடுக்காதும் இரங்கற்குறிப்பு வெளிப்படுக்கும். இவையும் தத்தங் குறிப்பிற் பொருள் செய்குவன.

அன்னபிறவு மென்றதனான், அதோ அதோ, சோ சோ, ஒக்கும் ஒக்கும் என்னுந் தொடக்கத்தன கொள்க. (௩௪)

உ௮௩. எச்ச வும்மையு மெதிர்மறை

யும்மையுந்

தத்தமுண் மயங்கு முடனிலை
யிலவே.

இனி மேற்கூறப்பட்ட இடைச்சொல்லின்கட் படு மிலக்கண வேறுபா டுணர்த்துகின்றார்.

**இதன் பொருள்:** எச்சவும்மை நின்றவழி எஞ்சுபொருட் கிளவியாம் எதிர்மறையும்மைத் தொடர் வந்து தம்முண் மயங்குத லில என்றவாறு.

சாத்தனும் வந்தான் கொற்றனும் வாலுரியன் எனின் இயையாமை கண்டுகொள்க.

---

(௧௫) சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என்பது எச்சவும்மை வந்த தொடர், இத்தொடரில் சாத்தனும் கொற்றனும் என்பவைகள் எச்சவும்மைகள். இவ்வும்மைகளோடு எதிர்மறையும்மையுஞ்



ஏனையும்மையொடு மயங்குதல்
விலக்காராயிற் றென்னை யெனின்:— அவை
எஞ்சுபொருட் கிளவியவாய் வாராமையி
னென்பது.

(௩௫)

௨அச. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொலாயிற்

பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

இதன் பொருள்; எச்சவும்மையாற் றழுவப்படும் எஞ்சு பொருட்கிளவி உம்மையில் சொல்லாயின் அவ்வும்மையில் சொல்லை அவ்வும்மைத் தொடர்க்குப்பின் செல்லாது முன்செல்லுக, என்றவாறு.

உதாரணம் : சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான் என வரும். கொற்றனும் வந்தான் சாத்தன் வந்தான் எனப் பிற்படக் கிளப்பின், முற்கூறியதனை விலக்குவதுபோன்று பொருள் கொள்ளாமை கண்டுகொள்க.

'அடகுபுலால் பாகு பாளிதமு முண்ணான்
கடல்போலுங் கல்வி யவன்'

என்பதுமது.

சேர்ந்து சாத்தனும் வந்தான் கொற்றனும் வரலுமுரியன் என ஒரு தொடரில் மயங்கி வரல் கூடாதென்பது ஆசிரியர் கருத்தாம். உதாரணத்தின்கண் வரலுரியன் என்பது வரலுமுரியன் என்றிருத்தல் வேண்டும். அதுவே எதிர்மறையும்மையாதலின். இளம்பூரணரும், 'சாத்தனும் வந்தான் கொற்றனும் வரும் என்பது எச்சவும்மை; அதனைச் சாத்தனும் வந்தான் கொற்றனும் வரலுமுரியன் என எதிர்மறையும்மையோடு கூட்டிச் சொல்லப்படாது'—என்று கூறுதல் காண்க.

ஏனையும்மை என்றது முற்றும்மை முதலியவற்றை. அவை எஞ்சு பொருட் கிளவியவாய் வாராமையின் என்றது, அவை எஞ்சு பொருட் கிளவியையுடையனவாய் வாராமையின் என்றபடி. எதிர் மறை யும்மை எஞ்சுபொருட் கிளவியையுடையதாய் வருதலின் எச்ச வும்மைத் தொடரோடு வந்து மயங்கல் கூடா; மயங்கின் எச்சவும்மை இனிது பொருள்படாது. ஏனெனின் சாத்தனும் வந்தான் கொற்றனும் வரலுமுரியன் எனின் வாராமையுமுரியன் என்று பொருள்தருதலின் சாத்தனும் வந்தான் என்பதிலுள்ள எச்சவும்மைக்கு அது எஞ்சு பொருட்கிளவியாகாமையின்.

உம்மையடாதே தானே நிற்றலிற்.

செஞ்சொலென்றார்.

செஞ்சொலாயின் முற்படக் கிளக்கவெனவே, எஞ்சு பொருட் கிளவி உம்மையோடு வரிற் பிற்படக் கிளக்க வென்றவாறும். (௩௬)

௨அரு. முற்றிய வும்மைத்
தொகைச்சொன் மருங்கி
னெச்சக் கிளவி யுரித்து மாகும்.

இதன் பொருள்: முற்றும்மையடுத்து நின்ற தொகைச் சொல்லிடத்து எச்சச்சொல் லுரித்துமாம் என்றவாறு.

உதாரணம்: பத்துங்கொடால், அனைத்துங்கொடால் என்புழி முற்றும்மை தம்பொரு ளுணர்த்தாது சில வெஞ்சக் கொடுவென்னும் பொருள் தோன்றி நின்றவாறு கண்டுகொள்க.

முற்றுதலென்னும் பொருள்து பண்பு முற்றியவும்மையென ஒற்றுமை நயத்தாற் சொன்மே லேறி நின்றது.

உரித்துமாகு மெனவே, எச்சப் பொருண்மை குறியாது நிற்றலே பெரும்பான்மை யென்பதாம்.

ஏற்புழிக்கோட லென்பதனுன் எச்சப்படுவது எதிர்மறை வினைக்கணென்று கொள்க. பத்துங்கொடு என்பது பிறவுங்கொடு என்பதுபட நிற்றலின், விதிவினைக்கண்ணும் எச்சங் குறிக்கு மென்பாருமுளர். இப்பொழுது பத்துங்கொடு என்பது கருத் தாயின், இப்பொழுது பத்துக்கொடு என உம்மையின்றியும்

---

(கூசு) எஞ்சு பொருட்கிளவி - பொருளெஞ்சி நிற்கும் சொல் உம்மைப் பொருட்கு முடிபு எஞ்சுபொருட் கிளவியேயாம். உம்மை யோடு வரிற் பிற்படக் கிளக்கவென்றது - சாத்தனும் வந்தான் என உம்மையோடு வரின், கொற்றனும் வந்தான் சாத்தனும் வந்தான் எனப் பிற்படக் கிளக்க வென்றபடி.

(கூஎ) முற்றும்மை எச்சப்படுவது எதிர்மறை வினையைக்கொண்டு முடியுமிடத்தென்க. இப்பொழுது பத்துங் கொடு என்பது முற்றும்மை யாயின் பத்துக் கொடு என நிற்கலாம்; உம்மை வேண்டியதின்று.

பொருள் பெறப்படும்; பத்துங்கொடு பிறவுங்கொடு என்பது கருத்தாயின், இஃதெச்சவும்மையாகலின் ஈண்டைக் கெய்தாது; அதனான் அது பொருத்தமின் றென்க.

இவை மூன்று சூத்திரத்தானும் வழுவற்க வென இடைச் சொற்பற்றி மரபுவழுக் காத்தவாறு. (நூஎ)

உஅசு. ஈற்றுநின் றிசைக்கு மேயெ னிறுதி
கூற்றுவயி னோரள பாகலு முரித்தே.

இதன் பொருள்: செய்யுளிறுதிக்கண் நின் றிசைக்கும் ஈற்றசையேகாரங் கூற்றிடத்து ஒருமாத்திரைத் தாகலு முரித்து என்றவாறு.

உதாரணம்: கடல்போற் றோன்றல காடிறந் தோரே' (அகம்-க) என்புழி ஓரளபாயினவாறு கண்டுகொள்க.

தேற்றமுதலாயின நீக்கி ஈற்றசையே தழுவுதற்கு ஈற்று நின்றிசைக்கு மென்றார். செய்யுளிடை நிற்பதனை நீக்குதற்கு ஈற்று நின்றிசைக்கு மென்றே யொழியாது இறுதியென்றார். மேனின்ற செய்யுளுறுப்போடு பொருந்தக் கூறுதற்க ணென்பார் கூற்றுவயினென்றார்.

உம்மை எதிர்மறை.

(நஅ)

---

அன்றி, பத்துங் கொடு என்பது பிறவுங் கொடு என்பதை உணர்த்தி எச்ச வும்மையாயின் அது எச்ச உம்மைப் பாற்படும்; முற்றும்மை யாகா தென்றபடி

(கூஅ) காடிறந்தோரே என்பதிலுள்ள ஏகாரம் ஒரு மாத்திரை பெறும். இரண்டு மாத்திரையாயின் இசை நீளும். மேனின்ற செய்யு ளுறுப்பென்றது ஏகாரத்துமேல் நின்ற செய்யுள் உறுப்புக்களை. ஈண் டுச் செய்யுளுறுப்போடு இசைய என்றாரேனும் ஓசையோடு பொருந்த என்பதேகருத்தாம்.

இங்கே செய்யுளுறுப்பென்றது-மாத்திரையளவை. அது உறுப்பாதலை 'மாத்திரை எழுத்திய லசைவகை யெனாஅ' என் னுந் தொல்-செய்யுளியற் சூத்திரத்தா னுணர்க.



உ அள.

உம்மை யெண்ணு மெனவெ னெண்ணுந்
தம்வயிற் றொகுதி கடப்பா டிலவே.

இதன் பொருள்: உம்மையான் வருமெண்ணும், எனவான் வருமெண்ணும், இறுதிக்கட் டொகை பெறுதலைக் கடப்பாடாக வுடையவல்ல என்றவாறு. எனவே, தொகை பெற்றும் பெறா தும் வருமென்பதாம்.

உதாரணம்:

'உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு
மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு
மம்மூ வுருபின'
(சொல்—கசு௦)

எனவும், 'இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி,' (சொல்-உகா.) எனவும், 'நிலனென நீரெனத் தீயென வழியென நான்கும்' எனவும், 'உயிரென வுடலென வின்றி யமையா' எனவும் அவ்விருவகை யெண்ணுந் தொகை பெற்றும் பெறாதும் வந்தவாறு.

தொகையெனப் பொதுப்படக் கூறியவதனான், எண்ணுப் பெயரேயன்றி அனைத்தும் எல்லாமென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க. (௩௬)

உ அ அ.

எண்ணே கார மிடையிட்டுக் கொளினு
மெண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர்.

இதன் பொருள்: சொற்றொறும் வாராது எண்ணேகாரம் இடையிட்டு வரினும் எண்ணுதற்பொருட்டாம் என்றவாறு.

உதாரணம்:

'மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்னர்'

எனவும்,

'தோற்ற மிசையே நாற்றஞ் சுவையே
யுறலோ டாங்கைம் புலனென மொழிப'

எனவும் வரும்.



எண்ணுக் குறித்து வருவன எண்ணப்படும் பெயரெல்லா வற்றோடும் வருதன் மரபாயினும், இடையிட்டு வரினும் அமைக வென அமைத்தவாறு.

எனவும் என்றும் சொற்றொறும் வாராது ஒருவழி நின்றும் எண்ணுக் குறிக்குமாலெனின் :—அவை ஒருவழி நின்று எல்லாவற்றோடும் ஒன்றுதலின் ஆண்டாராய்ச்சி யில்லையென்க.

பிறவெண் ஒடாநின்றவழி ஏகாரவெண்

இடை வந்ததாயினும் ஓடாநின்ற பிறவெண்ணேயாமென உரைத்தாரால் உரையாசிரியரெனின் :—அவ்வாறு விராயெண்ணியவழிப் பிறவெண்ணாற் பெயர் கொடுப்பின் அதனை ஏகார வெண்ணென்பாரையும் விலக்காமையானும், பிறவெண்ணா மென்றதனாற் பெறப்படுவதோர் பயனின்மையானும், அவர்க்கது கருத்தன்றென்க. (௪௦)

உ௪க. உம்மை தொக்க வெனவென் கிளவியு
மாவீ றாகிய வென்றென் கிளவியு
மாயிரு கிளவியு மெண்ணுவழிப் பட்டன.

இதன் பொருள் : உம்மை தொக்குநின்ற எனவென்னு மிடைச்சொல்லும் என்றுவென்னு மிடைச்சொல்லும் இரண்டும் எண்ணுமிடத்து வரும் என்றவாறு.

உதாரணம்: நிலனெனு நீரெனு எனவும் நிலனென்று நீரென்று எனவும் வரும்.

உம்மைதொக்க வெணுவென்கிளவி யெனவே, எனுவுமென அச்சொல் உம்மோடு வருதலுமுடைத்தென்பதாம். உம்மோடு வந்தவழி அவ்வெண்ணும்மை எண்ணுளடங்கும்.

---

(சூ0) ஏகார எண்ணலும் பெயர் கொடுக்கலா மென்றபடி. பிற எண் - செவ்வெண் முதலியன. செவ்வெண் - உம்மை தொக்கு வருவன. இடையிட்டு வருதல் என்றது, என்றும் எனவும் போல இறுதி நின்று முன்னின்ற எல்லாவற்றோடுஞ் சென்று கூடும் இயல்பின்றி இடையிடையே வருவதென்றபடி. பிற எண் ஓடா நின்றவழி என்றது,—பிற எண் எண்ணுப் பொருளிற் செல்லும் வழி என்றபடி.

(சூக) உம்மை தொக்க எனு என்றது — ' எனுவும்' என்னுஞ் சொல்லை. எனுவும் என்றதி லும்மையும் எனுவோடு சேர்ந்து எண்

41

எண்ணுவழிப்பட்டனவெனவே, அவை சொற்றொறும் வருதலேயன்றி இடையிட்டும் வருமென்பதாம். 'பின்சா ரயல்புடை தேவகை யெனு' (சொல்—அஉ) எனவும், 'ஒப்பிற் புகழிற் பழியி னென்று' எனவும் இடையிட்டு வந்தவாறு. இவை எண்ணுதற்கண் அல்லது வாராமையானும், 'அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்' (சொல்—உசுo) எனச் சூத்திரஞ் சுருங்குதற் சிறப்பினானும், அவற்றினை ஈண்டு வைத்தார். (சக)

உசுo. அவற்றின் வரூஉ மெண்ணி னிறுதியும்
பெயர்க்குரி மரபிற் செவ்வெ ணிறுதியு
மேயி னாகிய வெண்ணி னிறுதியும்
யாவயின் வரினுந் தொகையின்
றியலா.

இதன் பொருள்: மேற்சொல்லப்பட்ட எனு என்று என்

பனவற்றான் வரும் எண்ணினிறுதியும், இடைச்சொல்லானன்றிப் பெயரானெண்ணப்படுஞ் செவ்வெணிறுதியும், ஏகாரத்தான் வரும் எண்ணினிறுதியும், யாதானுமோரிடத்து வரினுந் தொகையின்றி

நில்லா என்றவாறு.

**உதாரணம் :** நிலனென நீரென விரண்டும் எனவும், நில னென்று நீரென்றுவிரண்டும் எனவும், நிலநீரெனவிரண்டும் என வும், நிலனே நீரேயென விரண்டும் எனவும் தொகைபெற்று வந்தவாறு.

## செவ்வெண் இடைச்சொல்லெண்ணன்

றென்றாயினும்,

எண்ணுதலுந் தொகை பெறுதலுமாகிய ஒப்புமையான் ஈண்டுக் கூறினர். (சஉ)

---

னுப் பொருளில் வருமென்பார் எண்ணுளடங்குமென்றார். இடையிட்டு வருதலை 'கண்கால்....பின்சார் அயல்புடை தேவகை எனா' என்னும் வேற்றுமை இயலில் வரும் உக-ம் சூத்திரத்தில் நோக்கி யறிக.

(சஉ) எண்ணிடைச் சொற்களுட் சில தொகை பெறுமென

இதனுணர்த்தினர்.



௨கக. உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையார்.

**இதன் பொருள் :** உம்மையெண்ணின்கண் உருபு தொகு தல் வரையப்படாது என்றவாறு.

'பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலு

நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப' (சொல்—கoச)

என்னும் பொதுவிதியான் உம்மையெண்ணின்கண் உருபு தொகல் பெறப்பட்டமையால், பெற்றதன் பெயர்த்துரை நியமப்பொருட்டாகலான், உம்மையெண்ணி னுருபுதொகல் வரையப்படாது; ஏனையெண்ணின்கண் அவை வரையப்படுமென நியமித்தல் இதற்குப் பயனாகக் கொள்க.

'குன்றி கோபங் கொடிவிடு பவள
மொண்செங் காந்த ளொக்கு நின்னிறம்.'

எனப் பிறவெண்ணின்கண் உருபு தொக்கதாலெனின் :— அற்றன்று: செவ்வெண் தொகையின்றி நில்லாமையின் அவற்றையென ஒரு சொல் விரிக்கப்படும்; விரிக்கவே, குன்றி முதலாயின எழுவாயாய் நின்றனவாமென்பது.

**உதாரணம் :**

'பாட்டுங் கோட்டியு மறியாப் பயமி
றேக்கு மரம்போ னீடிய வொருவன்'

'இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி' (சொல்—உகூஎ) என உம்மையெண்ணின்கண் உருபு தொக்கவாறு கண்டுகொள்க.

வரையாரென்றதனான், ஆண்டும் எல்லாவுருபுந்தொகா; ஐயுங்கண்ணுமே தொகுவனவெனக் கொள்க.

யானை தேர் குதிரை காலாளெறிந்தார் என உம்மையும் உருபும் உடன்றொக்கவழி உம்மைத்தொகையென்னாது உருபுதொகை

---

(சக) உம்மை யெண்ணின்கண் உருபு தொகுமெனவே செவ்வெண் முதலிய எண்ணின்கண் தொகாதென்றபடி, இது நியமித்தல். குன்றியும் கோபமும் பவளமும் எழுவாயாய் நின்று அவற்றை என்

னும் தொகையோடு சேரும் என்றபடி. எழுவாய்—முதல் வேற்றுமை. யானை குதிரை தேர் காலாள்—இது உம்மைத்தொகையாதலால் ஒரு



யென்க வென்பது இச்சூத்திரத்திற்குக் கருத்தாக உரைத்தாரால் உரையாசிரியரெனின்:—அஃது உம்மைத்தொகையாகலின் ஒரு சொன்னடைத்தாய் உருபேற்றனும் பயனிலைகொண்டானும் நிற்கும்; அத்தொகையிடை உருபின்மை சிற்றறிவினார்க்கும் புலனாம்; அதனான் அஃதவர்க்குக் கருத்தன்மை சொல்லவேண்டுமோ வென்பது. (௪௩)

௨௯௨.

உம்மூந் தாகு மிடனுமா ருண்டே.

இதன் பொருள்: வினைசெயன்மருங்கிற் காலமொடு வருவனவற்றுள் உம்மீறு உந்தாய்த் திரிதலுமுடைத்து என்றவாறு.

உதாரணம்: 'நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து' (புறம்-௩௯௫) எனவும், 'நாரரி நறவின் மகிழ்தூங் குந்து' எனவும் வரும்.

வினைசெயன் மருங்கிற் காலமொடு

வரும் உம்மென்பது

ஏற்புழிக்கோடலென்பதனாற் பெற்றாம்.

இடனுமாருண்டேயென்றது, இத்திரிபு பெயரெச்சத்திற் கிளையவழியென்பது கருதிப்போலும்.

தம்மீறு திரிதன்முதலாயின இவ்வோத்தினுட் கூறப்படும் இடைச்சொற்கே யென்பது இதனானும் பெற்றாம். வினையியலுள்ளுங் கூறப்படுமாயினும், இடைச்சொற்றிரிபாகலான் ஈண்டுக் கூறலும் இயைபுடைத்தென்பது. (௪௪)

---

சொல்லாய் நின்று இறுதியில் உருபேற்கும். ஆதலால் அவ்வும்மைத் தொகைக்கண் உருபில்லை என்க.

(௪௪) உம் உந்தாதல் முற்றின்கண்ணும் வருதலின், 'இடனுமா ருண்டே என்றது இத்திரிபு பெயரெச்சத்திற் கிளையவழி என்பது கருதிப்போலும்' என்றது இடையில் செருகப்பட்டதுபோலும் என்பது சிலர் கருத்து. 'தம்மீறு திரிதல்' இடையியல் ௩-ம் சூத்திரம். செய்யுமென்பது வினைச்சொல்லாதலின் வினையியலுள்ளுங் கூறப்படும் இயல்புடைத்தாயினு மென்றார்,



௨௯௩. வினையொடு நிலையினு மெண்ணுநிலை திரியா

நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே.

**இதன் பொருள் :** வினையொடு நிற்பினும் எண்ணிடைச் சொற்கள் தந்நிலையிற் றிரியா; அவற்றோடு வருங்கால் அவற் றவற்றியல்பு ஆராய்தல்வேண்டும் என்றவாறு.

**உதாரணம் :** உண்டுந் தின்றும் பாடியும் வந்தான் எனவும், உண்ணவெனத் தின்னவெனப் பாடவென வந்தான் எனவும் வரும்.

ஒழிந்தவெண்ணொடு வருவனவுளவேற் கண்டுகொள்க.

பெரும்பான்மையும் பெயரோடல்லது எண்ணிடைச்சொல் நில்லாமையின் அதனை முற்கூறி, சிறுபான்மை வினையொடு நிற்றலுமுடைமையான் இதனை ஈண்டுக் கூறினார்.

நினையல் வேண்டு மவற்றவற்றியல்பே யென்றதனான், எண்ணிடைச்சொல் முற்றுச்சொல்லும் பெயரெச்சமும் பற்றி வாரா தென்பதூஉம், வினையெச்சத்தோடும் ஏற்பன வல்லது வாரா வென்பதூஉம், ஆண்டுத்தொகை பெறுதல் சிறுபான்மையென் பதூஉங் கொள்க.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான் என மூவரும் வந்தமையாற் கலியாணம் பொலிந்தது எனச் செவ்வெண் தொகை பெற்று வந்ததென்றாரால் உரையாசிரிய ரெனின் :—அவை எழுவாயும் பயனிலையுமாய் அமைந்து மாறு தலின் எண்ணப்படாமையானும், மூவருமென்பது சாத்தன் முத லாயினோர் தொகையாகலானும், அது போலியுரையென்க. (சரு)

உ௬௪. என்று மெனவு மொடுவுந் தோன்றி

யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே.

**இதன் பொருள்:** என்றும் எனவும் ஒடுவும் என்பன ஒரு வழித்தோன்றி எண்ணினுட் பிறவழியும் பிரிந்துசென்று ஒன்று மிடமுடைய என்றவாறு.

---

(௬௫) அமைந்து மாறுதலின்—அமைந்து ஒழிதலின்,



உதாரணம்: 'வினைபகை யென்றிரண்டி னெச்சம்' (குறள்—௬௭௪) எனவும், 'கண்ணிமைநொடியென' (நூன்மரபு-௭) எனவும், 'பொருள் கருவி காலம் வினையிடனோ டைந்தும்' (குறள்—௬௭௫) எனவும், அவை ஒருவழி நின்று, வினையென்று, பகையென்று எனவும், கண்ணிமையென நொடியென எனவும், பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடத்தொடு எனவும் நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழிச்சென்று ஒன்றியவாறு கண்டுகொள்க.

ஒன்றுவழியுடைய வென்றதனால், சொற்றொறு நிற்பதே பெரும்பான்மை யென்பதாம். சொற்றொறு நின்றவெண் இக்காலத் தரிய. ஒடுவென்பதோ ரிடைச்சொல் எண்ணின்கண்வருத லித

ளுற் கொள்க.

இவைமூன்றும் பொருளிற்பிரிந்து எண்ணின்கண் அசையாய் வருதலுடையவென்பது உரையாசிரியர்க்குக் கருத்தென்பாருமுளர். அசைநிலையென்பது இச்சூத்திரத்தாற் பெறப்படாமையானும், 'கண்ணிமை நொடி' என்னுஞ் சூத்திரத்து எனவைக் கண்ணிமை யென்பதனோடுங் கூட்டுகவென் றுரைத்தலானும், அவர்க்கது கருத்தன்றென்க.

(௪௯)

உ௪௫. அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த வியல வாயினும்
வினையொடும் பெயரொடு நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே.

இதன் பொருள்: மேற்கூறப்பட்ட இடைச்சொற்கள், அவ்வச்சொல்லிற்கு அவையவை பொருளென நிலைபெறச் சொல்லப்பட்ட இயல்புடையனவாயினும், வினையொடும் பெயரொடும்

(சகூ) பொருள்—எண்ணுப்பொருள். கூட்டுக என்றதனால், எண்ணுப்பொருளில் வருதல் கொள்ளப்படும். ஒடு என்பதோ ரிடைச்

சொல் எண்ணுப்பொருளில் வருதல்

இச்சூத்திரத்தாற் கொள்க. என்னை? ஆசிரியர்

எண்ணுப்பொருளில் வருதலை முன் எடுத்தோ

தாமையின்.



ஆராய்ந்து உணரத் தோன்றி வேறுபொருளவாயும் அசைநிலை

யாயுந் திரிந்துவரினும், ஆராய்ந்து

கொள்க என்றவாறு.

எனவே, கூறியமுறையான் வருதல் பெரும்பான்மையென்றும், வேறுபட வருதல் சிறுபான்மையென்றுஞ் சொல்லிய வாறும்.

வினையொடும் பெயரொடுமென்றது, அவை வேறு பொருள வென் றுணர்ந்துதற் சார்பு கூறியவாறு.

உதாரணம் : 'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ' (அகம்-சக) எனவும், 'கலக்கொண்டேன் கள்ளென்கோ காழ் கொற்றன் சூடென்கோ' எனவும் ஓகாரம் ஈற்றசையாயும் எண்ணாயும் வந்தது. 'ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே' (அகம்-உ௭௩) என மா முன்னிலை யசைச்சொல்லாயிற்று. 'அது மற் கொண்கன் றேரே' என மன் அசைநிலையாயிற்று. பிறவுமன்ன.

செய்யுளின்பநோக்கி வினையொடும் பெயரொடுமென்றார். (௪௭)

உ௬௯. கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா
னுணர்ந்தனர் கொளலே.

இதன் பொருள் :

மேற்சொல்லப்பட்டனவன்றி யவைபோல் வன பிறவரினும், அவற்றைக் கிளந்த சொல்லினியல்பா னுணர்ந்து கொள்க என்றவாறு.

கிளந்தவற்றியலானென்றது, ஆசிரியர் ஆணையானன்றிக் கிளந்தவற்றையும் இன்னவென் றறிவது வழக்கினுட் சார்பும் இடமுங் குறிப்பும் பற்றியன்றே,

கிளவாதவற்றையும் அவ்வாறு

---

(சஎ) அவை—மேற்கூறப்பட்ட

இடைச்சொற்கள்: இச்சூத்திரம்
மேற்கூறப்பட்ட இடைச்சொற்கள் வேறு பொருளில் வருமாயினும் அமைத்துக்கொள்க என்று புறனடை கூற எழுந்தது; வருஞ் சூத்திரம் சொல்லப்படாதன இடைச்சொற்கள் உளவாயினும் கொள்க எனப் புறனடை கூற எழுந்தது என

உணர்ந்துகொள்க.

செய்யுளின்பம் நோக்கி பெயரை முற்கூறாது வினையை கூறினர் என்பது கருத்து.

முற்



சார்பும் இடமுங் குறிப்பும்பற்றி இஃதசைநிலை இஃதிசைநிறை இது குறிப்பால் இன்னபொருளுணர்த்தும் என்றுணர்ந்து கொள்க வென்றவாறு.

உதாரணம் : 'சிறிதுதவிர்ந் தீக

மாளநின் பரிசில ருய்ம்

மார்' எனவும், 'சொல்லென் றெய்ய நின்னொடு பெயர்ந்தே' எனவும், 'அறிவார் யாரஃ திறுவுழி யிறுகென' எனவும், 'பணியுமா மென்றும் பெருமை' (குறள்-கூஎஅ) எனவும், 'ஈங்காகுநவா லென்றிசின் யானே' (நற்றிணை-டுடு) எனவும், மாள, தெய்ய, என, ஆம், ஆல் என்பனவும் அசைநிலையாய் வந்தன. குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே' (திருமுருகா-உகஎ) எனத் தொறுவென்பது தான் சார்ந்த மொழிப்பொருட்குப் பன்மையும் இடமாதலுமுணர்த்தி நிற்கும். ஆனம், ஏனம், ஓனம் என்பன எழுத்துச்சாரியை. பிறவும் எடுத்தோத விடைச்சொ லெல்லாம் இப்புறனடையாற் றழீஇக்கொள்க. (சஅ)

இடையியல் முற்றிற்று.

## அ. உரியியல்

உகள. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை

யிசையினுங்குறிப்பினும் பண்பினுந்தோன்றிப்
பெயரினும் வினையினு மெய்தடு மாறி
யொருசொற் பலபொருட் குரிமைதோன்றினும்
பலசொல் லொருபொருட் குரிமை தோன்றினும்
பயிலாத வற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்த மரபிற் சென்றுநிலை மருங்கி
னெச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்.

நிறுத்தமுறையானே உரிச்சொல்லுணர்த்திய வெடுத்துக் கொண்டார்; அதனான் இவ்வோத்து உரியியலென்னும் பெயர்த் தாயிற்று. தமக்கியல்பில்லா விடைச்சொற்போலாது இசை குறிப் புப் பண்பென்னும் பொருட்குத் தாமே யுரியவாதலின், உரிச் சொல்லாயிற்று. பெரும்பான்மையுஞ் செய்யுட்குரியவாய் வருத லின் உரிச்சொல்லாயிற்றென்பாருமுளர்.

இதன் பொருள்: உரிச்சொல்லை விரித்துரைக்குமிடத்து, இசை குறிப்புப் பண்பென்னும் பொருண்மேற்றோன்றி, பெயர்க் கண்ணும் வினைக்கண்ணுந் தம்முருபு தடுமாறி, ஒருசொற் பல பொருட் குரித்தாய் வரினும் பலசொல் ஒருபொருட் குரித்தாய் வரினும் கேட்பானாற் பயிலப்படாத சொல்லைப் பயின்றவற்றோடு சார்த்திப் பெயரும் வினையுமாகிய தத்தமக்குரிய நிலைக்களத்தின் கண் யாதானுமொரு சொல்லாயினும் வேறு வேறு பொருளுணர்த் தப்படும் என்றவாறு.

என்றது, இசை குறிப்புப் பண்பென்னும் பொருளவாய்ப் பெயர் வினை போன்றும் அவற்றிற்கு முதனிலையாயுந் தடுமாறி ஒரு சொல் ஒரு பொருட் குரித்தாதலேயன்றி ஒரு சொற் பல பொருட்கும் பலசொல் ஒருபொருட்கும் உரியவாய்வருவன உரிச் சொல்லென்றும், அவை பெயரும்வினையும்போல ஈறுபற்றிப் பொருளுணர்த்தலாகாமையின் வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றோடு சார்த்தித் தம்மை யெடுத்தோதியே அப்பொருளுணர்த்
42



தப்படுமென்றும், உரிச்சொற்குப் பொதுவிலக்கணமும் அவற்றிற் குப் பொருளுணர்த்துமுறைமையு முணர்த்தியவாறு.

குறிப்பு மனத்தாற் குறித் துணரப்படுவது. பண்புபொறியா னுணரப்படுங் குணம்.

சுறுப்பு, தவவென்பன பெயர்வினைப் போலி. துவைத்தல், துவைக்குமென்பன பெயர்வினைக்கு முதனிலையாயின. உறு முதலாயின மெய் தடுமாறாது வருமாதலின், பெயரினும் வினையினு மெய்தடுமாறியென்றது பெரும்பான்மை பற்றியெனக் கொள்க.

அவை கூறியவாற்றாற் பொருட்குரியவாய்

வருமாறு முன் னர்க் காணப்படும்.

மெய்தடுமாறலும், ஒருசொற் பலபொருட் குரிமையும், பல சொல் ஒருபொருட்குரிமையும் உரிச்சொற்கு உண்மையான் ஒழிஞரேனும், உரிச்சொற்கு இலக்கணமாவது இசை குறிப்புப் பண்பென்னும் பொருட்குரியவாய் வருநிலையாம்.

ஒருசொல் ஒருபொருட்குரித்தாதல் இயல்பாகலாற் சொல்லாமையே முடியுமென்பது. (க)

உகஅ. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா வுரிச்சொன் மேன.

இதன் பொருள்: வெளிப்பட்ட உரிச்சொல், கிளந்ததனுல் பயனின்மையிற் கிளக்கப்படா; வெளிப்பட வாரா உரிச்சொன்

மேற்றுக் கிளந்தோதல் என்றவாறு.

(க) பொறி—மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி
பெயர்வினைப் போலி—பெயர்வினைபோன்று வருவன.

கறுப்பு—பெயர்போன்றது. தவ—வினைபோன்றது. துவைத்தல். இதில் துவை என்னும் உரிச்சொல் பெயர்க்கு முதனிலையாய் வந்தது. துவைக்கும். இதில் துவை என்னும் உரிச்சொல் வினைக்கு முதனிலையாய் வந்தது. முதனிலை—பகுதி. மெய்தடுமாறல் என்றது பெயர்வினை

களாகத் திரிதலை.



'பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி
யெச்சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல்'
(சொல்—உகூ) என்றதனால், பயிலாதவற்றைப்
பயின்றவற்றோடு சார்த்திப் பயின்றவற்றைப்
பிறிதொன்றனோடு சார்த்ாது தம்மையே
கிளந்தும் எல்லா வுரிச்சொல்லும்
உணர்த்தப்படுமென்பது பட்டுநின்றதனை விலக்கி,
பயனின்மையாற் பயின்ற உரிச்சொற்
கிளக்கப்படாது பயிலாத உரிச்சொல்லே
கிளக்கப்படுமென வரையறுத்தவாறு.

மேலவென்பது மேனவென நின்றது.

(உ)

உகூகூ. அவைதாம்

உறுதவ நனியென வரூஉ மூன்று
மிகுதி செய்யும் பொருள வென்ப.

வெளிப்பட வாரா உரிச்சொல்லைக் கிளந்தோதி விரிக்கின்றார்.

அவைதாம் என்றது வெளிப்பட வாரா உரிச்சொற்றாம் என்றவாறு. அதற்கு முடிபு 'அவைதாம், அம்மா மெம்மே மென்னுங் கிளவியும்' (சொல்—உ௦உ) என்புழி உரைத்தாங் குரைக்க.

இதன் பொருள் : 'உறுபுன றந்துல கூட்டி' (நாலடி-கஅ௫) எனவும், 'ஈயாது வீயு முயிர்தவப் பலவே' (புறம்—உ௩௯) என வும், 'வந்துநனி வருந்தினை வாழியென் னெஞ்சே' (அகம்—கக) எனவும், உறு, தவ, நனியென்பன மிகுதியென்னுங் குறிப்புப் பொருளுணர்த்தும் என்றவாறு.

குறிப்புச்சொற் பரப்புடைமையான்

முற்கூறினர். (௬)

௩௦௦. உருவுட் காகும் புரையுயர் பாகும்.

இதன் பொருள்: 'உருகெழு கடவுள்'

எனவும், 'புரைய மன்ற புரையோர் கேண்மை'
(நற்றிணை-௧) எனவும், உருவும் புரையும்,
உட்கும் உயர்புமுணர்த்தும் என்றவாறு.
(௭)

---

(௨) தம்மையே கிளத்தல்—சொல்லாகிய
தம்மையே எடுத்தோதல். பயின்றது—எல்லார்க்கும்
பொருள் தெரிந்தது. பயிலாதது— எல்லார்க்கும்
பொருள் தெரியாதது. உட்கு—அச்சம்.



௩௦௧. குருவுங் கெழுவு நிறனா கும்மே.

இதன் பொருள்: 'குருமணித் தாலி' 'செங்கேழ் மென்கொடி' (அகம்—அ০) எனக் குருவும் கெழுவும் நிறமென்னும் பண்புணர்த்தும் என்றவாறு. (ரு)

## ௩০௨. செல்ல லின்ன லின்னா மையே.

இதன் பொருள்: 'மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்' (அகம்-உ௨) எனவும், 'வெயில்புறந் தரூஉ மின்ன லியக்கத்து' (மலைபடு—௩ எச) எனவும், செல்லலும், இன்னலும், இன்னாமையென்னுங் குறிப்புணர்த்தும் என்றவாறு. (௬)

## ௩০௩. மல்லல் வளனே.

## ௩০௪. ஏ பெற் றாகும்.

இதன் பொருள்: 'மல்லன் மால்வரை' (அகம்—ருஉ) எனவும், 'ஏகல்லடுக்கம்' (நற்றிணை—கக௬) எனவும், மல்லலும் ஏவும், வளமும் பெற்றுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

பெற்று—பெருக்கம். ஈது அக்காலத்துப் பயின்றதுபோலும். இவை யிரண்டு சூத்திரம். (எ) (அ)

## ௩০ரு. உகப்பே யுயர்த லுவப்பே யுவகை.

இதன் பொருள்: 'விசும்புகந் தாடாது' எனவும், 'உவந் துவந், தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇய' (அகம்–௩௫) எனவும், உகப்பும் உவப்பும், உயர்தலும் உவகையுமாகிய குறிப் புணர்த்தும் என்றவாறு. (௯)

௩௦௯. பயப்பே பயனும்.

௩௦௭ பசப்புநிற னாகும்.

இதன் பொருள்: 'பயவாக் களரனையர் கல்லா தவர்' (குறள்–௪௦௬) எனவும், 'மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே'

(அ) இன்னாமை—துன்பம், ஏகல்லடுக்கம்—பெருகிய வளர்ந்த கன்மலை,

யியல்] சொல்லதிகாரம்

௩௩௩

கலி–எ) எனவும் பயப்பும் பசப்பும், பயனும் நிறவேறுபாடுமாகிய குறிப்பும் பண்புமுணர்த்தும் என்றவாறு. (௧௦) (௧௧)

௩௦அ. இயைபே புணர்ச்சி.

௩௦௯. இசைப்பிசை யாகும்.

இதன் பொருள்: 'இசைந்தொழுகும்' எனவும், 'யாழி சையூப் புக்கும்' எனவும், இசையும், இசைப்பும், புணர்ச்சிக் குறிப்பும் இசைப்பொருண்மையு முணர்த்தியவாறு.

(கஉ) கங) ௩௧௦. அலமர

றெருமர லாயிரண்டுஞ் சுழற்சி.

இதன் பொருள்: 'அலமர லாயம்' (ஐங்-கூச) எனவும், 'தெருமர லுள்ளமோ டன்னை துஞ்சாள்' எனவும், அலமரலும் தெருமரலும், சுழற்சியாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (கச)

௩௧௧. மழவுங் குழவு மிளமைப் பொருள.

இதன் பொருள்: 'மழகளிறு' (புறம்-௩அ) எனவும், 'குழக்கன்று' (புறம்-க௦௩) எனவும், மழவுங் குழவும், இளமைக் குறிப்புப் பொருளுணர்த்தும் என்றவாறு.

(கரு)

௩௧௨. சீர்த்தி மிகுபுகழ். ௩௧௩. மாலை யியல்பே.

இதன் பொருள் : 'வயக்கல்சால் சீர்த்தி' எனவும், 'இரவரன் மாலையனே' (குறிஞ்சிப்-உ௩௬) எனவும், 'சீர்த்தியும் மாலையும்' பெரும்புகழும் இயல்புமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

(௧௬) (௧௭) ௩௧௪. கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்.

இதன் பொருள் : துனிகூ ரெவ்வமொடு' (சிறுபாண்-௩௯) எனவும், 'கழிகண் ணோட்டம்' எனவும், கூர்ப்பும் கழிவும், ஒன்றனது சிறத்தலாகிய குறிப்பையுணர்த்தும் என்றவாறு. உள்ளதென்றது முன் சிறவாதுள்ள தென்றவாறு. (௧௮)

௩௧௫. கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள.

இதன் பொருள்: 'கதழ்பரி நெடுந்தேர்' (நற்றிணை—௨௦௩) எனவும், 'துனைபரி நிவக்கும் புள்ளின் மான' எனவும், கதழ்வும் துனைவும் விரைவாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (௧௬)

௩௧௬. அதிர்வும் விதிர்ப்பு நடுக்கஞ் செய்யும்.

இதன் பொருள்: 'அதிர வருவதோர் நோய்' (குறள்—௪௨௯) எனவும், 'விதிர்ப்புற வறியா வேமக் காப்பினை' (புறம்—௨௦) எனவும், அதிர்வும் விதிர்ப்பும், நடுக்கமாகிய குறிப்புணர்த் தும் என்றவாறு.

அகிழ்வென்று பாடமோதி, றுதாரணங் காட்டுவாரு முளர்.

'அகிழ்கண முரசம்' என்
(௨௦)

௩கஎ. வார்தல் போகல் ஒழுகல் மூன்று
நேர்பு நெடுமையுஞ் செய்யும்
பொருள.

இதன் பொருள்: 'வார்ந்திலங்கும் வை யெயிற்று' (குறு—கச) 'வார்கையிற் றிருமுகை' (அகம்—௩௪௩) எனவும், 'போகு கொடிமருங்குல்' 'வெள்வேல் விடத்தேரொடு காருடைபோகி' (பதிற்—௩௩) எனவும், 'ஒழுகுகொடி மருங்குல்' 'மால்வரை யொழுகிய வாழை' (சிறுபாண்—உக) எனவும், வார்தல், போகல், ஒழுகல் என்னு மூன்றுசொல்லும், நேர்மையும் நெடுமையுமாகிய பண்புணர்த்தும் என்றவாறு. (உக)

௩கஅ. தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்.

இதன் பொருள்: தீர்தலுந் தீர்த்தலுமென்னுமிரண்டும் விடுதலாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

உதாரணம்: 'துணையிற் றீர்ந்த கடுங்கண் யானை' (நற்றிணை—க௦அ) என வரும்.

(உo) அதிழ்கண்முரசம்—நடுங்குகின்ற கண்ணையுடைய முரசு.





தீர்த்தல் விடுதற் பொருண்மைக்கண் வந்தவழிக் கண்டு கொள்க. தீர்த்தலென்பது செய்வித்தலைபுணர்த்தி நின்ற நிலைமை யெனின் :— செய்வித்தலைபுணர்த்து நிலைமை வேறோதின் 'இயைபே புணர்ச்சி' (உரிசியல்—கஉ) என்புழியும் இயைப்பென வேறோதல் வேண்டும்; அதனாற் றீர்த்தலுஞ் செய்தலை யுணர்த்து வதோ ருரிச்சொல்லெனவே படுமென்பது.

விடற்பொருட்டாகு மென்பதனை

இரண்டனோடுங் கூட்டுக. பன்மை யொருமை

மயக்கமெனினு மமையும். (உஉ) ௩.க௩.

கெடவரல் பண்ணை யாயிரண்டும்

விளையாட்டு.

இதன் பொருள் : 'கெடவர லாயமொடு' எனவும், 'பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளும்' (பொருள், மெய்ப்பாட்டியல்—க) எனவும், கெடவரலும் பண்ணையும், விளையாட்டாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (உ௩)

௩உo. தடவுங் கயவு நளியும் பெருமை.

இதன் பொருள் : 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டு வன்' (புறம்—௩௬௪) 'கயவாய்ப் பெருங்கை யானை' (அகம்—௧௧அ) 'நளிமலை நாடன்' (புறம்—௧௫0) எனத் தடவும் கயவும் நளியும், பெருமையாகிய பண்புணர்த்தும் என்றவாறு. (உச)

௩௨௧. அவற்றுள்

தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்.

௩௨௨. கயவென் கிளவி மென்மையு மாகும்.

௩௨௩. நளியென் கிளவி செறிவு மாகும்.

இதன் பொருள் : 'தடமருப்பெருமை' (நற்—௧௨0) 'கயந் தலை மடப்பிடி' (நற்—௧௩௭) 'நளியிருள்' எனத் தடவென்கிளவி

---

(உஉ) நீர்த்தல் பிறவினையெனின்? இயைபு என்னுந் தன்வினையோடு இயைப்பு என்னும் பிறவினையையு மொருங்கோதல் வேண்டும்.

அவ்வாறோதாமையின் நீர்த்தலுந் தன்வினைப்பொருட்டேயாமென்க. நீர்த்தலைப் பிறவினையாக இளம்பூரணர் கோடலின் இவ்வாறு அதனை மறுத்துக் கூறினார் என்க.

முதலாயின, பெருமையேயன்றிக் கோட்டமும் மென்மையுமாகிய பண்பும் செறிவாகிய குறிப்பு முணர்த்தும் என்றவாறு.
(உ௫) (உ௬) (உ௭)

௩௨௪. பழுதுபய மின்றே.
௩௨௫. சாயன் மென்மை.
௩௨௬. முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே.

இதன் பொருள்: 'பழுதுகழி வாழ்நாள்' 'சாயன் மார்பு' (பதிற்–௧௬) 'மண்முழுதாண்ட' எனப் பழுது முதலாயின, பயமின்மையாகிய குறிப்பும் மென்மையாகிய பண்பும் எஞ்சாமையாகிய குறிப்புமுணர்த்தும் என்றவாறு. (உ௮) (உ௯) (௩௦)

௩௨௭. வம்புநிலை யின்மை
௩௨௮. மாதர் காதல்.
௩௨௯. நம்பு மேவு நசையா கும்மே.

இதன் பொருள்: 'வம்புமாரி' (குறுந்-கூகூ) 'மாதர்நோக்கு' 'கயந்துகாம் விட்ட நன்மொழி நம்பி' (அகம்-ககூஅ) 'பேரிசை நவிர மேஎ யுறையுங், காரிகை யுண்டி' (மலைபடு-அஉ) என வம்பும் மாதரும், நிலையின்மையுங் காதலுமாகிய குறிப்புணர்த்தும்; நம்பும் மேவும், நசையாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. மே—நசையாக. (நக) (நஉ) (நந)

## நந௦. ஓய்த லாய்த லிழத்தல் சாஅ
## யாவயி னான்கு முள்ளத னுணுக்கம்.

இதன் பொருள்: 'வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு (கலி-எ) 'பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை' (கலி-கூகூ) 'நிழத்த யானை மேய்புலம் படர' (மது-ந௦ந) 'கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்' (நெடுநல்-கஅ) என ஓய்தல் முதலாயின நுணுக்கமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. ஆய்ந்த தானை—பொங்குதல் விசித்தலானுணுகிய தானை. உள்ள தென்றது முன்னுணுகாதுள்ள தென்றவாறு. (நச)

(நச) தானை—வஸ்திரம். பொங்குதல்—பொலிதல். நுணுகுதல்—ஒடுங்குதல்=முன்னுள்ள பொலிவு விசித்தலால் ஒடுங்குதல். விசித்தல்—கட்டுதல்.

ஙஙக. புல்ம்பே தனிமை.
ஙஙஉ. துவன்றுநிறை வாகும்.
ஙஙங. முரஞ்சன் முதிர்வே.
ஙஙச. வெம்மை வேண்டல்.

இதன் பொருள்: 'புலிப்பற்கோத்த புலம்புமணித் தாலி' (அகம்-எ) எனவும், ஆரியர் துவன்றிய பேரிசை மூதூர்' (நற்-கஎ௦) எனவும், 'ஞன்முரஞ் செழிலி' எனவும், 'வெங்காமம்' (அகம்-கடு) எனவும், புலம்பு முதலாயின, தனிமையும் [illegible]றவும் முதிர்வுமாகிய குறிப்பும் விரும்புதலாகிய பண்புமுண[illegible]ம் என்றவாறு. (ஙடு) (ஙசு) (ஙஎ) [illegible]அு)

ஙஙடு. பொற்பே பொலிவு.

ஙஙசு. வறிதுசிறி தாகும்.

ஙஙஎ. ஏற்ற நினைவுந் துணிவு மாகும்.

இதன் பொருள்: 'பெருவரை யடுக்கம் பொற்ப' (நற்-ஙச) எனவும், 'வறிதுவடக் கிறைஞ்சிய' (பதிற்-உச) எனவும், 'கானலஞ் சேர்ப்பன் கொடுமை யேற்றி' (குறுந்-கசடு) 'எற் றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன்' எனவும், பொற்பு முதலாயின, முறையானே பொலிவும், சிறிதென்பதூஉம், நினை வும்

துணிவுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (௩௯)
(௪௦) (௪௧) ௩௩அ. பிணையும் பேணும்
பெட்பின் பொருள.

இதன் பொருள்: 'அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட் பினும்' எனவும், 'அமரர்ப் பேணியு மாகுதி யருத்தியும்' (புறம்-௯௯) எனவும், பிணையும் பேணும், பெட்பின் பொருளாகிய புறந்தருதலென்னுங் குறிப்புணர்த்தும் என்றவாறு.

பெட்பின் பொருள வென்றதனால், பெட்பின் பொருளாகிய விரும்புத லுணர்த்தலுங் கொள்க. அது வந்தவழிக் கண்டு கொள்க.

(௪௨)

---

(௩௭) முரஞ்சல்—முதிர்தல்—முற்றுதல்.

(௪௧) ஏற்றம்— நினைவு.
கொடுமையேற்றி—கொடுமையை நினைந்து.
ஏற்றமில்லாருள்—துணிவில்லாருள்.
ஏற்றமில்லாதேன்—துணிவில் [illegible] தேன்.
(௪௨) புறந்தரல்—காத்தல்.

[உரி ௩௩௯. பணையே பிழைத்தல் பெருப்பு மாகும்.

இதன் பொருள் : ‘ பணைத்துவீழ் பகழி ’ எனப் பணை

யென்பது பிழைத்தலாகிய குறிப்புணர்த்தும்; அதுவேயன்றி ‘வேய்மருள் பணைத்தோள்’ (அகம்–க) எனப் பெருப்பாகிய

குறிப்புமுணர்த்தும் என்றவாறு.

பெருமையாகிய பண்புணர்த்தாது பெருத்தலாகிய குறிப் புணர்த்து மென்பார் பெருப்பென்றார். (௪௩)

௩௪௦. படரே யுள்ளல் செலவு மாகும்.

இதன் பொருள்: ‘வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி’ (புறம்–௪எ) ‘கறவை கன்று வயிற்படர ’ (குறுந்– ௧௦அ ) எனப் படரென்பது உள்ளுதலுஞ் செலவுமாகிய குறிப்

புணர்த்தும் என்றவாறு.
(சச)

## ௬சக. பையுளுஞ் சிறுமையு நோயின் பொருள.

இதன் பொருள்: 'பையுண்மாலை' (குறு-௧௯௫) எனவும், 'சிறுமை யுறுப செய்பறியலரே' எனவும், பையுளுஞ் சிறுமையும், நோயாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (சரு)

## ௬சஉ. எய்யா மையே யறியா மையே.

இதன் பொருள்: 'எய்யா மையலை நீயும் வருந்துதி' (குறிஞ்சிப்-அ) என எய்யாமை அறிவின்மையாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

அறிதற் பொருட்டாய் எய்தலென்றுனும் எய்த்தலென்று னும் சான்றோர் செய்யுட்கண் வாராமையின், எய்யாமை எதிர் மறையன்மையறிக.
(சசு)

---

(சக) பெருப்பு—பெருத்தல். இது தொழில்.

(சசு) எய்யாமைக்கு எய்த்தல் எதிர்மறையாகி பிற்கால நூல்களில் வழங்கல், காலத்துட்பட்டதாகும்.



ந.சந. நன்றுபெரி தாகும்.

இதன் பொருள் : 'நன்று, மரிதுற் றனையாற் பெரும' (அகம்-க०) என நன்றென்பது பெரிதென்னுங் குறிப்புணர்த்தும் என்றவாறு.

பெருமை யென்னாது பெரிதென்றதனான் நன்றென்பது வினையெச்சமாதல் கொள்க. (சஎ)

ந.சச. தாவே வலியும் வருத்தமு மாகும்.

இதன் பொருள் : 'தாவி னன்பொன் றைஇய பாவை' (அகம்-உகஉ) எனவும், 'கருங்கட் டாக்கலை பெரு துற் றென' (குறு-கூக) எனவும், தாவென்பது வலியும் வருத்தமு மாகிய குறிப்புணர்த்தும்

என்றவாறு. (சஅ)

நசரு. தெவுக்கொளற் பொருட்டே.

நசசு. தெவ்வுப்பகை யாகும்.

இதன் பொருள்: 'நீர்த் தெவுநிரைத் தொழுவர்' (மது- அசு) எனவும், 'தெவ்வுப் புலம்' எனவும், தெவுந் தெவ்வும், முறையானே கொள்ளுதலும் பகையுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

(சகூ) (ருo)

நசஎ. விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவே.

இதன் பொருள்: 'விறந்த காப்போ டுண்ணின்று வலி யுறுத்தும்' எனவும், 'உறந்த விஞ்சி' எனவும், 'வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' (புறம்-ருந) எனவும், விறப்பு முதலாயின செறிவென்னுங் குறிப்புணர்த்தும் என்ற வாறு.

(ருக) நசஅ. அவற்றுள்

விறப்பே வெரூஉப் பொருட்டு

மாகும்.

இதன் பொருள் : 'அவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல' (பெரும்பாண்—உஉசு) என விறப்பென்பது செறிவையன்றி வெருவுதற் குறிப்புமுணர்த்தும் என்றவாறு. (ருஉ)

(சஎ) நன்று மரிது உற்றனே—பெரிது மரிதாக உற்றாய்,



ரு௪௩. கம்பலை சும்மை கலியே யழுங்க

லென்றிவை நான்கு மரவப் பொருள.

இதன் பொருள் : 'கம்பலை மூதூர்' (புறம்—ருச) எனவும், 'ஒருபெருஞ் சும்மையொடு' எனவும், 'கலிகொளாய மலிபுதொகு பெடுத்த' (அகம்—கக) எனவும், 'உயவுப்புணர்ந் தன்றிவ் வழுங்க லூரே' (நற்—உ௦ரு) எனவும், கம்பலை முதலாகிய நான்கும் அரவமாகிய இசைப்பொருண்மை யுணர்த்தும் என்றவாறு. (ருரு)

௩௫௦. அவற்றுள்
அழுங்க லிரக்கமுங் கேடு மாகும்.

இதன் பொருள்: 'பழங்க ணோட்டமு நலிய வழுங்கின னல்லனோ' (அகம்—௬௬) எனவும், 'குணனழுங்கக் குற்றமுழை நின்று கூறுஞ் சிறியவர்கட்கு' (நாலடி—௩௫௩) எனவும், அழுங்கல், அரவமேயன்றி இரக்கமுங் கேடுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (௫௪)

௩௫௧. கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்.

இதன் பொருள்: 'கழுமிய ஞாட்பு' (களவழி—௧௧) எனக் கழுமென்பது மயக்கமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

௩௫௨. செழுமை வளனுங் கொழுப்பு மாகும்.

இதன் பொருள்: 'செழும்பல் குன்றம்' எனவும், 'செழுந்தடி தின்ற செந்நாய்' எனவும், செழுமை, வளனுங் கொழுப்புமாகிய பண்புணர்த்தும் என்றவாறு. (௫௬)

௩௫௩. விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்.

இதன் பொருள்: 'விழுமியோர்க் காண்டொறுஞ் செய்வர் சிறப்பு' (நாலடி—௧௫௯) எனவும், 'வேற்றுமை யில்லா விழுத் திணைப் பிறந்து' (புறம்—௨௭) எனவும், 'நின்னுறு விழுமங் களைந்தோன்' (அகம்—௧௭௦) எனவும், விழுமம் முறையானே சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (௫௭)

---

(௫௫) கழும்—மயக்கம்=கலப்பு. கழுமிய ஞாட்பு. கைகலந்தபோர்.

(௫௭) விழுப்பம்—சீர்மை. விழுமியோர்—சீரியோர். நாகரிகர் என்பது கருத்து.

௯௪௪ ௯௫௪. கருவி தொகுதி. ௯௫௫. கமநிறைந் தியலும்.

இதன் பொருள்: 'கருவி வானம்' (புறம்—௧௫௯) எனவும், 'கமஞ்சூன் மாமழை' (அகம்—௪௩, குறுந்—௧௫௮) எனவும், கருவியுங் கமமும், தொகுதியும் நிறைவுமாகிய குறிப் புணர்த்தும் என்றவாறு. 'கருவிவானம்' என்புழிக் கருவி மின்னு முழக்கு முதலாயவற்றது தொகுதி. (௫௯)

௯௫௬. அரியே யைம்மை.

௯௫௭. கவவகத் திடுமே.

இதன் பொருள்: 'அரிமயிர்த் திரண் முன்கை' (புறம்— ௧௧) எனவும், 'கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே' (புறம்— ௧௯) எனவும், அரியுங் கவவும், ஐம்மையும் குறிப்புணர்த்தும் என்றவாறு.

அகத்தீடுமாகிய

(சூ௦) (சூக) ௩௫அ. துவைத்தலுஞ்

சிலைத்தலு மியம்பலு மிரங்கலு

மிசைப்பொருட் கிளவி

யென்மனார் புலவர்.

இதன் பொருள்: 'வரிவளை துவைப்ப' எனவும், 'ஆமா நல்லேறு சிலைப்ப' (முருகு—௩௧௫) எனவும்,

'கடிமரந் தடியு மோசை தன்னூர்

நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப'

(புறம்—௩௬)

எனவும், 'ஏறிரங்கிருளிடை' (கலி—௪௬) எனவும், துவைத்தன் முதலாயின இசைப்பொருளுணர்த்தும் என்றவாறு. (௬உ)

௩௫௯. அவற்றுள்

இரங்கல் கழிந்த பொருட்டு

மாகும்.

இதன் பொருள்: 'செய்திரங்காவினை' (புறம்—௧௦௨) என இரங்கல், இசையே யன்றிப் பொருளது கழிவாகிய குறிப்பு முணர்த்தும் எனறவாறு.

கழிந்த பொருள்பற்றி வருங் கவலையைக் கழிந்த பொருளென்றார். (சுரு)

(சுரு) செய்திரங்காவினை—செய்து (முற்றுப்பெறுமையாற்) பின் இரங்காத செயல் என்பது கருத்து. கழிந்த பொருள்—முற்றுப்பெறாத காரியம்.



௩சுo. இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை.

இதன் பொருள்: 'இலம்படு புலவ ரேற்றகை நிறைய' (மலைபடு—ருஎசு) எனவும், 'ஒக்கலொற்கஞ் சொலிய' (புறம்—௩உஎ) எனவும், இலம்பாடும் ஒற்கமும் வறுமையாகிய குறிப் புணர்த்தும் என்றவாறு.

இலமென்னு முரிச்சொல், பெரும்பான்மையும் பாடென்னுந் தொழில்பற்றி யல்லது வாராமையின் இலம்பாடென்றார். (சுச)

௩சுக. ஞெமிர்தலும் பாய்தலும்

பரத்தற் பொருள.

இதன் பொருள்: 'தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து' (நெடுநல்—௯௦) எனவும், 'பாய்புனல்' எனவும், ஞெமிர்தலும் பாய்தலும், பரத்தலாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (௬௫)

௩௬௨. கவர்வுவிருப் பாகும்.

௩௬௩. சேரே திரட்சி.

௩௬௪. வியலென் கிளவி யகலப் பொருட்டே.

இதன் பொருள்: 'கவர்நடைப் புரவி' (அகம்—௧௩௦) எனவும், 'சேர்ந்து செறி குறங்கு' (நற்றிணை—௧௭௦) எனவும், 'வியலுலகம்' எனவும், கவர்வு முதலாயின முறையானே விருப்பும் திரட்சியும் அகலமுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (௬௬) (௬௭) (௬௮)

௩௬௫. பேநா முருமென வரூஉங் கிளவி யாமுறை மூன்று மச்சப் பொருள.

இதன் பொருள்: 'மன்ற மரா அத்த பேமுதிர் கடவுள்' (குறுந்-அ௭) எனவும், 'நாநல்லார்' எனவும், 'உருமில்சுற்றம்' பெரும்பாண்-௪௪௭) எனவும், பே முதலாகிய மூன்றும் அச்சமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (௬௬)



௩௬௬. வயவலி யாகும்.

௩௬௭. வாளொளி யாகும்.

௩௬௮. துயவென் கிளவி யறிவின் றிரிபே.

இதன் பொருள்: 'துன்னருந் துப்பின் வயமான்' (புறம்-௪௪) எனவும், 'வாண்முகம்' (புறம்-௬) எனவும், 'துயவுற் யாமாக' எனவும், வயமுதலாயின, வலியும் அறிவு வேறுபடுதலுமாகிய குறிப்பும் ஒளியாகிய பண்புமுணர்த்தும் என்றவாறு. (௭௦) (௭௧) (௭௨)

௩௬௯. உயாவே யுயங்கல்.

௯எ௦. உசாவே சூழ்ச்சி.
௯எக. வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்.

இதன் பொருள்: 'பருந்திருந் துயாவிளி பயிற்று மியா வுயர் நனந்தலை' (அகம்-௧௯) எனவும், 'உசாத்துணை' (குறு- ௨௦எ) எனவும், 'வயவுறு மகளிர்' (புறம்-௨௦) எனவும், உயா முதலாயின, முறையானே உயங்கலுஞ் சூழ்ச்சியும் வேட்கைப் பெருக்கமுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (எ௩)(எ௪)(எ௫)

௯எ௨. கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள.

இதன் பொருள்: 'நிற்கறுப்பதோ ரருங்கடி முனையள்' எனவும், 'நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்' (பதிற்-௧௩) எனவும், கறுப்புஞ் சிவப்பும், வெகுளியாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

கருமை செம்மையென்னாது கறுப்புச் சிவப்பென்றதனான், தொழிற்பட்டுழியல்லது அவை வெகுளி யுணர்த்தாமைகொள்க. ()

௩௭௩. நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப.

இதன் பொருள்: 'கறுத்த காயா' 'சிவந்த காந்தள்' (பதிற்—கறு) என அவை வெகுளியேயன்றி நிறவேறுபாடுணர்த் தற்கு முரிய என்றவாறு.

(௭௬) கறுப்பு—கோபம். இது கறுப்பது என வினைப்பட்டுழிக் கோபிப்பது என்னும் பொருளையுடையதாகும்.



இவை வெளிப்படு சொல்லாயினும், கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள வென்றதனால், கருங்கண், செவ்வாய் எனப் பண்பாயவழி யல்லது தொழிலாயவழி நிறவேறுபா டுணர்த்தா வென்பது படுதலின், அதனைப் பாதுகாத்தவாறு. (௭௭)

கஎச. நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை.

இதன் பொருள்: 'நொசிமட மருங்குல்' (கலி–கூ0) எனவும், 'நுழைநாற் கலிங்கம்' (மலைபடு–ருகுக) எனவும், 'நுணங்கு துகி னுடக்கம்போல' (நற்றி–கரு) எனவும், நொசிவு முதலாயின, நுண்மையாகிய பண்புணர்த்தும் என்றவாறு. (எஅ)

கஎரு. புனிறென் கிளவியீன் றணிமைப் பொருட்டே.

இதன் பொருள்: 'புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி' (அகம்–ருகூ) எனப் புனிறென்பது ஈன்றணிமையாகிய குறிப் புணர்த்தும் என்றவாறு. (எகூ)

கஎகூ. நனவே களனு மகலமுஞ் செய்யும்.

இதன் பொருள்: 'நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன்' (அகம்–அ௨) எனவும், 'நனந்தலையுலகம்' (பதிற்–கூக) எனவும், நனவு, களனும் அகலமுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு (அ0)

கஎஎ. மதவே மடனும் வலியு மாகும்.

இதன் பொருள்: 'பதவு மேய்ந்த மதவுநடை நல்லான்' (அகம்–கச) எனவும், 'கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு' (அகம்–கஙகூ) எனவும், மதவென்பது மடனும் வலியுமாகிய குறிப் புணர்த்தும் என்றவாறு. (அக)

௧எஅ. மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே.

இதன் பொருள் : 'மதவிடை' எனவும், 'மாதர் வாண் முக மதைஇய நோக்கே' (அகம்–௧௩௦) எனவும், மடனும் வலி யுமேயன்றி மிகுதியும் வனப்புமாகிய குறிப்புஞ் சிறுபான்மை யுணர்த்தும் என்றவாறு. மதவிடை யென்புழி மிகுதி உள்ள மிகுதி. (அஉ)



௧எ௯. புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.

இதன் பொருள் :

'மீனொடு பெயரும் யாண ரூர' (நற்–உ௧௦) என யாணரென்பது . வாரி புதிதாகப்படுதலாகிய குறிப்புணர்த்* தும் என்றவாறு.

(அ௩)

௧அ௦. அமர்தன் மேவல்.

௩அக. யாணுக் கவினும்.

இதன் பொருள்: 'அகனமர்ந்து செய்யா ளுறையும்' (குறள்–அ௪) எனவும், 'யாணது பசலை' (நற்றிணை–௫௦) எனவும், அமர்தலும் யாணும், முறையானே மேவுதலுங் கவினு மாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (அ௪) (அ௫) ௩அஉ.

பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.

இதன் பொருள்: 'செல்லுகுத்துப், பரவுங் கடவுளு மிலவே' (புறம்–௩௩௫) எனவும், 'கைதொழூஉப் பழிச்சி' (மது–௬௬௪) எனவும், பரவும் பழிச்சும், வழுத்துதலாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு.

(அ௬)

௩அ௩. கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்க மிகுதி சிறப்பே
யச்ச முன்றேற் றாயீ ரைந்து
மெய்ப்படத் தோன்றும்
பொருட்டா கும்மே.

இதன் பொருள்: கடியென்னு முரிச்சொல் வரைவு முதலாகிய பத்துக்குறிப்புமுணர்த்தும் என்றவாறு.

உதாரணம்: 'கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு' (குறள்–கூ௫அ) என வரைவும், 'கடிநுனைப் பகழி' எனக் கூர்மையும், 'கடிகா' (களவழி–உகூ) எனக் காப்பும், 'கடிமலர்' எனப் புதுமையும், 'கடுமான்' (அகம்–க௩ச) என விரைவும், 'கடும்பகல்' (அகம்–கசஅ) என விளக்கமும், 'கடுங்காலொற்றலின்' (பதிற்–உ௫) என மிகுதியும், 'கடுநட்பு' எனச் சிறப்பும், 'கடியையா





னெடுந்தகை செருவத் தானே' என அச்சமும், 'கொடுஞ்சுழிப் புகார்த்தெய்வ நோக்கிக் கடுஞ்சூ டருகுவ னினக்கே' (அகம்–கக०) என முன்றேற்றும் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

முன்றேற்று—புறத்திலன்றித் முன்னின்று தெளித்தல்.

தெய்வமுதலாயினவற்றின்

(அ௭) ௩அச.

ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே.

இதன் பொருள்: 'கடுத்தன எல்லவோ வன்னை' எனவும், 'கடிமிளகு தின்ற கல்லா மந்தி' எனவும், கடியென்கிளவி மேற்கூறப்பட்ட பொருளேயன்றிச் சிறுபான்மை ஐயமாகிய குறிப்புங் கரிப்பாகிய பண்புமுணர்த்துதற்குமுரித்து என்றவாறு. (அஅ)

ங அரு. ஐவியப் பாகும்.

ங அசா. முனைவுமுனி வாகும்.

ங அஎ. வையே கூர்மை.

ங அஅ. எறுழ்வலி யாகும்.

இதன் பொருள்: 'ஐதே காமம் யானே' (நற்றிணை—கசங) எனவும், 'சேற்றுநில முனைஇய செங்கட் காரான்' (அகம்—சங) எனவும், 'வைநுனைப் பகழி' (முல்லை—எங) எனவும், 'போரெறுழ்த் திணிதோள்' (பெரும்பாண்—கூங) எனவும், ஐ முதலாயின முறையானே வியப்பும் முனிவுங் கூர்மையும் வலியுமாகிய குறிப்புணர்த்தும் என்றவாறு. (அகூ) (கூ0) (கூக) (கூஉ)

ங அகூ. மெய்பெறக் கிளந்த வுரிச்சொல் லெல்லா
முன்னும் பின்னும் வருபவை நாடி
யொத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த
றத்த மரபிற் றோன்றுமன் பொருளே.

இதன் பொருள்: இச்சொல் இப்பொருட்குரித்தென மேற் கூறப்பட்ட உரிச்சொ லெல்லாவற்றையும், அவற்று முன்னும்

(அஎ) முன்றேற்று—தெய்வத்தின் முன்னின்று சத்தியஞ் செய்து தெளித்தல்,



பின்னும் வருமொழிகளை ஆராய்ந்து, அம்மொழிகளுட் க மொழியாலே ஒருபொருளுணர்த்துக; இவ்வாறுணர் வ, வரலாற்றுமுறைமையாற் றத்தமக்குரித்தாய பொருள் வி ரும் என்றவாறு.

இஃது என் சொல்லியவாறோவெனின்:—

'உறுதவ நனியென வரூஉ மூன்று
மிகுதி செய்யும் பொருள வென்ப'
(சொல்—உகக)

எனவும்,

'செல்லல் இன்னல் இன்னாமையே'
(சொல்—௩0உ)

எனவும், ஓதியவழி, அவை வழக்கிடைப் பயின்ற சொல்லன்மை யான், இவை மிகுதியும் இன்னுமைபுமுணர்த்துமென்று ஆசிரிய ராணையாற் கொள்வதல்லது வாலாற்றுற் பொருளுணர்த்துமெனப் படாவேவாவென்று ஐயுறுவார்க்கு, 'உறுகால்' (நற்-கூஎ) 'தவப் பல' (புறம்-உகூரு) 'நனிசேய்த்து' (ஐங்குறு-சசக) எனவும், 'மணங்கமழ் வியன்மார்ப னணங்கிய செல்லல்' (அகம்-உஉ) எனவும், முன்னும் பின்னும் வருஞ் சொன்னுடி அவற்றுள் இச் சொல்லோடு இவ்வுரிச்சொல் இயைபுமென்று கடைப்பிடிக்கத் தாம் புணர்த்த சொற்கேற்ற பொருள் விளங்குதலின், உரிச் சொல்லும் வரலாற்றுற் பொருளுணர்த்து மென்பது பெறப்படு மென ஐயமகற்றியவாறெனக் கொள்க. வரலாற்றுற் பொரு ளுணர்த்தாவாயின், குழவின் வந்த குறிநிலைவழக்குப்போல இயற்கைச் சொல்லெனப்படா வென்பது. (கூக)

கூகoo. கூறிய கிளவிப் பொருணிலை யல்ல
வேறுபிற தோன்றினு மவற்றொடுங் கொளலே.

இதன் பொருள் : முன்னும் பின்னும் வருபவை நாடியவழி, உரிச்சொற்குக் கூறப்பட்ட பொருளேயன்றிப் பிறபொருடோன்றுமாயினும், கூறப்பட்டவற்றோடு அவற்றையுங் கொள்க என்றவாறு.

---

(சுரு) வரலாறு—வருதல் வழி; தொன்றுதொட்டு வழங்கி வந்த முறை என்பது பொருள். தாம் புணர்த்த சொல் என்றது உரிச் சொல்லை. இயற்கை— இயல்பு.



'கடிநாறும் பூந்துணர்' என்றவழிக் கடியென்பது முன் னும் பின்னும் வருபவை நாட, வரைவு முதலாயின பொருட் கேலாது மணப் பொருட்டாயினவாறு கண்டுகொள்க. பிறவு

மன்ன.

(கூசு)

௩௯௧. பொருட்குப்பொரு
டெரியி னதுவரம் பின்றே.

பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்திப் பொருளுணர்த்துங் காற் படு முறைமை யுணர்த்துகின்றார்.

இதன் பொருள்: ஒருசொல்லை ஒருசொல்லாற் பொருளுணர்த்தியவழி அப் பொருளுணர்த்த வந்த சொற்கும் பொருள் யாதெனப் பொருட்குப் பொருடெரியுமாயின், மேல் வருவன வற்றிற்கெல்லாம் ஈதொத்தலின், அவ்வினை இறை வரம்பின்றி யோடும்; அதனாற் பொருட்குப் பொருடெரியற்க என்றவாறு.

ஒரு சொற்குப் பொருளுரைப்பது பிறிதோர் சொல்லானன்றே, அச்சொற்பொருளும் அறியாதானை உணர்த்துமா றென்னையெனின், அது வருகின்ற சூத்திரத்தாற் பெறப்படும். ()

௩௯௨.
பொருட்குத்திரி பில்லை யுணர்த்த வல்லின்.

இதன் பொருள்: 'உறுகால்' (நற்-௩௭) என்புழி உறு வென்னுஞ் சொற்குப் பொருளாகிய மிகுதி யென்பதன் பொரு ளும் அறியாத மடவோனாயின், அவ்வாறு ஒருபொருட் கிளவி கொணர்ந்துணர்த்தலுறாது கடுங்காலது வலி கண்டாய் ஈண்டு உறுவென்பதற்குப் பொருளென்று தொடர்மொழி கூறியானும் கடுங்காலுள்வழிக் காட்டியானும், அம் மாணாக்க னுணரும் வாயி லறிந்து உணர்த்தல் வல்லனாயின், அப்பொரு டிரிபுபடாமல் அவ னுணரும் என்றவாறு. அவற்றானு முணர்த்தலாற்றாதானை உணர்த்துமாறென்னையெனின்:—அதற்கன்றே வருஞ் சூத்திர மெழுந்ததென்பது. (௬௬)

௩௯௩. உணர்ச்சி வாயி லுணர்வோர் வலித்தே.

இதன் பொருள்: வெளிப்படத் தொடர்மொழி கூறியா னும் பொருளைக் காட்டியானும் உணர்த்தவும் உணராதானை

(௬௫) இறை—விடை.



உணர்த்தும் வாயிலில்லை; உணர்ச்சியது வாயில்

உணர்வே துணர்வை வலியாகவுடைத்தாகலான் என்றவாறு.

யாதானுமோராற்ற னுணருந்தன்மை அவற்கில்லையாயின், அவனையுணர்த்தற்பாலனல்ல னென்றவாறு. (கூஎ)

௩கூச. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.

இதன் பொருள்: உறு தவ முதலாயின சொற்கு மிகுதி முதலாயின பொருளாதல் வரலாற்று முறைமையாற் கொள்வ தல்லது, அவை அப் பொருளவாதற்குக் காரணம் விளங்கத் தோன்றா என்றவாறு.

பொருளொடு சொற்கியைபு இயற்கையாகலான் அவ்வியற்கை யாகிய இயைபாற் சொற்பொரு ளுணர்த்துமென்ப ஒரு சாரார்.
ஒரு சாரார் பிறகாரணத்தா னுணர்த்துமென்ப.

அவற்றுண்
மெய்ம்மையாகிய காரணம் ஆசிரியர்க்குப் புலனுவதல்லது நம் மனோர்க்குப் புலனுகாமையின், மொழிப்பொருட் காரண மில்லை யென்னுது விழிப்பத் தோன்ரு வென்ருர். அக்காரணம் பொது வகையான் ஒன்ருயினுஞ் சொற்ருெறு முண்மையிற் சிறப்பு வகையாற் பலவாம்; அதனுன் விழிப்பத்தோன்ரு வெனப் பன்மையாற் கூறினுர். உரிச்சொற்பற்றி யோதினுரேனும்; ஏனைச் சொற்பொருட்கு மிஃதொக்கும்.

(கூஅ) நகூரு. எழுத்துப்பிரிந் திசைத்த லிவணியல் பின்றே. இதன் பொருள்:

முதனிலையும் இறுதி நிலையுமாக எழுத் துக்கள் பிரிந்து வேறு வேறு பொருளுணர்த்தல் உரிச்சொல் விடத்து இயைபுடைத்தன்று என்றவாறு.

---

(கூஅ) விழிப்ப—விளங்க.
இயைபு—பொருத்தம், சம்பந்தம். இயற்கை—இயல்பு.

இயற்கையாகிய இயைபு என்றது ஆற்றலே. இச் சொல் இப்பொருளுணர்த்துக என்னும் இறைவனுடைய சங்கேதமே ஆற்றலாதலின் இயற்கையாகிய இயைபு என்றார். ஆதலால் சங்கேதம் என்பதும் இயற்கையாகிய இயைபு என்பதும் வேறன்று; ஒன்றே. சங்கேதம்—நியமம்.
சொற்றொறுமுண்மை—ஒவ்வொருசொற்கு முண்மை.



இவணியல்பின்றெனவே, எழுத்துப் பிரிந்து பொருளுணர்த்தல் பிறுண்டு இயல்புடைத்தென்பதாம். அவையாவன, வினைச்சொல்லும் ஒட்டுப் பெயருமாம். பிரிதலும் பிரியாமையும் பொருளுணர்த்துவனவற்றிற்கே யாகலின், கூறை கோட்படுதல் கடவுளர்க்கு எய்தாதவாறுபோல, இடைச்சொற்கு இவ்வாராய்ச்சியெய்தாமை யறிக.

தவ நனியென்னுந் தொடக்கத்தன குறிப்பு வினையெச்சம் போலப் பொருளுணர்த்தலின், அவைபோலப் பிரிக்கப்படுஞ் சொல்லோவென் றையுறுமை ஐயமகற்றியவாறு. (கூகூ)

௩.கூகூ. அன்ன பிறவுங் கிளந்த வல்ல

பன்முறை யானும் பரந்தன வருஉ-

முரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
வியன்ற மருங்கி னினைத்தென வறியும்
வரம்பு தமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்த லென்மனார் புலவர்.

**இதன் பொருள்:** அன்ன பிறவுங் கிளந்தவல்ல பன்முறை யானும் பரந்தன வருஉ முரிச்சொல்லெல்லாம் என்பது, சொல்லப்பட்டனவேயன்றி அவைபோல்வன பிறவும் பலவாற்றானும் பரந்துவரு முரிச்சொ லெல்லாம் என்றவாறு. பொருட்குறை கூட்ட வியன்ற மருங்கினினைத்தென வறியும் வரம்பு தமக்கின் மையின் என்பது, பொருளொடு புணர்த்துணர்த்த இசை குறிப்புப் பண்புபற்றித் தாமியன்ற நிலத்து இத்துணையென வரையறுத் துணருமெல்லை தமக்கின்மையான் எஞ்சாமைக் கிளத்தலரிதாகலின் என்றவாறு. வழி நனிகடைப்பிடித்தோம்படை யாணையிற் கிளந்தவற்றியலாற் பாங்குறவுணர்தல் என்பது,

> 'இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப்
> பெயரினும் வினையினு மெய்தடு மாறி'. (சொல்-உகஎ)

எனவும், 'முன்னும் பின்னும் வருபவை நாடி' எனவுங் கூறிய நெறியைச் சோராமற் கடைப்பிடித்து 'எச் சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல்' (சொல்-உகஎ) எனவும்,

'ஒத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த
றத்த மரபிற் றேன்றுமன் பொருளே'. (சொல்—கஅக)

எனவும், என்றற் றரப்பட்ட பாதுகாவ லாணையிற் கிளந்தவற் றியல்பொடு மரீஇயவற்றை முறைப்பட வுணர்க என்றவாறு.

குறிப்புப்பொருண்மை பலவகைத்தாகலானும், பெயரினும் வினையினு மெய்தடுமாறியுந் தடுமாறாதும் ஒருசொற் பலபொருட் குரித்தாயும் வருதலானும், ஈறுபற்றித் தொகுத்துணர்த்தற்கு அன்னவீறுடைய வன்மையானும், 'பன்முறையானும் பரந்தன வரூஉம்' என்றார்.

பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறை யென்றார்; ஒருவன் வினையும் பயனும் இன்றியமையாமையின், 'வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தின் றுலகு' (குறள்—௬௧௨) 'பயக்குறை யில்லைதாம் வாழு நாளே' (புறம்—கஅஅ) என்றாற் போல. பொருட்குறை கூட்ட வரம்பு தமக்கின்மையினென இயையும்.

இருமையென்பது கருமையும் பெருமையுமாகிய பண் புணர்த்தும். சேணென்பது சேய்மையாகிய குறிப்புணர்த்தும். தொன்மையென்பது பழமையாகிய குறிப்புணர்த்தும். இவை யெல்லாம் அன்ன பிறவுங் கிளந்தவல்ல வென்பதனாற் கொள்க. பிறவு மன்ன. (க00)

உரியியல் முற்றிற்று.

---

(கOO) பொருட்குறை—பொருளாகிய குறை. குறை—இன்றியமையாதது. சொல் தனக்கு இன்றியமையாததாகக் கொண்டது—பொருள். என்பது கருத்து. அதனை—பொருளை. வினைக்குறை—வினையாகிய இன்றியமையாதது. பயக்குறை—பயனாகிய இன்றியமையாதது.

## கூ. எச்சவியல்

௩கூஎ. இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொல்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே. [லென்

கிளவியாக்கமுதலாக உரியியலிறுதியாகக் கிடந்த ஓத்துக்களுள் உணர்த்துதற்கிடமின்மையான் உணர்த்தப்படாது எஞ்சிநின்ற சொல்லிலக்கணமெல்லாந் தொகுத்துணர்த்திய வெடுத்துக்கொண்டார். அதனான் இவ்வோத்து எச்சவியலென்னும் பெயர்த்தாயிற்று.

'கண்டீரென்று' (சொல்—சஉ௬) எனவும், 'செய்யாயென்னு முன்னிலை வினைச்சொல்' (சொல்—சரு௦) எனவும், 'உரிச்சொன் மருங்கினும்' (சொல்—சரு௬) எனவும், 'ஒருமை சுட்டிய பெயர் நிலைக் கிளவி' (சொல்—சகூக) எனவும், இவைமுதலாகிய சூத்திரங்களா லுணர்த்தப்பட்ட அசைநிலையும் வினைச்சொல் லிலக்கணமும் வழுவமைதியும் அவ்வோத்துக்களு ளுணர்த்தாது ஈண்டுணர்த்தியதென்னையோவெனின் :— அதற்குக் காரணம் அவ்வச் சூத்திர முரைக்கும்வழிச் சொல்லுதும்.

பலபொருட்டொகுதிக்கு ஒன்றனாற் பெயர் கொடுக்குங்கால் தலைமையும் பன்மையும் பற்றிக் கொடுப்பினல்லது பிறிதாறின்மையானும், தலைமையும் பன்மையும் எச்சத்திற்கின்மையானும் பத்துவகையெச்சம் ஈண்டுணர்த்தலான் எச்சவியலாயிற்றென்றல் பொருந்தாமை யுணர்க.

---

(க) எஞ்சிக்கிடந்த சொல்லிலக்கணம் உணர்த்தலின் எச்சவியலாயிற்று என்பது சேனாவரையர் கருத்து. தலைமையாற் பெயர் கொடுத்தல்—பாப்பனச்சேரி என்றாற்போல்வன. பன்மையாற் பெயர் கொடுத்தல்—எயினர்சேரி என்றாற்போல்வன. பத்துவித எச்சமுமுணர்த்தலான் எச்சவியல் என்று பெயர்பெற்றதென்றல் பொருந்தாது. ஏனெனின்? எச்சத்திற்குத் தலைமையும் பன்மையுமின்மையின். எச்சவியலிற் சொல்லப்படும் விஷயத்துள் பத்துவகை யெச்சங்களுக்குரிய இலக்கணங்கள் அதிகமாயிருத்தலால் பன்மையாற் பெயர் கொடுக்கலாம் ; அவற்றிலும் ஏனைய இலக்கணங்கள் அதிகமாயிருத்தலின் பன்மையாற் பெயர் கொடுக்கப்பட்டது எனலுமாகாது. எச்சத்திற்குத் தலையுமின்று. ஆதலாற் றலைமையாற் பெயர் கொடுக்கப்பட்டதெனலு மாகாதென்பது கருத்து.

# சொல்லதிகாரம்

ஙருங

செய்யுட்குரிய சொல்லும், அவற்றதிலக்கணமும், அவற்றாற் செய்யுள் செய்வுழிப்படும் விகாரமும், செய்யுட் பொருள்கோளும், எடுத்துக் கோடற்க ணுணர்த்துகின்றார்.

## இச்சூத்திரத்தின் பொருள் :

இயற்சொல்லும், திரிசொல்லும், திசைச்சொல்லும், வடசொல்லும் என அந்நான்கே செய்யுளீட்டுதற்குரிய சொல்லாவன என்றவாறு.

இயற்சொல்லானுஞ் செய்யுட்சொல்லாகிய திரிசொல்லானுமே யன்றித் திசைச்சொல்லும் வடசொல்லும் இடைவிராய்ச் சான்றோர் செய்யுள் செய்யுமாறு கண்டு ஏனைப்பாடைச் சொல்லுஞ் செய்யுட்குரியவோவென் றையுற்றார்க்கு, இந்நான்கு சொல்லுமே செய்யுட்குரியன பிறபாடைச்சொல் உரியவல்லவென்று வரையறுத்தவாறு.

•

செய்யுள் செய்யலாவது ஒருபொருண்மேற் பலசொற்

கொணர்ந்திட்டலாகலான், ஈட்டலென்றார்.

பெயர்வினையிடையுரி யென்பன இயற்சொற் பாகுபாடாக லான், இயற்சொல் அந்நான்கு பாகுபாட்டானுஞ் செய்யுட்குரித் தாம். திரிசொற்பெயராயல்லது வாரா. என்மனாரென்பதனை வினைத்திரிசொல் என்பாருமுளர். அஃது 'என்றிசினோர்' 'பெற லருங்குரைத்து' (புறம்-ரு) என்பனபோலச் செய்யுண்முடிபு பெற்று நின்றதென்றலே பொருத்தமுடைத்து. இல்லென்னு மிடைச்சொல், இல்லவென்றானும் இல்லையென்றானுந் திரிந்து நின்றவழி அவை வழக்கிற்குமுரியவாகலின், திரிசொல்லெனப் படாது. 'கடுங்கால்' என்புழிக் கடியென்னுமுரிச்சொல், 'பெய ரினும் வினையினு மெய்தடு மாறி' (சொல்-உகஎ) என்பதனாற் பண்புப் பெயராய்ப் பெயரொடு தொக்கு வழக்கினுட் பயின்று வருதலால், திரிசொல்லெனப்படாது.

திசைச்சொல்லுள் ஏனைச் சொல்லுமுளவேனும், செய்யுட் குரித்தாய் வருவது பெயர்ச் சொல்லேயாம். வடசொல்லுள்ளும் பெயரல்லது செய்யுட்குரிய வாய் வாரா. இவ்வாறுதல் சான்றோர் செய்யுள் நோக்கிக் கண்டு

கொள்க. (க)

எடுத்துக்கோடல்—ஆரம்பம்; தொடக்கம். ஈட்டல்—சேர்த்தல். வினைத்திரிசொல்லென்பார் உரையாசிரியர். [கிள. சூ. க] கடுங்காலென்புழிக் கடுவென்பது கடியின் திரிபு.
45



௩௯௮. அவற்றுள்

இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை யிசைக்குஞ் சொல்லே.

**இதன் பொருள்:** அந்நான்கனுள், இயற்சொல்லென்று சொல்லப்பட்ட சொற்றும், செந்தமிழ்நிலத்து வழக்காதற்குப் பொருந்திக் கொடுந்தமிழ் நிலத்துந் தம்பொருள் வழுவாம லுணர்த்துஞ் சொல்லாம் என்றவாறு.

அவையாவன: நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், தயிர், மக்கள், மா, தெங்கு, கமுகு என்னுந் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலமாவன வைகையாற்றின் வடக்கும் மருத யாற்றின் றெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்.

திரிபின்றி இயல்பாகிய சொல்லாகலின் இயற்சொல்லாயிற்று. கொடுந்தமிழ் நிலத்திற்கும் பொதுவாகலின் இயற்சொல்லாயிற் றெனினு மமையும். நீரென்பது ஆரியச் சிதைவாயினும் அப் பொருட்கு அதுவே சொல்லாய்ச் செந்தமிழ் நிலத்தும் கொடுந் தமிழ்நிலத்தும் வழங்கப்படுதலான் இயற்சொல்லாயிற்று. பிறவு மிவ்வாறு வருவன இயற்சொல்லாகக் கொள்க.

தாமென்பது கட்டுரைச்சுவைபட நின்றது. (உ)

௩௯௯. ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியு
மிருபாற் றென்ப திரிசொற் கிளவி.

இதன் பொருள்: ஒருபொருள் குறித்து வரும் பல சொல்லும் பலபொருள் குறித்து வரும் ஒருசொல்லுமென இரு வகைப்படுந் திரிசொல் என்றவாறு.

---

(உ) இயற்சொல்—எல்லாராலும் இயல்பாகப் பொருளறியப் படுவது. நீரம் என்னும் ஆரியச்சொல் ஈறு கெட்டு நீர் எனத் திரிந்து வந்தது என்பது சேனாவரையர் கருத்து. சிலர் தமிழ்ச்சொல் ஆரியத் துப் புக்கதென்பர்.

வெற்பு, விலங்கல், விண்டு என்பன ஒருபொருள் குறித்த வேறுபெயர்க்கிளவி. எகினமென்பது அன்னமும் கவரிமாவும் புளிமாவும் நாயுமுணர்த்தலானும், உந்தியென்பது யாழ்ப்பத்த லுறுப்பும் கொப்பூழும் தேர்த்தட்டும் கான்யாறு முணர்த்தலானும், இவை வேறுபொருள் குறித்த ஒருசொல்.

திரிசொல்லது திரிவாவது உறுப்புத் திரிதலும் முழுவதுந் திரிதலுமென இருவகைத்து. கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப் புத் திரிந்தன. விலங்கல், விண்டு என்பன முழுவதுந் திரிந்தன. முழுவதுந் திரிந்தனவற்றைக் கட்டிய வழக்கென்பாருமுளர். அவை கட்டிய சொல்லாமாயிற் செய்யுள் வழக்காமாறில்லை; அத ஞன் அவையுந் திரிவெனல் வேண்டுமென்பது.

அஃதேல், பலசொல் ஒருபொருட்
குரியவாதலும் ஒருசொற் பலபொருட் குரித்தாதலும்
உரிச்சொன் முதலாகிய இயற்சொற்கு முண்மையான்
அது திரிசொற்கிலக்கணமாமாறென்னை யெனின் :—
அது திரிசொற்கிலக்கண முணர்த்தியவாறன்று ;
அதனது பாகுபா டுணர்த்தியவாறு.
திரிபுடைமையே திரிசொற்கிலக்கணமாதல்
'சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்'
என்பதனாற் பெற வைத்தார். கிள்ளை
மஞ்ஞையென்பன ஒருசொல் ஒருபொருட்
குரித்தாகிய திரிசொல்லாதலின் இருபாற்
றென்றல் நிரம்பா தெனின் :—அற்றன்று :
ஆசிரியர் இருபாற்றென்ப திரிசொற் கிளவி
எனத் தொகை கொடுத்தாராதலின், கிள்ளை
மஞ்ஞை யென்பனவற்றோடு ஒருபொருட்
கிளவியாய் வரும் திரிசொல்லுள வாக லொன்றோ
இவை பிறபொருள் படுதலொன்றோ இரண்டனு
ளொன்று திட்பமுடைத்தாதல் வேண்டும்.
என்னை ? ஆசிரியர் பிற கூறாமையினென்பது

---

(௧) கட்டிய சொல் என்றது புதிதாக இயற்றிக்கொண்ட சொல் ;

குழூஉக்குறிபோல. கிளி என்ற பொருண்மேல் வருங் கிள்ளை தனித்து நில்லாது அப்பொருளுணர்த்தும் வேறுசொல்லோடு சேர்த்து நோக்க ஒருபொருள் குறித்த வேறு சொல்லாம் என்றபடி. கிள்ளை மஞ்ஞை என்பவற்றுள் கிள்ளையென்பது தன்னைப்போலக் கிளி என்னும் பொருளை யுணர்த்துதற்குரிய சுகம் தத்தை முதலியவற்றோடு சேர்ந்து கிளியென்னும் பொருண்மேல் வருவது ஒருவகை, கிளியை உணர்த்த



திரித்துக்கொண்டது இயற்கைச்சொல்லான் இன்பம்பெறச் செய்யுளீட்டலாகாமையானன்றே; அதனாற் றிரிசொல்லெனவே, செய்யுட் குரித்தாதலும் பெறப்படும். (௩)

௪௦௦. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

இதன் பொருள்: செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலத்துந் தாங் குறித்த பொருள் விளக்குந் திசைச்சொல் என்றவாறு. என்றது, அவ்வந்நிலத்துத் தாங் குறித்த பொருள் விளக்குவதல்லது அவ் வியற்சொற்போல எந்நிலத்துந் தம் பொருள் விளக்காவென்றவாறும்.

பன்னிருநிலமாவன பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவாவடதலை எனச் செந்தமிழ்நாட்டுத் தென்கிழ்பான் முதலாக வடகிழ்பா லிறுதியாக எண்ணிக்கொள்க.

தென்பாண்டிநாட்டார் ஆ எருமை என்பனவற்றைப் பெற்றமென்றும், தம்மாமி யென்பதனைத் தந்துவையென்றும் வழங்குப.

பிறவுமன்ன.

தங்குறிப்பினவென்று தனிமொழி தம்பொருளுணர்த்துமாற்றுக்குச் சொல்லினர்; இருமொழி தொடருமிடத்துத் தன்னை வங்தான் என வேண்டியவாறு வரப்பெறுமென்றுரல்லரென்பது. (ச)

---

லோடு பிறபொருளையு முணர்த்தி வேறு வேறு பொருளவாய் வருவது ஒருவகை. இவ்விரண்டு வகையல்லது சொற்கள் பொருளுணர்த்தும் வகை வேறின்மையின் ஆசிரியர் இருபாற்றென்றார். கிள்ளை என்பது கிளி குதிரை என வேறு வேறு பொருளுணர்த்துதல் காண்க.

(சு) தங்குறிப்பின என்றது, அவ்வந்நிலத்துக் குறித்த பொருளையே செந்தமிழ் நிலத்தும் உணர்த்தி வழங்குமென்பது கருத்து. இயற்சொற் போல என்றது, நிலம் என்னுமியற்சொல் செந்தமிழ் நிலத்தும் கொடுந் தமிழ் நிலத்தும் தம்பொருளை இனிது விளக்குதல்போலக் கொடுந்தமிழ் நாட்டுச்சொற்கள் தத்தம் நாட்டில் இயற்சொல்லாய் நின்று தம்பொ ருளை இனிது விளக்குமன்றிச் செந்தமிழ் நாட்டில் இயற்சொல்லாய்



சுoக. வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.

இதன் பொருள் : வடசொற் கிளவியாவது வடசொற்கே உரியவெனப்படுஞ் சிறப்பெழுத்தினீங்கி இருசார் மொழிக்கும் பொதுவாகிய எழுத்தானியன்ற சொல்லாம் என்றவாறு.

எனவே, பொதுவெழுத்தா னியன்ற வடசொல்லும் செய் யுட் செய்தற்குச் சொல்லா

மென்றவாறாயிற்று.

அவை வாரி, மேரு, குங்குமம், மணி என்னுந் தொடக் கத்தன.

வடசொல்லாவது வடசொல்லோடொக்குந் தமிழ்ச்சொல் லென்றால் உரையாசிரியரெனின்:—அற்றன்று: ஒக்குமென்று சொல்லப்படுவன ஒருபுடையானொப்புமையும் வேற்றுமையு முடைமையான் இரண்டாகல் வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையாகிய ஒருசொல்லிலக்கண முடைமையான் இரண்டு சொல்லெனப்படா; அதனான் ஒத்தல் யாண்டையது, ஒரு சொல்லேயாமென்பது. ஒரு சொல்லாயினும் ஆரியமுந் தமிழுமாகிய இடவேற்றுமையான் வேறாயினவெனின்:— அவ்வாறாயின் வழக்குஞ் செய்யுளுமாகிய இடவேற்றுமையாற்

---

நின்று பொருள்விளக்கா. ஆதலின் செந்தமிழ் நாட்டில் அச் சொற்கள் திசைச்சொல்லாகக்

கொள்ளப்படுமென்பது கருத்து. தம் குறிப்பின வென்று தனிமொழிகள் செந்தமிழ் நிலத்தும் தம்பொருளுணர்த்து மாற்றிற்குச் சொன்றைரன்றித் தள்ளை வந்தான் என்பதுபோலப் பால் முதலிய நோக்காது இரு மொழிகள் விருர்பியவாறு தொடர்ந்து வரலா மென்பது கருதிக் கூறிறைரல்லர் என்பது கருத்து. தன்னை என்பது தள்ளை என்றிருப்பதே பொருத்தம்போலும். தள்ளை—தாய்.

(ரு) வடசொல்லோடொத்த தமிழ்ச்சொல் என்றது, வாரி என் பது தமிழினுமுண்டு ; வடமொழியினுமுண்டு ; ஆதலால் வடசொல்லோ டொத்த தமிழ்ச்சொல்லென்று உரையாசிரியர் கூறுவரென்றபடி.

ஒரு பொருட்கு ஒரு பொருளை உவமை கூறுங்கால் அப்பொருள் ஒரு புடையான் ஒற்றுமையும் ஏனையவற்றான் வேற்றுமையும் உடையதாயேயிருக்கும். ஈண்டு வடசொல்லுக்கும் தமிழ்ச்சொல்லுக்

சோறு கூழென்னுந் தொடக்கத்தனவும் இரண்டு சொல்லாவான் செல்லும்; அதனுன் இடவேற்றுமையுடையவேனும் ஒரு சொல் லிலக்கணமுடைமையான் ஒருசொல்லேயாம். ஒரு சொல்லாய வழித் தமிழ்ச்சொல் வடபாடைக்கட்செல்லாமையானும், வட சொல் எல்லாத்தேயத்திற்கும் பொதுவாகலானும், இவை வட சொல்லாய் ஈண்டு வழங்கப்பட்டனவெனல்வேண்டும்; அதனுன் அது போலியுரையென்க. அல்லதூஉம், அவை தமிழ்ச்சொல் லாயின் வடவெழுத்தொரீஇயென்றல் பொருந்தாமையானும், வடசொல்லாத லறிக. (ரு)

சo௨. சிதைந்தன வரினு மியைந்தன வரையார்.

**இதன் பொருள்:** பொதுவெழுத்தானியன்றனவேயன்றி, வடவெழுத்தானியன்ற வடசொற் சிதைந்து வரினும், பொருத்த முடையன செய்யுளிடத்து வரையார் என்றவாறு.

**உதாரணம்:** 'அரமிய வியலகத் தியம்பும்' (அகம்-கஉச) எனவும், 'தசநான் கெய்திய பணைமரு ளெருத்தின்' (நெடுநல்-

ககரு) எனவும் வரும்.

சிதைந்தன வரினுமெனப் பொதுப்படக் கூறியவதனுன், ஆணை, வட்டம், நட்டம், கண்ணன் எனப் பாகதமாய்ச் சிதைந்து வருவனவுங் கொள்க.

கும் ஒப்புமை சொல்லுங்கால் ஒற்றுமையும் வேற்றுமையும் அவைக்கில்லை, ஏனெனில்? எழுத்தானும் பொருளானும் அவ்விரு சொல்லும் ஒற்றுமையுடையனவாய்க் காணப்படுவனவன்றி, வேற்றுமை உடையனவாகக் காணப்படாமையின். ஆதலால் ஒருசொல் எனப்படுமன்றி இரண்டு சொல்லெனப்படாமையின் ஒக்குமென்றல் பொருந்தாமை காண்க என்றபடி.

எழுத்தானும் பொருளானும் வேற்றுமையுடையவற்றை இரண்டு சொல்லென்று சொல்வதேயன்றி இடத்தான் வேற்றுமையுடையவற்றை இரண்டென்றல் பொருந்தா தென்றபடி.

(கூ) பாகதம்—பிராகிருதம்—என்றது இழிசனர் வழக்கு என்ற படி.



சOக. அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலு மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலுந் தொகுக்கும்வழித் தொகுத்தலு
நீட்டும்வழி நீட்டலுங் குறுக்கும்வழிக் குறுக்கலு
நாட்டல் வலிய வென்மனார் புலவர்.

**இதன் பொருள் :** இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொல் லென்னு நான்கு சொல்லையுஞ் செய்யுளாகத் தொடுக்குங்கால், மெலியதனை வலிக்கவேண்டும்வழி வலித்தலும், வலியதனை மெலிக்கவேண்டும்வழி மெலித்தலும், குறைவதனை விரிக்கவேண்டும்வழி விரித்தலும், மிகுவதனைத் தொகுக்கவேண்டும் வழித் தொகுத்தலும், குறியதனை நீட்டவேண்டும்வழி நீட்டலும், நெடியதனைக் குறுக்கவேண்டும்வழிக் குறுக்கலுமாகிய அறுவகை விகாரமும், செய்யுளின்பம்பெறச் செய்வான் நாட்டுதலை வலியாகவுடைய என்றவாறு.

**உதாரணம் :** 'குறுக்கையிரும்புலி' (ஐங்-உகூகூ) 'முத்தை வரூஉங் காலந் தோன்றின்' (எழு-கககூச) என்பன வலிக்கும் வழி வலித்தல். 'கூடுமண்பாவை' 'குன்றியலுகரத்திறுதி' (சொல்-கூ) என்பன மெலிக்கும்வழி மெலித்தல். 'தண்ணந் துறைவன்' (குறு-உகூரு) என்பது விரிக்கும்வழி விரித்தல். 'மழவரோட்டிய' (அகம்-க) என்பது தொகுக்கும்வழித் தொகுத்தல். 'குன்றி கோபங் கொடிவிடு பவள மொண்செங் காந்த ளொக்கு நின்னிறம்' என்புழிச் செவ்வெண்ணின்றொகை தொக்கு நிற்றலின் இதுவுமது. 'வீடுமின்' என்பது நீட்டும்வழி நீட்டல். 'பாசிலை' (புறம்-ருச) யென்பது காட்டுவாருமுளர். உண்டார்ந் தென்பது உண்டருந்தெனக் குறுகி நிற்றலிற் குறுக்கும்வழிக் குறுக்கல். 'அழுந்து படு விழுப்புண்' (நற்றிணை-கூஎ) என்பதுமது. பிறவுமன்ன.

---

(எ) தண்ணந்துறைவன் என்பதில் 'அம்' சாரியை விரிந்தது.

'மழவரோட்டிய' (அக—க) என்பதில் ஐ தொக்கது. ஆழ்ந்து என்பது அழுந்து எனக் குறுகி நின்றது.



நாட்டல்வலிய வென்றது, இவ்வறுவகை விகாரமும் இன்னுழியா மென்று வரையறுக்கப்படா; செய்யுள் செய்புஞ் சான்றோர் அணிபெற நாட்டலைத் தமக்கு வலியாகவுடைய வென்ற வாறு. நாட்டல், நிலைபெறச் செய்தல். (எ)

சஂஅ. நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே.

இனிச் செய்புளிடத்து விகாரவகையான் மொழிகள் தம்முட் புணருமாறு கூறுகின்றார்.

**இதன் பொருள்:** நிரனிறையும், சுண்ணமும், அடிமறியும், மொழிமாற்றுமென நான்கென்று சொல்லுப, அந் நான்கு சொல்லுஞ் செய்புளிடத்துத் தம்முட் புணருமுறைமை என்றவாறு.

நான்கு சொல்லு மென்பதூஉஞ் செய்புளிடத்தென்பதூஉம் அதிகாரத்தாற் பெற்றும்.

நிரனிறையுஞ் சுண்ணமும் மொழிமாற்றாதலொக்குமாயினும், நிரனிற்றலும் அளவடியெண்சீரைச் சுண்ணமாகத் துணித்தலு மாகிய வேறுபாடுடைமையான், அவற்றைப் பிரித்து அவ்வேறு பாட்டாற் பெயர் கொடுத்து, வேறிலக்கணமில்லாத மொழிமாற்றை மொழிமாற்றென்றார்.

இச்சூத்திரத்தான் மொழிபுணரியல் நான்கென வரையறுத்த (அ)

வாறு.

சஎ௫. அவற்றுள்
நிரனிறை தானே
வினையினும் பெயரினு நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

(அ) அதிகாரம் என்றது இவ்வியன் முதற் சூத்திரத்து அதிகரித் தமையை. நிரனிறையும் சுண்ணமும்போல வேறு இலக்கணமில் லாத மொழிமாற்றை என்க. நிரனிறை—முறைநிற்றல். சுண்ணம்—சுண்ணம்போலக் கிடத்தல். சுண்ணம்—பொடி.

வியல்] சொல்லதிகாரம்

௩௩௧

இதன் பொருள்: அந்நான்கினுள், நிரனிறையாவது வினை யானும் பெயரானும் ஆராயத் தோன்றிச் சொல்வேறு நிற்பப் பொருள் வேறு நிற்றலாம் என்றவாறு.

தொடர்மொழிப்பொருள் முடிக்குஞ் சொற்கண்ணதாகலான், முடிக்குஞ்சொல்லைப் பொருளென்றார்.

வினையினும் பெயரினுமென்றதனன், வினைச்சொல்லான் வருவதூஉம், பெயர்ச்சொல்லான் வருவதூஉம், அவ்விரு சொல் லான் வருவதூஉமென நிரனிறை மூன்றும்.

உதாரணம்: 'மாசு போகவுங் காய்பசி நீங்கவுங்—கடிபுனன் மூழ்கி யடிசில்கை தொட்டு' என முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச்சொல் வேறு வேறு நிற்றலின், வினை நிரனிறையாயிற்று.

அவை மாசு போகப் புனன்மூழ்கி, பசி நீங்க அடிசில் கைதொட்டு

என வியையும். 'கொடி குவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி'

என முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல் வேறு வேறு நிற்றலின், பெயர் நிரனிறையாயிற்று. அவை நுசுப்புக்கொடி, உண் கண் குவளை, மேனி கொட்டை என வியையும்.

'உடலு முடைந்தோடு மூழ்மலரும் பார்க்குங்
கடலிரு ளாம்பல்பாம்
பென்ற—கெடலருஞ்சீர்த்
திங்க டிருமுகமாச் செத்து'

என முடிப்பனவாகிய வினையும் முடிவனவாகிய பெயரும் வேறு வேறு நிற்றலின், பொதுநிரனிறையாயிற்று. அவை கடல் உட லும், இருள் உடைந்தோடும், ஆம்பல் ஊழ்மலரும், பாம்பு பார்க் கும் என வியையும்.

நினையத்தோன்றி யென்றதனால், சொல்லும் பொருளும் வேறு வேறு நிற்குங்கால் நிரல்பட நில்லாது.

' களிறும் கந்தும்போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே'

என மயங்கி வருதலுங் கொள்க.

(௬) உடலும்—பகைக்கும். செத்து—நினைத்து. கந்து—தறி. கூம்பு—பாய்மரம். கலன்—தோணி,



௪௦௬. சுண்ணந் தானே
பட்டாங் கமைந்த வீரடி யெண்சீ
ரொட்டுவழி யறிந்து துணித்தன
ரியற்றல்.

இதன் பொருள்: சுண்ணமாவது இயல்பாக அமைந்த ஈரடிக்கணுளவாகிய எண்சீரைத் துணித்து இயைபும்வழி அறிந்து கூட்டி இயற்றப்படுவதாம் என்றவாறு.

அளவடியல்லாதன விகாரவடியாகலிற் பட்டாங்கமைந்தில வாதலிற் பட்டாங்கமைந்த வீரடியெனவே, அளவடியாதல் பெறப் படும். ஈரடியெண்சீர் விகாரவடியானும் பெறப்படுதலின், அவற்றை நீக்குதற்குப் பட்டாங்கமைந்த வீரடியென்றார். எனவே, சுண்ணம் அளவடியிரண்டனு ளல்லது பிறண்டு வாரா தென்பது.

**உதாரணம் :**

'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை'

என்புழி, ஆழ, மிதப்ப, நீத்து, நிலையென்பனவும், சுரை, அம்மி, யானைக்கு, முயற்கென்பனவும், நின்றுழி நிற்ப இயையாமையின், சுரை மிதப்ப, அம்மியாழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்துக் கூட்ட, இயைந்தவாறு கண்டுகொள்க.

சுண்ணம்போலச் சிதராய்ப் பரந்து கிடத்தலிற் 'சுண்ண மென்றார்.

(௧௦)

௬௦௭.

அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

இதன் பொருள் : அடிமறிச் செய்யுளாவது, சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் தத்தநிலையிற் றிரிந்து ஒன்றனிலைக் களத்து ஒன்று சென்று நிற்கும் என்றவாறு.

எனவே, எல்லாவடியும் யாண்டுஞ் செல்லுமென்பதாம்.

(கo) பட்டாங்கு—உண்மை; இயல்பு. விகாரவடி; என்றது ஐஞ்சீரும் முச்சீருமாய் வருவதை. சிதராய்—துண்டு துண்டாய்.



**உதாரணம் :**

'மாருக் காதலர் மலைமறந் தனரே
யாருக் கட்பனி வரலா னுவே
வேரு மென்ருேள் வளைநெகி ழும்மே
கூருய் தோழியான் வாழு மாறே.'

என வரும். இதனுட் சீர் நின்றாங்கு நிற்பப் பொருள் சிதையாமல் எல்லாவடியுந் தடுமாறியவாறு கண்டுகொள்க.

பெரும்பான்மையும் நாலடிச் செய்யுட்கணல்லது இப்பொருள் கோள் வாராதென்க.

'நிரனிறை தானே' 'சுண்ணந் தானே' 'மொழிமாற் றியற்கை' என்பனபோல ஈண்டும் அடிமறிச்செய்தியென்பதனைக் குறளடியாக்கி, அடிநிலை திரிந்து சீர்நிலை திரியாது தடுமா றும்மே பொருடெரி மருங்கின் என்று சூத்திரமாக அறுப்பாருமுளர். (கக)

சoஅ. பொருடெரி மருங்கி
னீற்றடி யிறுசீ ரெருத்துவயிற் றிரியுந்
தோற்றமும் வரையா ரடிமறி யான.

இதன் பொருள் : பொருளாராயுங்கால், அடிமறிச் செய்

யுட்கண் ஈற்றடியது இறுதிச்சீர் எருத்தடியிற்சென்று திரிதலும் வரையார் என்றவாறு.

---

(கக) அடிகள் மாறி வருவது—அடிமறி, எனவே சொல் மாறுவ தின்று என்றபடி.

நீங்காத காதலையுடையார் எமது மலையை மறந்தனர். ஆருகக் கண்ணீர் வருதல் ஒழியாது. வேறுபட்டமென்றேளினின்றும் வளை கள் நெகிழாநிற்கும். தோழி யான் வாழுமாறு கூறாய் என்பது பொருள். இச்செய்யுளில் அடிகளை எப்படி மாற்றிக் கூறினும் பொருள் வேறுபடாமையின் அடிமறியாயின. வேருமென்றேள் என்பது ஏருமென்றேள் எனவும் பாடம். இப்பாடத்திற்கு தோளின் மேலிடத்தேறி எனப் பொருள் கொள்க. ஏறல் வளையின்வினை. இது பகற்குறிக்கண் தலைவனீட்டித்தவிடத்து நீங்கருமை தலைவிசாற்றல். மறைந்தனர் என்று பாடங்கொண்டு, பகற்குறியிற்றலைவன் வந்து நீங்கியபின் கவற்சி என்னென்ற தோழிக்குத் தலைவி கூறியதாகக் கொள்ளினும் பொருந்தும்.



சீர்நிலை திரியாது தடுமாறுமென்றுராகலின், சீர்நிலை திரிதலும் ஒருவழிக்கண்டு எய்தியதிகந்துபடாமற் காத்தவாறு.

இலக்கியம் வந்தவழிக் கண்டுகொள்க.

எருத்துவயி னென்பதற்கு ஈற்றயற்சீர்வயி

னென்று பொ     ருரைத்து,

'சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
சார னாட நீவரு தீயே
வார லெனினே யானஞ் சுவலே.'

என்புழி அஞ்சுவல் யான் என இறுதிச்சீர் ஈற்றயற்சீர்வயிற் சென்று திரிந்ததென்று உதாரணங் காட்டினூரால் உரையாசிரிய ரெனின் :—யானஞ்சுவலென நின்றாங்கு நிற்பவும் பொருள் செல்லுமாகலின் இவ்வாறு திரிதல் பொருந்தாமையின், அவர்க் கது கருத்தன்றென்க.

எல்லாவடியும் யாண்டுஞ் செல்லுமாயினும், உரைப்போர் குறிப்பான் எருத்தென்றும் ஈற்றடியென்றுங் கூறினர்.

'உரைப்போர் குறிப்பி னுணர்வகை யன்றி
யிடைப்பான் முதலீ றென்றிவை தம்முண்
மதிக்கப் படாதன மண்டல யாப்பே.'

என உரைப்போர் குறிப்பான் முதலுமிடையுமீறுங்கோடல் பிற ருங் கூறினரென்பது. (கஉ)

௪0௧. மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய
முன்னும் பின்னுங் கொள்வழிக் கொளாஅல்.

இதன் பொருள் : மொழிமாற்றினதியல்பு, பொருளெதி ரியையுமாறு சொன்னிலையை மாற்றி முன்னும் பின்னும் கொள்

ளும்வழிக் கொளுவுதலாம் என்றவாறு.

(கஉ) எய்தியதிகந்து படாமைக் காத்தல் என்றது, சீர்நிலை திரியாதென்று முதற் சூத்திரத்தால் எய்தியதை, சீர்நிலை திரிதலும் ஒரு வழி உண்டெனா இச்சூத்திரத்தால் இகந்து படாமற் காத்தது என்றபடி.



உதாரணம் :

'ஆரிய மன்னர் பறையி னெழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை—காரி
விறன்முள்ளூர் வேங்கைவீ தாஞுணுந் தோளா
ணிறனுள்ளூ ருள்ள தலர்.'

என இதனுள், பாரி பறம்பின்மேற் றண்ணுமைதாஞுணுந் தோளாள் எனவும், நிறன் விறன்முள்ளூர் வேங்கைவீ எனவும், உள்ளூருள்ளதாகிய அலர் ஆரிய மன்னர் பறையினெழுந்தியம்பும் எனவும், முன்னும் பின்னுங் கொள்வழியறிந்து கொளுவப் பொருளெதிரியைந்தவாறு கண்டுகொள்க. மொழிமாற்று நின்று ஒன்றற்கொன்று செவ்வாகாமை கேட்டார் கூட்டிபுணருமாற்றாற் கடாவல்வேண்டும். அல்லாக்கால், அவாய்நிலையுந் தகுதியு முடைய வேனும் அண்மையாகிய காரணமின்மையாற் சொற்கள் தம்மு ளியையாவாமென்க. (கந)

சகo. தநநுஎ எனு மவைமுத லாகிய
கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா.

செய்யுட்குரிய சொல்லும், சொற் றொடுக்குங்காற் படும் விகாரமும், அவை செய்யுளாக்குங்காற் றம்முட் புணர்ந்து நிற்குமாறுமாகிய செய்யுளொழிபு உணர்த்தி, இனி வழக்கிலக்கணத்தொழிபு கூறுகின்றார்.

**இதன் பொருள்:** த ந நு எ என்பனவற்றை முதலாகவுடையவாய்க் கிளைமை நுதலி வரும் பெயரும் பிரிக்கப்படா என்றவாறு.

அவையாவன தமன், தமள், தமர்; நமன், நமள், நமர்; நுமன், நுமள், நுமர்; எமன், எமள், எமர்; தம்மான், தம்மாள், தம்மார்; நம்மான், நம்மாள், நம்மார்; நும்மான், நும்மாள், நும்மார்; எம்மான், எம்மாள், எம்மார் என வரும்.

---

(கந) 'மொழிமாற்று......கடாவல் வேண்டும்' எப்படிக் கடாவல்வேண்டும்? மொழிகள் நின்று செவ்வாகாமையைக்கேட்டார் பின் கூட்டியுணருமாற்றாற் கடாவல் வேண்டும்; என்றபடி. கடாவல்—சொருகுதல். செவ்வாகாமை—நேராகாமை; இயைபுபடாமை. செவ்வனிறை யென்பதில் செவ்வென்பது நேர்மை உணர்த்தலுங் காண்க.



உம்மையாற் பிற கிளை நுதற்பெயரும் பிரிக்கப் பிரியாவென்பதாம்: அவை தாய், ஞாய், தந்தை, தன்னை என்னுந் தொடக்

கத்தன.

இவற்றைப் பிரிப்பப் பிரியாவென்றது என்னையெனின்:— வெற்பன், பொருப்பன் என்னுந் தொடக்கத்து ஒட்டுப்பெயர் வெற்பு + அன், பொருப்பு + அன் எனப் பிரித்தவழியும், வெற்பு, பொருப்பு என்னு முதனிலை தம்பொருள் இனிது விளக்கும். தமன் எமன் என்பனவற்றைத் தம் + அன், எம் + அன் எனப் பிரிக்கலுறின் தம், எம் என்பன முதனிலையாய்ப் பொருளுணர்த்து வனவாதல் வேண்டும்; அவை பொருளுணர்த்தாமையான், தமன், எமன் என வழங்கியாங்குக் கொள்வதல்லது பிரிக்கப்படாமையின், அவ்வாறு கூறினாரென்பது. பிறவுமன்ன. அஃதேல், தாம், யாம் என்பனவற்றிற்கு முதனிலையாகப் பிரிக்கவே, அவையுந் தம் பொருளுணர்த்துமெனின்:—தமன், எமன் என்பன தன்கிளை என்கிளை எனவும், தங்கிளை எங்கிளை எனவும் முதனிலைவகையான் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாதலுடைய. ஒருமையுணர்த் துங்கால் தாம் யாம் என்பன பொருந்தாமையின் தான் யான் என்பனவே முதனிலையெனல்வேண்டும். வேண்டவே, இவ்வாறு பிரிப்பின் தமன் எமன் என ஓரொன்றிரண்டு சொல்லாதல் வேண்டுதலான், எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையின்

---

(கச) பிரிப்பப் பிரியா என்றது—பகுதி விகுதியாகப் பிரிக்கப் பிரிந்து பொருளுணர்த்தா என்றபடி. தாம், யாம் என்பவற்றிற்கு முதனிலையாகப் பிரித்தலென்றது, தமன் நமன் என்பனவற்றை முறையே தாம், யாம் என்பவற்றிற்கு அவை முதனிலையாக வரப் பிரித்தலை. என்பவற்றிற்குப் பிரித்தல் என இயையும். தமன் எமன் என்பன பன்மையாக நின்றே சந்தர்ப்பத்திற்கேற்றபடி, தன்கிளை என்கிளை என்றொருமையாகவும், தங்கிளை எங்கிளை என்று பன்மை யாகவும் பொருள் தரும். தமன்—எமன் என்பன ஒருமையுணர்த் துங்கால், தான் யான் என்பனவற்றைப் பகுதியாக வைத்துத் தான் + அன், யான் + அன் எனப் பிரித்தல் வேண்டும். பன்மையுணர்த்துங் கால் தாம், யாம் என்பவற்றைப் பகுதியாக வைத்துத் தாம் + அன், [illegible] பிரித்தல்வேண்டும். தான், யான் எனப் பிரித்

யாம்+அன என்ப ...
தற்குப் பன்மையாக நிற்கும் தமன், எமன் என்பன இடந்தராமை
யின் பன்மையாக நின்றே ஒருமையும், பன்மையுமாகிய பொருளைத்



ஒரு சொல்லெனவே படும்; இரண்டு
சொல்லென்றல் நிரம்பாமை யின், அவ்வாறு
பிரித்தலும் பொருத்தமின்றென்பது.

கிளைநுதற்பெயர் விளிமரபின்கட்
பெறப்பட்டமையாற் பெய
ரியலு ளுணர்த்தாராயினர். அதனான்
ஆண்டியையு பட்டின்றாக
லான், பிரிப்பப் பிரியா ஒருசொல்லடுக்கோடியைய
இதனை ஈண்டு
வைத்தார்.

(கச)

சகக. இசைநிறை யசைநிலை பொருளொடு புணர்தலென்

றவைமூன் றெனப வொருசொல்

லடுக்கே.

**இதன் பொருள் :** இசைநிறைவும், அசைநிலையும், பொருள் வேறுபாட்டோடு புணர்வதுமென ஒருசொல்லடுக்கு அம்மூன்று வகைப்படும் என்றவாறு.

**உதாரணம் :** 'ஏ ஏ ஏ ஏ யம்பன் மொழிந்தனள்' என்றது இசைநிறை. மற்றோ மற்றோ; அன்றே அன்றே என்பன அசைநிலை. பாம்பு பாம்பு; அவனவன்; வைதேன் வைதேன்; உண்டு உண்டு; போம் போம் என்பன, முறையானே விரைவுந் துணிவும் உடம்பாடும் ஒருதொழில் பலகா

னிகழ்தலுமாகிய

பொருள் வேறுபாடுணர்த்தலிற் பொருளொடு

புணர்தல். பொருள்

வேறுபாடு பிறவுமுளவேல் வழக்கு நோக்கிக்

கண்டுகொள்க.

அடுக்கு ஒருசொல்லது விகாரமெனப்படும்;

இரண்டு சொல்

லாயின் இருபொருளுணர்த்துவதல்லது

டுணர்த்தாமையி னென்பது.

இப்பொருள் வேறுபா

சகஉ. வேற்றுமைத் தொகையே யுவமத் தொகையே
வினையின் றொகையே பண்பின் றொகையே
யும்மைத்தொகையே யன்மொழித்தொகையென்
றவ்வா றென்ப தொகைமொழி நிலையே.

---

தருமென்று கொள்வதன்றித் தாம் யாம் என்பனவற்றிற்கு முதனிலை யாகப் பிரித்துக் கொள்ள முடியாதென்றபடி.

(கரு) அடுக்கு ஒரு சொல்லது விகாரம். இரு சொல்லாயின் இரு பொருளுணர்த்துமன்றி விரைவு முதலிய இப்பொருள் வேறுபாடுகளை உணர்த்தாதென்றபடி.



இனித் தொகையிலக்கண முணர்த்துகின்றார்.

இதன் பொருள்: வேற்றுமைத்தொகை முதலாகத் தொகைச்சொல் ஆறும் என்றவாறு.

வேற்றுமையுருபும் உவமவுருபும் உம்மையும் வினைச்சொல் லீறும் பண்புச்சொல்லீறுந் தொகுதலிற் றொகையாயின வென் பாரும், அவ்வப் பொருண்மேல் இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்படத் தம்முளியைதலிற் றொகையாயின வென்பாருமென இருதிறத்தர் ஆசிரியர். செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என உருபு தொக்கு ஒரு சொன்னீர்மைப் படாதனவுந் தொகையாவான் சேறலின் அவற்றை நீக்குதற்கும், வேழக்கரும்பு, கேழற்பன்றி என்புழித் தொக்கனவில்லையெனினும் தொகையென வேண்டப்படுமாகலான் அவற்றைத் தழுவுதற்கும், உருபு முதலாயின தொகுதலிற் றொகை யென்பார்க்கும் ஒட்டி யொருசொன்னீர்மைப் படுதலுந் தொகையிலக்கணமெனல் வேண் டும்; அதனன் உருபு முதலாயின தொகுதல் எல்லாத்தொகை யினுஞ் செல்லாமையான், எல்லாத்தொகைக்கண்ணுஞ் செல்லு மாறு ஒட்டி யொருசொல்லாதல் தொகை யிலக்கணமாய் முடித லின், இவ்வாசிரியர்க்கு இதுவே துணிவெனப்படுமென்பது. அற் றயின், 'உருபு தொக வருதலும்' (சொல்—கககூ) எனவும், 'வேற்றுமை தொக்க பெயர்வயினானும்' (சொல்—சகஅ) எனவும், 'உம்மை தொக்க பெயர்வயி னானும்' எனவும், 'உவமை தொக்க பெயர்வயி னானும்' எனவும் ஓதலால் அவை ஆண்டுத் தொக்கன வெனப்படுமன்றோவெனின் :—அற்றன்று : 'அதுவென் வேற்

(கசு) தொகையாவது, இரு சொல் வேற்றுமைப்பொருள் முத லிய பொருண்மேற் சேர்ந்து வருவதென்பது சேனவரையர் கருத்து. வினையும், பண்பும் அன்மொழியுந் தொக்கு நில்லாவென்றது, கொல் யானை யென்புழி கொல்லென்னும் வினை தொகாமையையும், செந் தாமரையென்புழி, செவ் என்னும் பண்புச்சொல் தொகாமையையும், அன்மொழிப் பொருண்மேல் இருசொற்றொகுவதன்றி அன்மொழி தொகாமையையும் என அறிக. அன்மொழி கருங்குழல் வந்தாள்

என்புழிக் கருங்குழல் என்பது படுத்தலோசையால் அதனையுடையாளை
உணர்த்தி வருதலின் ஆண்டோர் சொற்றொகாமையறிக. உடையா
ளென்பது தொக்கதன்றோவெனின் அது தொக்கபொருளை (பெண்

வியல்] சொல்லதிகாரம்

நடக்க றமை யுயர்திணைத் தொகைவயின்'
(சொல்—கூச) என்புழி அதுவெனுருபு நின்று
கெட்டதாயின் நின்ற காலத்துத் திணை
வழுவாம்; அத்திணைவழு அமைவுடைத்தெனின் விரிக்கின்றுழி
நான்காமுருபு தொடராது அது தன்னையே விரிப்பினும் அமை
வுடைத்து; அதனான் முறைப்பொருடோன்ற
நம்பிமகன் என
இரண்டுசொற் றொக்கன வென்பதே ஆசிரியர் கருத்தெனல்
வேண்டும். அல்லதூஉம், வினைத்தொகை பண்புத்தொகை அன்
மொழித்தொகை யென்பனவற்றின்கண் வினையும்
பண்பும் அன் மொழியுந் தொக்கு
நில்லாமையானும், அஃதே கருத்தாதலறிக.
அதனான் உருபும் உவமையும் உம்மையுந் தொகுதலாவது தம்
பொருள் ஒட்டிய சொல்லாற்றோன்றத் தாம் ஆண்டுப் புலப்
படாதே நிற்றலேயாம்.

வேற்றுமைத் தொகையென்பது

வேற்றுமைப்பொருளை
யுடைய தொகையென்றானும் வேற்றுமைப்
பொருடொக்க
தொகையென்றானும் விரியும். உவமத்தொகை,
உம்மைத்தொகை,
அன்மொழித்தொகை யென்பனவும்
அவ்வாறு விரியும். அன்
மொழியாவது தொக்க சொல் லல்லாத மொழி.
வினைத்தொகை
பண்புத்தொகை யென்பன வினையினது
தொகை பண்பினது
தொகையென விரியும். வினைபண்பென்றது
அவற்றைபுணர்த்துஞ்
சொல்லை. ஒரு சொல்லாற் றொகையின்மையிற்
பிறிதோர் சொல்
லொடு தொகுதல் பெறப்படும்.

இச்சூத்திரத்தாற் றொகைச்சொல்
இனைத்தென வரை
யறுத்தவாறு.
(கசு)

---

ணக்) காட்டுதற்கு விரித்துக்கொள்ளப்பட்டதன்றித்
தொக்கதன்று.

எனவே, கருங்குழல் என்னு மிருமொழித் தொகையே படுத்தலோசை யால். கருங்குழலை யுடையாள் என்றவரையு முணர்த்திவிடு மென்ப

தாம். ஒரு சொல்லாற் ருெகையின்மையின் வினைத்தொகை, பண்புத்

தொகை யென்றது;—வினைச்சொல்லும், பண்புச் சொல்லும் பிற

சொல்லோடு தொகுதலென்பது கருத்து. வேற்றுமை உருபு இருந்தே

வேற்றுமைப்பொருள்வர வேண்டுதலின் உரையாசிரியர் நச்சினர்க்

கினியர் கூறிய முறைப்படி வேற்றுமை உருபு தொக்க தொகை

யென்று பொருள் கொள்வதே சாலும் ; என்று சேனவரையரை

மறுப்பாரும் உளர்,

47

சேனவரையர்க்கு வேற்றுமையுருபு ஆண்டில்லை

சகந. அவற்றுள்
வேற்றுமைத் தொகையே
வேற்றுமை யியல.

இதன் பொருள்: வேற்றுமைத்தொகை அவ்வேற்றுமை யுருபுதொடர்ப்பொருளுணர்த்தியாங்குணர்த்தும் என்றவாறு.

எனவே, சாத்தனொடு வந்தான் என்னும் பொருட்கட் சாத்தன் வந்தான் எனவும், சாத்தற்குக் கொடுத்தான் என்னும் பொருட்கட் சாத்தன் கொடுத்தான் எனவும், உருபுதொடர்ப் பொருளுணர்த்தும் ஆற்றலில்லன தொகா; அவ்வாற்றலுடை யனவே தொகுவன வென்றவாறும்.

இரண்டாம் வேற்றுமைத்தொகை முதலாக வேற்றுமைத் தொகை அறுவகைப்படும். நிலங்கடந்தான், குழைக்காது என

வும்; தாய் மூவர், பொற்குடம் எனவும்; கருப்புவேலி, கடிசூத் திரப்பொன் எனவும்; வரைபாய்தல், கருவூர்க்கிழக்கு எனவும்; சாத்தன் புத்தகம், கொற்றனுணர்வு எனவும்; மன்றப்பெண்ணை, மாரியாமா எனவும் வரும். இவை, முறையானே நிலத்தைக் கடந்தான்; குழையையுடைய காது; தாயொடு மூவர்; பொன்னு னியன்ற குடம்; கரும்பிற்கு வேலி; கடிசூத்திரத்திற்குப் பொன்; வரையினின்றும் பாய்தல்; கருவூரின் கிழக்கு; சாத்த னது புத்தகம்; கொற்றனதுணர்வு; மன்றத்தின்கணிற்கும் பெண்ணை; மாரிக்கணுள தாமா என்னும் உருபுதொடர்ப் *பொருளை இனிது விளக்கியவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன.(கள)

---

யென்பது கருத்தன்று. அஃது ஆண்டு மறைந்து நின்றதென்பது கருத்து. 'அதனை, உருபும் உவமையும் உம்மையுந் தொகுதலாவது தம்பொருளொட்டிய சொல்லாற்றோன்றத் தாம் ஆண்டுப் புலப்படாதே நிற்றலேயாம்' என்று இச்சூத்திர உரையிற் கூறுமாற்றானறிக. பிரயோகவிவேக நூலாரும் உருபு தொகுதலை அழிவுபாட் டபாவ மாகக் கொள்ளாது முன் னபாவமாகக் கொள்க என்று கூறியத ணுனும் அஃதுணரப்படும். இதனைப் பின்னர் அநுபந்தமாகச் சேர்க் கப்படுந் தொகைநிலை என்னும் பொருளுரைநோக்கி அறிந்துகொள்க.

(கள) வேற்றுமை இயலவென்றது—வேற்றுமை விரிபோல விரிந்து பொருளுணர்த்துவன தொகும் என்றபடி. எனவே அங்ஙனம் பொருளுணர்த்தாதன தொகா என்பதாம்.

௪௧௪. உவமத் தொகையே யுவம வியல.

இதன் பொருள்: உவமத்தொகை உவமவுருபு தொடர்ப் பொருள் போலப் பொருளுணர்த்தும் என்றவாறு. எனவே, புலியன்ன சாத்தன், மயிலன்ன மாதர் என்னும் பொருட்கட் புலிச்சாத்தன் மயின்மாதர் என அப்பொருள் விளக்கும் ஆற்ற லில்லன தொகா; ஆற்றலுடையனவே தொகுவனவென்பதாம்.

உதாரணம்: புலிப்பாய்த்துள்; மழைவண்கை; துடிநடுவு; பொன்மேனி என்பன புலிப்பாய்த்துளன்ன பாய்த்துள்; மழை

யன்னவண்கை ; துடியன்ன நடுவு ; பொன்னன்ன மேனி எனத்
தம் விரிப்பொரு ளுணர்த்தியவாறு கண்டுகொள்க. அஃதேல்,
புலிப்பாய்த்துளையொக்கும் பாய்த்துள் ; மழையையொக்கும்
வண்கை என விரிதலின் அவையெல்லாம் வேற்றுமைத் தொகை
யெனப்படும் ; அதனான் உவமத்தொகையென ஒன்றில்லை
யெனின் :—அற்றன்று : சொல்லுவார்க்கு அது கருத்தாயின்
வேற்றுமைத்தொகையுமாம். அக்கருத்தான்றிப் புலியன்ன
பாய்த்துள், பொன்மானுமேனி என வேற்றுமையோடு இயை
பில்லா உவமவுருபு தொடர்ப்பொருட்கட் டொக்கவழி உவமத் தொகையாவதல்லது வேற்றுமைத்தொகை ஆண்டின்மையின்
வேற்றுமைத்தொகையாமா றில்லையென்க. உவமவுருபு ஒப்பில்
வழியாற் பொருள்செய்யும் இடைச்சொல்லாகலான்

வினையும்
விணக்குறிப்பும் பற்றி வரும். (இரண்டாம்
வேற்றுமை) அவை
பற்றி, 'என்போற் பெருவிதுப் புறுக
நின்னை யின்னுதற்ற
வறனில் கூற்றே'. (புறம்—உடுரு) என்புழிப்
போலவென்பது

---

(கஅ) அக்கருத்தென்றது,—இரண்டாம்
வேற்றுமைக் கருத்
தென்றபடி. புலியன்னபாய்த்துள்
பொன்மானுமேனி என இயை
பில்லா உவமஉருபு தொடரின் பொருட்கட்
டொக்கவழி உவமைத்
தொகையன்றி வேற்றுமைத்தொகை ஆண்டில்லை
என்க. எனவே
அப்பொருட்கட் டொகாதவிடத்து
(வேற்றுமைப்பொருட்கட் டொக்க
விடத்து) வேற்றுமைப்பொருட்கண் வரும்
என்பதாம். உவமஉருபு
இடைச்சொல்லாகலான்
தெரிநிலைவினைப்பொருள்பற்றியும் குறிப்பு
வினைப்பொருள் பற்றியும் வரும். அவைபற்றி
(அவ்வினை வினைக்

குறிப்புப் பற்றி) இரண்டாவது
விரித்தற்கேற்புடைமை அறிக.
என இயைத்துப் பொருள் கொள்க, ஏனைய
இடைப்பிறவரலாய்


குறிப்பு வினையெச்சமாய் நிற்றலானும், 'நும்ம
னோருமற் றினைய ;ராயி—னெம்ம
னோரிவட் பிறவலர் மாதோ' (புறம்—உகO) என்
புழி அன்னே ரென்பது இடைச்சொன்
முதனிலையாகப் பிறந்த குறிப்புப்பெயராகலானும்,
என்னைப்போல, நும்மையன்னோர்,
எம்மையன்னோரென இரண்டாவது விரித்தற்
கேற்புடைமை
யறிக.
(கஅ)

சகரு. வினையின் றொகுதி காலத்
தியலும்.

இதன் பொருள்: வினைத்தொகை

காலத்தின்கணிகழும் என்றவாறு.

காலத்தியலுமெனப் பொதுவகையாற் கூறியவதனான் மூன்று காலமுங் கொள்க.

தொகுதி காலத்தியலுமெனவே, அவ்வினை பிரிந்து நின்ற வழித் தோன்றாது தொக்கவழித் தொகையாற்றலாற் காலந் தோன்று மென்றவாறும்.

ஈண்டு வினையென்றது எவற்றையெனின் :—வினைச்சொற் கும் வினைப்பெயர்க்கும் முதனிலையாய், உண், தின், செல், கொல் என வினைமாத்திரமுணர்த்தி நிற்பனவற்றையென்பது. இவற்றை வடநூலார் தாதுவென்ப.

**உதாரணம்:** ஆடரங்கு; செய்குன்று; புணர்பொழுது; அரிவாள்; கொல்யானை; செல்செலவு என வரும். காலமுணர்த் தாது வினைமாத்திரமுணர்த்தும் பெயர் நிலைப்பெயர் முதலாகிய பெயரோடு தொக்குழிக் காலமுணர்த்தியவாறு கண்டுகொள்க.

---

—— வினைகள் இடைச்சொல்லடியாகப் பிறத்தலையும்

உருபு விரித்தலேயும் விளக்கிநின்றன. இரண்டாம் வேற்றுமை என்பது பாடங்கேட்ட மாணுக்கரால் இடையிற் சேர்க்கப்பட்டிருத்தல்வேண்டும். இரண்டா வது என்பது பின்வரலின்.

(கக) தொகுதி காலத்தியலுமென்றது, காலம், விணையும் பெய ருஞ் சேர்ந்தவழி அத்தொகையாற்றலிஞற் ரேன்றுமென்றபடி. தோன்றுதல்—வெளிப்படுதல்; எனவே கொல்யானை என்பது வேறு வேறு சொல்லாக நின்றவழி ஆண்டுக் காலந் தோன்ருமை காண்க. வியல்]



காலமுணர்த்துகின்றுழிப் பெயரெச்சப் பொருளவாய் நின்றுணர்த்து மென்பது 'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின் — மெய்யொருங் கியலுந் தொழிறொகு மொழியும்' (எழு-சஅ௨) என்பதனுற் கூறினர். தொகைப் பொருளாகிய தாம் பிரிந்த வழிப் பெறப்படாமையின் ஆசிரியர் இவற்றைப் 'புணரிய னிலையிடை யுணரத் தோன்ரு' என்ருர். அதனுன் இவை தஞ் சொல்லான் விரிக்கப்படாமையிற் பிரிவிலொட்டாம்.

பெயரெச்சம் நின்று தொக்கதென்றால் உரையாசிரிய
ரெனின் :—அற்றன்று : ஆசிரியர் இவற்றைப் பிரித்துப் புணர்க்
கப்படா, வழங்கியவாறே கொள்ளப்படுமென்றது, பிரித்தவழித்
தொகைப்பொருள் சிதைதலானன்றே ; கொன்றயானை என
விரிந்தவழியும் அப்பொருள் சிதைவின்றேல் 'புணரிய னிலையிடை
யுணரத் தோன்றா ' என்றற்கோர்
காரணமில்லையாம். அதனாற் பெயரெச்சம் நின்று
தொகுதல் ஆசிரியர்கருத்தன்மையின், உரை
யாசிரியர்க்கும் அது கருத்தன்றென்க.
அல்லதூஉம், ஆகுபெயர் உணர்த்தியவழி
வினைத்தொகையுளப்பட 'இருபெயரொட்டும்'
(சொல்-ககச) என்றாராகலானும் வினை நின்று தொகுதல் அவர்க்
குக் கருத்தன்மை யறிக.

அஃதேல், வினைத்தொகைக்கு முதனிலை பெயராமன்றோ வெனின் :—உரிஞென்பது முதலாயினவற்றைத் தொழிற்பெயரென்றாராகலின், தொழின் மாத்திர முணர்த்துவனவெல்லாம் தொழிற்பெயரென்பது ஆசிரியர் கருத்தென்ப. (கக)

---

கொன்ற யானை யென்பது நின்று தொக்கதாயின் வாழிய சாத்தா என்பது போலப் பிரித்துப் புணர்க்கப்படும். அப்போது அது தொகையாகா தென்றபடி. என்னை ? கொன்றயானை, கொல்யானை என வந்ததென்றால் ஆண்டுப் புணர்ச்சிபற்றி றகரம் கெட்டதென் றாகும். ஆண்டுத் தொக்க தொன்றுமில்லையாகலின் தொகைப்பொருள் சிதையுமென்றாரென்க.

இருபெயரொட்டும் என்புழி, வினைத்தொகையும் இருபெயரொட்டாய் அடங்குமென்பது சேனாவரையர் கருத்து. ஏனெனில் ? கொல்லென்பது முதனிலைத் தொழிற்பெயராதலின். கொல்லென்னுந் தாதுவைச் சேனாவரையர் பெயரென்று கூறுவது பொருந்தும், ௩.எசு

௪௧௬.

வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென்
றன்ன பிறவு மதன்குண நுதலி
யின்ன திதுவென வரூஉ மியற்கை
யென்ன கிளவியும் பண்பின் றொகையே.

இதன் பொருள்: வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவும் அவைபோல்வன பிறவுமாகிய குணத்தை நுதலிப் பின்றொக்கவழிக் குணச்சொற் குணமுடையதனை யுணர்த்தலான் இன்னதிதுவென ஒன்றனை ஒன்று விசேடித்து இருசொல்லும் ஒருபொருண்மேல் வரு மியல்பையுடைய எல்லாத் தொகைச் சொல்லும் பண்புத்தொகையாம் என்றவாறு.

நுதலியென்னுஞ் சினைவினையெச்சம் வருமென்னு முதல் வினையோடு முடிந்தது.

இயற்கையென்றது, தொக்குழிப் பண்புடையதனைக் குறித் தல் அத் தொகைச் சொல்லதியல்பென்பதல்லது காரணங் கூறப்படாதென்றவாறு. தொகைக்கணல்லது அச்சொல் தனி நிலையாய் உண், தின், செல், கொல் என்பன போலப் பொருளுணர்த்தாமையின், பண்புத்தொகையும் வினைத்தொகைபோலப் பிரிக்கப்படாதாம்.

---

என்னையெனின்? ஆசிரியரே உரிஞ் முதலிய முதனிலைகளைத் தொழிற் பெயரென்று 'ஞகாரை யொற்றிய தொழிற்பெயர் முன்னர்' என் னும் புள்ளி மயங்கியல் முதற் சூத்திரத்துட் கூறலானும், வனைதல் முதலிய தொழில் நிகழ்ச்சிக்கண், வனைதல் முதலிய செயலுங் காரண மாகக் கூறப்படலால், ஆண்டும் வனை என்னுந் தாது வனைதலாகிய செயலை உணர்த்திப் பெயராய்நிற்றலானும் பெயரே என்பது ஆசிரியர் கருத்தாதல் நன்கு துணியப்படுதலின்.

(உ0) சினை என்றது ஈண்டுக் குணச்சொல்லை(பண்புச் சொல்லை). அதன்வினை நுதலுதல். முதலென்றது (பண்பும் பண்புடையதுமாகிய இரண்டுந் தொக்க) தொகைச் சொல்லை. அதன் வினை வருதல். எனவே குணச் சொல்லின் வினையாகிய நுதலி என்பது வரும் என் னும் முதல் வினையோடு முடிந்ததென்க. இது "சினைவினை" என்னும் வினையியல் கசு-ம் சூத்திர விதிப்படி முடிந்தது.

உதாரணம் : கருங்குதிரை யென்பது வண்ணப்பண்பு. வட்டப்பலகை யென்பது வடிவு. நெடுங்கோ லென்பது அளவு.

தீங்கரும் பென்பது சுவை.

அன்னபிறவுமென்றதனுன், நுண்ணூல், பராரை, மெல்லிலை, நல்லாடை என்னுந் தொடக்கத்தன கொள்க.

அவை, கரிதாகிய குதிரை, வட்டமாகிய பலகை எனப் பண்புச்சொல்லும் பண்புடைப்பொருளே குறித்தலான், இருசொல்லும் ஒருபொருளவாய் இன்னதிதுவென ஒன்றையொன்று பொதுமை நீக்கியவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன.

அஃதேல், கரிதாகிய குதிரை, வட்டமாகிய பலகை என்பன அத்தொகையின் விரியாகலிற் பண்புத்தொகை பிரிக்கப்படாதென்ற தென்னை யெனின் :—அற்றன்று : தொகைப்பொரு ளுணர்த்துதற்குப் பிறசொற் கொணர்ந்து விரித்த தல்லது, தன் சொல்லான் விரியாமையின் அவை விரியெனப்படாவென்க. வட நூலாரும்

பிரியாத்தொகையும் பிறசொல்லான் விரிக்கப்படு மென்றார். கரியதென்னும் பண்புகொள்பெயர் கருங்குதிரை யெனத் தொக்கதென்றரால்

உரையாசிரியரெனின் :—அதனைப் பெயரெச்சம் வினைத்தொகை நிலைமொழி யென்றதற் குரைத் தாங் குரைத்து மறுக்க. பிறசொற்கொணர்ந்து விரிக்குங்கால், கரிய குதிரை, கரிதாகிய குதிரை, கரியது குதிரை என அத் தொகைப் பொருளுணர்த்துவன வெல்லாவற்றானும் விரிக்கப் படும்.

நி
முதனிலையாவது, கரியன், செய்பன், கருமை, செம்மை என் பனவற்றிற்கெல்லாம் முதனிலையாய்ச் சொல்லாய்நிரம்பாது கரு செவ்வெனப் பண்புமாத்திரமுணர்த்தி நிற்பதாம்.

---

கருங்குதிரை என்பதில் 'கரு' பண்புச் சொல். குதிரை பண் புடையது.

கருங்குதிரை கரியது குதிரை என விரியுமிடத்து இன்னது இது வென வருதல் காண்க.

ஒன்றை ஒன்று பொதுமை

நீக்குதலாவது—செந்தாமரை என் புழிச் செம்மை
என்பது தாமரையை விசேடித்து, அத்தாமரை என்
னுஞ்சொல் வெண்டாமரையையும் உணர்த்தும்
பொதுமையை நீக்கி யும், தாமரையென்பது
செம்மையை விசேடித்து அச்செம்மை,



என்ன கிளவியுமென்றதனால்,
சாரைப்பாம்பு, வேழக்கரும்பு,
கேழற்பன்றி எனப் பண்பு தொகாது பெயர் தொக்கனவும் அத்
தொகையாதல் கொள்க. இவற்றது சாரை முதலாகிய நிலைமொழி
பிரித்தவழியும் பொருளுணர்த்தலின்,
இவற்றைப் பிரித்துப் புணர்த்தார். அஃதேதல்,
பாம்பைச் சாரை விசேடித்ததல்லது சாரையைப்
பாம்பு விசேடித்தின்றாகலின்
ஒன்றையொன்று பொதுமை நீக்காமையாற்
சாரைப்பாம்பென்பது முதலாயின
பண்புத் தொகையாயினவாறென்னையெனின் :—நன்று சொன்
னாய்: விசேடிப்பதும் விசேடிக்கப்படுவதுமாகிய இரண்டனுள்
விசேடிப்பது விசேடியாக்கால் அது குற்றமாம்; விசேடிக்கப்படு

வது விசேடித்தின்றென்றலும்
விசேடிக்கப்படுதலாகிய தன் றன்
மைக் கிழக்கின்மையான் விசேடியாது நிற்பினும் அமையுமென்க.
இவ்வேறுபாடு பெறுதற்கன்றே, இன்னதிதுவென வரூஉமென
பின்மொழியை விசேடிப்பதாகவும்,
முன்மொழியை விசேடிக்கப் படுவதாகவும்,
ஆசிரியர் ஓதுவாராயிற்றென்பது. அற்றேனும்,
சாரையெனவே குறித்த பொருள் விளங்கலிற்
பாம்பென்பது மிகையாம்
பிறவெனின் :—அற்றன்று : உலகவழக்காவது,
சூத் திர யாப்புப்போல மிகைச்சொற்படாமைச்
சொல்லப்படுவதொன் றன்றி, மேற்றொட்டுக்
கேட்டார்க்குப் பொருள் இனிது விளங்க
வழங்கப்பட்டு வருவதாகலின், அது
கடாவன்றென்க. மிகைச் சொற் படாமைச்
சொல்லப்படுமாயின், யான் வந்தேன், நீ வந் தாய்
என்னாது வந்தேன், வந்தாய் என்றே
வழங்கல்வேண்டு

---

செம்மையுடைய பிறபொருட்கும் பொதுவாய்
நிற்றலை நீக்கியும் வருதல். சாரைப்பாம்பு என்புழி,
பாம்பு என்பது ஏனைப்பாம்புக்கும் பொதுவாதலின்
அப்பொதுமையைச் சாரை விசேடித்து நீக்கிய

தல்லது, சாரை செம்மை முதலிய போலப் பிறபொருட்குப் பொது வன்மையின் அதனைப் பாம்பு விசேடித்து வந்ததில்லையென்பது கருத்து. சாரைப்பாம்பு என்புழி, சாரை விசேடிப்பது, பாம்பு விசேடிக்கப்படுவது. அவ்விரண்டனுள் விசேடிப்பதாகிய சாரை விசேடியாக்கால் அது குற்றமாகும். விசேடிக்கப்படுவதாகிய பாம்பு விசேடியாது நின்றது என்று சொல்லுதல் விசேடிக்கப்படுத லாகிய தன் இயல்பிற்குக் குற்றமின்மையான் விசேடியாது நிற்பி னும் அமையும் என்றபடி, என்வே விசேடிப்பது விசேடித்தே வர வேண்டும்; விசேடிக்கப்படுவது விசேடியாமலும் வரலாமென்பது



நடள்

மென்பது. இனி ஒற்றுமை நயத்தால் என்புந்தோலு முரிய

வாதலாகிய உறுப்புஞ் சாரையெனப்படுதலின், அவற்றை நீக்க

லாற் பாம்பென்பதூஉம் பொதுமை

நீக்கிற்றென்பாருமுளர்.
உயர்சொற்கிளவி, இடைச்சொற்கிளவி, உரிச்சொற்கிளவி என்
புழியும், உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல்லென்பன சொல்
லென்பதன்கட் கருத்துடையவன்றிக் குறிமாத்திரமாய், உயர்வு,
இடை, உரி என்ற துணையாய் நின்றனவாகலின், சாரையென்
பது பாம்பை விசேடித்தாற்போல அவை கிளவி யென்பதனை
விசேடித்து நின்றனவென்பது. அவ்வாற்றான் அமைவுடைய
வாயினும், சூத்திரமாகலின், உயர்சொல், இடைச்சொல், உரிச்
சொலெனவேயமையும், கிளவியென்பது மிகையெனின் :—மிகை
யாயினும் இன்னோரன்ன அமைவுடையவென்பதுணர்த்துதற்கு
அவ்வாறோதினரென்பது.
(உ0)

சகஎ. இருபெயர் பல்பெய ரளவின் பெயரே
யெண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
யெண்ணின் பெயரோ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலத்தே யும்மைத் தொகையே.

**இதன் பொருள் :** இருபெயர் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகைச் சொற்றிரளையும் தனக்குச் சார்பாகக் குறித்து நிற்கும் உம்மைத் தொகை என்றவாறு.

**உதாரணம் :** உவாப்பதினான்கு என்பது இருபெயரானுய உம்மைத் தொகை. புலிவிற்கெண்டை என்பது பல பெயரானுய உம்மைத் தொகை. தூணிப்பதக்கு என்பது அளவுப்பெயரானுய உம்மைத் தொகை. முப்பத்துமூவரென்பது எண்ணியற்பெயரானுய உம்மைத் தொகை. தொடியரை யென்பது நிறைப்பெயரா

கருத்து. மிகைச்சொல்—அதிகமானசொல்; வேண்டாதசொல். 'இக்கா
லத்துச் சாரைபோல் என்பும் தோலுமாய்த் தோன்றும் மனுட
ருடைய வயிற்றைச் சாரைக்குடல் என்று கூறுவதும் இங்கு நோக்
கத்தக்கது. இச்சூத்திரத்தும் சேனாவரையர் மதத்தை இக்காலத்தார்
சிலர் மறுத்தல் பொருந்தாதென்பதைப் பின்னர் அநுபந்தமாகச்
சேர்க்கப்படும் தொகைநிலை யென்னும் பொருளுரை நோக்கியறிக,
48



ணப உம்மைத் தொகை. பதினேந்தென்பது எண்ணுப்பெயரா
ணப உம்மைத் தொகை. இனி அவை விரியுங்கால், உவாவும்
பதினான்கும் எனவும், புலியும் வில்லுங் கெண்டையும் எனவும்,
தூணியும் பதக்கும் எனவும், முப்பதின்மரும் மூவரும் எனவும்,
தொடியும் அரையும் எனவும், பத்துமைந்தும் எனவும் விரியும்.

வேற்றுமைத்தொகை முதலாயின பலசொல்லாற் றொகுதல் சிறுபான்மை; அதனுன் உம்மைத்தொகை இருசொல்லானும் பலசொல்லானும் ஒப்பத்தொகுமென்பது அறிவித்தற்கு இருபெயர் பல்பெயரென்றார். கற்சுனைக் குவளையிதழ், பெருந்தோட் பேதை எனப் பிறதொகையும் பெரும்பான்மையும் பலசொல்லான் வருமாலெனின் :—கல்லென்பதுஞ் சுனையென்பதுங் கற்சுனையெனத் தொக்கு ஒருசொல்லாய்ப் பின் குவளையென்பதனோடு தொக்கு ஒருசொல்லாய்ப் பின் இதழென்பதனோடு தொக்குக் கற்சுனைக் குவளையிதழென வொன்றாயிற்று. பெருந்தோளென்னுந் தொகை ஒருசொல்லாய்ப் பேதையென்பதனோடு தொக்குப் பெருந்தோட்பேதையென வொன்றாயிற்று. அவை இவ்வாற்றானல்லது தொகாமையின் இருசொற்றொகையேயாம். புலிவிற் கெண்டை என்புழி மூன்று பெயருந் தொகுமென்னுது முதற் பெயரொழித்தும், இறுதிப் பெயரொழித்தும், ஏனையிரண்டுந் தம்முட்டொக்கு ஒருசொல்லாய்ப் பின் மற்றையதனோடு தொகுமெனின் :—முன்றொகு மிரண்டற்கும் ஓரியைபுவேறுபாடின்மையானும், இருதொகைப் படுத்தல் பலசெய்கைத்தாகலானும், அவை மூன்று பெயரும் ஒருங்கு தொக்கனவெனவே படுமென்பது.

அளவின் பெயர் முதலாயின, இருபெயராயல்லது தொகாவென வரையறுத்தற்கு இருபெயர் பல்பெயரென அடங்குவன

வற்றைப் பெயர்த்துக் கூறினர். கலனே தூணிப்பதக்கு, தொடியே

(உக) எண்ணுப்பெயரென்றது, ஒன்றிரண்டு முதலாக எண்ணைக் குறித்து வரும் பெயரை. எண்ணியற்பெயர்—எண்ணாகிய இயல்பு பற்றிப் பொருளுணர்த்தும் பெயர். அவை முப்பதின்மர் மூவர் என்றாற் போல்வன. இயைபு வேறுபாடின்மை யென்றது—கற்சுணைக் குவளையிதழ் என்புழிக் கல்லும் சுனையும் முதற்றொகுதற்குக் குவளையோடு இயைபுவேறுபாடுண்டு ; ஆதலானது தொகலாம். புலிவிற்கெண்டை



கஃசரை, நூற்றுநாற்பத்துநான்கு என்புழித் தூணிப்பதக்கு, கஃசரை, நாற்பத்துநான்கு என்பன ஒரு சொற்போல அளவுப் பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப்பெயருமாய் வழங்கப்பட்டு வருதலின், கலமுந் தூணிப்பதக்கும், தொடியுங் கஃசரையும், நூறும் நாற்பத்துநான்கும் என இருமொழி நின்று தொக்க வென்றலே பொருத்த முடைமையறிக.

உம்மைத்தொகை இன்னபொருள்பற்றித்

தொகுமென்றது
அவ்வறுகிளவியும் எனச் சொல்லேபற்றி ஓதிஞரேனும், எற்புழிக் கோடலென்பதனுன் 'உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே பலர்சொன் னடைத்து' (சொல்—சஉக) என்பதனுன் எண் ணும்மைப்பொருட்கட் டொகுமென்பது பெறப்படும். எண்ணின் கண் வரும் இடைச்சொற்பலவேனும், தொக்குநிற்கும் ஆற்றலுடையது உம்மைப்பெயராகலான், உம்மைத்தொகையாயிற்று. (உக)

சகஅ. பண்புதொக வரூஉங் கிளவி யானு
மும்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி
னானு
மீற்றுநின் றியலு மன்மொழித்
தொகையே.

இதன் பொருள்: பண்புச்சொற்றொகுஞ் சொல்லினும் உம்மைதொக்க பெயர்க்கண்ணும் வேற்றுமை தொக்க பெயர்க் கண்ணும் இறுதிச்சொற்கண் நின்று நடக்கும் அன்மொழித் தொகை என்றவாறு.

யென்புழிப் புலியும் வில்லும் முதற்கெருகுதற்குக் கெண்டையோடு இயைபு வேறுபாடில்லை என்றபடி. மூன்றுந் தம்முள் இயைபுடைய வாகலின் ஒன்ருய்த் தொகுவதல்லது முன் இரண்டு தொக்குப் பின் பற் றதனேடு தொகாதென்றபடி. இருபெயர் பலபெயர் என்பவற்றுள் அடங்கும் அளவுப் பெயர் முதலியவற்றை மீண்டுங் கிளந்து கூறியது அவை இருபெயராய் அல்லது தொகாவென

அறிவித்தற்கென்க.

இரண்டிடத்தும் 'என்பதனுன்' என்பது 'என்பதனும்' என் றிருப்பது நலம். இலக்கணவிளக்கம் நோக்குக.

எண்ணின்கண் வரும் தொகைச்சொல் பல என்றது ஏ, என்று, என்ரு, என முதலியவற்றை,

பண்புத்தொகைபடவும் உம்மைத்தொகைபடவும் வேற்றுமைத்தொகைபடவும் அச்சொற் றெக்கபின் அத்தொகை அன்மொழித்தொகை யாகாமையின், தொகுவதன்முன் அவற்றிற்கு நிலைக்களமாகிய சொற்பற்றி வருமென்பது விளக்கிய, தொகை வயினனு மென்றது, 'பண்புதொகவரூஉங் கிளவி யானு மும்மை தொக்க பெயர் வயினனும், வேற்றுமை தொக்க பெயர்வயினனும்' என்றார்.

இறுதிச்சொற் படுத்தலோசையாற் பொருள் விளக்குமாறு வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளுங் கண்டுகொள்க.

**உதாரணம்:** வெள்ளாடை, அகரவீறு என்பன பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தகர ஞாழல் என்பது உம்மைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை பொற்றொடி என்பது வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இனி அவை வெள்ளாடையுடுத்தாள், அகரமாகிய ஈற்றையுடைய சொல் எனவும், தகரமுஞாழலுமாகிய சாந்து பூசினள் எனவும், பொற்றொடி தொட்டாள் எனவும் விரியும்.

பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறத்தல் பெரும்பான்மையாகலின், முறையிற்கூறாது அதனை முற்கூறினார்; வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப் பிறத்தலின் உம்மைத்தொகை நிலைக்களத்துப் பிறத்தல் சிறுபான்மையாயினும், ஒருபயனோக்கி அதனை அதன்முன் வைத்தார். யாதோ பயனெனின் :—சிறுபான்மை

---

(உஉ) வெள்ளாடை என்புழி, வெளியது ஆடை எனப் பண்புத் தொகையாகக் கருதும்படி தொக்குவரின் அது பண்புத் தொகையாகக் கருதப்படும். அவ்வாறு கருதாது வெள்ளாடை வந்தாள் என்புழி வெள்ளாடையையுடையாள் வந்தாள் என, வெள்ளாடை என்பதன் இறுதியில் அன்மொழிப்பொருள் தொக்கதாகக் கருதப்படின் ஆண்டுப் பண்புத்தொகைக் கருத்தின்றாம். ஆதலினாற்றான் தொகை வஃயினானுமென்றது 'தொக வரூஉங் கிளவியானும்' என்றார்.

தெய்வச்சிலையார் இச் சூத்திரத்து, ஆகுபெயராவது ஒட்டுப்பட்ட பெயரொடு ஒற்றுமைப்பட்டுவரும்; அன்மொழித்தொகையாவது அப்பொருளின் வேறுபட்டுவரும் என்று கூறியது பொருத்தமில்லையென்



௩௮௯ உவமத்தொகை நிலைக்களத்தும் வினைத்தொகை நிலைக்களத்தும் அன்மொழித்தொகை பிறக்குமென்பதுணர்த்துதலென்க. அவை பவளவாய், திரிதாடி என வரும். அவைதாம் பவளம்போலும் வாயையுடையாள், திரிந்த தாடியையுடையான் என விரியும். பிறவுமன்ன.

(உஉ)

சசகக. அவைதாம்

முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலு

மிருமொழி மேலு மொருங்குட னிலையலு

மம்மொழி நிலையா தன்மொழி நிலையலு

மந்நான் கென்ப பொருணிலை மரபே.

இதன் பொருள்: முன்மொழிமே னிற்றலும், பின மொழிமே னிற்றலும், இருமொழிமே னிற்றலும், அவற்றின்மே னில்லாது பிறமொழிமே னிற்றலுமென அத்தொகையும் அவற் றது பொருணிலைமரபும் நான்கென்று செல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

தொகையும் அவற்றது பொருணிலைமரபும் ஒருவகையான் வேறாயினும், ஒற்றுமைநயம்பற்றி அவைதாமென்றார்.

பொருணிற்றலாவது

வினையோடியையுமாற்றான் மேற்பட்டுத் தோன்றுதல்.

உதாரணம்: வேங்கைப்பூ என்புழிப் பூவென்னும் முன் மொழிக்கட் பொருணின்றது. அது நறிதென்னும் வினையோ டியையுமாற்றான் மேற்பட்டுத் தோன்றியவாறு கண்டுகொள்க.

---

——— பதைப்பின் அநுபந்தமாகச்சேர்க்கப்படும். 'ஆகுபெயரும் அன்மொ ழித்தொகையும்' என்னும் பொருளுரையைப் படித்து அறிந்துகொள்க.

ஆசிரியர் காலத்திலே உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன் மொழித் தொகையும், வினைத்தொகைப்புறத்துப் பிறந்த வன்மொழித் தொகையும் பயின்றுவாராமையின் அவர் கூறிற்றிலரென்பதே பொ ருத்தமாகலின், அவற்றை ஆகுபெயராகுமென்று கூறு தொழிந் தனர் என்றல் பொருந்தாதென்பது சேனாவரையர் கருத்து.



மேல் வருவனவற்றிற்கும் ஈதொக்கும்.

இடவகையான் முன் மொழியாயிற்று. அடைகடல் என்புழி அடையென்னும் பின் மொழிக்கட் பொருணின்றது. இடவகையாற் பின்மொழியா யிற்று. முன் பின்னென்பன காலவகையாற் றடுமாறி நிற்கும். கடலுங் கடலடைந்தவிடமுங் கடலெனப்படுதலின், அடைகட லென்பது அடையாகிய கடலென இருபெயர்ப் பண்புத்தொகை. இனி வரையறையின்மையாற் சிறுபான்மை முன்மொழி பின் மொழியாகத் தொக்கதோ ராறும் வேற்றுமைத்தொகை யெனவு மமையும். உவாப்பதினான்கு என்புழி இருமொழிமேலும் பொருணின்றது. தன்னின முடித்தலென்பதனாற் பல பெயர்மே னிற் றலுங் கண்டுகொள்க. வெள்ளாடை என்புழித் தொக்க இரு மொழிமேலும் நில்லாது உடுத்தாளென்னும் அன்மொழிமே னின்றது.

வேற்றுமைத்தொகைமுத னான்குதொகையும் முன் மொழிப் பொருள; வேற்றுமைத்

தொகையும் பண்புத்தொகையுஞ் சிறு பான்மை பின்மொழிப் பொருளவுமாம். உம்மைத்தொகை இரு மொழிப்பொருட்டு.

ஆறெனப்பட்டதொகை பொருள்வகையான் நான்காமெனப் பிறிதோர்வகை குறித்தவாறு. (உரு)

**சஉ௦. எல்லாத் தொகையு மொருசொன் னடைய.**

**இதன் பொருள்:** அறுவகைத் தொகைச் சொல்லும் ஒரு சொல்லாய் நடத்தலையுடைய என்றவாறு.

ஒருசொன்னடையவெனப் பொதுப்படக் கூறியவதனன், யானைக்கோடு, கொல்யானை என முன்மொழி பெயராகிய வழி ஒரு பெயர்ச்சொன்னடைய வாதலும், நிலங் கடந்தான், குன்றத் திருந்தான் என முன்மொழி வினையாயவழி ஒருவினைச் சொன்

---

(உரு) ஒற்றுமைநயம்—தொகைக்கும் அவற்றின் பொருணிலை மரபுக்குமுள்ள ஒற்றுமைநயம். இரண்டையுஞ் சேர்த்து அவைதாம் என்று சுட்டியது இரண்டற்குமுள்ள ஒற்றுமைநயம் பற்றி என்பது கருத்து. மேற்படல் - சிறத்தல்,

னடைய வாதலுங் கொள்க. அவை உருபேற்றலும் பயனிலை கோடலுமுதலாகிய பெயர்த்தன்மையும், பயனிலையாதலும் பெயர் கோடலுமுதலாகிய வினைத்தன்மையு முடையவாதல் அவ்வச் சொல்லோடு கூட்டிக் கண்டுகொள்க.

நிலங்கடந்தான், குன்றத்திருந்தான் எனப் பெயரும் வினையுந் தொக்கன ஒருசொன்னீர்மையிலவாகலிற் றொகை யெனப்படா வென்பாரு முளர். எழுத்தோத்தினுள் 'பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப—வேற்றுமை யுருபு நிலைபெறு வழியுந்—தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்' (எழு-கஙஉ) என்றதனன் வேற்றுமையுருபு தொகப் பெயருந் தொழிலும் ஒருங்கிசைத்தல் ஆசிரியர் நேர்ந்தாராகலின், அவை தொகையெனவே படுமென்பது. கடந்தானிலம், இருந்தான்குன்றத்து என்பன ஒருங்கிசையாது பக்கிசைத்தலின், அவை தொகையன்மையறிக.

எல்லாத் தொகையு மொருசொன் னடைய என்றதனான், தொகையல்லாத தொடர்மொழியுள் ஒருசொன்னடையவாவன சிலவுளவென்பதாம். யானை கோடு கூரிது, இரும்பு பொன்னாயிற்று, மக்களை யுயர்திணையென்ப என்பனவற்றுள், கோடு கூரிது, பொன்னாயிற்று, உயர்திணையென்ப என்னுந்தொகையது தொடர்மொழி ஒருசொன்னடையவாய் எழுவாய்க்கும் இரண்டாவதற்கும் முடிவாயினவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன. (உச)

---

(உச) 'பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்'

என்பதற்குச் சேனவரையர் 'பெயரும் பெயரும், பெயருந் தொழிலும் பிரிந்திசைப்பவும் ஒருங்கிசைப்பவும் வேற்றுமை உருபு விரிந்து நின்றவழியு மவை மறைந்துநின்றவழியும்' எனப் பொருள்கொண்டு, பெயரும் பெயரும் பெயருந் தொழிலும் பிரிந்திசைப்ப விரிந்தும், ஒருங்கிசைப்பத் தொக்கும் என்று நிரனிறையாகக் கொள்ளுகின்றனர். அதுவே தமிழ் வழக்கிற்கும் ஆசிரியர் கருத்திற்கும் பொருந்திய தென்க. இங்ஙனமன்றி வடமொழிக் கருத்திற்கிசையப் பொருள் கோடல் பொருந்தாதென்க.

பெயரினாகிய தொகையுமாருளவே என்னுஞ் சூத்திர உரையின்கண் பெயரும் வினையும் தொகும் என்பதைக் கொள்வதற்காக, சந்தர்ப்

சஉக. உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே
பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்.

இதன் பொருள்: உயர்திணைக்கண் வரும் உம்மைத்தொகை பலர்க்குரிய ஈற்றான் நடக்கும் என்றவாறு.

பொதுவிற் கூறினாரேனும்,

மாமூலபெருந்தலைச்சாத்தர்;

கபிலபரணநக்கீரர் என வரும்.

விரவுப்பெயர்த்தொகையும் அடங்குதற்கு உயர்திணைப்பெயரும்மைத்தொகை யென்னாது, உயர்திணைமருங்கினும்மைத்தொகை யென்றார். அவை ஒட்டியொருசொல்லாய் நிற்றலிற் பலரறிசொல்லெனப்படும். பலரறிசொற் கபில பரணன் என ஒருமையீற்றான் நடத்தல் வழுவாகலின் வழுக்காத்தவாறு.

இதனானுந் தொகை ஒருசொல்லாதல் பெற்றாம். ஒரு சொன்னீர்மை பெற்றின்றாயின், கபிலன் பரணன் என ஒருமைச்சொல் ஒருமையீற்றான் நடத்தற்கட்படும் இழுக்கென்னையென்பது. (உரு)

சஉஉ. வாரா மரபின வரக்கூ றுதலு
மென்ன மரபின வெனக்கூ றுதலு
மன்னவை யெல்லா மவற்றவற் றியல்பா

னின்ன வென்னுங்

குறிப்புரை யாகும்.

**இதன் பொருள்:** வாராவியல்பினவற்றை வருவனவாகச் சொல்லுதலும், என்னாவியல்பினவற்றை என்பனவாகச் சொல்லுதலும், அத்தன்மையனவெல்லாம் அவ்வப் பொருளியல்பான் இத்தன்மையவென்று சொல்லுங்குறிப்புமொழியாம் என்றவாறு.

---

பத்திற்கு விரோதமாகச் சேனாவரையர் உம்மைக்குப் பொருள் கொண்டனரென்று இக்காலத்துச் சிலர் கூறியது பொருத்தமன்றென்பது அச்சூத்திரக் குறிப்பில் உரைத்தாம். அதனை ஆண்டு நோக்கி உணர்க.

(உரு) உயர்திணை மருங்கின் என உயர்திணை முப்பாற்கும் பொதுவிற் கூறினாரேனும் மாமூலபெருந்தலைச்சாத்தர் என்பது போலப் பலர் சொன்னடைத்தாய் உயர்திணையுள் இயைபுடைய ஆடூஉவறி சொல்லே பெரும்பாலும் வரும் என்பது கருத்து.



கூ அறி

**உதாரணம்:** அங்கெறி மீண்டு வந்து கிடந்தது, அம்மலை வந்திதனோடு பொருந்திற்று எனவும்; அலவலவெலன்கின்றன நெல், மழைமழையென்கின்றன பைங்கூழ் எனவும் வரும். அவை வரவுஞ் சொல்லுதலுமுணர்த்தாது இன்னவென்பதனைக் குறிப்பானுணர்த்தியவாறு

கண்டுகொள்க.

முலை வந்தன, தலை வந்தன என்பன காட்டுவாருமுளர். ஆண்டு வருதல் வளர்தற் பொருட்டாகலான், அவை ஈண்டைக் காகாவென்க.

நிலம் வல்லென்றது, நீர் தண்ணென்றது என்பன காட்டினாரால் உரையாசிரியரெனின் :—சொலற்பொருள வன்மையின், அவை காட்டல் அவர் கருத்தன்றென்க.

அன்னவையெல்லா மென்றதனான், இந்நெறி யாண்டுச் சென்று கிடக்கும்; இக்குன் றக்குன்றோடொன்றும் என்னுந் தொடக்கத்தன கொள்க. (உகூ)

சஉ௩. இசைப்படு பொருளே நான்குவரம் பாகும்.

சஉச. விரைசொல் லடுக்கே மூன்றுவரம் பாகும்.

இதன் பொருள்: மேற்கூறப்பட்ட ஒருசொல்லடுக்கினுள், இசைநிறையடுக்கு நான்காகிய வரம்பையுடைத்து; பொருளொடு புணர்தற்கண் விரைவுபொருள்பட அடுக்குவது மூன்றாகிய வரம்பையுடைத்து என்றவாறு.

வரம்பாகுமென்றது, அவை நான்கினும் மூன்றினுமிறந்து வாரா, குறைந்து வரப்பெறு மென்றவாறு.

உதாரணம்: 'பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ' எனவும், தீத்தீத்தீ எனவும் வரும்.

---

(உகூ) வாரா மரபின வரக் கூறுதல்—அந்நெறி ஈண்டு வந்து கிடந்தது என்பது. என்னுமரபின எனக் கூறுதல்—அவல் அவல் என்கின்றன நெல் என்பது. இவற்றில் நெறிக்கு வருதலும், நெற்கு என்னுதலும் இலவாகவும் உளபோலக் கூறுதல் காண்க.

அவை மும்முறையானும் இருமுறையானும் அடுக்கிவருதல், இவற்றைக் குறைத்துச் சொல்லிக் கண்டுகொள்க.

இசைப்பொருளாவது செய்யுளின்பம்.

விரைவிக்குஞ் சொல்லை

விரைசொலென்றார்.

அசைநிலை இருமுறையல்லது அடுக்காமையின், அதற்கெல்லை கூறாராயினார். அஃதிருமுறையடுக்கு மென்பது யாண்டுப்பெற்றா மெனின் :—அடுக்கென்பதனாற் பெற்றாம்; ஒருமுறை வருவது

அடுக்கெனப் படாமையினென்பது.

முன்னர்க் கூறப்படும் அசைநிலை அடுக்கி வருமென்பது அதிகாரத்தாற் கோடற்பொருட்டு 'இசைநிறையசைநிலை' என்னுஞ் சூத்திரத்தின்பின் வையாது இச்சூத்திரமிரண்டனையும் ஈண்டு வைத்தார். (உஎ) (உஅ)

சஉ௫. கண்டீ ரென்றா கொண்டீ ரென்றா
சென்ற தென்றா போயிற் றென்றா
வன்றி யனைத்தும் வினவொடு சிவணி
நின்றவழி யசைக்குங் கிளவி யென்ப.

இதன் பொருள்: கண்டீரெனவும், கொண்டீரெனவும், சென்றதெனவும், போயிற்றெனவும் வரும் வினைச்சொல் நான்கும், வினாவொடு பொருந்தி நின்றவழி, அசைநிலை யடுக்காம் என்றவாறு.

கட்டுரையகத்து ஒருவன் ஒன்று சொல்லியவழி அதற் குடம்படாதான் கண்டீரே கண்டீரே என்னும்; ஈண்டு வினைச்

---

(உஅ) விரைவித்தல்—விரைந்து செல்லச் செய்தல். முன்னர் என்றது வருஞ் சூத்திரத்தை.

(உகூ) கண்டீரே என்பதில் கண்டீர் என்னும் வினைச்சொற் பொருண்மையும், ஏகாரத்திற்குரிய வினாப் பொருண்மையும் இன்மையின் கண்டீரேகண்டீரே என்பது அசைநிலையாயிற்று என்பது கருத்து. கட்டுரை என்றது ஈண்டு வார்த்தையை (பேச்சை) க் குறித்து நின்றது.



சொற் பொருண்மையும் வினாப்பொருண்மையுமின்மையின், அசைநிலையாயினவாறு கண்டுகொள்க. வரையாது கூறினமையால், கண்டீரே எனச் சிறுபான்மை அடுக்காது வருதலுங் கொள்க. ஏனையவும் ஏற்றவழி அடுக்கியும் அடுக்காதும் அசைநிலையாம். அவை இக்காலத்தரிய; வந்தவழிக் கண்டுகொள்க. (உகூ)

சஉசு. கேட்டை யென்று நின்றை யென்று
காத்தை யென்று கண்டை யென்று
வன்றி யனைத்து முன்னிலை யல்வழி
முன்னுறக் கிளந்த வியல்பா கும்மே.

இதன் பொருள்: கேட்டையெனவும், நின்றையெனவும், காத்தையெனவும், கண்டையெனவும் வரும் நான்கும்; முன்னிலை யல்லாக்கால் மேற்சொல்லப்பட்ட அசைநிலையாம் என்றவாறு.

இவையுங் கட்டுரைக்கண் அடுக்கியும் சிறுபான்மை அடுக்காதும் ஏற்றவழி அசைநிலையாய் வருமாறு கண்டுகொள்க.

நின்றை, காத்தையென்பன இக்காலத்துப் பயின்றுவாரா.

வினைவிற்கடையாக அடுக்கி வந்தவழி முன்னிலையசைநிலையே யாம். இவை அடுக்கியும் அடுக்காதும் முன்னிலைச் சொல்லாதலு முடைமையான், அந்நிலைமை நீக்குதற்கு 'முன்னிலையல்வழி' யென்றார்.

முன்னுறக்கிளந்த வியல்பாகுமென்றதனான், முன்னைய போலச் சிறுபான்மை வினையொடு வருதலுங்கொள்க.

முன்னிலையல்வழி யென்பதற்கு முன்னையபோல வினையொடு சிவணி நில்லாதவழி யென்றுரைத்தாரால் உரையாசிரியரெனின் :— அற்றன்று: வினையொடு சிவணல் இவற்றிற்கொன்று னெய்தா மையின் விலக்கவேண்டா; அதனான் அவர்க்கது கருத்தன்றென்க.

---

(கூ0) கேட்டை முதலாயின வினைவிற் கடையாக அடுக்கி வந்த வழி முன்னிலை அசையேயாம். இவற்றிற்கு ஒன்றுன் எய்தாமை

என்றது, இச்சொற்களுக்கு வினாவோடு சிவணி நிற்குமென ஒன்ருல் விதிக்கப்படாமை என்பது கருத்து. ஒன்ருல்—ஒரு சூத்திரத்தால்.



இரண்டு சூத்திரத்தானுங் கூறப்பட்டன வினைச்சொல்லாதலும் இடைச்சொல்லாதலு முடைமையான், வினையியலுள்ளும் இடையியலுள்ளுங் கூருது ஈண்டுக் கூறினர்.

அஃதேல், ஆக, ஆகல், என்பது என்பனவற்ரோடு இவற்றிடை வேற்றுமையென்னை, அவையும் வினைச்சொல்லாதலுடைமையானெனின்:—இசை நிறைத்தற்கும் பொருள் வேறுபாட்டிற்கும் அடுக்கி வரினல்லாது அடுக்காது வருதலே வினைச்சொற்கியல்பாம். ஆக, ஆகல், என்பது என்பன அடுக்கியல்லது நில்லாமையின், வினைச்சொல் இடைச்சொல்லாயின வெனப்படா; கண்டீர், கொண்டீர் என்பன முதலாயின வினைச்சொற்குரிய ஈற்றவாய் அடுக்கியும் அடுக்காதும் வருதலால் வினைச்சொல் அசைநிலையாயின வெனப்படும்; இது தம்முள் வேற்றுமையென்க. அல்லதூஉம், வினவொடு சிவணி நிற்றலானும் வினைச்சொல்லெனவே படுமென்பது. (௩௦)

சஉஎ. இறப்பி னிகழ்வி னெதிர்வி னென்றச்
சிறப்புடை மரபி னம்முக் காலமுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினு
மெய்ம்மை யானு மிவ்விரண் டாகு
மவ்வா றென்ப முற்றியன் மொழியே.

**இதன் பொருள் :** முற்றுச்சொல்லாவது, இறப்பு நிகழ்வு எதிர்வென்னும் மூன்றுகாலமும், தன்மை முன்னிலை படர்க்கை

(௧௧) யார், எவன், இல்லை வேறு என்பன இடமுணர்த்தா. வியங்கோளும் இடத்தாற் பொதுவாயினும், "அவற்றுள்—முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடு மன்னு தாகும் வியங்கோட் கிளவி" (வினை—உ௯-ம் சூத்திரம்) என்று ஆசிரியர் முன்னிலை தன்மைகளை விலக்கிப் படர்க்கைக்குரியவாகக் கூறலின், அதனைப் பொதுவெனக் கூறல் பெரும்பாலும் சேனாவரையர்க் குடன்பாடன்று. செய்யும் என்னு முற்றும் படர்க்கைக்குரிய. இவைகளும் திணையும் பாலு முணர்த்தா. முன்னிலையு மவ்வாறே. முன்னிலை போலத் தன்மையும் ஒருமை பன்மையன்றி ஐம்பாலுமுணர்த்தா. இக்காரணத்தால் முற்றுக்களுள்



யென்னும் மூன்றிடத்தும், உயர்திணையும் அஃறிணையும் இரு திணைப் பொதுவுமாகிய பொருடோறும், வினையானுங் குறிப்பானும் இவ்விரண்டாய் வரும் அவ்வறுவகைச் சொல்லாமென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம்: சென்றனன், கரியன் எனவும்; சென்றது, கரிது எனவும்; சென்றனை, கரியை எனவும் வரும்.

இடமுணர்த்தலுந் திணையும் பாலும் விளக்கலும் போல ஒரு சாரனவற்றிற்கே யாகாது, எல்லாமுற்றுச் சொற்குங் காலம் முற்சிறத்தலின், 'சிறப்புடை மரபி னம்முக்காலமும்' என்றார்.

வினையினுங் குறிப்பினும் என்புழி ஒரீற்றவாகிய வினையும் வினைக்குறிப்புமே கொள்ளப்படும்; இவ்விரண்டாதற் கேற்பன அவையாகலான்.

மெய்ம்மையாவது பொருண்மை.

உயர்திணையும் அஃறிணையு மல்லது இருதிணைப் பொது வென்பதோர் பொருளில்லையாயினும், சென்றனை, கரியை என்பன செலவிற்கு வினைமுதலாதலும் பண்பியுமாகிய ஒரு நிமித் தம்பற்றி இருதிணைக்கண்ணுஞ் சேறலின், அந்நிமித்தம் இரு திணைப் பொதுவெனப்பட்டது.

வினையினுங்குறிப்பினும் இவ்விரண்டாய் வருதலாவது தெரி நிலைவினையாற் றெற்றெனத் தோன்றலும், குறிப்புவினையாற் றெற்றெனத் தோன்றாமையுமாம்.

---

இடமுணர்த்துவனவும் திணையும் பாலு முணர்த்துவனவும் ஒருசாரன வற்றிற்கே யுரிய என்றார்.

ஓரீற்றவாய் வருத லென்றது உண்டனன் எனத் தெரிநிலை வினைக்கு வரும் அன் ஈறே கரியன் எனக் குறிப்புக்கும் வருதல் போல்வன.

ஒரு நிமித்தம்—ஒரேகாரணம். சென்றனை கரியை என்புழி, செல்லுதலாகிய தொழிற்கு வினை முதலாதலும் கருநிறத்தை யுடையதாதலும் இரண்டுதிணைப் பொருளுக்கும் பொதுவாய் வருதல்காண்க. தெற்றெனத் தோன்றல்—வெளிப்படத் தோன்றல். தெற்றெனத் தோன்



முற்றி நிற்றல் முற்றுச்சொற்கிலக்கணமாதல் 'முற்றியன் மொழியே' யென்பதனாற் பெற்றாம். முற்றிநிற்றலாவது இது வென்பது வினையியலுட் கூறினும். (சொல்-உ௩௫) திணையும் பாலும் இடமும் விளக்கல் எல்லாமுற்றிற்கு மின்மையான், இலக்கணமன்மையறிக.

உயர்திணை அஃறிணை யிரவென்னும் பொருண்மேல் வினையும் வினைக்குறிப்புமாய் வருதல்பற்றி, 'அவ்வாறென்ப' வென்றார். காலமும் இடமுமுதலாயினவற்றோடு கூட்டிப் பகுப்பப் பலவாம்.

ஊரானோர் தேவகுலம் என்றாற்போல 'மெய்ம்மையானும்' என்புழி ஆனென்பது தொறுமென்பதன் பொருட்டாய் நின்

றது.

முன்னர்ப் 'பிரிநிலை வினையே பெயரே' (சொல்-௩௩௦) என்புழிப் பெயரெச்சமும் வினையெச்சமும் கூறுபவாகலின், அவற்றோடியைய முற்றுச்சொல்லையும் ஈண்டுக்கூறினார். கூறவே, முற்றுச்சொல்லும், பெயரெச்சமும், வினையெச்சமுமென வினைச்சொன் மூவகைத்தாதல் இனிதுணரப்படுமென்பது.

உரையாசிரியர் வினையியலுள் ஓதப்பட்டன சிலவினைச்சொற்கு முற்றுச்சொல்லென்று குறியிடுதனுதலிற்று இச்சூத்திரமென்றாரெனின் :—குறியீடு கருத்தாயின், அவ்வாறென்ப முற்றியன் மொழியே என்னாது அவ்வாறு முற்றியன் மொழியெனல் வேண்டுமாகலான், அது போலியுரையென்க. முற்றியன்மொழியென்ப என மொழிமாற்றவே குறியீடாமெனின் :—குறியீடு ஆட்சிப்பொருட்டாகலின், அக்குறியான்

றுமை—வெளிப்படத் தோன்றுமை=குறிப்பாகத் தோன்றல். ஆறுய் வருதல்—வினையையும், குறிப்பையும் உயர்திணை அஃறிணை பொதுத்திணைகளோடு உறழ ஆறாய் வருதல்.

முற்றுச்சொல் எனப் பெயரிடுதலே கருத்தாயின் அவ்வாறும் முற்றியன்மொழி என்பர். மொழிமாற்றிக் கொள்ளலாமே எனின்? அதனைக் குறியீடாக வேறிடத்து ஆசிரியர் எடுத்தாளாமையின் அவ்வாறு இடர்ப்பட்டுப் பொருள் கொள்ளவேண்டியதில்லை என்பது கருத்து.



அதனை யாளாமையான்,

மொழிமாற்றியிடர்ப்படுவ தென்னையோ வென்பது. அல்லதூஉம், முற்றியன்மொழியெனக் குறியிட்டா ராயின், இவை பெயரெஞ்சு கிளவியெனவும், இவை வினை யெஞ்சு கிளவியெனவுங் குறியிடல்வேண்டும்; அவ்வாறு குறி யிடாமையானும் அது கருத்தன்றும். அதனான் வினைச்சொல் லுள் இருவகையெச்சமொழித்து ஒழிந்தசொன் முற்றி நிற்கு மென்றும், அவை இனைத்துப்பாகுபடுமென்றும் உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க.

(௩௧)

சஉஅ. எவ்வயின் வினையு மவ்விய னிலையும்.

இதன் பொருள்: மூவிடத்தாற் பொருடோறும் இவ் விரண்டாமென மேற்சொல்லப்பட்ட கட்டளைப்பட் டடங்காது பிறண்டு வரும் வினையும் முற்றியல்பாய் நிலையும் என்றவாறு.

யார், எவன், இல்லை வேறு என்பன,

இடமுணர்த்தாமை
யின், மேற்கூறிய கட்டளையி னடங்காது,
பிறண்டு வந்தனவாம்.
சிறப்பீற்றன் வருந் தெரிநிலைவினையுங்
குறிப்புவினையும், பொரு . டோறும் வினையும்
வினைக்குறிப்புமாய் வருதற்கு எய்தாமையின்
"மெய்ம்மை யானு மிவ்விரண் டாகும்"
(சொல்-சஉஎ) கட்டளை
யுட்படாது பிறண்டு வந்தனவாம்.
குறிப்புவினைக் கீறாகாது
தெரிநிலைவினைக் கீறுவனவுந்
தெரிநிலைவினைக் கீறாகாது குறிப்பு
வினைக் கீறுவனவும் சிறப்பீற்றவாம். அவை
வினையியலுட் கூறிப்
போந்தாம். யார், எவன் என்பன பாலும்,
இல்லை, வேறு என்
பன திணையும் பாலும் உணர்த்தாவாயினும்,
மேலைச் சூத்திரத்
தான் முற்றுச்சொற்குப் பாலுந் திணையு
முணர்த்தல், ஒருதலை
யாக எய்தாமையின் இடமுணர்த்தாமையே
பற்றி ஈண்டுக் காட்
டப்பட்டன. திணையும் பாலு முணர்த்தல்

ஒருதலையாயின்,

(கஉ) பிரூண்டு வரும் வினை என்றது—இடமுணர்த்தா வினைகளையும் சிறப்பிற்றவாய் வரும் வினைமுற்றுக்களையும். இடமுணர்த்தாதன யார், எவன் முதலியன. சிறப்பிறென்றது—இரண்டற்கும் பொதுவாகாது தெரிநிலைக்கே சிறப்பாயும், குறிப்புக்கே சிறப்பாயுமுள்ள விகுதிகளை. தெரிநிலைக்கே சிறப்பாயின ப, மார், கும் டும் தும் றும், கு, டு, து, று முதலிய. குறிப்பு வினைக்கே சிறப்பாயின '

டு. பிரூண்டு—பிறவிடம். முன்னிலையில் திணையும் பாலுந் தோன்ரு.



[எச்ச

'தன்மை முன்னிலை படர்க்கை யென்னு மம்மூ விடத்தான்' (சொல்-சஉஎ) என ஆசிரியர் முன்னிலையிடம் ஆண்டு வைப்பா ரென்பது.

முற்றுச்சொல்லே யன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமுங் காலமும் இடமு முணர்த்துமென்பது இச்சூத்திரத்திற்குப் பொருளாக உரைத்தாரால் உரையாசிரியரெனின்:—அவை இட வேறுபாடுணர்த்தாது மூவிடத்திற்கும் பொதுவாய் நிற்றலின், அது போலியுரையென்க.

இனி ஒருரை:—மேலைச் சூத்திரத்தாற் கூறப்பட்ட பொருண்மேலும் வரும் எல்லா வினையும் முற்றுச்சொல்லாய் நிற்கும் என்றவாறு. ஈண்டு வினையென்றது வினைச்சொல்லையாக்கு முதனிலையை. எல்லாவினையும் முற்றுச்சொல்லாமெனவே, எச்சமாதல் ஒருதலையன்றென்பதாம். ஆகவே, வினைச்சொல்லாதற்குச் சிறந்தன முற்றுச்சொல்லே யென்பதாம். எல்லா வினையும் முற்றுச்சொல்லாகலும் கச்சினன், கழலினன், நிலத்தன், புறத்தன் என்னுந் தொடக்கத்து வினைக்குறிப்பின் முதனிலை எச்சமாய் நில்லாமையும் வழக்குநோக்கிக் கண்டுகொள்க பிறவுமன்ன.

இவையிரண்டும் இச்சூத்திரத்திற்குப் பொருளாகக் கொள்க (கஉ)

உஉகூ. அவைதாம்
தத்தங் கிளவி யடுக்குந வரினு
மெத்திறத் தானும் பெயர்முடி பினவே.

இதன் பொருள் : மேற்சொல்லப்பட்ட முற்றுச்சொற்றும், தத்தங்கிளவி பல அடுக்கி வரினும், தம்முட்டொடரா்து எவ் வாற்றானும் பெயரொடு முடியும் என்றவாறு.

---

மேலைச் சூத்திரத்தால் கூறப்பட்டபொருள் என்றது உயர்திணைப் பொருள் அஃறிணைப்பொருள் இருதிணைக்கும் பொதுவாகிய பொருள் என்பவற்றை. இம்மூன்றின் மேலும் வரும் எல்லா வினையடியும் முற்றாய் வருமெனவே எச்சமாய் வருதல் நிச்சயமல்ல என்றபடி. வினையென்றது வினையடிகளை [முதனிலைகளை]. குறிப்புவினையடிகளுள் கச்சினன், கழலினன் என்பன போன்ற பெயரடிகள் எச்சங்களுக்கு முதனிலையாக வரமாட்டாமையின் இங்ஙனம் கூறினார் என்க.



உதாரணம் : உண்டான்றின்றோடினான் பாடினான் சாத் தன் ; நல்லனறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன் என வரும்.

அடுக்கிவரினு மென்ற உம்மையான், வந்தான் வழுதி ; கரியன் மால் என அடுக்காது பெயரொடு முடிதலே பெரும் பான்மை யென்பதாம்.

தம்பாற் சொல்லல்லது பிறபாற்சொல்லொடு விராயடுக் கின்மையின்,

‘ தத்தங்கிளவி ’ யென்றார்.

என்மனார் புலவர், முப்பஃதென்ப என
வெளிப்பட்டும் வெளிப்படாதும்
பெயர்முடிபாமென்றற்கு எத்திறத்தானு மென்
றார். ‘ எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி ’ (சொ-சூ அ)
என்றதனன் வெளிப்படாது நிற்றலும் பெறப்பட்டமையான்
ஈண்டுக்

கூறல்வேண்டாவெனின் :— ஆண்டுமுடிக்கப்படும்
பெயர்

வெளிப்படாது நிற்றலுமுடைத்தென்றார் ;
இது முடிக்கும் பெயராகலின்
ஆண்டடங்காதென்பது. முடிக்கப்படுவதனேடு
முடிப்பதனிடை வேற்றுமை
வேற்றுமையோத்தினுட் கூறினும். இன்னும்
எத்திறத்தானுமென்றதனன், உண்டான்
சாத்தன் ; சாத்தனுண்டான் என முன்னும்
பின்னும் பெயர் கிடத்தலுங் கொள்க.

அஃதேல், முற்றி நிற்றலாவது
மற்றுச்சொன்னேக்காமை
யாகலின் முற்றிற்றேல் அது பெயர் அவாய்

நில்லாது ; பெயர் அவாயிற்றேன்
முற்றுச்சொலெனப்படாது ; அதனுன் முற்றுச்
சொற்
பெயர்கொள்ளுமென்றல் மாறுகொள்ளக் கூறலாமெனின் :-
அற்றன்று ; உண்டான் சாத்தன் என்பது
எத்தையென்னும் அவாய்நிலைக்கட் சோற்றை
என்பதனேடு இயைந்தாற்போல, உண் டான்
என்பது யாரென்னும் அவாய்நிலைக்கட்
சாத்தனென்பதனேடு இயைவதல்லது,
அவாய்நிலை யில்வழி உண்டானெனத் தானே
தொடராய் நிற்றல் வினையியலுள்ளுங்
கூறினுமென்

(கக.) அடுக்கிவரினும் என்பதிலும்மை சிறுபான்மை என்ப
தைக் காட்டிநின்றது. எனவே அடுக்காது வந்து
பெயரொடு முடி தலே பெரும்பான்மை என்பதாம்.
உண்டான் என்பது யார் என்., னும் அவாய்
நிலைக்கண் சாத்தனேடு முடிவதல்லது அவாய்நிலை
இல்
வழிச் சாத்தனென்பது இல்லாமலே உண்டானென்பது தானே தொட

பது. அஃதேல் சாத்தனென்னும் பெயர் சோற்றை என்பது போல அவாய்நிற்றலை யுள்வழி வருவதாயின், எத்திறத்தானும் பெயர்முடிபினவே என விதந்தோதல் வேண்டாவாம் பிற வெனின்: நன்று சொன்னாய்: அவாய்நிற்றலை யுள்வழி வருவது அவ்விரண்டிற்கும் ஒக்குமேனும், உண்டானென்றவழி உண்டற் றொழிலாற் செயப்படுபொருள் உய்த்துணர்ந்து பின் அதன் வேறுபாடறியலுறிற் சோற்றை யென்பது வந்நியைவதல்லது, சொற்கேட்டதுணையான் எத்தையெனக் கேட்பான் செயப்படு பொருள் வேறுபாடு அறிதற்கு அவாவாமையின், சோற்றை யென்பது வருதல் ஒருதலையன்று. இனி உண்டானென்னுஞ் சொல்லாற் பொதுவகையான் வினைமுதலுணர்ந்து கேட்பான் அதன் வேறுபாடறியலுறுதலின், சாத்தனென்பது வருதல் ஒருதலையாம். அதனான் இச்சிறப்புநோக்கி விதந்தோதினா ரென்பது. (௩௩)

சருo. பிரிநிலை வினையே பெயரே யொழியிசை
யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே
குறிப்பே யிசையே யாயீ ரைந்து
நெறிப்படத் தோன்று மெஞ்சுபொருட் கிளவி.

முற்றுச்சொல் லுணர்த்தி எச்சமாமாறுணர்த்துகின்றார். எஞ்சுபொருட்கிளவி கொண்டல்லது அமையாமையின் எச்சமா யினவும், ஒருதொடர்க்கொழிபாய் எச்சமாயினவுமென அவை இருவகைப்படும்.

**இதன் பொருள் :** பிரிநிலை முதலாகச் சொல்லப்பட்ட பத்தும் எஞ்சுபொருட் கிளவியாம் என்றவாறு.

---

ராய் நிற்குமென்றபடி. அங்ஙனேல் எத்திறத்தானும் பெயர் முடி பினவே எனல் வேண்டா எனின்? உண்டான் என்புழிக் கேட் போன், வினைமுதலை யறிதற்கு அவாவலின் வினைமுதல் வருதல் ஒருதலையாதல் பற்றி அங்ஙனங் கூறினாரென்க. ஒருதலை—நிச்சயம்.

(கூச) எச்சம் இரண்டு வகை யென்றது எஞ்சுபொருட் கிளவி யான் முடிவனவும் ஒரு தொடர்க் கொழிபாய் எஞ்சி நிற்பனவுமென வற்றை. எஞ்சுபொருட் கிளவியென்றது எஞ்சிய பொருளையுணர்த்



அவற்றுட் கடைநிலை மூன்றும்
ஒருதொடர்க்கொழிபாய் எச்சமாயின் ;
அல்லன எஞ்சுபொருட்கிளவியான் முடிவன.
எஞ்சு பொருட்கிளவியெனினும் எச்சமெனினு
மொக்கும்.

பெயரெச்சம் வினையெச்சம் பெயர் வினையான் முடிதலின், ஆகுபெயராற் பெயர் வினையென்றார்.

ஆயினைந்து மெஞ்சுபொருட்கிளவி யென்றாரேனும், எஞ்சு பொருட்கிளவி பத்துவகைப்படுமென்பது கருத்தாகக் கொள்க.

எச்சமாவன ஒருசார்பெயரும் வினையும் இடைச்சொல்லுமாதலின், பெயரியன் முதலாயினவற்றுட் பத்தும் ஒருங்குணர்த்துதற் கேலாமை யறிக

முடிவும் பொருளு மொத்தலான், என்றென்பதனை எனவின்க ணேற்றினார்.

(௩௪)

௪௩௧. அவற்றுள்
பிரிநிலை யெச்சம் பிரிநிலை முடிபின.

இதன் பொருள்: மேற்சொல்லப்பட்ட எச்சங்களுள், பிரி நிலையெச்சம் ஏகாரப்பிரிநிலையும் ஓகாரப்பிரிநிலையுமென இருவகைப் படும். அவ்விருவகைப் பிரிநிலையெச்சமும் பிரிக்கப்பட்ட பொருளை யுணர்த்துஞ் சொல்லோடு முடியும் என்றவாறு.

---

துஞ் சொல்லை. அவை தொடராயும் தனிமொழியாயும் வரும். அச் சொல்லின்றி அப்பொருள் நிரம்பாமையின் அவ்வாறு கூறினர். உதாரணமாகத் தானேகொண்டான் என்புழி ஏகாரத்தாற் பிரிக்கப் பட்ட பொருள் பிறர் கொண்டிலர் என்பதாகலின் அப்பொருளை யுணர்த்தும் அத்தொடர்மொழியான் அப்பிரிநிலையெச்சம் முடிந்த வாறு காண்க. பிறவும் இதுபோலக் கொள்ளப்படும். பிரிநிலை யெச்சம் முதலிய ஏழற்கும் அவற்றை முடிக்கவருஞ் சொல் உள என்பதும், ஏனைய மூன்றும் அவ்வத் தொடர்க்குத் தாமே எச்சமாய் நின்று, அவ்வத் தொடரை முடித்து நிற்பனவன்றித் தம்மை முடிக்க வருஞ்சொல் உளவல்ல என்பதும் கருத்து.

உதாரணம்: தானே கொண்டான்;

தானே கொண்டான் என்னும் பிரிநிலையெச்சம் பிறர் கொண்டிலரெனப் பிரிக்கப்பட்ட பொருளையுணர்த்துஞ் சொல்லான் முடிந்தவாறு கண்டுகொள்க.

அஃதேல், தானெனப்பட்டானன்றே ஆண்டுப் பிரிக்கப்பட்டான், பிறர் கொண்டிலரென்பது அவனையுணர்த்துஞ் சொல்லன்மையான், அவை பிரிநிலை கொண்டு முடிந்திலவாலெனின்:— அற்றன்று: தானெனப்பட்டான் பிறரிற் பிரிக்கப்பட்டவழிப் பிறரும் அவனிற் பிரிக்கப்பட்டமையான், அவை பிரிநிலை கொண்டனவேயாமென்க.

பிரிநிலையோடு முடிதலாவது அவனே கொண்டான் என்றவழி அவனேயென்பது கொண்டானெனப் பிரிக்கப்பட்டபொருளை வினையெனக் கொண்டு முடிதலென்றாரால் உரையாசிரியரெனின்:— அற்றன்று: அவனே கொண்டான் என்புழி அவனென்னும் எழுவாய்வேற்றுமை கொண்டானென்னும் பயனிலை கொண்டது; ஏகாரம் பிரிவுணர்த்திற்று; ஆண்டெச்சமும் எச்சத்தை முடிக்குஞ் சொல்லுமின்மையான், அவர்க்கது கருத்தன்றென்க. (௩௫)

சநஉ. வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பு

நினையத் தோன்றிய முடிபா கும்மே
யாவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே.

**இதன் பொருள்:** வினையெச்சத்திற்குத் தெரிநிலைவினையுங் குறிப்புவினையும் முடிபாம்; ஆண்டைக் குறிப்புவினை ஆக்கவினை யோடு வரும் என்றவாறு.

(கரு) தானே கொண்டான் என்பது பிரிநிலை எச்சம் என்ற வழித் தான் பிறரினின்றும் பிரிக்கப்பட்டானன்றிப் பிறர் கொண்டில ரென்பது அவனை உணர்த்தாமையின் பிரிநிலையன்றெனின்? அற் றன்று. பிறரினின்றும் அவன் பிரிக்கப்பட்ட வழிப் பிறரும் அவனி னின்றும் பிரிக்கப்பட்டமையின் அஃது பிரிநிலை கொண்டதேயாம் என்க. பிறவுமன்ன. பிறரினும் அவனே எனப் பிரிக்கப்பட்டவழி அப்பிரிநிலைக்குப் பொருள் கொண்டான் என்னும் முடிக்குஞ் சொற் பொருளாதலின் அதனைக் கொண்டு முடியும் என்பது உரை யாசிரியர் கருத்து.



**உதாரணம்:** உழுது வந்தான்; மருந்துண்டு நல்லனாயி
ஞன என வரும.

உழுது வருதல்; உழுது வந்தவன் என வினையெச்சம் வினைப் பெயரோடு முடிதல் நினையத்தோன்றிய வென்றதனாற் கொள்க.

வினையெச்சத்திற்கு முடிபு வினையியலுட் கூறப்பட்டமை யான் இச்சூத்திரம் வேண்டா வெனின்:—இதற்கு விடை ஆண்டே கூறினாம்.

'வேங்கையுங் காந்தளு நாறி யாம்பன் மலரினுந் தான் றண் ணியளே' (குறுந்—அச)
' வில்லக விரலிற் பொருந்தியவா று நல் லகஞ் சேரி ஞெருமருங் கினமே' (குறுந்—நஎ0) எனவும்; கற்று வல்லன், பெற்றுடையன் எனவும் வினைக்குறிப்பு ஆக்கமின்றி வந்தனவாலெனின்:—ஆக்கமொடு வருமென்றது பெரும்பான்மை குறித்ததாகலிற் சிறுபான்மை ஆக்கமின்றியும் வருமென்பது.(நசு)

சநந. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

இதன் பொருள்: பெயரெச்சம் பெயரொடு முடியும் என்றவாறு.

உதாரணம்: உண்ணுஞ் சாத்தன்; உண்ட சாத்தன் என வரும்.

'அவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய' (சொல்—௨௩௪)
என்றதனாற் பெயரெச்சம் பொருள்படுமுறைமை கூறினார். முடிபு எச்சவியலுட் பெறப்படுமென வினையியலுட் கூறியவாறு கடைப் பிடிக்க. (௩௭)

௪௩௪. ஒழியிசை யெச்ச மொழியிசை முடிபின.

இதன் பொருள்: மன்னையொழியிசையும், தில்லையொழி யிசையும், ஓகாரவொழியிசையும் ஆகிய ஒழியிசை யெச்ச மூன்றும் ஒழியிசையான் முடியும் என்றவாறு.

---

(௩௬) வினையெச்சத்திற்குத் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் முடிபாகும். குறிப்பு ஆக்கமொடு வருதல் நல்லனாயினன் என வருதல்.

உதாரணம்: 'கூரியதோர் வாண்மன்' 'வருகதில் லம்ம வெஞ் சேரிசேர' (அகம்—உ௭௬) கொளலோ கொண்டான் என்னும் ஒழியிசையெச்சம், முறையானே திட்பமின்று, வந்தா லின்னது செய்வல், கொண்டுய்யப்போமாறறிந்திலன் என்னும் ஒழியிசையான் முடிந்தவாறு. பிறவும் முடித்தற் கேற்கும் ஒழி யிசை யறிந்து கொள்க. (௩௮)

௪௩௫. எதிர்மறை யெச்ச மெதிர்மறை முடிபின.

இதன் பொருள்: மாறுகொளெச்ச மெனப்பட்ட ஏகார வெதிர்மறையும், ஓகாரவெதிர்மறையும், உம்மையெதிர்மறையு மாகிய எதிர்மறையெச்ச மூன்றும் எதிர்மறையான் முடியும் என்றவாறு.

உதாரணம்: யானே கொள்வேன்; யானோ கள்வேன்; வரலுமுரியன் என்னும் எதிர்மறையெச்சம், முறையானே, கொள்ளேன், கள்ளேன், வாராமையுமுரியன் என்னும் எதிர் மறையான் முடிந்தவாறு கண்டுகொள்க. (௩௯)

௪௩௬. உம்மை யெச்ச மிருவீற் றானுந்
தன்வினை யொன்றிய முடிபா

கும்மே.

**இதன் பொருள் :** எஞ்சுபொருட்கிளவியும் அவ்வெஞ்சு பொருட்கிளவியான் முடிவதுமாகிய உம்மையெச்ச வேறுபாடிரண்டன்கண்ணும், தன்வினை உம்மையொடு தொடர்ந்த சொற்குப் பொருந்திய முடிபாம் என்றவாறு.

என்றது, 'எஞ்சுபொருட் கிளவி செஞ்சொலாயின்' (சொல்-உஅச) என்றதனுன் உம்மையுடைத்தாயும் உம்மையின்றியும்

(ருகூ) யானோ கள்வேன் என்புழிக் கள்ளேன் என்பது படநின்றமையின் எதிர்மறை முடிபின எனப்பட்டது.

(சுo) உம்மை எச்சத்தாற் பெறப்படும் பொருள் எஞ்சு பொருளென்க. எனவே அப் பொருளே அதற்கு எஞ்சு பொருளாகலின் அதனை உணர்த்துஞ் சொல்லை எஞ்சு பொருட்கிளவி யென்றார். உம்மையுடைத்தாயும் உம்மையின்றியும் வருதலை "எஞ்சுபொருட்



வரும் எஞ்சுபொருட்கிளவி உம்மையெச்சத்திற்கு முடிபாதலெய்திற்று. என்னை? எல்லாவெச்சத்திற்கும் எஞ்சுபொருட்கிளவியே முடிபாகலின். இனி உம்மையொடு தொடர்ந்த சொல்லிரண்டற்கும் வினையொன்றேயாகல் வேண்டுமென எய்தாததெய்துவித்தவாறு.

ஒன்றற்காயதே ஏனையதற்கு மாகலிற் றன்வினையென்றார்.

உதாரணம்: சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என இரண்டும் ஒருவினை கொண்டவாறு கண்டுகொள்க. சாத்தனும் வந்தான் கொற்றனுமுண்டான் என வினை வேறுபட்ட வழி உம்மையெச்சமும் எஞ்சுபொருட் கிளவியும் இயையாமை கண்டுகொள்க. அஃதேல்,

'பைம்புதல் வேங்கையு மொள்ளினர் விரிந்தன—
நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே' (அகம்—2)

என வினை வேறுபட்டுழியுந் தம்முளியைந்தனவாலெனின்:— இணர் விரிதலும் ஊர் கோடலும் இரண்டும் மணஞ்செய் காலம் இதுவென் றுணர்த்துதலாகிய ஒருபொருள் குறித்து நின்றமையான், அவை ஒருவினைப்பாற்படுமென்பது. பிறவும் இவ்வாறு வருவனவறிந்து ஒருவினைப்பாற்படுக்க.

---

கிளவி செஞ்சொல் லாயின்" என்னும் இடையியல் ௩௬-ம் சூத்திர உரையுட் காண்க.

உம்மையோடு தொடர்ந்தசொல் இரண்டாகலின் தம்வினை யென்று கூறல் வேண்டும். அங்ஙனங் கூறாமல் தன்வினையென்று கூறியதற்குக் காரணம் ஒன்றற்காய அவ் வினையே ஏனையதற்கும் வினையாதல்பற்றி என்பது கருத்து. எனவே இரண்டற்கும் முடிக்குஞ் சொல்லாய் வருவன ஒருவினையே என்பதாம். சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என இரண்டற்கும் வினை ஒன்றே வந்தமை காண்க.

சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என்றவிடத்து, கொற்றனும் வந்தான் என்பது உம்மையெச்சமாய்கால் முன்னின்ற சாத்தனும் வந்தான் என்பது எஞ்சுபொருட் கிளவியாம் என்றபடி.

வேங்கை விரிதலும் சந்திரன் நிரப்பலு முற்றகாலத்தே வரைதல் குறிஞ்சிநில வழக்கு. வேங்கையும் விரிந்து மணஞ்செய்யுங் காலத்



எஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாயவழித் தன்வினைகோடல் ஈண்டடங்காமையான், அது தன்னினமுடித்த லென்பதனாற் பெறப்படும்.

உம்மையெச்ச மிருவீற்றுமென்றதனன், உம்மையெச்சத் திற்கு முடிபாகிய எஞ்சுபொருட்கிளவி உம்மையொடுவரின் எச்சமாமென்பதாம். அஃதெச்சமாங்கால், முன்னின்றது எஞ்சுபொருட்கிளவியாமென்பது.

எதிர்மறையும்மை எதிர்மறை டு படங்குதலின், ஈண்டும்மையெச்சமென்றது எச்சவும்மையேயாம். (சO)

சநஎ. தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை

நிகழுங் காலமொடு வாராக் காலமு
மிறந்த காலமொடு வாராக் காலமு

மயங்குதல் வரையார்

முறைநிலை யான.

இதன் பொருள்: உம்மையெச்சத்தின்முன் எஞ்சு பொருட்கிளவி உம்மையில் சொல்லாய் வருங்கால், நிகழ்காலத்தோடு எதிர்காலமும் இறந்தகாலத்தோடு எதிர்காலமும் மயங்குதல் வரையார் என்றவாறு.

முறைநிலையான வென்றதனுன், கூறிய முறையானல்லது எதிர்காலம் முன்னிற்ப ஏனைக்காலம் பின் வந்து மயங்குதலில்லை யென்பதாம்.

உதாரணம்: கூழுண்ணாநின்றான் சோறுமுண்பன் எனவும், கூழுண்டான் சோறுமுண்பன் எனவும் அவை கூறிய முறையான் மயங்கியவாறு கண்டுகொள்க.

இவற்றோடு இது மயங்குதல் வரையாரெனவே, இறந்த காலத்தோடு நிகழ்காலமும் நிகழ்காலத்தோடு இறந்த காலமும் வந்து மயங்குதல் வரையப்படுமென்றவாறாயிற்று.

---

தைக் காட்டியது. இங்ஙனு நிறைந்து மணஞ்செயுங் காலத்தைக் காட்டியது. அதனால் அவை ஒருவினைப்பாற்பட்டன என்றபடி.

தன்மேற் செஞ்சொல்
வருஉங்காலை யென்றதனன், உம்மை யடுத்த சொல்
வருங்கால் வேறுபாடின்றி இரண்டு சொல்லும்
ஒருகாலத்தான் வருமென்பதாம்.

தன்வினை காலம் வேறுபடுதலும்
படாமையும் உடைமை யான், இன்னுழி
இன்னவாற்றானல்லது காலம் வேறுபடாதென
வரையறுத்தவாறு.
(சக)

சஙஅ. எனவெ னெச்சம் வினையொடு
முடிமே.

இதன் பொருள் : எனவென்னுமெச்சம்
வினைகொண்டு முடியும் என்றவாறு.

உதாரணம் : கொள்ளெனக் கொடுத்தான் ;
துண்ணெனத் துடித்தது ; ஒல்லென வொலித்தது ;
காரெனக் கறுத்தது என வும், நன்றென்று
கொண்டான் ; தீதென்றிகழ்ந்தான் எனவும்
வரும்.

(௪உ) ௪௩௯. எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு
மெஞ்சுபொருட் கிளவி யிலவென மொழிப.

இதன் பொருள்: சொல்லப்பட்டனவொழிந்து நின்ற சொல்லுங் குறிப்பும் இசையுமாகிய எச்ச மூன்றும் மேல் வந்து தம்மை முடிக்கும் எஞ்சுபொருட் கிளவியையுடைய வல்லவென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

என்றது, அவ்வத்தொடர்க்குத் தாமெச்சமாய் வந்து அவற்ற தவாய்நிலையை நீக்கலின், பிரிநிலையெச்ச முதலாயின போலத் தம்மை முடிக்கும் பிறசொல்லைத் தாம் அவாய் நில்லாவென்ற வாறு. அவை பிறசொல் லவாவாது தாம் எச்சமாய் வருமாறு முன்னர்ச் சூத்திரத்தாற் பெறப்படும். (௪௩)

---

(௪௧) இரண்டு சொல்லும் ஒருகாலத்தால் வருதல் சோறுமுண் டான் கறியுமுண்டான் என வருதல்.

(௪உ) என்றென்பதை எனவின்கண் ஏற்றினர் (எச்-௩௪) என் றது பற்றி ஈண்டு என்றிற்கும் உதாரணங் காட்டினர்.

(௪௩) எஞ்சிய மூன்று சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசை யெச்சம் ஆகிய மூன்று.

சசo. அவைதாம்
தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்.

இதன் பொருள்: அவ்வெச்சமூன்றும் சொல்லுவார் குறிப்பான் எஞ்சி நின்ற பொருளையுணர்த்தும் என்றவாறு.

உதாரணம்:

'பசப்பித்துச் சென்றா ருடையையோ வன்ன
நிறத்தையோ பீர மலர்'
'இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து'
(குறள்-அஎகூ)

என்புழி முறையானே பசப்பித்துச் சென்றாரை யாமுடையேம் எனவும், தீயாரைக் காலத்தாற் களைக எனவும், வந்த தொடர் மொழி எச்சமாய்நின்ற குறிப்புப்பொருளை வெளிப்படுத்தலாற் குறிப்பெச்சமாயின.

'அகர முதல வெழுத்தெல்லா மாதி

பகவன் முதற்றே யுலகு'
(குறள்-க)

'அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு' (குறள்-ககருச)

என்றவழி முறையானே அதுபோல எனவும், நீத்தார்க்கே தவறு எனவும் வருவன எஞ்சிய இசைப்பொருளுணர்த்தலான் இசையெச்சமாயின. சொல்லெச்சத்திற்கு உதாரணம் முன்னர்க்காட்டுதும். 'சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே' (சொல்-சசக) என்பதனுன் அஃதொருசொல்லாதல் பெறப்படுதலின், இது தொடர்ச்சொல்லா மென்பது. சொல்லென்னுஞ் சொல் எஞ்சுவது சொல்லெச்சமென்பார் இவ்விருவகையும் இசையெச்சமென அடக்குப.

பசப்பித்துச் சென்றாரை யாமுடையேம் என்னுந் தொடக்கத்தன குறிப்பிற்றோன்றலாயடங்குதலின், விண்ணென விசைத்

(சச) இம் மூன்றெச்சமும் செய்யுட்டொடர்க்கண் சொல்லுவான் குறிப்பான் எஞ்சிக்கிடந்த பொருளை விளக்குமென்பது கருத்து. செய்யுட்கண் குறிப்பான் எஞ்சிக்கிடந்த பொருளை இம் மூன்றும் வெளிப்படுத்தலின் இவைகளும் எச்சமெனப்பட்டன என்க.

வியல்] சொல்லதிகாரம்
சO௩

தது என்பது குறிப்பெச்சமென்றும்,
அதுபோல என்னுந் தொடக்கத்தன

விகாரவகையாற் றொக்கு நின்றமையான், ஒல்லெனவொலித்தது என்பது இசையெச்சமென்றும், இவை தத் தஞ் சொல்லான் முடிதலல்லது பிறசொல்லான், முடியாமையின் இவற்றை மேல்வந்து முடிக்கும் எஞ்சுபொருட்கிளவியில வென்று ரென்றும், உரைத்தாரால்

உரையாசிரியரெனின் :—அற்றன்று: 'தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் றோன்றலும்' (சொல்—கடுஎ) எனச் சொற்பொருட் பாகுபாடுணர்த்தினர் ; குறிப்பிற்றோன்றும் பொருளை வெளிப்படுத்தும் எச்சமாதலுடைமையான் எச்சமென் றார்; அதனான் ஆண்டடங்காது. இனி விசைத்தது ஒலித்தது என்பன தஞ்சொல்லெனப்படா; படினும், விண்ணென வீங்கிற்று துண்ணெனத் துளங்கினான் எனவும், ஒல்லென வீழ்ந்தது எனவும் பிறசொல்லானும் முடிதலின் எஞ்சுபொருட் கிளவியிலவென்றல் பொருந்தாதாம் என்னை ? தஞ்சொலல்லாதன எஞ்சுபொருட் கிளவியாமாகலின்.

இனி அதுபோலவென்பது

தொகுக்கும்வழித் தொகுத்த லென்பதனாற்

தெரிபு வேறு நிலையலுங் குறிப்பிற் றோன்றலும் என்னுஞ் சூத்

திரத்தால், பொருள் குறிப்பாலும் தோன்றுமெனக் கூறப்பட்டது. குறிப்பிற்றோன்றும் அப்பொருளை வெளிப்படுத்துஞ் சொற்றொடரை ஈண்டு எச்சம் என்றார் என்பது கருத்து.

விசைத்தல் விண்ணென்றிருத்தலானும், ஒலித்தல் ஒல்லென்றிருத் தலானும் விசைத்தலும் விண்ணெனலும் ஒலித்தலும் ஒல்லெனலும் ஒன்றென்பதே உரையாசிரியர் கருத்தாகலின் தந்தஞ் சொற்கொண்டு முடியுமென்றார். அவர்க்கு அதுவே கருத்ாதல்,—' விண்ணென்றதே விசைத்தது எனப்பட்டது. அதனால் தத்தம் குறிப்பி னெச்சத்தான் முடிந்தது என்பது ' என்று கூறியதனால் அறியக்கிடக்கின்றது. சேனா வரையர் தஞ்சொல்லெனப்படா என்றதற்குக் காரணம் இரண்டும் வெவ்வேறு என்று கருதிப்போலும். எஞ்சுபொருட்கிளவி இல என்றல் பொருந்தா என்றது எஞ்சுபொருட்கிளவி இல என்று ஆசிரியர் கூறல் பொருந்தா என்றபடி. விண்ணென விணைத்தது என்பது நச்சி னார்க்கினியர் பாடம் தஞ்சொல் என்பதற்குப் பொருத்தம்போலும்.

அதுபோலும் என்பது தொகுக்கும்வழித் தொகுத்தல் எனின், அதனை ஆசிரியர் சுட்டிக் கூறு உவமை என்று உவமை வேறுபாடாகக் கூறல்

பொருந்ாதென்பது.



அணியியலுள் ஆசிரியர் ஒருவமை வேறுபாடாகக் கூறல் பொருந் தாது. தொகுக்கும்வழித் தொகுத்தல் ஒரு மொழிக் கண்ண தாகலிற் பலசொற்றொகு மென்றலும் பொருத்தமின்று. அத னன் அவர்க்கது கருத்தன்று. விண்ணென விசைத்தது; ஒல் லென வொலித்தது என்னுந் தொடக்கத்தனவற்றை எனவெ னெச்சமென அடக்கிக் குறிப்பெச்சத்திற்கும் இசையெச்சத் திற்கும் வேறுதாரணங்காட்டல் கருத்தென்க.
அல்லதூஉம், எனவெனெச்சமென அடக்காது இசையுங் குறிப்பும்பற்றி வரு வனவற்றை வேறோதின், வெள்ளென வெளுத்தது எனப் பண்பு பற்றி வருவதனையும் வேறோதல்வேண்டும்; அதனை வேறோதாமை யானும் எனவெனெச்சமென அடக்குதலே கருத்தாகக் கொள்க.

குறிப்புப்பொருளைப்
'பசப்பித்துச் சென்றாருடையையோ' 'இளை
தாக முண்மரங் கொல்க' என்பன முதலாகிய
தொடர்மொழியே உணர்த்தலான் எஞ்சுபொரு
ளெனப்படாவாயினும், அப்பொருள்
பிறசொல்லானல்லது வெளிப்படாமையின்,
அச்சொல் லெச்சமா யிற்று. குறிப்புப் பொருளே
யன்றி எஞ்சுபொருளுஞ் சொல்லு வான்
குறிப்பொடு படுத்துணர்ந்து தமக்கேற்ற சொல்லா
லுணர்த்
தப்படுதலின், குறிப்பா னெச்சஞ் செப்பல் மூன்றற்கு மொத்தவா
றறிக. (சச)

சசக. சொல்லெ னெச்ச முன்னும்
பின்னுஞ்
சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே.

இதன் பொருள்: சொல்லெச்சம்,

ஒருசொற்கு முன்னும் பின்னுஞ் சொன்மாத்திரம்
எஞ்சுவதல்லது, தொடரா யெஞ்சுத லின்று
என்றவாறு

எச்சம் எஞ்சி நின்ற பொருள் எனப்படினும் அவை பிறசொல்லா னல்லது வெளிப்படாமையின் அச்சொல் எச்சமாயிற்று என்பது கருத்து.

குறிப்புப் பொருளென்றது, குறிப்பெச்சப் பொருளை. எஞ்சு பொருளென்றது சொல்லெச்சம் இசையெச்சம் என்னும் இரண்டையும். குறிப்பெச்சம், இசையெச்சம், சொல்லெச்சம் என்னும் மூன்றையும் சேர்த்துக் கூறியதற்குக் 'குறிப்புப் பொருளேயன்றி' என்பதை முதலாகக் கொண்ட தொடராற் காரணங் கூறினர் என்க.



'உயர்திணை யென்மனார்' (சொல்—க) என்புழி ஆசிரியரென னுஞ் சொல் முன்னும், 'மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே' (குறுந்—எக) என்புழி எமக்கென்னுஞ் சொல் பின் னும், எஞ்சி நின்றவாறு கண்டுகொள்க.

ஒருசாரார் இவற்றை இசையெச்சமென்று, சொல்லள வல்ல

தெஞ்சுத லின்றே என்பதற்குச் சொல்லென்னுஞ் சொல்லள வல்லது பிறிதுசொல் லெஞ்சுத லின்றென்று பொருளுரைத்து, பசித்தேன் பழஞ்சோறு தாவென்று நின்றாள் என்புழித் தாவெ னச்சொல்லி யெனச் சொல்லென்னுஞ்சொல் எஞ்சி நின்றதென்று, இதனை உதாரணமாகக் காட்டுப. அவர் முன்னும் பின்னுமென் பதற்குச் சொல்லென்னுஞ்சொற் கொணர்ந்து கூட்டுவதன் முன் னும் பின்னுமென இடர்ப்பட்டுப் பொருளுரைப்ப. (சடு)

## சசஉ. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

### இதன் பொருள்:

அவைக்கணுரைக்கப்படாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் சொல்லுக என்ற வாறு.

அவைக்கண் வழங்கப்படுஞ் சொல்லை அவையென்றார்.

உதாரணம் : 'ஆன்முன் வரூஉ மீகார பகரம்' எனவும், கண்கழீஇ வருதும்; கான்மே னீர்பெய்து வருதும் எனவும், கருமுகமந்தி செம்பினேற்றை; 'புலிநின் றிறந்த நீரல் லீரத்து' எனவும் இடக்கர்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் கூறிய வாறு.

(௬௫) இச்சூத்திரத்தில் தொடராய் எஞ்சி நில்லாதென்று கூறியதற்குக் காரணம் ' சொல்லளவு அல்லது எஞ்சுதலில்லை ' எனக் கூறப் பட்டமை. குறிப்பெச்சம் முதலிய மூன்றும் எச்சப் பொருள் தருமாறு முன்னர்ச் சூத்திரத்தானுணர்த்தி அதன் பின் இச்சூத்திரத்தால் சொல்லெச்சத்திற்கோர் சிறப்புவிதி கூறப்பட்டதாகக் கொண்டால் குறிப்பெச்சத்திற்குமுன் சொல்லெச்சமுணர்த்தப்படுதல் பொருந்தாதென்பார் கருத்தே பொருந்தாமை காணப்படுமென்க.

(௬௬) கருமுகமந்தி—பெண்குறி.
நீரல்லீரம்—மூத்திரம்.

செம்பினேற்றை—ஆண்குறி. ௬௦௬

ஈகாரபகரமென்பதுபோலக் கண் கழுவுதல் முதலாயின அவையல் கிளவியைக் கிடந்தவாறு கூறாது பிறிதோராற்றாற் கிளந்தனவல்லவெனினும் அவையல் கிளவிப் பொருண்மையை யுணர்த்தலின், ஒற்றுமை நயத்தான் அவையல் கிளவியைப் பிறி தோராற்றாற் கூறிய வாய்பாடாகக் கொள்ளப்படும். இவை 'தகு தியும் வழக்கும்' (சொல்-கா) என்புழித் தகுதியா யடங்கு மெனின்:—செத்தாரைத் துஞ்சினாரென்றல் முதலாயினவன்றே தகுதியாவன; ஆண்டுச் செத்தாரென்பது இலக்கணமாகலின் அதனானும் வழங்கப்படும்; தகவு நோக்கிச் சொல்லுங்காற் றுஞ் சினாரென்றுஞ் சொல்லப்படும்; ஈண்டை யவையல்கிளவியாற் கிளத்தல் வழுவாதலின் மறைத்த வாய்பாட்டானே கிளக்கப் படும்; அதனான் ஆண்டடங்காவென்பது.

இது வழுவமைதியன்மையாற் கிளவியாக்கத்துக் கூறா ராயினர். (சகூ)

சசங. மறைக்குங் காலை மரீஇய தொராஅல்.

இதன் பொருள்: அவையல்கிளவியை மறைத்துச் சொல் லுங்கால், மேற்றொட்டு வழங்கப்பட்டு வருவன மறைக்கப்படா என்றவாறு.

உதாரணம்: ஆப்பி, ஆனையிலண்டம் என மரீஇ வந்தன

மறைக்கப்படாது வந்தவாறு.

'பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி' (பெரும்பாண்—உ) என்புழிக் கான்றென்பது, தன் பொருண்மேனில்லாது அணி குறித்துப் பிறிதோர் பொருண்மேனிற்றலின் மரீஇய சொல்லாய் மறைக்கப்படாமையின், அதன் பொருண்மேனின்றவழி மறைக் கப்படுதலுமறிக. (சா)

செத்தாரென்னும் வழக்கும் செய்யுள் வழக்கினிடத்துக் காணப் படுதலின் சேனாவரையர் கூற்றை மறுப்பார் கூற்றுப் பொருந்தா தென்க. "துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்—நஞ் சுண்பார் கள்ளுண் பவர்." என வருதல் நோக்கத்தக்கது. மறைத்த வாய்பாட்டானே கூறுதலின் இது வழுவமைதியன்றெனின், கிளவி யாக்கத்து கள—ஞ்சூத்திர உரையுள் அமைதி என்று கூறுதலோடு மாறு படும்; ஆராயத்தக்கது.

(சள) கான்றென்பது, கக்குதல் என்று தன் பொருண்மேனில் லாது செய்தென்னும் பொருண்மேனிற்றலின் மறைக்கப்படாமையும்,



ஊசச. ஈதா கொடுவெனக் கிளக்கு மூன்று
மிரவின் கிளவி யாகிட னுடைய.

**இதன் பொருள்:** ஈ, தா, கொடு எனச் சொல்லப்படும் மூன்றும் ஒருவன் ஒன்றையிரத்தற்கண் வருஞ் சொல்லாம் என்ற

வாறு.

அவை பிறபொருண்மேல் வருதலுமுடைமையான், 'இரவின் கிளவி யாகிட னுடைய' வென்றார்.

வழங்கல், உதவல், வீசல் முதலாயின பிறவுமுளவாக இவற்றையே விதந்தோதியதென்னையெனின் :— அவை கொடைப் பொருளவாய் வருவதல்லது இவைபோல இரத்தற்குறிப்பு வெளிப் படுக்கும் இரவின் கிளவியாய்ப் பயின்று வாராமையானும், இன்னார்க்கு இன்னசொல்லுரித்தென்று வரையறுத்தலும் வழு வமைத்தலுமாகிய ஆராய்ச்சி ஆண்டின்மையானும் இவற்றையே விதந்தோதினரென்பது.

அஃதேல், 'ஈயென்கிளவி' (சொல்—சசஞ) என்னுஞ் சூத்திர முதலாய நான்கும் அமையும், இச்சூத்திரம் வேண்டா வெனின் :— இவை இரவின் கிளவியாதலும் மூன்றென்னும் வரையறையும் அவற்றாற் பெறப்படாமையின் வேண்டுமென்பது.

முன்னிலைச் சொல்லாய் வருவழியல்லது பிறண்டு இன்ன சொல் இன்னார்க் குரித்தென்னும் வரையறையில்லென்ப துணர்த் துதற்கு, ஈ தா கொடுவென முன்னிலை வாய்பாடுபற்றி யோதி னார். (சஅ)

---

கக்குதலென்ற தன் பொருண்மேனிற்பின் மறைக்கப்படுதலுமறிக என்க. அணி என்பது சமாதி என்னுங் குணவணியை. அதன் என்பது

தன் என்றிருப்பது பொருத்தம்.

(சஅ) ஈ முதலியன பிறபொருளு முணர்த்தலான் 'ஆகிடனுடைத் தென்றார்' என்க. வழங்கல் முதலியன கொடைப்பொருளவாய் வருவதல்லது அவை இரத்தற் குறிப்புணர்த்தா. இவை அவ்விரத்தற் குறிப்புணர்த்தலின் விடுத்துக் கூறினார் என்க. முன்னிலை என்றது முன்னிலை ஏவலை. ஆண்டு இன்மையானும் என்றது, வழங்கல் முத லியவற்றின்கண் இன்மையானும் என்றபடி.



சசரு. அவற்றுள்
ஈயென் கிளவி யிழிந்தோன்
கூற்றே. சசசு. தாவென் கிளவி
யொப்போன் கூற்றே.

சசஎ. கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே.

இதன் பொருள் : ஈயென் கிளவி இரக்கப்படுவோனின் இழிந்தவிரவலன் கூற்றாம். தாவென் கிளவி அவனோடொப்பான் கூற்றாம். கொடுவென் கிளவி அவனினுயர்ந்தவன் கூற்றாம் என்றவாறு.

உதாரணம்: சோறீ; ஆடை தா; சாந்து கொடு என மூன்று சொல்லும் முறையானே மூவர்க்குமுரியவாய் வந்தவாறு கண்டுகொள்க. (சகூ) (ருo) (ருக)

சசஅ. கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்

தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்

றன்னிடத் தியலு மென்மனார் புலவர்.

இதன் பொருள்: கொடுவென்னுஞ்சொல், முதனிலைவகை யாற் படர்க்கையாயினும், தன்னைப் பிறனொருவன் போலக் கூறுங் கருத்துவகையால், தன்னிடத்துச் செல்லும் என்றவாறு.

உதாரணம்: மேற் காட்டப்பட்டது.

தன்மைக்கும் முன்னிலைக்குமுரிய தாவென்பதனைக பொது வாகிய ஈயென்பதனைகவன்றே சொல்லற்பாலது; உயர்ந்தான் அங்ஙனந்தானேற்பானைச் சொல்லாது, கொடுவெனப்படர்க்கை வாய்பாட்டாற்சொல்லும்; ஆண்டுத் தன்னையே பிறன்போலக் குறித்தானைலிற் றன்னிடத்தேயாமென இடவழுவமைத்தவாறு.

---

(ருஉ) கொடு என்பது படர்க்கையாயினும் தன்னைப் பிறன்போல வைத்துக் கூறலால் தன்னிடத்துச் செல்லுமென்றபடி. சாந்து கொடு என்பது தன்னைப் பிறன்போல மனத்தில் வைத்துக்கொண்டு கூறியது.

*தன்மைக்கண் கொடு வென்னும் படர்க்கைச் சொல்லாற் சொல் லல் வழுவாயினும் தன்னையே

பிறன்போலக் குறித்துக்கொண்டு கூற லின்
அமைக்கப்படுமென்பது சேனாவரையர் கருத்து.



உயர்ந்தான் தமனொருவனைக்காட்டி இவற்குக்
கொடுவென்னு மென்றால்
உரையாசிரியரெனின் :—ஆண்டுப் படர்க்கைச்சொற்
படர்க்கைச்சொல்லோ டியைதலான்
வழுவின்மையின் அமைக்கல் வேண்டாவாம்;
அதனான் அது போலியுரையென்க. (ருஉ)

சுசக. பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுந்
திசைநிலைக் கிளவியி னாஅ குநவுந்
தொன்னெறி மொழிவயி னாஅ
குநவு
மெய்ந்நிலை மயக்கி னாஅ குநவு
மந்திரப் பொருள்வயி னாஅ குநவு
மன்றி யனைத்துங் கடப்பா டிலவே.

## இதன் பொருள் :

பெயர்நிலைக்கிளவியின் ஆகுநவும் என்றது —
ஒருதிணைப்பெயர் ஒருதிணைக்காய் வருவனவும்
என்றவாறு.

---

தமனொருவனைக் காட்டி இவற்குக் கொடுவென்று உரையாசிரியர் கூறியதையே மறுத்ததன்றி இவற்கு என்னுஞ் சொல் வந்தியைதலைச் சேனாவரையர் மறுக்கவில்லை. ஆதலின் நச்சினார்க்கினியர் மறுப்புப் பொருந்தாதென்க. தமனொருவனைக்காட்டி இவற்குக் கொடுவென்பது சேனாவரையர் கூறியவாறு படர்க்கைச் சொல் படர்க்கைச் சொல்லோடேயே இயைதலின் அது வழுவன்றாம். இக்காலத்துப் பெரியோர் சிலர் தம்மையே சுட்டி, இப்பழங்களை இவனுக்குக் கொடுக்கின்றாயா ? என்றும், 'இது நல்லபழம் இதனைத் தம்பிரானுக்குக் கொடு' என்றும், 'குருவுக்குத் தக்கிணை கொடு' என்றும், தம்மையே படர்க்கையாகக் கூறுவதைக் கேட்டிருக்கின்றோம். அக் கருத்தையே கொண்டு இதற்கும் பொருள் கூறலாமென்பது எமது கருத்து.

(நக) 'தொன்னெறி மொழிவயி னாஅ குநவும்' என்பதற்கு இவ்வுரையாசிரியர் 'முதுசொல்லாகிய செய்யுள் வேறுபாட்டின்கண் இயைபில்லன இயைந்தனவாய் வருவன ; அவை யாற்றுட்செத்த எருமையை ஈர்த்தல் ஊர்க்குயவர்க்குக்கடன் என்பது முதலியன' என வரைந்துள்ளனர். இத் தொடர்மொழியின் பொருள் தெற்றெனப் புலப்படவில்லை. இயைபில்லன இயைந்தனவாய் வருதலென்றமையின், ஊர்க்குயவர்க்கு எருமையை ஈர்த்தலில் இயைபு இன்றேனும் இயைபுண்மை ஒருதலையான் வேண்டற்பாலதாம். அன்றியும் அது முதுசொல்லாயிருத்தலோடு செய்யுள் வேறுபாடுடையதா யிருக்கவேண்டுமெனவும் ஆணை தந்துள்ளார். நம் தமிழ்

அவையாவன: ஒரொருத்தை நம்பியென்று வழங்குதலும், ஒரு கிளியை நங்கையென்று வழங்குதலுமாம். பிறவுமன்ன. திசைநிலைக்கிளவியினாகுநவும் என்றது — திசைச்சொல்லிடத்து வாய்பாடு திரிந்து வருவனவும் என்றவாறு. அவை புலியான்,

---

நாட்டின்கண் பண்டைக் காலந்தொட்டுப் பரவை வழக்கின்கண் அடிப்பட்ட சான்றோரால் நெறிப்பட வழங்கிவரும் இம்முதுமொழி பொருத்முடையதாகக் காணக்கிடக்கின்றது.

அது வருமாறு: வாணிகச் சாத்தொடு சென்றானொருவன், அச் சாத்தினின்றும் பிரிந்து ஒரு பட்டினத்துட்சென்று பல வெருமை களைப் பொருள்கொடுத் தேற்றுத் தந்நாடு சேறற்கு ஒருப்பட்டுப் பலப்பல காவதங்கடந்து ஒரு கான்யாற் றடைகரையை யண்மி அவ்வெருமைகளை நீரருந்தச் செய்து அயர்வுயிர்த்துப் பின்னர் அவ் வாற்றைக் கடக்குமமையத்து, காலமல்லாத காலத்துச் சேய்மைக்கண் பெய்த மழையான் பொருக்கென வெள்ளந்தோன்றி அவ்வெருமை களையெல்லாம் அடித்துக்கொண்டு ஓர் ஊர்ப்புறத் தொதுக்கிவிட்டது.

அதனையுணர்ந்த அவ்வூரவர் அவைகளை ஈர்த்துக்கொணர்ந்து கரை சேர்த்தற்குப் பலரை வேண்டியும் நாற்றம் மிகுதியாக விருந்தமையின், ஒருவரும் உடன்பட்டிலர். இதனையுணர்ந்த பெரியாரொருவர் இங்ஙனமாய செயல் நேரிடின், இச்செயலை இன்னவர் செய்து முடித்தல் வேண்டுமென நம்மூர் அடங்கலிலிருக்கும் அதனைக் கணக்கனை யழைத்துக் கேட்பின் உண்மை வெளியாமென உரைத்தனர். அவ்வாறே கணக்கனை யழைத்துக்கேட்க அவன் அடங்கலை எடுத்து வந்து 'கண்ணுநீஇக் கழறுகின்றேன்' எனக் கூறி, தம்மில்லிற் சென்று தனக்கு ஆண்டுதோறும் நன்கொடையாகக் கொடுக்கும் பொருளை அவ்வாண்டிற் கொடாத அவ்வூர்க் குயவரை யொறுத்தற்குத் தக்க வமையமிதுவே யெனக் கருதி,

"காட் டெருமுட்டை பொறுக்கி

மட்கலஞ் சுட்ட புகையான்
மேற்கே மேகந் தோன்றி
மின்னி யிடித்து மழைபொழிந்து
யாற்றில் நீத்தம் பெருகி
யடித்துக் கொல்லும் எருமைகளை
ஈர்த்துக் கொணர்ந்து கரையேற்றல்
இவ்வூர்க் குயவர்க் கென்றுங் கடனே"

என்று ஒரு பழைய ஓலையில் வரைந்து அவ்வடங்கலோடு சேர்த்துக் கட்டி அவ்வூரவர் முன் கொணர்ந்து கட்டையவிழ்த்துப் பல ஏடு

பூசையான் என்னுந் தொடக்கத்தன.

தொன்னெறி மொழிவயி

ஞருநவும் என்றது—முதுசொல்லாகிய செய்யுள் வேறுபாட்டின் கண் இயைபில்லன இயைந்தனவாய் வருவனவும் என்றவாறு.

அவை யாற்றுட்செத்த வெருமையீர்த்த லூர்க்குயவர்க்குக் கடன் என்பது முதலாயின. மெய்ந்நிலைமயக்கினுருநவும் என்றது—பொருண்மயக்காகிய பிசிச்செய்யுட்கட் டிணை முதலாயின திரிந்து

வருவனவும் என்றவாறு. அவை,

---

களைத் தள்ளிப் படித்துக் காட்டினன். அதனைக்கேட்ட பெரியார் பலரும் குயவன் சுள்ளையினெழுந்த புகையானுயை மேகந்தந்த நீரான் எருமைசாதலின், இவ்வூர்க் குயவரே இவைகளைக் கரையேற்றல் முறையென முடிவுசெய்தனர் என்பதாம். இது பொருத்தமாகக் காணப்படுகின்றது.

ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'தொன்னெறி மொழிவயி ஞஅருநவும்' என்பதற்குச் 'சொல்லிடத்துப் பழைய நெறியானுய் வரும் சொல்லும்' என உரைகூறி, 'முதுமொழி பொருளுடையனவும் பொருளில்லனவுமென இரு வகைப்படும். அவை 'யாட்டுளான் இன்னுரைதாரான்' என்றது: இடையன் எழுத்தொடு புணராது பொருளறிவுறுக்கும் மொழியைக் கூறுதலன்றி, எழுத்தொடு புணர்ந்து பொருளறிவுறுக்கும் மொழியைக் கூருன் என்னும் பொருள் தந்து நின்றது. "யாற்றுட் செத்த எருமையை ஈர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன்" என்பது: குயவன் சுள்ளையான் எழுந்த புகையானுய மேகந்தந்த நீரான் எருமை சாதலின், அதனை ஈர்த்தல்

குயவர்க்குக் கடனாயிற்றென ஒரு காரணம் உள்ளதுபோலக் கூறு கின்றது; உண்மைப் பொருளன்றி ஒருவன் இயைபின்றிக் கூறிய சொற்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுதலின் பொருளுணர்த்தா தாயிற்று' எனவும், இலக்கண விளக்க நூலாசிரியர், "தொன்னெறி மொழிவயி னஅ குநவும்' என்பது அடிப்பட்ட நெறியான் வழங் குதலுடைய முதுமொழியாகிய செய்யுள் வேறுபாட்டின்கண் இயை யாதன இயைந்தனவாய் வருவன. அவை "யாற்றுட் செத்த எருமை ஊர்க்குயவர்க்கு இழுத்தல் கடன்" என்றது முதலாயின. குயவன் சுள்ளையின் எழுந்த புகையானாகிய மேகந்தந்த நீரான் எருமைசாதலின் குயவர்க்கு ஈர்த்தல் கடனாயிற்று என்க. ஒரு கார ணம் உள்ளதுபோலக் கூறுகின்றது. உண்மைப் பொருளன்றி ஒரு வன் இறைபின்றிக் கூறிய சொற்கு எடுத்துக்காட்டாகக் கூறப் படுதலின், இயையாதன இயைந்தனவாய் வருதலாயிற்று" எனவும் கூறியிருத்தலின், இது நன்கு விளங்கும்.

இக்குறிப்பு கழகப்பதிப்பிலுள்ளது.



'எழுதுவரிக் கோலத்தா ரீவார்க் குரியார்
தொழுதிமைக் கண்ணிணைந்த தோட்டார்—முழுதகலா
நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்
பேணற் கமைந்தார் பெரிது'

என்பது புத்தகமென்னும் பொருண்மேற் றிணை திரிந்து வந்த வாறு கண்டுகொள்க. பிறவுமன்ன. மந்திரப்பொருள் வயினு

சூநவும் என்றது—மந்திரப்பொருட்கண் அப்பொருட் குரித்தல் லாச் சொல் வருவனவும் என்றவாறு. இதற்குதாரணம் மந்திர நூல்வல்லார்வாய்க் கேட்டுணர்க. அன்றியனைத்துங் கடப்பா

டிலவே என்றது—அவ்வனைத்தும் வழங்கியவாறே கொள்வதல்லது இலக்கணத்தான் யாப்புறவுடையவல்ல என்றவாறு.

இஃதிச்சூத்திரத்திற்கு ஒருசாராருரை. ஒருசாரார் பிற வுரைப்ப.

இஃதியற்சொல்லுந் திசைச்சொல்லும் பிறவும்பற்றி வழு வமைத்ததாகலின், கிளவியாக்க முதலாயினவற்றின்கண் உணர்த் துதற் கியைபின்மையான், ஈண்டு வைத்தார். (ருக)

சுருo. செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற் செய்யென் கிளவி யாகிட னுடைத்தே.

இதன் பொருள்: செய்யாயென்னும் வாய்ப பட்டதாகிய முன்னிலை முற்றுச்சொல் ஆயென்னுமீறு கெடச் செய்யென்னுஞ்

சொல்லாய் நிற்றலுடைத்து என்றவாறு.

ஆகிடனுடைத் தென்றதனால், செய்யாயென ஈறு கெடாது நிற்றலே பெரும்பான்மை யென்பதாம்.

உதாரணம்: உண்ணுய், தின்ணுய், கிடவாய், நடவாய், தாராய், வாராய், போவாய் என்பன ஈறு கெட உண், தின், கிட,

---

பூசை—பூனே. பிசி—நொடி.

வரிக்கோலம்—வரிவடிவு. தொ

ழுதி—கூட்டம். மை—எழுத்து விளங்கப் பூசுவது. நாண்—கயிறு. பேணல்—விரும்பல்; பாதுகாத்தல்.

தோடு—இதழ்.

(ருச) செய்யாய் என்பது செய்யென விகுதி கெட்டு நிற்கும். கெடினும் அப்பொருளேயே உணர்த்தும். இங்கே மறைவினையன்று விதிவினையே அங்ஙனம் வருமென்க.



சசகரு நட, தா, வா, போ எனச்

செய்யென்கிளவியாயினவாறு கண்டு கொள்க.

செய்யாவென்னும்

முன்னிலையெதிர்மறை செய்யென் கிளவி

யாதற்கேலாமையின், செய்யாவென்னும் முன்னிலை வினைச்சொலென்றது விதிவினையையேயாம்.

தன்னின முடித்தலென்பதனான்

வம்மின், தம்மின் என்பன

மின்கெட வம், தம் என நிற்றலும்,

அழியலை, அலையலை என்னு

முன்னிலையெதிர்மறை ஐகாரங்கெட்டு

அழியல், அலையல் என

நிற்றலுங் கொள்க. ஒன்றென முடித்தலென்பதனால், புகழ்ந்தாரென்னும் படர்க்கைவினை ஆரீறு கெடப் 'புகழ்ந்திகுமல்லரோ' என நிற்றலுங் கொள்க. இவையெல்லாஞ் செய்யுண்முடிபென்பாருமுளர்.

செய்யாயென்னு முன்னிலையெதிர்மறை எதிர்மறைபடாது செய்யென் விதிவினையாதலு முரித்தென்றுரைத்தாரால் உரையாசிரியரெனின்:— அற்றன்று: செய்யாயென்னும் எதிர்மறைவினையுஞ் செய்யாயென்னும் விதிவினையும் முடிந்த நிலைமை ஒக்குமாயினும், எதிர்மறைக்கண் மறைபுணர்த்தும் இடைநிலையு முண்மையான், முடிக்குஞ்சொல் வேறெனவேபடும். மறைபுணர்த்தும் இடைநிலையாவன, உண்ணலன், உண்டிலன், உண்ணாது, உண்ணேன் என்புழி வரும் அல்லும், இல்லும், ஆவும், ஏயும் பிறவுமாம். உண்ணாய், உண்ணேன் என்புழி எதிர்மறையாகாரவேகாரங் கெட்டுநின்றன வெனல்வேண்டும்; அல்லாக்கால் மறைப்பொருள் பெறப்படாமையின். அதனான் எதிர்மறைச் சொல்லே விதிவினைச்சொல் லாகாமையின் அவர்க்கது கருத்தன்றென்க. அல்லதூஉம், ஆசிரியர் அக்கருத்தினராயின், செய்யாயென்னு மெதிர்மறை வினைச்சொல் என்றோதுவார் மன்; அவ்வாறோதாமையான், அவர்க்கது கருத்தன்மையான் உரையாசிரியர்க்கும் அது கருத்தன்மை யறிக. (ருச)

---

செய்பாய் என்னும் எதிர்மறைவினை உடன்பாடாதலும் உரித்தென்றார் உரையாசிரியர். இரண்டு சொற்கும் வேறுபாடுண்மையின் அது பொருந்தாதென்றபடி. வேறுபாடு—எதிர்மறை இடைநிலை இன்மையும், உண்மையும். உண்ணேன் என்பதற்கும் இடைநிலை ஆகாரம் என்றலே பொருத்தம்.

௪௫௧. முன்னிலை முன்னரீயு மேயு
மந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.

இதன் பொருள்: முன்னிலை வினைச்சொன்முன் வரும் ஈகாரமும் ஏகாரமும் அம் முன்னிலைச்சொற் கேற்ற மெய்யூர்ந்து வரும் என்றவாறு.

உதாரணம்: 'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே' அகம்-௪௬) 'அட்டி லோலை தொட்டனை நின்மே' (நற்றிணை-௩௦௦) என அவை முன்னிலைக்கேற்ற மெய்யூர்ந்து வந்தவாறு கண்டு கொள்க.

முன்னிலையென்றாரேனும், செய்யென் கிளவியாகிய முன் னிலை யென்பது அதிகாரத்தாற் கொள்க.

ஈகாரமொன்றேயாக, புக்கீ, உண்டீ, உரைத்தீ, சென்றீ என முன்னிலை வினையீற்று வேறுபாட்டிற்கேற்ப மெய் வேறுபட்டு வருதலான், 'அந்நிலைமரபின் மெய்' என்றார், ஏகாரம் மகர மூர்ந்தல்லது வாராது.

இவ்வெழுத்துப்பேறு புணர்ச்சி விகாரமாதலின் ஈண்டுக் கூறற் பாற்றன்றெனின் :—அற்றன்று : 'இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி' (சொல்-உஎ०) அப்பெயரோடு ஒற்றுமைப்பட்டு நின்றாற் போல முன்னிலைமுன்ன ரீயுமேயும் முன்னிலைச் சொல்லோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலான், நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையான், அம் மெய் புணர்ச்சிவிகார மெனப்படா வென்க. அஃதேல், இடையியலுள் 'இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி' (சொல்-உஎ०) என்பதனோ டியைய இதனையும் வைக்க வெனின் :—ஆண்டு வைப்பிற் செய்யாயென்பது செய்யென் கிளவி யாயவழியது அவ்விகார வேகார வரவென்பது பெறப்படாமை யின், ஈண்டு வைத்தார். 'செய்யா யென்னு முன்னிலை வினைச் சொல்' என்பதனை ஈண்டு வைத்தற்கும் இதுவே பயனாதலறிக. முன்னிலைச் சொல் விகாரம் ஒருங்குணர்தல் அதற்குப் பய

(ருரு) செய் என் கிளவி என்பது அதிகாரத்தாற் கொள்க என் றதனால் வினை என்பதும் ஏவல் என்பதும் அதிகாரத்தாற் பெறப்



சுசரு னெனினு மமையும்.

ஈயென்பதோரிடைச்சொல் உண்டென்பது

இச் சூத்திரத்தாற் பெற்றாம். இவையிரண்டும் ஈண்டுப் புறத்தறவு பொருள்பட நின்றன. அசைநிலை யென்பாருமுளர். (ருரு)

சருஉ. கடிசொல் லில்லைக் காலத்துப்

படினே.

இதன் பொருள் : இவை தொன்று தொட்டன வல்லன வென்று கடியப்படுஞ் சொல்லில்லை ; அவ்வக்காலத்துத் தோன்றி வழங்கப்படுமாயின் என்றவாறு.

உதாரணம் : சம்பு, சள்ளை, சட்டி, சமழ்ப்பு என வரும். இவை தொன்றுதொட்டு வந்தனவாயின், முதலாகாதனவற்றின் கண்,

'சகரக் கிளவியு மவற்றோ ரற்றே—

அ ஐ ஒளவெனு மூன்றலங் கடையே'

(எழு—சூ.உ) என விலக்கார் ஆசிரியர் ; அதனான் அவை பிற்காலத்துத் தோன்றிய சொல்லேயாமென்பது.

இஃது எழுவகை வழுவமைதியுள் ஒன்றாகாது ஓர் பாது காவலாதலிற் கிளவியாக்கத் தியைபின்மையான் ஈண்டுக் கூறினா ரென்பது.

இனி ஒருசாரா ருரை :—இன்ன அநுவதிக்குங் காலமா மக் காலத்து, அவை வழுவன்மை எல்லா ஆசிரியர்க்கும் உடம்பா

---

படும் என்பது கருத்து. புறத்துறவு—புறத்தே துறத்தல் ; என்றது புறத்தே வெறுப்புக்காட்டுதலை. சென்றீ பெரும நிற்றகைகுநர் யாரே என்பது பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவற்குத் தலைவி கூறி யது. பெரும நின்னைத் தடுப்பார் யார் நீ செல்வாயாக என்று தலைவி புறத்தே வெறுப்புடையாள் போலக் காட்டிக் கூறினும், செல்லுதல் அவட்கு விருப்பில்லையாதலின் அகத்தே வெறுப்பிலளாயிற்று. ஆத லின் புறத்துறவு பொருள்பட நின்றதென்றூர்.

" அட்டில் ஓலை தொட்டனை நின்மே " என்பது பாணனை நோக் கித் தலைவி கூறியது, பாண! அட்டிற் சாலையின் கூரையைப்பற்றி நிற்கின்றனை. அங்ஙனே நில், எனப் பாணன்மேல் வெகுண்டு கூறி யது. இதுவும் புறத்தே வெகுட்சியுடையாள் போல கூறியதன்றி, அகத்தே வெறுப்பிலள் என்பதாம். எனவே இதுவும் புறத்துறவு பொருள்பட வந்ததாயிற்று.

டாகலின் அதனைத் தழுவிக்கொண்டவாறென்க. இவையிரண்டும் இச்சூத்திரத்துக்குப் பொருளாகக் கொள்க.

இனி ஒன்றென முடித்தலாற் புதியன தோன்றினாற்போலப் பழையன கெடுவனவும் உளவெனக் கொள்க. அவை அழான், 

புழான் முதலியனவும், எழுத்திற்புணர்ந்த சொற்கள் இக்காலத்து வழங்காதனவுமாம். (ருசு)

## சருந. குறைச்சொற் கிளவி குறைக்கும் வழியறிதல்.

**இதன் பொருள்:** குறைக்குஞ் சொல்லைக் குறைக்குமிட மறிந்து குறைக்க என்றவாறு.

குறைக்கும்வழி யறிதலென்பது, ஒரு சொற்குத் தலைபு மிடையுங் கடையுமெனை இடமூன்றன்றே; அவற்றுள் இன்னுழிக் குறைக்கப்படும் இச்சொல்லென்றறிந்து குறைக்கவென்றவாறு.

உதாரணம் : தாமரையென்பது 'மரையிதழ் புரையு மஞ் செஞ் சீறடி' எனத் தலைக்கண்ணும், ஓந்தியென்பது 'வேதின வெரிநி னோதிமுது போத்து' (குறு—கசo) என இடைக்கண்

---

(ருகூ) எழுத்திற் புணர்ந்த சொல் என்றது எழுத்தாற் புணர்ச்சி யடைந்த சொல் என்பதை. அவை, அவ்வாண்டை, இவ்வாண்டை, உவ்வாண்டை போல்வன. எழுத்தில் என்பதற்கு எழுத்ததிகாரத்தில் புணர்ந்த என்றல் பொருந்தாது. என்னை? அழன் புழன் முதலியனவு மாண்டுப் புணர்ந்தனவேயாகலின். 'ஆசிரியர் சுட்டுச் சினை நீடிய ஐகாரவீற்றுப்
தரியவாயின.'
பெயர் உறழ்ந்து முடிக என்றார். அவை இக்காலத் என்று இளம் பூரணர் கூறலும் ஈண்டு நோக்கத் தக்கது.

'சுட்டுச்சினை நீடிய ஐயென் னிறுதியும்' என்றாற்போல ஆசிரிய னூல், ஈற்றெழுத்துக்களை மாத்திரம் எடுத்தோதிப் புணர்க்கப்பட்ட சொல் என்று கோடல் பொருத்தமாதலின் எழுத்திற் புணர்ந்த சொல் என்பதில் புணர்ந்த என்பது புணர்த்த என்றிருப்பது நலமாகும்.

(ருஎ) குறைக்கு மிடத்துக்

குறைக்குமிடமறிந்து குறைத்தல் வேண்டு மென்றார். தாமரையை ஈற்றிற் குறைத்தாற் பொருடராது.

ஆதலால் முதலிற் குறைக்க வேண்டுமென அறிந்து குறைத்தல் வேண்டும் என்பது கருத்து. பிறவுமன்ன.

வியல்] சொல்லதிகாரம்

சகர்

னும், நீலமென்பது 'நீலுண் டுகிலிகை கடுப்ப' எனக் கடைக்

கண்ணும் குறைக்கப்பட்டவாறும், அவை பிறண்டுக் குறைத்தற் கேலாமையுங் கண்டுகொள்க. குறைத்தலாவது ஒருசொல்லிற் சிறிது நிற்பச் சிறிது கெடுத்தலாதலின், முழுவதுங் கெடுத்தலாகிய தொகுக்கும்வழித் தொகுத்தலின்

வேறுதலறிக.

'இயற்சொற்றிரிசொல்' (சொல்—ருகூஎ) என்னுஞ் சூத்திர முதலாயின செய்யுளதிகாரத்துக் கூறுமையானும், ஒரு காரணத்

தாற் கூறினாரேனுஞ் செய்யுட்கணொன்று

விரந்து கூறுமையா னும், இது

வழக்குமுடிபென்பாருமுளர்.

(ருஎ) சருச. குறைத்தன வாயினு நிறைப்பெய ரியல.

இதன் போருள் : குறைத்தனவாயினும், அவை குறையாது நிறைந்து நின்ற பெயரியல்புடைய என்றவாறு.

என்றது, முற்கூறிய உதாரணங்கள் தாமரை ஓந்தி நீலமென நிறைந்த பெயர்களின் பொருள்களைத் தங்களே நிற்குமென்றவாறும்.

குறைந்தவழியும் நிறைந்த பெயராகக் கொள்கவென்றவா றும். குறைக்கப்படுவன பெயரேயாகலின், 'நிறைப்பெயரியல' வென்றார்.

(ருஅ)

சருரு. இடைச்சொல்லெல்லாம் வேற்றுமைச்சொல்லே

இதன் போருள் : பிறிதோர் சொல்லை வேறுபடுப்பனவும் பிறிதோர் சொல்லான் வேறுபடுக்கப் படுவனவுமெனச் சொல் இருவகைப்படும் ; பிறிதோர் சொல்லை வேறுபடுத்தலாவது விசே டித்தல். பிறிதோர் சொல்லான் வேறுபடுக்கப்படுதலாவது விசே

டிக்கப்படுதல். இடைச்சொல்லெல்லாம்
பிறிதோர்சொல்லை வேறு படுக்குஞ் சொல்லாம்
என்றவாறு.

வேறுபடுத்தலும் வேறுபடுக்கப்படுதலும் ஆகிய இரண்டும் பொதுவகையான் எல்லாச் சொற்குங் கூறுமை எய்துமாகலின், இடைச்சொல்லெல்லாம் வேற்றுமைச்
சொல்லென்றதனன், இவை
வேறுபடுக்குஞ் சொல்லாதலல்லது
53
ஒரு ஞான்றும் வேறுபடுக்கப்



[எச்ச

படுஞ் சொல்லாகாவென நியமித்தவாறும். அவை அன்னவாதல் இடையியலுள் ஓதப்பட்ட இடைச்சொல் வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் வரும்வழிக் கண்டுகொள்க.

வேற்றுமைச் சொல் வேற்றுமையைச் செய்யுஞ் சொல்லென விரியும். வேற்றுமையெனினும், வேறுபாடெனினு மொக்கும்.

இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லாயினும், அவற்றுள் ஒருசாரனவற்றை வேற்றுமைச் சொல்லென்றுளப; இயற் சொல்லுள் ஒரு சாரனவற்றை இயற்பெயரென்றாற்போல வென்பது, இதுவுமோர் நயம். (ருகூ)

சருகூ. உரிச்சொன் மருங்கினு மூரியவை யுரிய.

**இதன் பொருள்:** உரிச்சொல்லிடத்தும் வேறுபடுக்குஞ் சொல்லாதற்கும் உரியன உரியவாம்; எல்லாம் உரியவாகா என்ற வாறு. எனவே, உரிச்சொல்லுள் வேறுபடுத்தும் வேறுபடுக்கப் பட்டும் இருநிலைமையு முடையவாய் வருவனவே பெரும்பான்மை யென்பதாம்.

வேறுபடுக்குஞ் சொல்லேயாவன உறு, தவ, நனி என்னுந் தொடக்கத்தன. இருநிலைமையுமுடையன குரு, கெழு, செல்லல், இன்னல் என்னுந் தொடக்கத்தன. உறுபொருள், தவப்பல, நனி சேய்த்து, ஏகல்லடுக்கம் என இவை ஒன்றை விசேடித்தல்லது வாராமையும், குருமணி, விளங்குகுரு; கேழ்கிளரகலம், செங் கேழ்; செல்லனோய், அருஞ்செல்லல்; இன்னற்குறிப்பு, பெரிய ரின்னல் என இவை ஒன்றனை விசேடித்தும் விசேடிக்கப்பட்டும்

---

(ருகூ) இடைச்சொற்கள் பிறிதோர் சொல்லை வேறுபடுக்கு மென்றபடி. வேற்றுமைச்சொல்—வேற்றுமையைச் செய்யுஞ்சொல். வேற்றுமை—வேறுபாடு. ஒரு சாரனவென்றது வேற்றுமை உருபை, இயற்பெயர் என்றது சாத்தன் கொற்றன் மரம் என்பன போல வரும் இருதிணைக்கும் அஃறிணையிருபாற்கு முரிய பெயர்களை. நயம்—பொருணயம்.

(சுo) உரிச்சொல் வேறுபடுதலும், வேறுபடுக்கப் படுதலுமாகிய இருநிலையுடையவாம். குரு—ஒளி. கேழ்—நிறம். அகலம்—மார்பு. சல்லல்—துன்பம். இன்னல்—துன்பம்.



இருநிலைமையுமுடையவாய் வருமாறும், வழக்குஞ் செய்யுளு நோக்கிக் கண்டுகொள்க. குரு விளங்கிற்று ; செல்லதீர எனத் தாமே நின்று வினைகொள்வன, விசேடிக்கப்படுந் தன்மையுடைய வாதலின், விசேடிக்கப்படுஞ் சொல்லாம். பிறவும் விசேடித்தல்லது வாராதனவும், விசேடித்தும் விசேடியாதும் வருவனவும், வழக் குஞ் செய்யுளுநோக்கி யுணர்க.

வேறுபடுக்குஞ் சொல்லேயாவன இவையெனத் தொகுத் துணர்த்தற்கும், உரிச்சொன்மருங்கினு முரியவையுரிய எனச் சூத்திரஞ் சுருங்குதற்கும், இடையியலுள்ளும் உரியியலுள்ளும்
வையாது இரண்டு சூத்திரத்தையும் ஈண்டு வைத்தார்

சருஎ. வினையெஞ்சு கிளவியும்

வேறுபல் குறிய.

இதன் பொருள்: மேற்கூறப்பட்ட வினையெச்சமும் வேறு பட்ட பல விலக்கணத்தைஉடைய என்றவாறு.

அவையாவன, 'உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய' (குறு—உகூஉ)எனவும், 'ஞாயிறுபட்டு வந்தான்' எனவும், செய்தெனெச்சம் வினை முதல் கொள்ளாது பிறிதின் வினை கோடலும், அஃதீறு திரிதலும், 'மோயினளுயிர்த்தகாலை' (அகம்—ரு) எனவும், கண்ணியன் வில்லன் வரும் எனவும், முற்றுச் சொல்லது திரிபாய் வருதலும், ஓடி வந்தான் விரைந்து போயினான் எனவும், வெய்ய சிறிய மிழற்றுஞ் செவ்வாய் எனவும், செவ்வன்றெரிகிற் பான், புதுவதனியன்றவணியன் எனவும், தம்மை முடிக்கும் வினைக்கட் கிடந்த

தொழிலானும் பண்பானுங் குறிப்பானும் உணர்த்தித் தெரிநிலை வினையுங் குறிப்பு வினையுமாய் முடிக்குஞ்

---

(௬௪) 'ஓடிவந்தான்' என்பன போல்வனவற்றில் ஓடி என் னும் வினையெச்சம் தம்மை முடிக்கும் வினைக்கட்கிடந்த தொழிலை உணர்த்திவந்த தென்றது ஓடுதல் வருதலின்கட் கிடந்த தொழிலையே யுணர்த்தி அதனை விசேடித்து, நடந்துவாராது ஓடிவந்தான் என் னும் பொருள்பட நின்றதென்றபடி. வெய்ய சிறிய மிழற்றும் செவ்வாய் என்புழி, வெய்ய சிறிய என்னும் குறிப்பு வினை எச் சங்கள் கேட்டோர் விரும்பத்தக்கனவாய் சிறியவாய் எனப் பொரு டந்து பேசுதலின் கட்கிடந்த குணத்தையே யுணர்த்தி அத்தொழிலையே



சொல்லை விசேடித்தலும், பிறவுமாம். செய்தெனெச்சத் திறுதிரி தல் வினையியலுட் காட்டிப் போந்தாம்.

'பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்து' என்புழிப் பெருமென்பதனை ஒருசாரார் வினையெச்ச வாய்பாடென்ப. ஒரு சாரார் வினைச்சொற்பற்றி நின்றதோ ருரிச்சொலென்ப.

இடைச்சொல்லும் உரிச்சொல்லும் மேற்கூறப்பட்ட இலக்கணமேயன்றிப் பிறவிலக்கணமு முடைய வென்ப துணர்த்தினர். இனி அவையேயன்றி வினையெஞ்சுகிளவியும் பலவிலக்கணத்தன வென்பதுபட நின்றமையான், உம்மை இறந்தது தழீஇய வெச்ச வும்மை. அவ்விலக்கணம் ஓரியலவன்றித் திரிதலும் வேறு பொருளுணர்த்துதலும் விசேடித்தலுமாகிய வேற்றுமையுடையவாகலின், 'வேறுபல்குறிய' வென்றார்.

வினையெச்சத்துள் விசேடித்தே

நிற்பனவுமுளவென்பதூஉம்

உணர்த்துகின்றாராகலின், இதனை வினையியலுள் வையாது, ஈண்டு விசேடிக்குஞ்சொல் லுணர்த்துவனவற்றோடு வைத்தார்.

'பெயர்த்தனென் முயங்க' (குறுந்-அச) என்பது முதலாயின செய்தெனெச்சம் முற்றாய்த் திரிந்தனவென்றும், ஒடித்துண்டெஞ்சிய என்பது முதலாயின செயவெனெச்சம் செய்தேனெச்சமாய்த் திரிந்தனவென்றும், முன்னருரைத்தாரால் உரையாசிரியரெனின் :—பெயர்த்தனென் முயங்க என்பது முதலாயின எச்சத்

திரிபாயின் எச்சப்பொருளுணர்த்துவதல்லது இடமும் பாலு முணர்த்தற்பாலவல்ல; எச்சப்பொருண்மையாவது மூன்றிடத்

விசேடித்து நின்றதென்றபடி. ஏனையவுமன்ன. 'செவ்வன் றெரி விப்பான்' என்புழி செவ்வனென்பது செவ்விதாய் என எச்சப் பொருடந்து ஆராய்தற்கண் செவ்விதாக ஆராய்ந்தானென ஆராய் தலின்கண் கிடந்த குறிப்பையே யுணர்த்தி அதனையே விசேடித்துநின்ற தென்றபடி. ஏனையவுமன்ன.

பெரும்—பெரிதும்; கையற்ற—செயலற்ற; என்பது பொருள். பெரிது—பெரிதாக, குறிப்பு வினையெச்சம். இச்சூத்திரம் இங்கே வைத்தது வினையெச்சதருள் விசேடித்து வருவனவுள என்பதுணர்த் தற்கென்க. நச்சினார்க்கினியர் தமதுரையுட் காட்டிய 'முற்றே யெச்ச



திற்கும் ஐந்துபாற்கும் பொதுவாகிய வினைநிகழ்ச்சியன்றே; அவ்வாறன்றி முற்றுச்சொற்கு ஓதிய ஈற்றவாய் இடமும் பாலு முணர்த்தலின், அவை முற்றுத்திரிசொல்லெனவேபடும். சொல் லினையுணர்ந்து வினைகோடன் மாத்திரத்தான் வினையெச்ச

மெனின், —மாரைக்கிளவியும் வினையொடுமுடியும் வேற்றுமையும் பிறவுமெல்லாம் வினையெச்சமாவான் செல்லும்; அதனன் அவர்க் கது கருத்தன்றென்க. அல்லதூஉம், கண்ணியன் வில்லன் வரும் என வினைக்குறிப்புமுற்றாய்த் திரிதற்கேற்பதோர் வினையெச்சம் இன்மையானும், அது கருத்தன்மை யறிக.

'ஒடித்துண்டெஞ்சிய' என்பதூஉம் ஞாயிறு பட்டு வந்தான் என்பதூஉம் பிறவினை கொண்டனவாயினும், செய்தெனெச்சத்

திற் குரிய இறந்தகால முணர்த்தலான், ஏனைக்காலத்திற்குரிய செயவெனெச்சத்தின் திரிபெனப்படா; செயவெனெச்சந் திரி பாயிற் செயவெனெச்சத்திற்குரிய காலமுணர்த்தல்வேண்டும். மழை பெய்ய மரங் குழைத்தது எனச் செயவெனெச்சத்திற்கு இறந்தகாலமு முரித்தெனின்:—காரண காரியப் பொருண்மை புணர்த்தும் வழியல்லது செயவெனெச்சம் இறந்தகாலமுணர்த் தாது; ஓடித்துண்டலும் ஞாயிறு படுதலும் எஞ்சுதற்கும் வரு தற்குங் காரணமின்மையான் ஆண்டிறந்தகால முணர்த்தாமை யின், செய்தெனெச்சமாய் நின்று தமக்குரிய இறந்தகால முணர்த் தினவெனப்படும். அதனாற் செயவெனெச்சஞ் செய்தெனெச்ச மாய்த் திரிந்தனவென்றலும் அவர் கருத்தன்றென்க. ஞாயிறு பட்டு வந்தான் என்பது ஞாயிறு பட்டபின் வந்தான் என இறந்த காலமுணர்த்தலும், ஞாயிறு பட வந்தான் என்பது ஞாயிறு படா நிற்க வந்தான் என நிகழ்காலமுணர்த்தலும் வழக்கு நோக் கிக் கண்டுகொள்க. (கூக)

---

மாகலு முரித்தே' என்பது நன்னூற் சூத்திரத்தின் பாகமென்று சிலர் கூறுவர். "வினைமுற்றே வினையெச்சமாகலும் குறிப்பு முற்றீரெச்ச மாகலு முளவே" என்பது நன்னூற் சூத்திரம். ஆதலின் அது ஆரா யத்தக்கது. வேற்றுமையுடைய வாகலின் குறிய எனப் பன்மையாற் கூறினர் என்க. அவையென்றது பெயர்த்தனென் முதலிய முற் றுச் சொல்லை. பெயர்த்து முதலிய வினையெச்சங்கள் பெயர்த்தனென் முதலிய முற்றுக்களாய்த் திரிந்து நின்றனவன்று, முற்றுக்களே

சருஅ. உரையிடத் தியலு முடனிலை யறிதல்.

இதன் பொருள்: வழக்கிடத்து உடனிற்கற்பாலவல்லன வற்றது உடனிலை போற்றுக என்றவாறு.

உடனிற்கற்பாலவல்லனவாவன தம்முண் மாறுபாடுடையன. மாறுபாடில்லனவற்ற துடனிலைக்கண் ஆராய்ச்சியின்மையின், உடனிலையென்றது மாறுபாடுடையனவற்ற துடனிலையேயாம்.

உதாரணம்: இந்நாழிக்கிந்நாழி சிறிது பெரிது, என உடனிற்கற்பாலவல்லாச் சிறுமையும் பெருமையும் உடனின்றவாறு கண்டுகொள்க. சிறிதென்பது பெரிதெனப்பட்ட பொருளை நோக்காது பெரிதென்பதற்கு அடையாய் மிகப் பெரிதன்றென்பதுபட நிற்றலான், அமைவுடைத்தாயிற்று.

அறிதலென்பது இவ்வாறு அமைவுடையன கொள்க வென்றவாறு.

மாறுபாடுடையன உடனிற்றல் எழுவகை வழுவினுள் ஒன்றன்மையான், இதனைக் கிளவியாக்கத்துட் கூறாது ஈண்டுக் கூறினர். (௬௨)

எச்சங்களாய்த் திரியும் என்க. வினைகோடலாகிய சொன்னிலைமையை அறிந்து வினைகோடன் மாத்திரையானே வினையெச்சமென்று சொல்லப் புகின் மாரைக்கிளவி முதலியனவும் வினையெச்சமாவான் செல்லும்; ஆதலினது பொருந்தாதென்க. பெயர்த்தனென் என்னும் முற்றாய், பெயர்த்து என்னும் வினையெச்சம் திரிந்து வந்ததென்று கொள்வார்க்கு, கண்ணியன் என்னும் முற்றாய்த் திரிதற்கு ஏற்றதோர் வினையெச்சம் இல்லாமையானும் அது பொருந்தாதென்க. முற்றுக்கள் வினையெச்சமாய்த் திரியுமன்றி வினையெச்சம் முற்றாய்த் திரியாதென்பது சேனாவரையர் கருத்து. எச்–௯௨-ம் சூத்திர உரைக்குறிப்பு நோக்குக.

(௬௨) வழக்கிலே தம்முண் மாறான சொற்கள் உடனிற்குமிடமறிந்து கொள்ளுக என்றது,—இந்நாழிக் கிந்நாழி சிறிது பெரிது என்புழி உடனிற்கலாம் என்றபடி. இங்கே முரணாய் வராமல் சிறிது, பெரிது என்பதை விசேடித்து நிற்றல் காண்க, மிகப் பெரிதன்றென்பது கருத்து,



௬௫௬. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே .

யின்ன வென்னுஞ் சொன்முறை யான.

இதன் பொருள் : சொல்லானன்றிச் சொல்லுவான் குறிப் பாற் பொருளுணரப்படுஞ் சொல்லுமுள, இப்பொருள் இத் தன்மைய வென்று சொல்லுதற்கண் என்றவாறு.

உதாரணம் : செஞ்செவி, வெள்ளொக்கலர் என்புழி மணி யும் பொன்னுமணிந்த செவி என்றும், வெளியதுடுத்த சுற்றம் என்றும், குறிப்பா லுணரப்பட்டவாறு கண்டுகொள்க. குழை கொண்டு கோழியெறியும் வாழ்க்கையர் என்புழி அன்னபெருஞ் செல்வத்தார் என்பதூஉங் குறிப்பாலுணரப்படும்.

இது 'திரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் றோன்றலும்' (சொல்–கருஎ) என்புழி அடங்குமெனின்; ஆண்டுப் பொருணிலை இருவகைத்தென்பதல்லது இன்னுழி இப்பொருள் குறிப்பிற் றோன்றுமென்னும் வேறுபாடு பெறப்படாமையான், ஆண்ட டங்காதென்பது.

இதுவும் மேலையோத்துகளுள் உணர்த்துதற்

கிளையபின்மை யான் ஈண்டுணர்த்தினர்.
(சுங)

# சசுo. ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்.

இதன் பொருள்: பொருள் வேறுபாடின்றி ஒரு பொருண் மேல் வரும் இரண்டுசொற் பிரிவின்றித் தொடர்ந்துவரின், அவற்றைக் கடியார் என்றவாறு.

உதாரணம்: 'நிவந்தோங்கு பெருமலை' எனவும், 'துறு கன் மீமிசை யுறுகண்' எனவும் வரும்.

---

(சுக) முன்னம்—சொல்லுவான் குறிப்பு. இங்கே இப்பொருள் இத்தன்மைய வென்புழி அச் சொற்றொடர் பொருளுணர்த்துமாறு கூறப்பட்டது.

(சுச) நிவந்தோங்கு பெருமலை: இங்கே மிக உயர்ந்த என இரண்டும் ஒரு பொருளே குறித்து வருதலின் ஒரு பொருள் இரு சொல் என்றார்.

பிரிவிலவென்றது, வேறோர்சொல்லான் இடையிடைப்படாது நிற்பன வென்றவாறு.

இருசொல் ஒருபொருண்மேல் வருதல் எழுவகை வழுவி னுள் ஒன்றன்மையான் ஈண்டுக் கூறினர்.

'வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்
தையலா யின்றுநீ நல்கினை நல்காயேற்
கூடலார் கோவோடு நீயும் படுதியே
நாடறியக் கௌவை யொருங்கு'

என்புழி, வையைக் கிழவன் கூடலார்கோ என்பன ஒருபொருளை வரைந்துணர்த்தலாற் பிரிவிலவாகலின் வரையப்படாவென்றும்,

'கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே—கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணுரக் காணவெஞ்
சாலேகஞ் சார நட'

என்புழிக் காலேகவண்ணன் என்பது அச்சாந்து பூசினரெல்லார்க்கும் பொதுவாய்க் கூத்தப்பெருஞ்சேந்தனையே வரைந்துணர்த்தாமையின், அவை பிரிவிடையவாமென்றும், உரையாசிரியர் உரைத்தாராலெனின :— அற்றன்று :

'நாணிநின் றோணிலை கண்டி யானும்

பேணினெ னல்லனே மகிழ்ந வானத்
தணங்கருங் கடவுளன் ளேணின்
மகன்ரு யாதல் புரைவதாங் கெனவே'

(அகம்-கசு)

என்புழி வானத்தணங் கருங்கடவுளன்னோள் என்பது மகளிர்க் கெல்லாம் பொதுவாய் நாணி நின்றோளை வரைந்துணர்த்தாதாயி னும் சொல்லுவான் குறிப்பான் அவளையே உணர்த்தினாற்போலக் காலேகவண்ணன் என்பதூஉம் பொதுவாயினுஞ் சொல்லுவான் குறிப்பாற் கூத்தப்பெருஞ்சேந்தனையே உணர்த்திப் பிரிவிலவாய் நிற்றலான், அவர்க்கது கருத்தன்றென்க. (கூச)

சகூக.

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகு மிடனுமா ருண்டே.

இதன் பொருள்: ஒருமைக்குரிய பெயர்ச்சொற் பன்மைக் காகுமிடமுமுண்டு என்றவாறு.

உதாரணம் : 'ஏவ விளையர் தாய்வயிறு கரிப்ப' என்புழித் தாயென்னும் ஒருமை சுட்டிய பெயர் இளையரென்பதனுற் றுய ரென்னும் பன்மை உணர்த்தியவாறு கண்டுகொள்க.

'பன்மைக்காகு மிடனுமாருண் டேயென்பது' ஒருமைச்சொற் பன்மைச்சொல்லோடு தொடர்தற்குப் பொருந்துமிடமுண்டென் பதூஉம் பட நின்றமையான், 'அஃதை தந்தை யண்ணல் யானை யடுபோர்ச் சோழர்' என ஒருமைச்சொற் பன்மைச்சொல்லோடு தொடர்தலுங் கண்டுகொள்க. ஈண்டு ஒருமைச்சொற் பன்மைச் சொல்லோடு மயங்குதலுடைமையான் 'ஒருவரைக் கூறும் பன் மைக் கிளவி' (சொல்-உரு) என்புழி அடங்காமை யறிக.

... ஏற்புழிக்கோடலென்பதனான்
மயக்கமென்று கொள்க.
உயர்திணைக்கண்ணது இம்

ஆகுமிடமென்பதனால், பன்மையுணர்த்துதற்கும் பன்மைச் சொல்லொடு தொடர்தற்கும் பொருந்தும் வழிக் கொள்க வென் பதாம.

(சுரு)

சசுஉ. முன்னிலை சுட்டிய வொருமைக்

கிளவி

பன்மையொடு முடியினும்

வரைநிலை யின்றே

யாற்றுப்படை மருங்கிற் போற்றல்

வேண்டும்.

**இதன் பொருள்:** முன்னிலை குறித்து நின்ற ஒருமைச் சொல், பன்மையொடு முடிந்ததாயினும், வரையப்படாது. அம் முடிபு ஆற்றுப்படைச் செய்யுளிடத்துப் போற்றியுணரப்படும் என்றவாறு.

---

(கூ) தாய் என்பது தாயர் என்னும் பொருட்டாய் நின்றது. இஃது ஒருமை பன்மை உணர்த்தியது. இனிப் பன்மைச் சொல் லோடு தொடர்தற்குதாரணம் ' அஃதை தந்தை அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்' என்பது. அஃதை தந்தை சோழர் என்பதில் தந்தை யென்னும் ஒருமை சோழர் என்னும் பன்மையோடு தொடர்ந்து நின்றது. சோழர் ஒவ்வொருவரும் தனித்தனி அஃதைக்குத் தந்தை என்னும் பொருளில் வந்ததாகலினமைக்கப்படும்.



சஉ௲ தொல்காப்பியம்

[எச்ச

கூத்தராற்றுப்படையுள் 'கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ' (மலைபடுகடாம்-௫௦) என நின்ற ஒருமைச்சொற்போய் 'இரும்பேரொக்கலொடு பதமிகப் பெறுகுவிர்' (மலைபடுகடாம்-கருஎ) என்னும் பன்மைச் சொல்லோடு முடிந்தவாறு கண்டு

கொள்க. ஈண்டு முன்னிலை யொருமைப் பெயராதல் அதிகாரத்தாற் கொள்க.

'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகு மிடனுமா ருண்டே'

(சொல்-சகூக) என்பதனான் இதுவும் அடங்குதலின், இச்சூத்திரம் வேண்டாவெனின் :—பன்மையொடுமுடியு மிடனுமாருண்டே என்னாது 'பன்மைக் காகு மிடனுமாருண்டே' என்றாராதலின், ஆண்டுப் பன்மைச் சொற்கொண்டு முடியாது

ஒருமைச்சொற் பன்மை யுணர்த்துதலும் பன்மைச் சொல்லொடு ஒரு பொருட்டாகிய துணையாய் மயங்குதலு முணர்த்தினர் ; அதனுன் இக்கொண்டு முடிபு ஆண்டடங்காதென்பது. அல்லதூஉம், இம்முடிபு செய் யுட்குரித்தென்றமையானும் ஆண்டடங்காமை யறிக.

பொதுவகையான் ஆற்றுப்படைமருங்கி னென்றாராயினும்,
சுற்றத்தோடு சுற்றத்தலைவனை
ஆற்றுப்படுத்தற்கண்ணது இம்
மயக்கமென்பது பாதுகாத் துணர்கவென்பார் ' போற்றல்வேண்
டும்' என்றார்.
'பான்மயக் குற்ற வையக் கிளவி'
(சொல்–உ௩) என்பதனாற்
கூறிய ஒருமைப் பன்மை மயக்கம்
வழுவமைதியாயினும் இலக்க
ணத்தோ டொத்துப் பயின்றுவரும். ஒருமை சுட்டிய பெயர் நிலைக் கிளவி பன்மைக்காதலும்,

முன்னிலையொருமை பன்மை
யொடு முடிதலும் அன்னவன்றிச்
சிறுவழக்கினவாதலின், ஆண்டு
வையாது ஈண்டு வைத்தார்.

(சுசு) ஆற்றுப்படைச் செய்யுளில் முன்னிலைஒருமைச்சொல் பன்மையோடு முடியினும்
கொள்ளப்படுமென்றபடி. 'தலைவ...பெறு
குவிர்' என முடிந்தமை காண்க. பெறுகுவிர்
எனப் பன்மையாகக்
கூறியது சுற்றத்தலைவனோடு சுற்றத்தையும்
சேர்த்தாகலின்,
இதுபோலச் சுற்றத்தோடு சுற்றத் தலைவனை
ஆற்றுப்படுத்தற்கண்
ணது இம்மயக்கம் என்க. அதிகாரம்—'
பெயர்நிலைக் கிளவி' என
அதிகரித்த பெயர். இக்கொண்டு முடிபு என்றது
பன்மைச்சொற்
கொண்டு முடிதலை.



ஒருவர் ஒருவரை ஆற்றுப்படுத்தற்கண்

முன்னிலை பொருமை பன்மையொடு முடிதல் வழக்கிற்கும் ஒக்குமாகலான், ஆற்றுப் படையெனப் பொதுவகையாற் கூறினர்.

(கூகூ) சகூரு. செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினு
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியி னூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்.

இதன் பொருள் : செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இவ் வதிகாரத்தின்கட் பொருள்பெறச் சொல்லப்பட்ட சொல்லெல்லா வற்றையும் பலவேறு செய்கையுடைய தொன்னூனெறியிற் பிழையாது சொல்லை வேறுபடுத்துணருமாற்றாற் பிரித்துக் காட்டுக என்றவாறு.

என்றது, 'நிலப்பெயர்' குடிப்பெயர் எனவும், 'அம்மா

மெம்மேம்' எனவும் பொதுவகையாற் கூறப்பட்டன அருவாள
நிலத்தானென்னும் பொருட்கண் அருவாளன் எனவும்; சோழ
நிலத்தானென்னும் பொருட்கண் சோழியன் எனவும்; இறந்த
காலத்தின்கண் உண்டனம், உண்டாம் எனவும்; நிகழ்காலத்தின்
கண் உண்ணுநின்றனம், உண்ணுநின்றும், உண்கின்றும் எனவும்;
எதிர்காலத்தின்கண் உண்குவம், உண்பாம் எனவும் வேறுபட்டு வருமென்றே; அவ் வேறுபாடெல்லாம் கூறிற் பல்குமென்றஞ் சிக் கூறிற்றிலனுபினும், தொன்னூனெறியிற் பிழையாமல் அவ்
வேறுபாடுணரப் பிரித்துக் காட்டுக நூல்வல்லாரென்றவாறாயிற்று.
இது பிறநூன்முடிந்தது தானுடம்படுதலென்னுந் தந்திர
வுத்தி. பிறவுமன்ன.
செய்கை — விதி.
சொல்வரைந்தறியவெனவே, வரைந்தோதாது பொது
வகையானோதப்பட்டவற்றின்மேற்று

இப்புறனடையென்பதாம்.

இனி ஓருரை :—செய்புளிடத்தும் வழக்கிடத்தும் என்னுற் கிளக்கப்படாது தொன்னூலாசிரியராற் கிளக்கப்பட்டு எஞ்சி நின்ற சொல்லெல்லாவற்றையும் அவ்வத் தொன்னூனெறியிற்



பிழையாமைச் சொல்லிலவரைந்துணரக் கொணர்ந்து பிரித்துக் காட்டுக என்றவாறு.

என்னுற் கிளக்கப்படாது என்பது பெற்றவாறென்னை யெனின் :—கிளந்தன பிறநூலிற் கொணர்ந்து காட்டல் வேண்டாமையிற் கிளக்கப்படாதன வென்பது பெறப்படுமென்க.

புறனடையாற் கொள்ளப்படுவன :—யானு நீயு மவனுஞ் செல்வேம் எனவும், யானுநீயுஞ் செல்வேம் எனவும் ஏனையிடத்

திற்குரிய சொற் றன்மைச் சொல்லோடியைந்தவழித் தன்மையான் முடிதலும், அவனுநீயுஞ் சென்மின் எனப் படர்க்கைச்சொன் முன்னிலையோடியைந்தவழி முன்னிலையான் முடிதலும், 'நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்' என்புழிப் பல்லேல முள்ளுமெனத் தன்மையாகற்பாலது பல்லோருள்ளுமெனப் படர்க்கைப் பன்மை யாயவழி அமைதலும்,

'முரசுகெழு தானை மூவ ருள்ளு,
மரசெனப் படுவது நினதே பெரும'

(புறம்—௩௫)

என்புழி மூவிருள்ளுமென முன்னிலையாகற்பாலது மூவருள்ளுமெனப் படர்க்கையாயவழி அமைதலும், 'இரண்டனுட் கூர்ங்கோட்ட காட்டுவல்' என்புழிக் கூர்ங்கோட்டதென ஒருமையாகற்பாலது கூர்ங்கோட்டவெனப் பன்மையாயவழி அமைதலுமாம். பிறவுமுளவேற் கொள்க.

அகத்தியமுதலாயின
எல்லாவிலக்கணமுங்கூறலிற் பல்வேறு
செய்தியினூலென்றார்.

இவ் விரண்டுரையும் இச் சூத்திரத்திற் குரையாகக் கொள்க.

## எச்சவியன் முற்றிற்று.

சொல்லதிகாரச்
சேனாவரையருரை
முற்றுப்பெற்றது.
மெய்கண்டதேவன் றிருவடிவாழ்க.

---

(கூஎ) எல்லாவிலக்கணமும் என்றது இயல் இசை நாடகம் என்னும் மூன்றையும்.

# சூத்திர அகராதி.

பக்கம் – ௧

உயர்திணை - உயர்வாகிய சாதி
அஃறிணை - அஃதல்லாத சாதி
மக்கட் சுட்டு - மக்களென்னுங் கருத்து நிகழ்தற்கிடமாகிய பொருள்

பக் - ௨

ஒருபுடை - ஏகதேசம் (சிறு பான்மை)
சமயவாற்றல் - சங்கேதவாற்றல்
சங்கேதம் - நியமம், உடன்பாடு
அவாய்நிலை - ஒரு சொல் மற்றொரு சொல்லை அவாவிநிற்றல்
தகுதி - பொருள் விளக்கற்கேற்ற சொற்கள் சேர்ந்து நிற்றல்
அண்மை நிலை - தொடராய் நிற்கும் மொழிகளை இடையீடின்றிச் சொல்லுதல்
அதிகாரம் - தலைமை

பக் - ௩

கிளவி - சொல்
ஆக்கம் - அமைத்துக் கோடல்
நொய் - தவிடு
நுறுங்கு - குறுணி
என்மனார் - என்று சொல்வர்;
மன் - எதிர்காலம் காட்டிற்று என்ப என்பதன் பகரம் குறைத்து மன் ஆர் என்னும் இரண்டிடைச் சொற்பெய்து என்மனார் என விரித்தார் ஆசிரியர் என்று இளம்பூரணர் கூறுவர். சேனாவரையர் இக்கருத்தை மறுக்குங்கால் 'இசைநிறை என்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறை என்றற் மேற்கோண் மலைவு' என்றும் ஒரு ஏதுக் காட்டி மறுக்கின்றார். இளம்பூரணர் உரையுள் இசைநிறை என்று கூறிய கருத்துக் காணப் படவில்லை. ஆயின் மன் என்னுமிடைச்சொற்கு ஆசிரியர் இடையியலிற் பொருள் கூறியிருக்கின்றார். இசைநிறை என்று கூறவில்லை.

பக் - ௪

உய்த்துணரல் - ஆராய்ந்துணரல்
குறி - பெயர்
வரையறை - எல்லைப்படுத்தல்

பக் - ௫

நுதலுதல் - கருதுதல்

பக் - ௧௧

ஆடூஉ - ஆண்மகன்
மகடூஉ - பெண்மகள்
சிவணல் - பொருந்தல்
கூறு - பகுதி.
திரிந்த புணர்ச்சி - திரிபு புணர்ச்சி
விகாரம் - செய்யுள் விகாரம்

பக் - ௧௨

வினை முதல் - எழுவாய்க்கருத்தா

பக் - ௧௩

சிற்றில் - சிறு வீடு. சிறு மகளிர் மணலாற் கட்டி விளையாடுவது
கடா - ஆட்சேபம்

பக் - ௧௪

பாகுபாடு - பகுப்பு

ஒன்று - ஒரு பொருள்
பல - பலபொருள்

பக் - கரு

சுட்டுதல் - குறித்தல்
அந்தம் - ஈற்றெழுத்து (விகுதி)
இசைத்தல் - ஒலித்தல்

பக் - உ0

நேரத்தோன்றல் - (பலர் பாற்குப்)
பொருந்தத்தோன்றல்

பக் - உசு

பொருள் - விஷயம்

பக் - உள

யோகவிபாகம் - கூட்டிப்பிரித்தல்
நூற்புணர்ப்பு - தந்திரவுத்தி
தந்திரம் - நூல்

பக் - உஅ

செப்பு - விடை
போற்றுதல் - பாதுகாத்தல்

பக் - உக

பக் - உக

உண்கும் - உண்பேம்
உண்டும் - உண்பேம். [இதனை இற
ந்த காலமென்பர் நன்னூலார்]
வருதும் - வருவேம்

செவ்வன் இறை - நேர்விடை
இறைபயப்பது - விடைபயப்பது
தொடி - ஒருவகை அளவைப்
பெயர்
உத்தரம் - விடை

சேறும் - செல்வேம்

பக். - உ௩

கானம் - காடு
தகைப்ப - தடுப்ப
சினைய - சினையிலுள்ளன
சினை - கொம்பர்
சுனைய - சுனைக்கணுள்ளன
சுனை - நீர்நிலை

பக். - உ௪

தோற்றம் - புலப்படல் என்றது வினையொடுவந்து பால்புலப் படல்

பக். - உ௫

ஞாபகம் - நினைப்பித்தல்
அநுவாதம் - முன்சொன்னதை அங்கீகரித்துப் பிற்கூறல்
கட்டுரை - வாக்கியம் - சொற் றொடர்.
ஏற்புழிக்கோடல் - இடத்துக் கேற்ப பொருள்கோடல்
திரிபு - (திணை) திரிதல்
மரபு - முறை

அறியலுறவு - அறியலுறுதல்
அறிவுறுத்தல் - தெரிவித்தல்

பக். - ௩உ

வரைதல் - நீக்கல்
கடிதல் - நீக்கல்
புணர்தல் - இயைதல்
உறழ்பொருள் - மாறுபட்ட பொருள்
துணைப்பொருள் - ஒப்புப் பொருள்

பக். - ௩௩

கோல் - செங்கோல்
துளி - நீர்த்துளி
தலைஇ - பெய்து
அணியியல் - அணியிலக்கணம்
ஒத்தபண்பு - ஒத்தகுணம்
பொருவுதல் - ஒத்தல்
யாண்டையது - எவ்விடத்தது

பக். - ௩௪

தன்னினம் - தனக்கு இனமா யுள்ளன
துகிர் - பவளம்

தகுதி - தக்கது - சொல்லத் தகுந்தது
பகுதிக்கிளவி - பகச்சொல்
பகச்சொல் - தனக்குரிய பொருளுணர்த்தாது சார்பான பொருளுணர்த்துவது
வெண்களமர் - உழவர்
கருங்களமர் - பறையர்
புடை - பக்கம்

பக் - ௯௫

பொற்கொல்லர் - தட்டார்
வண்ணக்கர் - நாணகபரிசோதகர், வண்ணக்கஞ் சாத்தனார் முதலிய பெயர் நோக்கியறிக
குழு - கூட்டம்
குறிநிலை - பெயராகிய நிலையையுடையது
இடக்கர் - சபையிற் கூறத்தகாத சொல்
அடக்கல் - மறைத்தல்
மரூஉ - மருவிவந்த சொல்
இடுகுறி - காரணமின்றி இடப்பட்ட பெயர்

பக் - ௯௬

வழக்காறு - வழக்குவழி ; உலகில் வழங்கிவரு நெறி
மதம் - கொள்கை
சுட்டுதல் - குறித்தல்
வேண்டுதல் - விரும்புதல்
இல்குணம் - இயற்கையிலுள்ளதல்லாத குணம்

பக் - ௯௭

இட்டிகை - செங்கல்
பிறழ்தல் - மாறுபடல்
செயற்கை - காரணத்தால் இயல்பு திரிந்தது

பக் - ௱௧

ஆக்கக் கிளவி - ஆக்கத்தையுணர்த்துஞ் சொல்
பரிசில் - சம்மானம்
கலம் - ஆபரணம்

பக் - ௱௨

எஃகம் - நுதி
வாய் - இடம்
குருதி - இரத்தம்
படிந்து - மூழ்கி
உரு - நிறம்
குக்கில் - செம்போத்து
சிரல் - சிச்சிலி
மால் - விட்டுணு
நப்பியார் - பகைவர்
வாடாத - அழியாத
வண்கை - கொடைக்கை
சாயல் - மென்மை

பக் - ௱௩

முகம் - வாயில்
வீறு - பகுப்பு

பக் - ௱௪

கூறு - பகுப்பு

பக் - ௱௫

நடை - வழக்கு

பக் - ௱௬

வயின் - இடம்

ஒன்றனைமுடித்தல - முடித்தத
ஞேடு ஒருமுடிபெய்தவன்
வற்றையு மொன்றென்று
முடித்தல்

பக் - ௬௬

இற்று - இத்தன்மைத்து



மெலிவலிது - மெலிது

பக் - ௪௭

கவித்தல் - மூடல்
தாழி - பிணத்தை மூடிக்க
கும் ஒருவகை மண்கலம்
பொகுவல் - ஒருபறவை



பக் - ௪௮

நுசுப்பு - இடை
அமர் - போர்

பக் - ௫௦

வண்ணம் - நிறம்
உயர்சொல் - உயர்த்துச்சொல
லுஞ் சொல்

பக் - ௫௬

இயங்குதல் - செல்லுதல்
ஈதல் - கொடுத்தல்

இஃதோர் செல்வன் - இச்செல்
வன்; சுட்டுத்திரிந்து நின்றது
ஓர் - அசைநிலை
செல்வன் - செல்வத்தை அளித்
தற்குரியோன், செல்வம்போன்
றவன் எனினுமாம். செல்வன்
என்றது மகனை

பக் - ௬௭

இயலல் - நிகழ்தல்
வழி - பின்
இயற்பெயர் - காரணமின்றிப்

பக் - ருச

உழை - இடப்பொருளில்வந்த இடைச்சொல்

கூறு - விகுதி

பக் - ருரு

வரைவின்றி - நியமமின்றி

தூண்டில் - மீன்பிடிக்கும் ஒரு வகைக் கருவி

வாங்க - நீரினின்று மேல் எடுக்க

சேய்நிலம் - தூரமான இடம்

அணிநிலம் - அண்மையான இடம்

பக் - ருகூ

இறப்பான் - விடை கூறுவான்

கெடுதல் - காணப்படாமற் போதல்

பக் - சுஉ

மன்னுப்பொருள் - என்றுமில்லாப்பொருள்; நிலையாப்பொருள் என்பாருமுளர்

பக் - சுச

கிளந்துகூறல் - இன்னதென எடுத்துக்கூறல்

பக் - சுகூ

அரசுவா - அரசனுக்குரிய பட்டத்து யானை

பொருளையே குறித்து இட்டு வழக்கும் பெயர்

விரவுப்பெயர் - உயர்திணை அஃறிணை யிரண்டினுஞ் சென்று விரவுதலையுடையபெயர்

பக் - சுகூ

அணங்கு - துன்பம்

சேந்தன் - ஒருபகாரி

அமர்ந்து - விரும்பி

கடப்பந்தார் - கடப்பமாலை

விழைவு - விருப்பம்

கொண்டான் - கணவன்

பக் - எஉ

வரிசைப்பெயர் - பட்டப்பெயர்

பக் - எசு

எடுத்தோத்து - சூத்திரம்

பக் - அ0

மா - குதிரை

படை - படைக்கலம்

மறவர் - வீரர்

விதந்தோதல் - சிறப்பாகப் பிரித்தெடுத்துக் கூறல்

ஆ - பசு

பார்ப்பனமாக்கள் - அந்தணர்

அரண் - அரணுகச் சென்றடையுமிடம்

பக் - அக

அடிசில் - உணவு
அணி - ஆபரணம்
இயம் - வாச்சியம்

பக் - அஉ

நுகர்தல் - உண்ணல்
இரட்டைக்கிளவி - இரட்டித்து நின்று பொருளுணர்த்துஞ் சொல்

பக் - அ௩

கடகம் - காப்பு
அதர் - வழி
எருத்தில் - எருத்துமாடு கட்டற்கியற்றிய கொட்டில்

பக் - அ௪

குழை - தளிர்
குமரி - கன்னி
கட்டில் - அரசுகட்டில், என்றது அரசன் வீற்றிருக்கும் சிங்காசனத்தை

பக் - அ௫

பெற்றம் - பசு
சினம் - கோபம்
களிறு - யானை
கதழ் - விரைவு
பரி - செலவு
அறவோர் - துறவாது விரதங் காத்தோர்; முனிவர்

பக் - அ௭

துடியன் - துடிகொட்டுவோன்
கடம்பன் - ஒருவகைக் குடிப் பெயர்

உறழும் - ஒக்கும்
நீர் - வரும் என முடிக்க.

பக் - கக

மது - தேன்
நாறும் - மணக்கும்
நேயம் - தான் சொல்லக்கருதிய பொருளை விளக்கற் கேற்ற சொற்களில்லாமற் கூறல் = தெரித்து மொழியாமை.

ஊட்டல் - நிறமூட்டல்
செய்யாதநிறம் - இயற்கைநிறம்
பிறிதோரலங்காரம் - தற்குறிப் பேற்றம்
படுத்தல் - செய்து வைத்தல்
பாறை - கற்பாறை
இட்டு - நுணுக்கம்
ஒல்லேம் - இயையேம்
புலால் - புலான்மணம்
புலத்து - ஊடி
வழு - குற்றம்
துனி - புலவி நீட்டம்
வெப்பம் - கொதிப்பு
கூற்று - சொல்

பக் - க௫

உறுப்பின்கிளவி - குருடு முடமுதலியன
காதற்சொல் - ஒப்புமை கருதாது பாவை யானை என்றாற்போற் காதல் பற்றி வருவன.
சிறப்புச்சொல் - கண்போற் சிறந்தானைக் கண் என்றலும் உயிர்போற் சிறந்தானை உயிர் என்றலு முதலாயின

ஆயம - மகளிர் கூட்டம்

பக் - ௯௦

உரு - நிறம்
முருகு - முருகன்

செறற்சொல் - பொறியறை, கெழீஇயிலி என்பன போல்வன
செறல் - செறுதல்



விறற்சொல் - பெருவிறல், அருந்திறல் போல்வன
விறல் - வலி

பக் - ௯௪

பொழுது - ஞாயிறு
விதி - ஊழ்
கனலி - ஞாயிறு
மதி - திங்கள்

பக் - ௯௫

துறக்கம் - சுவர்க்கம்
பால்வரை தெய்வம் - இருவினையையும் வகுப்பது = ஊழ்
சொல் - நாமகள்

பக் - ௯௮

கடப்பாடு - யாப்புறவு = நிச்சயம்

பக் - ௧௦௮

எழுவாய் - தொடக்கத்திலுள்ளது ; முதலிலுள்ளது ; எனவே முதலாம் வேற்றுமை என்றபடி.

பக் - ௧௦௯

பொருண்மை - உண்மை = உளதாந் தன்மை
வியம் - ஏவல்
பொய்ப்பொருள் - உலகின் இல்லாப்பொருள்
மெய்ப்பொருள் - உலகின் உள்ளபொருள்
முடிக்கப்படுஞ்சொல் - எழுவாய்
முடிக்குஞ் சொல் - பயனிலை
மாறும் - ஒழியும்

பக் - ௧௦௩

இடையீடு - தடை

பக் - ௧௦௫

யாப்புடைமை - பொருத்த முடைமை ; நியமமுடைமை

நுதலுதல் - கருதுதல்

ஓதல் - சொல்லல்

ஒத்து - இயல்

பக் - ௧௦௪

வேற்றுமை - வேறுபடுத்துவது

தலைப்பெய்தல் - சேர்த்தல், கூட்டல்.

இயற்கை - இயல்பு

பக் - ௧௦௬

பலபெயர் உம்மைத்தொகை - பலபெயர்கள் எண்ணும்மைப் பொருள்படத் தொக்கதொகை

விசேடணம் - அடைமொழி

பக் - ௧௦௭

துணை - அளவு

பக் - ௧௨௧

இயற்றல் - முன்னில்லதனை உண்டாக்கல்

எய்தல் - உறுதல் ; பொருந்தல்

பக் - ௧௨௨

காப்பு - காவல்

ஊர்தி - ஊர்தல்

இழை - இழைத்தல் = செய்தல்

ஓப்புதல் - துரத்தல்

செறல் - வருத்தல்

கன்றல் - அடிப்படல்

பக் - ௧௨௫

புரத்தல் - காத்தல்

அளித்தல் - காத்தல்

நிகர்த்தல் - ஒத்தல்

பக் - ௧௨௪

துவக்கல் - கட்டல்

குயிலுதல் - தைத்தல்



பக் - ௧௨௯

அளி - அன்பு

இயற்றல் - செய்தல்
காரணம் - பொற்காசு

பக் - உஉசு

எண் - எள்
விராய - கலந்த
காரகம் - இயற்றுவிப்பது
ஞாபகம் - அறிவிப்பது

பக் - கஉஎ

வையம் - தேர்
கொத்தை - குருடு

பக் - கஉஅ

மேற்கோள் - மேற்கொளப் பட்டது ; கருத்து
எதிர்முகவேற்றுமை - விளி வேற்றுமை
ஐந்திரம் - இந்திரனுற் செய்யப் பட்டதொரு வியாகரண நூல்
சூல் - கருப்பம்

பக் - கஉகூ

கோடல் - ஏற்றுக்கொள்ளல்
யாப்பு - பொருத்தம்
கூறு - பங்கு
கடிசூத்திரம் - அரைஞாண்

பக் - கநூO

பிணி - நோய்
நட்டார் - நண்பர்
உற்றார் - தலைவர்
தொடி - வளையல்

பக் - கநூக

பொரூஉ - ஒப்பு
மைந்து - வலி
கிழமை - உரிமை

பக் - கநூடு

திகிரி - சக்கரம்
இணங்கு - இயைபு -
..................
தீட்டு - தீட்டப்பட்டது ; எழுதப் பட்டது

பக் - கசஉ

கருமம் - தொழில் ; என்றது கண்டு மெய்யுறுதலாகிய தொழிலை
பற்று - சார்பு
இடை - இடம்

பக் - கசரு

அறுத்தல் - இருகூறுசெய்தல்
குறைத்தல் - சுருக்குதல் ; சிறி திழக்கச் சிதைத்தல்
கண்றல் - அடிப்படல்
இவறல் - பேராசையுறல்

பக் - கசசு

பிண்டம் - பலபொருட்டொகுதி
மாட்டுதல் - கொளுவுதல் ; பொருத்துதல்

பக் - கருO

நோக்கல் நோக்கம் - நோக்கு அல்லாத நோக்கம். என்றது கண்ணால் ஒன்றினைநோக்காது மனத்தாலோக்கல்
ஓம்படை - பாதுகாத்தல்

பக் - கருக

நாற்றம - மணம
நீர்தல் - விட்டுநீங்கல்
பற்று - ஆசை

பக் - கநட

தூள - ஒருவகைமரம்

இன்றியமையாமை - இல்லாமன்
முடியாமை

பக் - கடுஉ

கடிதல் - நீக்கல்



பக் - கடுரு

பனுவல் - சொல்

பக் - கடுகு

களைதல் - பிடுங்கல்
காழ்த்தல் - வயிரமுடைத்தாதல்
பிறிதுமொழிதல் - ஒட்டு என்னும்
ஓரலங்காரம்

உறைநிலம் - உறையுமிடம்;
இருப்பிடம்

பக் - கசுO

வரையார் - நீக்கார்

பக் - கசுச

நாணற்கிழங்கு - நாணற்புல்லின்
கிழங்கு
எயிறு - பல்
என்னும் - சிறிதும்

பக் - கசுகு

பக் - உOக

மகன் - ஆண் மகன்
மகள் - பெண்மகள்

பக் - உOகு

கூடி வரு வழக்கினுடியற்
பெயர் - இளைஞர் தம்முட் கூடி
விளையாடிவரும் வழக்கின்கண்
தம்முள் இட்ட இயற்பெயர் -
அவை, பட்டி புத்திரர் கங்கை
மாத்திரர் என்பன போல்வன.

புரை - குற்றம்
உற்றுழி - ஆபத்துவந்தவிடம்
புள் - பறவை

ஆடி என்னும் வினையெச்சம் ஆடு என முதனிலை மாத்திரையாய் நின்றது.

பக் - கஅக

காரகம் - காரணம்

பக் - கள௫

சேர்ப்பு - கடற்கரை

பக் - களச

சிவணல் - பொருந்தல்

பக் - களஞ

எழுத்தோத்து - எழுத்ததிகாரம்
பதக்கு - ஒருவகை அளவுப்பெயர்
தூணி - ஒருவகை அளவுப்பெயர்

பக் - கஅஞ

மாலை - இயல்பு
யாமை - ஆமை
கம்பலம் - கம்பளம்

பக் - கஅஅ

அடுதல் - சமைத்தல்
தொல்லுதல் - அழித்தல்

பட்டிபுத்திரர் - பட்டி என்பவனுடைய குமாரர், இப்பட்டி என்பவன் உச்சயினி நகரத்தாசனாகிய விக்கிரமாதித்தன் மந்திரி. இவன் மதிநுட்ப நூலோடுடையனாயிருந்ததோடு மக்களாற் செய்தற்கரிய அரும்பெருங் காரியங்களைச் செய்தவன். அவன் மக்களெனவே அன்னோரும் அவன் போன்ற தன்மையையுடையார் என்பது விளக்கிய பட்டிபுத்திரர் என்றார். கங்கை மாத்திரர் - கங்கையை அளவிடுபவர். மக்களால் அளவிடற்கரிய கங்கையையும் அளவிட்டறியும் ஆற்றலுடையார் என்பது விளக்கிய கங்கைமாத்திரர் என்றார். இப்பெயர்கள் பண்டைக்காலத்து விளையாடல் குறித்த காலத்துப் படைத்திட்டுக் கொண்டபெயர்கள். இக்காலத்

தும் இவ்வாறு சிறுர்கள் விளையாடுவது வழக்கு

பக் - உ0௬

ஒளுதி, தாவிதி, எட்டி என்பன பட்டப்பெயர்கள்.

வாயிலான் - வாயில் காப்போன்

வண்ணத்தான் - வண்ணஞ் செய்வோன்

சுண்ணத்தான் - சுண்ணஞ் செய்வோன்

சுண்ணம் - பொற்பொடி

பக் - உ0எ

பக் - உ௪0

உரிஞுகு - உரிஞுவேன்

திருமுகு - திருமுவேன்

உண்பல் - உண்பேன்

செய்கு - செய்வேன்

செய்கும் - செய்வேம்

பக் - உ௪க

காண்கு - காண்பேன்

மோயினள் - மோயினளாய்; மோந்து

உயிர்த்தல் - நெட்டுயிர்ப்புக் கோடல்

அவ் - அவை
இனைத்து - இவ்வளவிற்று

பக் - உகச

இயற்பெயர் - சாத்தன் கொற்றன் என வழங்குதற் பயத்தவாய்க் காரணமின்றிப் பொருளே பற்றிவரும் இடுபெயர்
பாணி - ஒருவகைத் தாளம்
நிமித்தம் - காரணம்

பக் - உகசு

பாகுபாடு - பகுப்பு

பக் - உஉஎ

முன்னம் - குறிப்பு
தன்மை - இயல்பு

பக் - உஉகூ

பழுவம் - காடு
கழனி - வயல்
இழை - ஆபரணம்
இறைச்சிப் பொருள் - கருப்பொருட் பிறக்கும் பொருள்
கடுவன் - ஆண்குரங்கு
குமரி - கன்னி

பக் - உசச

மாரைக்கிளவி வினையோடல்லது பெயரொடு முடியாமையின் என்றது, உண்மார் முதலிய மாரீற்று வினைமுற்றுக்கள் உண்மார் வந்தார், சென்மார் வந்தார் என வினையொடு முடியுமேயன்றி ஏனை வினைமுற்றுக்கள் போலப் பெயரொடு முடியாமையின் என்றபடி. எனவே, ஏனைவினைமுற்றுக்கள் பெயரொடன்றி வினையொடு முடியாது. வினையொடு முடியாமையாற்றான் அம்முற்றுக்கள் எச்சமாய்த் திரிகின்றன மாரீறு பெயரொடு முடியாது வினையொடு மாத்திரமே முடியுமென ஆசிரியர் கூறலின், அஃது எச்சமாய்த் திரிதல்வேண்டா; விளம்பிய முற்றேயாய் நிற்குமென்பது கருத்து.

பக் - உசச

பீடு - பெருமை
இன்று - இன்றி
திரு - வளம்
பாடு - பெருமை



படர் - நினைவு
கலிங்கம் - வஸ்திரம்

பாடன்மார் - பர்டுவாரல்லராக.
காணன்மார் - காணுவாரல்லராக.

பக் - உசஎ

ஊதை - காற்று
கூட்டுணல் - கொள்ளைகொள்ளுதல்; ஒருசேரக்கவர்தல்
கோதை - மாலை

பக் - உ௫உ

ஆற்றல் - சாமர்த்தியம்
ஊறு - பரிசம்

பக் - உ௬௦

மாக்கட்டு - மாக்களையுடையது
அணித்து - அணிமைக்கணுள்ளது
சேய்த்து - சேய்மைக்கணுள்ளது
சேய்மை - தூரம்

பக் - உ௭௧

தன் முதனிலைத் தொழில் என்றது எனவுக்கு முதனிலையாய் நிற்கும் புகுதல் முதலியவற்றை. அத்தொழில் காரணப்பொருளில் வருமென்றபடி

பக் - உ௭௭

பக் - உ௮௫

இடைநிலை - இடைநிற்பது
இதனை, இடைப்பிறவரல் என்பர் நன்னூலார்

பக் - உ௮௪

அம்பல் - சிலரறிந்தது
கலுழும் - அழும்
வாராக்காலம் - எதிர்காலம்

பக் - உ௮௫

கனலி - ஞாயிறு
மதி - திங்கள்
வலந்திரிதல் - சூழ்தல்
கடல்வையம் - பூமி

பக் - உ௮௬

பாணித்தல் - தாமதித்தல்
குறை - இன்றியமையாதகாரியம்

பக் - உ௮௭

மிக்கது - சிறந்தது = தெய்வம்
தெய்வம், ஊழ், என்பன ஒருபொருளன. ஊழுக்கு இருவினை காரணம்.

தொழுவர் - உழவர்
பாயுந்து - பாயும்
குரவை - கைகோத்தாடல்
தலேக்கை - முதற்கை
ஈகை - கொடை
எவ்வி - ஒருவள்ளல்
உறைபுள் - உறைதல் - வாழ்தல்

பக் - உஎகூ

பொச்சாவாமை - சோர்வில்லாமை
ஆறு - வழி
வியர் - வேர்வை

பக் - உஅகூ

தன் என்பதற்குத் தான் என்பதே முதனிலையாதலின் அதுபற்றித் தான் எனக்கூறினுமமையும்.

பக் - உகூ௦

கதம் - கோபம்
களி - மயக்கம்
தெருள் - தெளிவு
வைதல் - ஏசுதல்
பெற்றி - இயல்பு, சுபாவம்

பக் - உகக

கூறை - உடுக்கும் வஸ்திரம்
தெற்றி - திட்டை ; திண்ணை

பக் - உகரு

பண்டு - முன்னாள்
பொழில் - சோலை

பக் - உகடு

சேரி - இருப்பிடம்

பக் - உகக

ஒப்புஇல் வழியான் - ஒப்புமை தோன்றாதவிடத்தின்கண்
பொருள் செய்குந - அவ்வொப்புவுமைப்பொருளைச் செய்வன

பக் - ருOக

பக் - ருOஅ

மடவை - அறியாமையுடையை
முருகு - முருகன்
எண்மை - எளிமை
அந்தில் - அவ்விடம்
ஆங்கு - அவ்விடம்
எல் - விளக்கம்

பக் - ருகஉ

பனி - நீர்த்துளி
காமம் - விருப்பம்
வலவன் - தேர்ப்பாகன்
மெல்லம்புலம்பன் - நெய்தனிலத் தலைவன்
காப்பு - காவல்
கடை - வாயில்

கழிவு - முன்னுள்ளது இல்லாமற்
போதல்
சிறியகள் - அற்பமானகள்
ஈயும் - கொடுக்கும்
விழைவு - விருப்பம்
வார்தல் - நேர்மை
வை - கூர்மை
அரிவை - பெண்

பக். - ௬0௨

கொன் - அச்சம்
முனை - போர்
துஞ்சல் - துயிலல்

பக். - ௬0௫

புரத்தல் - காத்தல்
மதுகை - வலி
புன்கண் - இழிவு, வறுமை

பக். - ௬0௬

அவலம் - துன்பம்
நொதுமல் - அயல்

பக். - ௬0௭

எற்று - இறந்தது என்னும்
பொருளில்வருமோரிடைச்
சொல்
தேற்றம் - தெளிவு

61

பக். - ௬௧௪

ஆகாம் - விருப்பம்
தோற்றம் - உருவம்; ஒளி
இசை - ஒலி
நாற்றம் - மணம்
உறல் - பரிசம்

பக். - ௬௨௧

ஓடல் - செல்லல்

பக். - ௬௨௫

குன்றி - குன்றிமணி
கோபம் - இந்திரகோபம்

பக். - ௬௨௪

நார் - பன்னாடை
நறவு - கள்ளு
நாரிநறவு - பன்னாடையின்
வடித்தகள்ளு
புறம் - 400-ம் செய்யுள்

பக். - ௬௨௬

இசை - ஒலி
குறிப்பு - மனத்தாற்குறித்துணரப்
படுவது
பண்பு - பொறியாலுணரப்படுங்
குணம்

பக் - ருருo

உறு - மிகுதி
துவைத்தல் - ஒலித்தல்
மெய்தடுமாறல் - வடிவுதிரிதல்

பக் - ருருக

ஊட்டல் - உண்பித்தல்
வீதல் - அழிதல்
தவ - மிக
உட்கு - அச்சம்
புரை - உயர்ச்சி

பக் - ருருஉ

அணங்கிய - வருத்திய
புறந்தரல் - பாதுகாத்தல்

ஆய்ந்த - நுணுகிய
தானை - வஸ்திரம்
அறல் - நீர்

பக் - ருருஎ

சூல் - கரு
எழிலி - மேகம்
எற்றம் - நினைவு; துணிவு
ஞாட்பு - போர்க்களம்

பக் - ருருஅ

பிழைத்தல் - இலக்குத்தப்பல்
பெருப்பு - பெருத்தல்
வள்ளியோர் - கொடையாளர்
படர்தல் - நினைத்தல்
நோய் - வருத்தம்

இயக்கம் - வழி
ஊர் - உயர்திவம்
செய்பு - செய்தல்
எய்யாமையல்லை - அறியாமை

பக் - ருருரு

யடையையல்லை

பக் - ருருசு

இர - இரா
மாலை - இயல்பு
துனி - வெறுப்பு
எவ்வம் - துன்பம்

பக் - ருருச

பெரும்பிறிது - இறப்பு
பாடு - ஒலி

பக் - ருசo

அரவம் - இசை = பேரொலி
ஆயம் - மக்கட்டொகுதி

பரி - குதிரை
புள் - பறவை
ஏமம் - இன்பம், காவல்.
ஒளுகை - பண்டி
மருங்குல் - இடை
வேல் - வேலமரம்

மலிதல் - மிகுதல்
மலிபு - மிக்கு
தொகுபு - கூடி
உயவு - வருத்தம்
அழுங்கல் - இரைச்சல்
விழுமியோர் - சீரியோர் = நாகரிகர்

விடத்தேர் - ஒருவகைமரம்
இக்காலத்து விடத்தல் என்பர்
உடை - உடைமரம்
'திரிகாய் விடத்தரொடுகாருடை போகி' என்பது அச்சிட்ட புத்தகப் பாடம்

பக் - ௬௬௬

நவிரம் - ஒருமலை
ஞாரி - நஞ்சு
பாய்ந்து - பாந்து

இரங்காவினை - செய்து முற்றுப் பெறுமையால் பின் இரங்காத செயல்

விழுத்திணை - சிறந்தகுடி

பக் - ௬௬௪

ஆரம் - முத்துமாலை
கவைஇய - அகத்திட்ட
கடிமரம் - காவன்மரம்
தடிதல் - வெட்டுதல்



பக் - ௬௬௨

பக் - ௬௫௨

ஒக்கல் - சுற்றம்
சொலிய - நீக்க
குறங்கு - தொடை
மராஅம் - கடம்பு

பக் - ௧௪௧

துன்னுதல் - அடைதல்
துப்பு - வலிமை
மான் - குதிரை
துய - அறிவு வேறுபடுதல்
உயங்கல் - வருந்தல்
பாக்கம் - பட்டினம்

பக் - ௧௪௪

கலிங்கம் - வஸ்திரம்
விறலி - விறல்பட ஆடுபவள்
பதவு - புல்
சே - எருது

பக் - ௧௪௫

வாரி - வருவாய்

இயற்சொல் - திரிபின்றி இயல்பாகிய சொல். எளிதாகப் பொருளுணரப்படுஞ்சொல் என்பாருமுளர்
திரிசொல் - திரிபுடையசொல், அரிதாகப்பொருளுணரப்படுஞ் சொல் என்பாருமுளர்

பக் - ௧௫௧

விராய் - கலந்து
சுட்டல் - சேர்த்தல்

பக் - ௧௫௪

வளி - காற்று
மா - விலங்கு

பக் - ௧௫௫

கிள்ளை - கிளி
மஞ்ஞை - மயில்
சுகம் - கிளி
தத்தை - கிளி

உருத்தல் - சொரிதல்
முன்றேற்று - தெய்வத்தின்
முன் நின்று தெளித்தல்
காரான் - எருமை

பக் - ௬௪௬

கடுத்தல் - ஐயப்படல்

பக் - ௬௪௮

வரம்பு - எல்லை
திரிவு - மாறுபாடு
வாயில் - வழி

பக் - ௬௫௦

ஒட்டுப்பெயர் - வினையாலணையும் பெயர்
ஓம்படை - பாதுகாவல்

பக் - ௬௫௧

குறை - இன்றியமையாமை

பக் - ௬௫௪

தன்னை வந்தான் என்பது தன்னை வந்தான் என்றுதான் இருக்கவேண்டுமென்பது சிலர் கருத்து. அக்கருத்தையே இங்கே குறித்துள்ளேன். ஆயின் சேனவரையர் எக்கருத்திற் கூறினர் என்பது நன்கு புலப்படவில்லை.

பக் - ௬௫௮

அரமியம் - நிலாமுற்றம்
தசம் - பத்து
பணை - முரசு
தாள் - கால்

பக் - ௬௫௯

நாட்டல் - நாட்டுதல் = நிலைபெறச் செய்தல்



குறுங்கை - குறுக்கை என

பக் - ௬௭௩

வலித்தது
முந்தை - முத்தை எனவலித்தது

கொல்யானை என்பதைக்
கொன்றயானை எனப் பிரித்துப்

புணர்த்தால், ஆண்டுத் தொகைப் பொருள் சிதையும் என்றார்; முக்காலத்துக்குமுரியதனை ஒரு காலமாக விரித்துப் புணர்த்தால், ஏனைக்காலத்தையுணர்த்தாது ஆகலானும், கொன்றயானை எனவும், கொல்லும்யானை எனவும் தனித் தனி விரித்துப் புணர்க்கினும், முறையே றகரவகரமும் உம்மும் புணர்ச்சிபற்றிக் கெட்டன என்றாருமன்றி தொக்கன வென்றாக!! ஆதலானும் என்க.

பக் - ௫௬௦

நிரனிறை - முறைநிற்றலுடையது
சுண்ணம் - சுண்ணம்போலச் சிதறிக்கிடப்பது
சுண்ணம் - பொடி

பக் - ௫௬௧

மாசு - குற்றம்
அடிசில் - உணவு
கொட்டை - தாமரைப்பொகுட்டு
உடலுதல் - பகைத்தல்
உடைந்தோடல் - தோற்றோடல்
ஞெகிழ்த்தல் - விரிதல்
மயங்கிவருதல் - எதிர்நிரனிறையாய் வருதல்

பக் - ௫௬௨

பட்டாங்கு - உண்மை இயல்பு

சிதர்தல் - சிந்துதல்

பக் - ௫௬௪

சூரல் - பிரம்பு
சூர் - தெய்வம்
அணங்குதல் - வருத்தல்

பக் - ௫௬௫

ஆரியமன்னர் - வடநாட்டரசர்
பாரி - ஒருவள்ளல்
தண்ணுமை - மத்தளம், ஒரு கட்

பக் - ௫௮௬

கட்டுரை - ஈண்டு வார்த்தையாடலை (பேச்சை)க் குறித்து நின்றது

பக் - ௫௯௦

குறியீடு - பெயரிடுதல்
ஆட்சி - எடுத்தாளல்

பக் - ௫௯௧

கட்டளை - ஆணை
ஒருதலை - நிச்சயம்

பக் - ௫௯௫

கடைநிலை - இறுதிநிற்பன
ஏற்றுதல் - ஒருங்கு முடித்தல், அடக்குதல்

பறை
வீ - பூ
அலர் - பலரறிந்து தூற்றும்
பழிமொழி

பக் - ௬௬௬

ஞாய் - தாய்
தன்னை - தமையன்

பக் - ௬௯

'வில்லகவிரலிற் பொருந்தியவாறு' என்பது 'வில்லகவிரலிற் பொருந்தியவர்' எனவும் பாடம். வில் அக விரல்—' வில்லையுள்ளடக்கியவிரல் என்பது பொருள்.



கடைப்பிடித்தல் - நிச்சயமாகக் கோடல்

பக் - ௬௯அ

சேரி - ஊர்
திட்பம் - திடம்

பக் - ௭0௨

பீர் - பீர்க்கு

பகவன் - இறைவன்
அளித்தல் - அருள்செய்தல்
தேறியார் - தெளிந்தார்
தவறு - குற்றம்

பக் - ௭0௬

சுட்டிக்கூறாவுவமை - தொகையுவமை

பக் - ௭0௫

புலிநின்றிறந்தநீரல்லீரம் - புலிமூத்திரம், "களிறு நின்றிறந்த நீரல்லீரத்து" என்பது நற்றிணை ௯0௬-ம் செய்யுள்

பக் - ௭௧௭

தகைத்தல் - தடுத்தல்
அட்டில் - சமையல்வீடு

பக் - ௭௧௬

வெரிந் - முதுகு
ஓதி - ஓந்தி

பக் - ௭௨௭

அகலம் - மார்பு
கௌவை - அலர் = பழிமொழி
காலேகம் - கலவைச்சாந்து
சாலேகம் - சாளரம்

வைப்பு - வைப்புப்பொருள்

"ஆன்முன் வரூஉமீகாரபகரம் - ஆப்பீ

கான்மேனீர் பெய்துவருதும் -

கால்கழீஇ வருதும். என்றது மலங்கழுவி வருதும் என்பதை உணர்த்திற்று.

பக் - ௬௨௫

கரித்தல் - எரிதல்

பக் - ௬௨௬

கணனுளர் - கழைக்கூத்தர்

ஒக்கல் - சுற்றம்

பதம் - உணவு

